கழக வெளியீடு, ௪00௭

# தமிழ்ப் புலவர் அகரவரிசை

(மூன்றும் பகுதி)

ஆசிரியர்

திரு சு அ இராமசாமிப் புலவர்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1960

# பதிப்புரை

நாடும் மொழியும் நன்னெறியுமாகிய மூன்றும் முறையே உடல் உள்ளம் உயிர்போல் நிலைத்து வாழும் மாந்தர்க்கு வளம்பல வழங்கி, நலம்பல நல்கி உறுதுணை யாகும். இம் மூன்றன் அமைப்புச் சிறப்புறச் செய்து நிற்பதற்குத் துணைபுரிவது சான்றோராயின் மேலோராகிய நல்லிசைப் புலவர்கள் யாத்தளித்த பெருநூலாகும். அத்தகைய பெருநூல்கட்கு உருக்கொடுத்த பெரும்புலவர் களின் அருமைமிக்க வரலாறுகளை நாம் அவ்வப்போது நன்குணர்ந்து நாட்டுப்பற்று அவைகள் மிகுத்து அருமை யாகக் கிடைத்த கலைகளை விளக்கிப் போற்றி யொழுகுதல் வேண்டும். அதன்பொருட்டு அரிதுமுயன்று அத்துறை வல்லாராகிய **திரு. சு. அ. இராமசாமிப் புலவர்** அவர்களைக்கொண்டு "**தமிழ்ப் புலவர் வரிசை**" என்னும் பெயரால் எழுதச்செய்து - ஐந்நூற்றுமுப்பத்தைவர் புலவர் களைப்பற்றி இருபத்தொரு புத்தகங்கள் வெளியிட்டனம்.

மேலும் ஆயிரத்தைந்நூற்றுக்கு மேற்பட்ட புலவர் களின் வரலாற்றுக் குறிப்புக்கள் கிடைத்துள்ளன. அவற்றைச் சுருக்கப்பற்றி அகரவரிசையில் தொகுத்துத் தொடர்ந்து வெளியிடக் கருதினோம். அம்முறையில் "**தமிழ்ப் புலவர் அகரவரிசை**"யின் 1, 2 ஆம் பகுதிகள் வாயிலாக ௧௦௪௩ புலவர்களின் வரலாறுகளைத் தொகுத்து வெளியிட்டோம். எண் ௧௦௪௪ முதல் ௧௩௧௩ முடிய மேலும் ௩௩௨ புலவர்களின் வரலாறுகளைத் "**தமிழ்ப் புலவர் அகரவரிசை**" **மூன்றாம் பகுதி**யாக வெளியிட்டுள்ளோம். எஞ்சியுள்ள புலவர்களின் வரலாறுகள் பின்னிணைப்பாகப் பின்னர் வெளிவரும். இதனை எழுதியுதவிய திரு. சு. அ. இராமசாமிப் புலவரவர்கட்குக் கழகத்து நன்றி உரித்தாகுக. இந்நூலினைப் பெருமக்களும், ஆசிரிய மாணவர்களும், நூலகங்களும் வாங்கியும் வாங்குவித்தும் பயனெய்துவார்க ளாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# முன்னுரை

ஒருவருடைய பிறப்பு வளர்ப்பு வாழ்க்கை முதலியன பற்றி எழுதப்படும் நூல்களே 'வரலாற்று நூல்கள்' என்று கூறப்படும். சிறந்த அறிஞர்கள், கொடையாளர்கள், வீரர்கள், அரசர்கள் முதலியவர்களுடைய வரலாறுகள் மறைந்துவிடாமல் எழுதிப் பாதுகாக்க வேண்டியது இன்றியமையாததாகும். இத்தகையோருடைய வரலாற்று நூல்களால் நாட்டிற்கு நன்மைகள் உண்டாகும். வரலாறெழுதும் பழக்கம் மேனாட்டைப்போல் நம்முடைய நாட்டில் வளர்ச்சியடையவில்லை. நமது நாட்டிலும் வரலாறெழுதும் பழக்கம் அண்மைக் காலத்தில் இருந்துதான் ஓரளவு பரவி வருகிறது. முன்னாளில் இருந்தே வரலாறெழுதும் பழக்கம் நமது நாட்டில் ஏற்படாதபடியால் நமக்கேற்பட்டுள்ள இழப்புப் பெரிதாகும். அண்மைக்காலம் வரையில் நம்மிடம் வாழ்ந்திருந்து மறைந்த அறிஞர்களுடைய வரலாறுகள்கூட நம்மால் நன்கு உணர்ந்துகொள்ள முடியாத நிலையில் இருக்கின்றன.

நமது நாட்டில் புகழ்பெற்று விளங்கியிருந்த ஔவையார், திருவள்ளுவர், கம்பர் முதலிய பெரும் புலவர்களுடைய உண்மை வரலாறுகள்கூட நம்மால் நன்கு உணர்ந்துகொள்ளமுடியாத நிலைமையில் உள்ளன. கேட்கப் பெறும் வரலாறுகள் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கின்றன. சங்ககாலப் புலவர்களுடைய வரலாறுகள் அனைத்தும் அந்நாளில் எழுதப்பட்டிருக்குமாயின் அவைகள் நமக்கு இந்நாளில் எவ்வளவோ பயன்பட்டிருக்கும். நமது தென்னாட்டின் வரலாற்றையும் உள்ளவாறுணர்தற்கு அவைகள் உற்ற துணையாகவும் அமைந்திருக்கும்.

தமிழறிஞர்களுடைய வரலாற்றைத் தமிழுலகில் நிலைபெறச் செய்யவேண்டுமென்று விரும்பிய சைவ

சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப்பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் தமிழ்ப் புலவர்களுடைய வரலாறுகளை எழுதுமாறு கூறியதோடு, எழுதுவதற்குரிய வழிவகைகளையும் தெரிவித்தனர். யானும் அவ்வாறே அவ் வரலாறுகளைக் கூடியவரையில் சுருக்கமாகவும் விளக்க மாகவும் எழுதினேன். அவைகள் தனித்தனி நூல்களாக வெளியாயின. மிகுபுகழ் பெற்றவர்களின் வரலாறுகள் முன்னர் வெளிவந்தன. பிறகு நூலியற்றிய அனைவருடைய வரலாறுகளும் இருபத்தொரு பகுதிகளாக வெளியாயின. இருபத்தொரு நூல்களினும் வெளிவந்த வரலாறுகள் ௩௬. மேலும் பல வரலாறுகள் வெளிவரப் போகின்றன.

இவ் வரலாறுகளை எழுதுவதற்கு யான் பல நூல் களையும் நூலகங்களையுந் தேடினேன். விரிவாகக் கிடைத்த வரலாறுகள் போகச் சுருக்கமாகக் கிடைத்த வரலாறுகள் அகரவரிசையாகத் தொகுக்கப்பெற்றன. பல புலவர்க ளுடைய பெயர்கள் நூன்முகப்பில் காணப்படுவதைத் தவிர வேறெவ்விதமான குறிப்புக்களும் அற்றவைகளாக இருந்தன. சில அறிஞர்களுடைய செய்திகளைச் சிறப்புப் பாயிரங்கள் புலப்படுத்தின. சிலருடைய செய்திகள் செவி வழிச் செய்தியாகவுங் கிடைத்தன. இவ்வாறு கிடைக்கப் பெற்றவைகள் யாவும் இவ் அகரவரிசையிற் சேர்க்கப் பெற்றுள்ளன.

இந்த அகரவரிசையைத் தொகுத்து முடிப்பதற்குத் தஞ்சைமாவட்டம் மன்னார்குடியில் உள்ள கோட்டூர் இரங்கசாமி முதலியார் இலவச நூல்நிலையம், திருவையாறு அறுபத்துமூவர் மடத்தில் உள்ள நூல்நிலையம், காரையார் கோயில். கா செ. மடாலய நூல்நிலையம், பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க நூல்நிலையம், நெல்லையில் உள்ள திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைச் சேர்ந்த சிவஞான முனிவர் நூல் நிலையம், திருவைகுண்டத்தில் உள்ள குமரகுருபர சுவாமி கள் நூல்நிலையம், பாளையங்கோட்டையில் உள்ள திருவ ரங்கனார் நூல்நிலையம், வாசிக புத்தகசாலை, திருநெல்வேலி

திருஞானசம்பந்த சுவாமி மடாலய நூல்நிலையம், பலவான் குடியில் உள்ள திரு. மெ. வெ. வேலப்ப செட்டியாரவர் களுடைய திருமுருகன் செந்தமிழ்நிலைய நூல்நிலையம், திரு. ராம. கும. சு. குமரப்ப செட்டியாரவர்களுடைய தமிழக நூல்நிலையம், திருமறைக்காட்டை யடுத்த பஞ்ச நதிக் குளம் அருணசல சுவாமிகள் மடாலய நூல்நிலையம், மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் உள்ள நூல்நிலையம், மதுரைக் குட்டையாச் சுவாமிகள் மடாலய நூல்நிலையம், கரந்தைத் தமிழ்ச்சங்க நூல்நிலையம், தஞ்சை பாலையசுவாமிகள் மடா லய நூல்நிலையம், திருக்களர் கோ. ஆ. மடாலய நூல்நிலையம், திருவாவடுதுறை ஆதீனத்துச் சரசுவதி மகால் நூல்நிலையம், தருமபுர ஆதீன நூல்நிலையம், திருப்பனந்தாள் காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி நூல்நிலையம், சிதம்பரம் மௌனசாமிகள் மடாலய நூல்நிலையம், சென்னை வீர, சுப்பைய சுவாமிகள் மடாலய நூல்நிலையம், வியாசர் பாடி சிவப்பிரகாச சுவாமிகள் மடாலய நூல்நிலையம், மறைமலையடிகள் நூல்நிலையம், பேரையூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் மடாலய நூல்நிலையம், கோவை சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார். (இப்பொழுது சம்பந்த சரணலயத் தம்பிரான்) அவர்களுடைய நூல் நிலையம், திரு. சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களுடைய நூல்நிலையம், சிரவணபுரம் கௌமார மடாலய நூல்நிலையம், திருக்குடந்தை குமாரசாமிச் செட்டியாரவர்களுடைய நூல்நிலையம், மயிலம் சிவஞான பாலையசுவாமிகள் தமிழ்க்கல்லூரி நூல்நிலையம், காஞ்சிபுரம் ஆளவந்த வள்ளலார் ஆதீன நூல்நிலையம், காஞ்சி முத்தமிழ் அச்சகத்தில் உள்ள சேக்கிழார் நூல்நிலையம், காரைக்குடி இந்து மதாபிமான சங்க நூல்நிலையம், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலய நூல்நிலையம் ஆகியவைகளில் உள்ள நூல்கள் பலவும் பார்வையிடப்பெற்றுக் குறிப் பெடுக்கப்பட்டன. மேற்கூறிய இடங்கட்குச் சென்ற பொழுது அங்கங்குள்ள அன்பர்கள் ஆகவேண்டிய உதவி களைச் செய்தனர். அவர்கட்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

தமிழ்ப்புலவர் அகரவரிசை நூல் முயற்சி பல்லாண்டு கட்கு முன்னரே தொடங்கப்பெற்றிருக்கிறது. யாழ்ப் பாணத்தில் இருந்து வெளிவந்த 'பாவலர் சரித்திர தீபகம்' என்னும் நூலே முதலாவது தமிழ்ப்புலவர் அகரவரிசை நூலாகும். இஃது ஒரு சிலருடைய வரலாறுகளையே கூறியது. இதற்குப் பின்னுஞ் சில தமிழ்ப்புலவர் அகர வரிசை நூல்கள் தோன்றின. இவைகளும் ஒரு சிறு அளவிலேயே அமைதிபெற்றன. இவ் வகரவரிசை நூல் பெரும்பாலாருடைய வரலாற்றைக் கூறுகிறது.

விரிவாக எழுதப்பெற்ற இருபத்தொரு நூல்களினும் அமைந்துள்ள புலவர்களை இவ் வகரவரிசையிற் சேர்க்க வில்லை. அந் நூல்களில் வந்துள்ள ஐந்நூற்றறுபத்தைவரின் பெயரும் புத்தக எண்ணும் அகரவரிசையில் இனிவரும் பின்னிணைப்பில் சேர்க்கப்படும் அவ் வரலாறுகளைப் பார்க்க விரும்புவோர் அவ்வப் புத்தகங்களில் பார்த்துக்கொள்ள லாம். இவ்வகரவரிசைப் புலவர்கள் இயற்றிய நூலின் பெயர் அகரவரிசையும் இப்பின்னிணைப்பில் உளது.

சமயாசாரியர்கள், ஆழ்வார்கள், சங்கப்புலவர்கள் முதலியோரின் வரலாறுகள் தனி நூல்களாக வெளி வந்திருத்தலின் அவர்களுடைய பெயர்கள் இவ் வகர வரிசையிற் சேர்க்கப்பெறவில்லை. நூல் அச்சாகுங்கால் கிடைக்கப்பெற்ற பல வரலாற்றுக் குறிப்புகள் பின்னிணைப் பாகப் பின்னர் வெளிவரும். இத்தகைய வரலாற்றுத் தொண்டில் என்னை ஈடுபடுத்திய கழக ஆட்சிப்பொறுப்பாள ரவர்கட்குத் தமிழ் உலகம் நன்றி செலுத்துங் கடப்பாடுடை யது. இவ் வகரவரிசை வேலை இவ்வளவிலேனும் வெற்றி பெறத் துணைபுரிந்த முருகப் பெருமானின் திருவடிகளைப் போற்றுகிறேன்.

பைந்தமிழ்ப் பண்ணை
கருப்பக்கிளர்
தஞ்சை மாவட்டம்.
25-5-1960

சு. அ. இராமசாமிப் புலவர்

## கo௪௪. துரைசாமிப் பாவலர்

இவர் செண்டத்தூர் ஐயாத்துரை முதலியார் என்பவர் பேரில் நாணிப் புறங்காட்டல் என்னும் ஒரு துறைக்கோவை பாடியுள்ளார். இக் கோவை 1912 ஆம் ஆண்டில் மதராஸ் ரிப்பன் அச்சகத்தில் அச்சிற் பதிப்பித்து வெளியிடப் பெற்றிருக்கிறது. இதற்குக் காவை இராசு நாவலர் என்பவர் உரை செய்திருக்கிறார்.

"தேனே அனைய மொழியாள் க்ருபாகரன் செங்கதிரோன்
சூனு வெனுங்கொடை ஐயாத் துரையின் சுடர்கிரியில்
மானேய் மதியும் பொருப்பொடு நாகவடமுமின்றி
நானே அமுது கடைகுவ தெப்படி நன்னுதலே."

என்பது அக் கோவைப் பாடல்கள் நூற்றெட்டனுள் ஒன்றாகும்.

## கo௪௫. துரைசாமிப் பிள்ளை - க
(1890)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூரில் இருந்தவர். தந்தையார் பெயர் கணபதிப் பிள்ளை. இவருடைய முன்னவராகிய வீராச்சாமிப் பிள்ளை என்பவரும் புலவராகவும் வழக்கறிஞராகவும் விளங்கினர். துரைசாமிப் பிள்ளை திருப்பேரூர் வெண்பா வந்தாதி என்னும் நூல் பாடியிருக்கிறார். நூலைப் பாராட்டிச் சி. கே. சுப்பிரமணிய முதலியார் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"புகராம்பற் றீவினையும் போகுமே நெஞ்சே
புகராம்பற் றேனுரித்துப் போர்த்தான்—தகராம்பற்
கொங்கைச்செவ் வாயாளோர் கூறுடையான் மாபுரத்துச்
சங்கரதற் றுள்தொழவே தான்."

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## கo௪௬. துரைசாமிப் பிள்ளை - சே. அ.
(1894)

இவர் சேலத்தில் அப்பாச்சாமிப் பிள்ளை என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றினார். பி. ஏ., பி. எல். வரை ஆங்கிலக் கல்வி கற்றதன்றித் தமிழ்ப் புலமையும் பெற்றார்.

வழக்கறிஞராகத் தொழில் புரிந்தார். தமிழ்த் தொண்டும் தக்கவாறு புரிந்தார் அட்டாவதானம் சொக்கலிங்கப் புலவர் இயற்றிய சேலம் தலபுராணத்திற்கு இவர் உரையெழுதியிருத்த லோடு பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரமும் வழங்கியுள்ளார்.

மருவா வடுதுறை மாதவர் வாழ்த்தும்
திருவா வடுதுறைத் தினமணி போலும்
அப்பிர மேய அதுலமெய்ஞ் ஞான
சுப்பிர மணிய சுவாமிகள் வழியில்
இலைகை மறையும் அலத்தைகள் பலவும்
செய்துய ரகற்றிச் சிற்சுக மளிக்க
வல்ல வம்பல வாண தேசிகன்
நல்லருள் நோக்கு நானிலத் தெவர்க்கும்
பிரானரு ளுண்டெனில் உண்டுநற் செல்வம்
பிரானருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்''
... .. ... ... ... ... . . ... ... ... ... ... ...

என்பது இவருடைய சிறப்புப்பாயிரப் பாடல் பகுதிகளில் ஒன்று.

## கஎசஎ. துரைசாமி முதலியார் - வீ
## (20 - நூ.)

இவர் புதுச்சேரியினர். புதுவை அரசினர் கல்லூரியில் தமிழாசிரியராகத் தொழில்புரிந்ததன்றித் 'தமிழ் மகவு' என் னும் பத்திரிகை ஒன்றையும் நடத்தினர். இவர் இறையன்பிற் சிறந்த கண்ணப்பநாயனார்மீது கலம்பகம் ஒன்று இயற்றினர். அக் கலம்பகத்தைப் பாராட்டித் திருப்பாதிரிப்புலியூர்ச் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள், உ. வே. சாமிநாதையர், கோ. வடிவேலுச் செட்டியார், யாழ்ப்பாணம் சர்வேசுவர சர்மா, இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர், ந. மு. வேங்கடசாமி நாட்டார், புதுவை பொன்னுச்சாமிப் பிள்ளை, பண்டிதை அசலாம்பிகை அம்மையார், விருதை சிவஞான யோகிகள் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' இறைச்சியும் என்பும் திருமுனே கிடக்க
எதிர்குதித் தோடிய மறையோன்
உறைப்பொடு மறைந்து நின்றுகண் டுருகு
முண்மையைச் சிறிதுரைத் தருளாய்

கறைக்களன் எங்கண் மணியெனுந் தொண்டர்
கட்டுரை பழுதுறு வாறே
நிறைக்கதிர் விழியீந் தடியவர் பெருமை
நிலைத்திடச் செயுங்குண நிதியே."

என்பது கலம்பகத்தில் ஐந்தாவது பாட்டு

## கoசஅ. துரைசாமி மூப்பனார்

இவர் தஞ்சைமாவட்டத்தில் உள்ள கவித்தலம் என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறியவர். இவர்க்கு ஆசிரியர் திரிசிரபுரம் கோவிந்த பிள்ளை என்பர். துரைசாமி மூப்பனாரின் தந்தையார் பெயர் முத்தைய மூப்பனார். இவர் இராமாயணத்தில் அரிய செய்யுட்களைத் திரட்டி உரையெழுதிக் கம்பராமாயண அருங்கவி விளக்கம் என்னும் பெயருடன் வெளிப்படுத்தியுள்ளார். அந் நூலினைப் பாராட்டி யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளை, ஐயாத்துரை ஐயர், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, புதுவை இராமாநுச நாவலர் முதலிய பலர் பாராட்டுரை வழங்கியுள்ளனர்.

மற்றும் இவரால் அயோத்தி நகர மான்மியம், சானகிபரிணயம், பிரசன்னராகவம், அமிசசந்தேசம், கருடபுராண வசனம், கயாமான்மியம் கங்காயாத்திரை மான்மியம், பாரதச் சுருக்கம் என்னும் நூல்களும் வேறுசில எழுதப்பெற்றன.

## கoசகூ துரைசிங்கம் பிள்ளை
(கி. பி. 19 - நூ)

பாண்டிவள நாட்டிலே கடலாடி என்னும் ஊரில் புலவராக விளங்கிய பச்சையப்ப பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். தந்தையாரிடமே இளமை முதற்கொண்டு சிறந்த முறையிற் கல்விகற்றுப் புலவரானார். "மகனறிவு தந்தையறிவு" என்பது எல்லாவிடங்களினும் பலியாமற்போனாலும் சிலவிடங்களிலேனும் பலித்தே தீருகின்றது. இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரம் அறியமுடியாதிருப்பினும் இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய கந்தபுராண வண்ண சிறப்புப்பாயிரப் பாடல்கள் இரண்டை அடியிற் காண்க:

"வனத்தரணி பரிவையினுக் கொளிர்வதன
மெனச்செழிய வழுதி நாட்டில்
வனத்தரணி யவலருகு மதுமலியுந்
தடம்பொதுவை வதுநிதிக் கோ
வனத்தரணி யடல்புயம னவனித
இருட்டினமான் மகவாங் கேச
வனத்தரணி யகநயனக் கரநுகர்வா
னடிபரவு மலைய னன்றன்."

"மாகனகத் திகம்பரிவேட் புறுவிசைய
ராமலிங்க வள்ளோ றுதி
வாகனகத் திகம்பரிசே யவன்சரித
காந்தமதை வன்ன மாகப்
பாகனகத் திகம்பரிசொற் றேரனந்தன்
மாணியுகம் பரித்த வாலாய்க்
கோகனகத் திகம்பரிநாப் புகுமெனினே
ராரிவனுக் குலகின் மாதோ."

## க௦ரு௦. துர்க்கைமுத்துப் புலவர் (1886)

இவர் பாண்டிவள நாட்டில் வரராசை மாநகர் என்னும் மற்றொரு பெயரையுடைய சங்கரநயினர் கோயிலில் சூரியன் சங்கரபாண்டியப் புலவர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். நூல்பல கற்றுப் புலவராகத் திகழ்ந்தார். இவர் முருகக் கடவுள்மீது காவடிச் சிந்து பாடியுள்ளார் இவர் இயற்றிய பிற நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. ஒரு பாட்டின் சில பகுதிகளை அடியிற் காண்க:

"செந்தில்வளர் முருகேசா ! என்றன் சிந்தையினில் மகிழ்வாசா
செகநேசாபுகழ் போசா அருள்நேசா புவியீசா
ராஜைநகர் வளர்வாசன் நல்லநாமம் துர்க்கை முத்துத்தாசன்
நல்விவேகன் கல்வியோகன் உனதாகன் கனவாகன்
எனதத்தனே சிவமுத்தனே புவிகத்தனே எங்கள் சித்தனே
ஆறுமுகவடி வேலா கண்டெதிர்புகழ் குணசீலா."

## க௦ருக. தெத்தாத்ரைய சுவாமிகள்

இவர் வாழ்ந்த காலம் இடம் முதலியன தெரியவில்லை. இவர் சமாதி சதகம் முதலிய பதினொரு திருப்பதிகங்கள் பாடியுள்ளார்.

" ஏசருஞ் சுருதி ஆகமப் பிரிவால்
எண்ணிவின் டறிவதற் கனுகாத்
தேசரும் பொருளா யிருந்தநா மென்னும்
தெளிவறிந் ததிவிருந் தாதி
மாசறு சுடராய் நிறைந்தபே ருருவாய்
மனமுதற் பகுப்பிலா வொன்ருய்ப்
பேசரும் பதமாய் அகண்டபூ ரணமாய்ப்
பேச்சிறந் திருப்பதே பிரமம்."

என்பது இரண்டாவது பிரமசகசத்தில் ஒரு பாட்டு.

## கo௫உ. தெய்லர் ஐயர்

தமிழ் நாட்டிற்கு வந்து தமிழ்ப்புலமைபெற்ற ஐரோப்பியர்களில் இவரும் ஒருவர். தமிழ் மொழியில் வேதாத்தாட்சி முதலிய சிறு நூல்கள் சிலவற்றை எழுதி வெளியிட்டார். வெற்றிவேற்கையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். ஆங்கிலேயர்கள் தமிழ் கற்பதற்காகப் பாலபாடம் ஒன்று எழுதினுர். மற்றும் இவர் செய்த தமிழ்த்தொண்டுகள் பல.

## கo௫௩. தெய்வங்கள்பெருமாள் பிள்ளை

இவர் சோழவள நாட்டிலே திருத்தில்லேக்கு அணித்தான தில்லேவிடங்கன் என்னும் ஊரிலே இருந்த தில்லேவிடங்கன் மாரிமுத்துப் பிள்ளே என்பவருடைய மகனுகத் தோன்றியவர். இவருடைய பெயரனுகத் தோன்றிய வேலுச்சாமிப் பிள்ளே என்பவரும் புலவராக இருந்தவர். தெய்வங்கள் பெருமாள் பிள்ளே தம் தந்தையாரிடமே கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். இவர் பழநிச் சுப்பிரமணியர் பதிகம் என்னும் நூல் பாடியிருக்கிறுர்.

" சீர்கொண்ட செங்கமல வதனமிரு மூன்றும் வெண்
திருநீ றணிந்த நுதலும்
சிவனுர் செவிக்குளுப தேசவுரை பகர்கின்ற
செம்பவள வாயு மவிர்கொண்
டேர்கொண்ட குண்டலம் இலங்குபன் னிருசெவியும்
இன்பவருண் மாரி பொழியும்
ஈராறு நயனமும் ஓராறு கந்தரமும்
இசையளிகள் பயிலு நீபத்

தார்கொண்ட பனிரண்டு தோளும்வேல் கொண்டகர
தலமுமிரு தாள்மல ருமுன்
தன்சொருப முங்கான மயில்மீதில் அன்பினொடு
தமியேன்முன் வந்தருள்செய் வாய்
போர்கொண்ட சூரனைக் கொன்றமரர் குழுவைப்
புரந்தசர வணப கவனே
பொற்புலவும் ஒருகேச வற்கினிய மருகேச
பொற்பழநி முருகே சனே.''

என்பது இவர் இயற்றிய பழநிப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## கo௫ச தெய்வசிகாமணி முதலியார் பு. தெ.

(20 - நா.)

இவர் திருப்பாதிரிப்புலியூர்ப் புதுப்பாளையம் என்னும் ஊரில் இருந்தவர். ஆங்கிலந் தமிழ் ஆகியவைகளைக் கற்று அரசாங்க அலுவலில் அமர்ந்திருந்தார். இவர் சில வரலாற்று நூல்களையும், திருவருள் விலாசம், பகவந்த சுவாமிகள் பஞ்சரத்தினம் என்னும் நூல்களையும் எழுதியுள்ளார்.

'' அண்டகோ டிகளெலாம் தன்னருட் சத்தியால்
ஆக்கியாள் கின்ற அன்னை
ஆடவும் பாடவும் பாரின்மிசை யோடவும்
அன்பாய்ப் பயிற்றும் அன்னை
கண்டவழி யேகினும் துன்போன் றிலாமலே
காப்பா யிருக்கும் அன்னை
கனசெல்வ மொடுகல்வி திடகாய மனமினம்
கரவா தளிக்கும் அன்னை
பண்டுவினை தீர்த்திடும் பகவந்த நாமமாம்
பாடுகண் டையும் அன்னை
பழமலையில் எனையாண்டு பாடலி புரத்திலே
பரிவாய் அமர்ந்த அன்னை
தெண்டனிட் டுன்னைநான் தாயென அடைந்தனன்
சேயெனைத் தேற்றல் வேண்டும்
சித்தரொடு முத்தரும் பத்தியாய் ஏத்திடும்
சிவசாமி நாத குருவே.''

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு. அந்நாளில் வாழ்ந்திருந்த பகவந்த சுவாமிகள் தயாநந்த சுவாமிகள் என்னும் திருவருட் செல்வர்களிடம் இவர் அடிமை பூண்டொழுகி அவர்

களால் பல புதுமையான நிகழ்ச்சிகளைக் கண்கூடாகக் கண்டார். இவர் தம்முடைய வரலாற்றை ஆங்கிலத்தில் தாமே எழுதி யிருக்கிறார் என்று தெரிகிறது.

## கடுரு. தெய்வநாயக அடிகள்
(19 - நூ.)

இவர் சங்கராச்சாரியருடைய மரபில் வேதாந்த வழியில் ஒழுகியவர். விநாயக பாரதி என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர். தசகாரிய மகாவாக்கியம் என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். அந்நூல் ஐம்பத்தொரு செய்யுட்களை யுடையது. ஈசூர் சச்சிதாநந்த அடிகள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆகையினுல் அயமான்மா எனும்பதத்தால்
விளங்கியசீ வான்மா வுக்கும்
ஏகிகப் பிரமமென மொழிபதத்தால்
பரமான்மா வினுக்க யிக்கிய
மோகவிப ரீதமற நாலுவாக்
கியத்தானும் மொழிந்தா ரேனும்
போகபூ ரணசொருப ஞானமன்றித்
தேருதப் பொலிவுஞ் சொல்வாம்"

என்பது நூலில் ௯௯ ஆவது பாடல்.

## கடுகூ. தெய்வசிகாமணிக் குருக்கள்
(19 - நூ.)

இவர் 'சிவாநந்த சுவாமிகள் பதிகம்' என்னும் நூல் பாடியுள்ளார். அதற்குத் தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயர்,

"பொன்மாலை வனமார்பில் பூண்மாலை
அயின்றிடும்பி புவிமாலைக்கார்
மின்மாலை யெனநீத்து மிகுமாலைச்
சாரேடி விரியை யாற்றில்
மன்மாலை நிறத்தாற்கு மலர்மாலை
மனத்தனிசி வாநந் தற்கோர்
சொன்மாலை தனைவாக்கால் தெய்வசிகா
மணிக்கவிஞன் சூட்டி னுனல்."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧0௫௭. தெய்வநாயகப் பெருமாள் - சீ
## (19 - நூ.)

பாண்டிவள நாட்டில் சீயர்குளம் என்னும் ஊரில் இருந்தவர். தெய்வத் திருவருளால் மிகு இளமையிலேயே செய்யுள் பாடுந் திறம் பெற்றுவிட்டார். அதனால் இவருக்குப் "பாலகவி" என்னுஞ் சிறப்புப் பெயரும் உண்டாகியது. இவர் வானமாமலைச் சதகம், வானமாமலை அலங்காரக் கொம்மைப் பாடல், திருக்குருகூர் மாறன் யமகவந்தாதி முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவருடைய நூல்களுக்குச் சென்னை இராயபுரம் புலவர் நாராயணசாமிப் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள். வானமாமலைச் சதகத்திற்கு மேற்படியார் இயற்றிய பாடல்,

"புயலனைய புயக்கோடைகூர் ஒக்குறுமா
முனிக்கரசன் போல்வான் நீடும்
வயல்தடங்கள் செறிமதுரைத் தெய்வநா
யகப்பெருமான் எனுநா மத்தோன்
உயுமரவத் துடலினும்பாற் கடலினுந்தண்
ணடையினிலும் உறங்கு பெம்மான்
இயல்வளஞ்சேர் வானமா மலைச் சதகம்
எனுமொருநூல் இயற்றி னானே,"

என்பது.

## ௧0௫௮. தெய்வநாயக முதலியார் - வல்லி - ப
## (1901)

இவர் சென்னைமா நகரில் வாழ்ந்திருந்தவர். அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியாரிடம் இலக்கண இலக்கிய நூல்களையுஞ் சைவசித்தாந்த நூல்களையுங் கற்றுத் தேறிச் சிறந்த புலமை பெற்றார். இவர் நூல்கள் சிலவற்றிற்கு உரையெழுதியதன்றிச் சில நூல்களை ஆராய்ந்தும் பதிப்பித்திருக்கிறார். திருவாவடுதுறை ஆதீனத் தலைவராக எழுந்தருளியிருந்த அம்பலவாண ஞானதேசிகரைக் கண்டு போற்றும் பொருட்டு இவர் திருவாவடுதுறைக்குச் சென்றபோது ஆதீனத் தலைவர் இவரைப் பார்த்துத், "திருவிளையாடற் புராணச் செய்திகளை ஒவ்வொரு வெண்பாவில் அமைத்துத் 'திருவிளையாடற் புராண

சார வெண்பா ' என்னும் நூல் ஒன்று இயற்றுக'' என்று கட்டளையிட்டார். இவர் அதனைத் தலைமேற்கொண்டு அவ்வாறே நூல் ஒன்று பாடினார். அவ்வெண்பாவில் ஒரு பாட்டு:

'' இசையதனின் மிக்கவளே ஈழத்தா ளென்ற
வசைதீரப் பாணன் மனைக்கா—நசைதீர்க்கும்
சங்கரனீ மூத்தான் தனைச்சுமத்தி னுன்மதுரைத்
துங்கவர சன்போற்றச் சூழ்ந்து.''

## கo௫௬. தெய்வநாயக முதலியார். ஒ. ற

இவர் விழுப்புரத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் இரத்தின சபாபதி முதலியார்; தயார் பெயர் தனக்கோடியம்மாள். தெய்வநாயக முதலியார் கடைவாணிகத்தை மேற்கொண்டவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றதில்லையென்று இவரே, முகவுரையில், ''இப்புவியின்கண் உள பத்தி வித்தையிற் சிறந்த சிரோன்மணிகட்கு அடியேன் கரமது சிற மேற்கொண்டு கழறுவது இயாதெனில் யானோ வித்வத்துக்குரிய இலக்கண இலக்கியம் யின்னதென அறிந்தவனல்லன். முற்காலத்தில் அடியார்கள் ஸ்ரீமத் முருகக் கடவுளை தியானித்து முக்தி பெற்றுறேன்றுறை ஆன்றோர்களால் மொழியக் கேள்வியுற்ற யான் அன்று தொட்டு இக் காலத்தில் பூலோகத்திற்கெல்லாம் முதற் கடவுளாய் விளங்கா நின்ற ஸ்ரீ முருகக் கடவுளை உபாஸனையாகக் கொண்டொழுகி வந்தமையால் அவர் அருளைப் பெற்று ஸ்ரீயப்பதி முருகக் கடவுள் பேரிலும் ஸ்ரீ நடராசர் பேரிலும், திருமயிலை கபாலீசர் பேரிலும், ஸ்ரீ அம்பாள் பேரிலும், அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை வள்ளலார் பேரிலும், யின்னும் அனேக பாடல்களையும் இயற்றி இதற்கு ஸ்ரீ முருகக் கடவுள் தோத்திரத்திரட்டெனப் பெயரிட்டு வெளியிடத்துணிந்தனன். இதில் யெக்குற்றமிருப்பினும் ஹம்ஸ பக்ஷியானது நீரையகற்றிப் பாலைப் பருகிய வாரதாய் ஸ்ரீயப்பதியாகிய முருகக் கடவுளினது நாமத்தை யனுதினம் தியானித்து முக்தர்களாக யுருவீர்களென நமஸ்கரிக்கின்றேன் அடியார்க்கடியேன் ஒட்டை-றத்தின-தெய்வநாயகன்,'' என்று எழுதுகிறார். ஆயினும் இவர் இயற்றியுள்ள நூல்கள்:

க. வண்ணக் கலிவிருத்தம்
உ. வெண்பா
ங. முருகக் கடவுள் பஞ்சரத்தினம்
ச. நடராசர் பஞ்சரத்தினம்
ரு. நடராசர் பதிகம்
சு. தரிசனையற்புதப் பதிகம்
எ. புலம்பற் கண்ணிகள்
அ. திருமயிலைக் கபாலீசர் பதிகம்
கூ. கேளிசைக் கட்டளைக்கலித்துறை
க0. ஆனந்தக் களிப்பு
கக. தேவாரக் கண்ணிகள்
கஉ. நடராசர் ஆனந்தக் கீர்த்தனை
கங. முருகர் கீர்த்தனை
கச. திருநீற்றுப் பதிகம்
கரு. சுப்பிரமணியர் தோத்திரம்
கசு. தோத்திரத் திருப்புகழ்
கஎ. பரஞ்சுடர்க் கண்ணி
கஅ. ஆண்டிகளின் மூடமதி திறவு
ககூ. பொருள்தேடி அருளடையார்

என்பன. பாடல்கள் யாவும் பிழை மலிந்தவைகளாகவும் பொருட் செறிவற்றவைகளாகவும் மனம்போனவாறு பாடியவைகளாகவும் உள்ளன.

" மந்தாரை கோங்கு மணக்கும் மயிலமலைக்
கந்தா உனைப்பாடக் காதலுற்றேன்—எந்தாய்நீ
இந்தாவென் றெந்தனக்குன் செந்தா மரைப்பதத்தைச்
சிந்தா தளித்தருள்நற் சீர்."

என்பது வெண்பாவில் ஒரு பாட்டு. வனதடாகபுரம் வேங்கடசுப்புப் பிள்ளை, தை. அ. வேங்கடசுப்பிரமணியம் பிள்ளை, சிறுவை வேலாயுதம் பிள்ளை என்போர் சாத்துக்கவி பாடியுள்ளனர்.

## க0கூ0. தெய்வநாயகம் பிள்ளை

பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திரிசிரபுரத்தில் இருந்தபோது அவரிடம் கல்வி கற்ற மாணவர்கள் பலரில்

இவரும் ஒருவர். இவர் சிறந்த புலமைபெற்று விளங்கினர். ஆறுமுக நாவலர் திருக்குறள் பரிமேலழகர் உரையைப் பதிப்பித்து வெளியிட்டபோது சிறப்புப்பாயிரம் கொடுத்தவர்களில் இவரும் ஒருவர். இவர் தாம் பிள்ளையவர்களின் மாணவர் என்பதை,

"கடன்மருங் குடுத்த தடநெடும் புவியில்
உற்றநூல் யாவும் கற்றவன் என்றும்
தோலா நாவின் மேலோர் வகுத்துத்
தந்தருள் பலபிர பந்த மெண்பன
எல்லாஞ் சொல்ல வல்லோன் என்றும்
உமிழ்சுவை ஆரியத் துற்றபல் புராணமும்
தமிழில் மொழிபெயர்க்கத் தக்கோன் என்றும்
தனையடைந் தவரை நினைதரு தனைப்போல்
வல்லவ ராக்க நல்லதன் இயற்கையாம்
மெலியா அன்பில் சலியான் என்றும்
மற்றவர் பிறரைச் சொற்றன போலா(து)
உற்ற குணங்கள் முற்ற உணர்ந்து
செப்பமுள் ளோர்பலர்க் கொப்பயான் உள்ளன
நினைந்துரை செய்வது புனைந்துரை அன்றெனக்
காட்சியின் விளக்கி மாட்சியின் அமர்வோன்
கற்றவர் குழுமி உற்றபே ரவையில்
கனக்குநுண் ணறிவிலா எனக்குமோர் ஒதுக்கிடம்
தந்தமீ னாட்சி சுந்தரப் பெரியோன்."

என்னும் அடிகளால் விளக்கியுள்ளார்.

## ௧0௬௧. தெய்வநாயகம் பிள்ளை - மு

(20 - நூ.)

பாண்டிவள நாட்டிலே முதுகுளத்தூரிலே தோன்றியவர். தமிழிலக்கிய இலக்கணங்களைக் கற்றுப் புலமைபெற்ற இவர் மேற்படியூர் வித்தியாசங்கத்தின் உறுப்பினர்களில் ஒருவராக இருந்ததன்றிக் கோடைக்கானல் ஆங்கிலக் கிளப்பின் தலைமை எழுத்தாளருமாக இருந்தார். சித்திரகவிகள் செய்வதில் வல்லவர். புவனேந்திர காவியம் என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரமாகக் கொடுத்த உரைநடைப் பாடல்களை (வசன வெண்பாக்களை) அடியிற் காண்க:

"சேதுசமஸ் தானத்தைச் சேர்ந்த முதுகுளத்து
ராதிக்கி ராமாந் தரங்களின்வி—வாதங்
களைத்தீர்க்கா நின்றதர்ம கர்த்தா விருத்தங்
களைப்பா டுவதிற் கவி

சக்கரவர்த்தி யானகம்ப னுக்குச்ச மானங்கொத்
துக்கணக்குப் பாத்ய சுபயோகி—முக்கணனை
யேசிவன்பிர் மாவிஷ்ணு யேகமக மூகெனும்
தாசம்ப்ர தாயச்ச மா.

தானநிர்மா ணந்தெரிந் ததத்துவவி சாரியெனம்
மானகுமை யாய்ப்பெற்ற மைத்துனர்ந—வினகற்பி
தாலங்கா ரப்ரசங்கி சற்சனர்சி னேகரிந்த்ர
சாலவல்ல வர்மனு ராச.

ராசஸ்ரீ சுப்பையா பிள்ளையவர் கள்ராச
ராசன் புவனேந்த்ர ராசனது—விசுபுகழ்
பெற்றகதை யைப்ரபந்த மாயியற்றி னூர்களதைக்
கற்றவர்கண் ணென்றுசொன்னூர் கள்.

இந் நான்கு பாடல்களையும் வெண்பாவாகப் பாடுவதோடு உரைநடையாகவும் ஒன்ருகச் சேர்த்துப் படித்துக்கொள்ளலாம். செய்யுளியற்றுவதில் இதுவும் புதுமையான ஒரு வகையாகும். இவ்வாறு மாம்பழக் கவிச்சிங்க நாவலர் முதலிய வேறு அறிஞர்களும் உரைநடைக் கவிதை செய்திருக்கிருர்கள்.

## ௧௦௬௨. தெய்வநாயகம் பிள்ளை

சோழவள நாட்டில் ரெட்டியூர் என்னும் ஊரில் இருந்தவர். கணக்கு வேலையை மேற்கொண்டிருந்தவர். முன்னுளில் (அஃதாவது ஏறக்குறைய ஐம்பது அறுபது ஆண்டுகட்கு முன்) நாட்டில் கணக்கப் பிள்ளைகளாக இருந்தோர் புலவர்களாகவும் விளங்கியிருந்தனர் என்பது பன்னூலாராய்ச்சியினுல் நன்கு பெறப்படுகிறது. இவரும் கணக்கராக இருந்ததோடு புலவராகவும் இருந்தார். சீனிவாச தாதாசாரியர் என்பவர் இயற்றிய பூவராகர் அந்தாதி என்னும் நூலுக்கு இவர்,

"செந்தமிழ்க் கவிஞர் யாவரும் வியப்பத்
திருமலைத் தாயவன் முன்னம்
வந்தவ தரித்த வலயமா தேவி
மாதகர் வேதநா ரணர்முன்

எந்தையாம் பூவ ராகற்கந் தாதி
இசைத்ததை அரங்கமேற் றுவித்தார்
சுத்தரப் பருவூர்ச் சீநிவா சாரியர்
எனச்சொலுங் கவிஞர்தம் அரசே ''

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௧0கூ௩. தென்பழநிப் பிள்ளை
(18 - நூ.)

இவருடைய தந்தையார் இருந்தது கோயம்புத்தூருக்கு அடுத்த தடாகம் என்னும் ஊர். அக்காலத்தில் மைசூரை ஆண்ட ஐதர், திப்பு இவர்கள் செய்த கலவரங்களுக்கு அஞ்சி நல்லுருக்காநாட்டுச் சுஞ்சுவாடியில் குடியேறினர். அப்பொழுது அவ்வூர் ஒரு பெருநிலக்கிழாருடைய தலைநகராக இருந்தது. அது பொள்ளாச்சி என்னும் பொருளாட்சிக்குத் தென்கிழக்கில் பத்துமைல் தொலைவில் உள்ளது.

இவரது சமயம் சைவம். இவர் சைவ நூல்கள் பலவற்றைப் பயின்றிருக்கிறார். அமணலிங்கேசுவரரைப் பூசித்து வழிபாடு செய்தவர். சுஞ்சுவாடி சமீனின் காரியக்காரரான முத்துச்சாமிக் கவுண்டர் இவரைத் தம்முடைய ஊரான தென்குமரபாளையத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் ஆதரித்தார். அப்போது அவர்மீது "முக்கூட்டுப் பள்ளு'' என்ற நூலைப் பாடினார். இப் பள்ளுக்காகப் பாட்டுடைத் தலைவர் பத்து ஏக்கர் புன்செய் நிலத்தை நன்கொடையாக வழங்கினார். காவடிக்காநாட்டுக் கோமங்கலத்தில் இருந்த கொடையாளரான கங்க நாயகர்மீது, "**காதல்**'' என்னும் நூலையும் இவர் பாடியதாக இயம்புவர்.

இவர் பல தனிப்பாடல்கள் பாடியுள்ளார். வசையும் பாடக் கூடியவர். ஆறை நாட்டில் இருந்து நல்லுருக்காநாட்டுக்குக் குடியேறின காலத்தில் இவருடைய தந்தையுந் தாயுமே தனிமையிற் சென்றார்கள். புதிய இடத்திற்குச் சென்று பயிர்த் தொழிலைக் கைக்கொண்டு கொடிக்கால் வேலையைச் செய்து வந்தார்கள். பிறகே இவர் பிறந்தார். மிகுந்த ஏழ்மை நிலையில் இருந்தும் தம் புதல்வனுக்குக் கல்வி கற்பித்தார்கள். பிறகு தென்குமரபாளையஞ் சென்று ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம்

வைத்தார். தம் பெற்றோரையும் அழைத்துச் சென்றார். தாமே மேன்மேலுங் கல்வி பயின்று பிறர் மதிக்கும்படியான நிலைமையை அடைந்தார்.

இவர் தம்முடைய இருபத்திரண்டாவது அகவையில் முத்தம்மாள் என்னும் பெண்ணைத் திருமணஞ் செய்துகொண்டார். சில குழந்தைகள் பிறந்தனர். பிறகு மனைவி இறந்து போகவே உத்தமம்மாள் என்ற பெண்ணை இரண்டாந்தாரமாக மணஞ்செய்து கொண்டார். இம் மனைவியிடமுஞ் சில குழந்தைகள் தோன்றினர்.

இம் மக்களுள் உருமியாண்ட பிள்ளை ஒரு தமிழறிஞரானார். அவர் வசைபாடுவதிலும் வல்லவர். இரண்டொருவர்மேல் பாடியதனால் அவர்களுடைய குடும்பங்கள் அழிந்துபோய்விட்டன. இவருக்கு ஒரு கரி நாக்கு. எல்லோருக்கும் இவரிடத்தில் மிகுந்த அச்சமுண்டு. கத்தரித்தோட்டம் போட்டிருந்த ஒருவன் கத்தரிக்காய் கொடுக்கவில்லையென்று சினங்கொண்டு கத்தரிச் செடிகள் முழுமையுங் காய்ந்தழியும்படி அறம் பாடினார். இவர் நெடுங்காலஞ் சீர்த்தியோடு வாழ்ந்திருந்து எண்பதாவது அகவையிற் காலமானார்.

## ௧௦௬௪. தேசிகாசாரியார்

(1903)

இவர் தென்மொழியிலும் வடமொழியிலும் புலமை பெற்றவர். வடமொழியில் இருந்து கல்கி புராணத்தைத் தமிழில் உரைநடையாக மொழிபெயர்த்திருக்கிறார்.

## ௧௦௬௫. தேவகுஞ்சரி யம்மாள் - சி

(20 - நூ.)

இவ்வம்மையார் திரிசிரபுரத்தில் சிவாநந்தசாகரயோகீசுவரருக்கு முதன்மைப் புதல்வியாகத் தோன்றியவர். தம் தந்தையாரிடமே நூல்கள் பலவற்றையும் ஓதியுணர்ந்து சிறந்த புலமை பெற்றார். "சூதசங்கிதை வசனம்" என்னும் நூல் இவ்வம்மையாரால் எழுதப்பட்டுள்ளது. அந் நூலினைப் பாராட்டி,

கோ. வடிவேலுச் செட்டியார், ஆ. சேதுராம பாரதியார், நமச்சி வாய பிள்ளை, சிவசங்கர பண்டிதர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"திரிசிர புரம்வாழ் மறையவர் குலத்தோன்
சிவானந்த சாகர யோகி
புரிதரு தவத்தின் வருமமு தனைய
புண்ணியச் செல்விதேங் கடப்பின்
மருமல ரலங்கல் புனைநெடுந் தடந்தோள்
வள்ளலார் அருட்கடல் படிந்த
திருமலி பால சரஸ்வதி சுகுண
தேவகுஞ் சரிவராங் கனையே."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

"தந்தி மாமுகன் தாள்பணிந் திறிலா
இந்து சூடிய ஈசனோ டென்னுளே
வந்த ஆனந்த வல்லியை வாழ்த்திமெய்ச்
செந்தி லாண்டவன் சேவடி போற்றுவாம்."

என்பது அம்மையார் நூலில் இயற்றிய காப்புப் பாட்டு.

## ௧0௬௬. தேவராய அடிகள்

இப் பெரியார் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலிய எவையுந் தெரிந்தில. இவர் கந்தர்சட்டி கவசம் என்னும் நூலை இயற்றி யிருக்கிறார். முருகக் கடவுளிடத்தில் சிறந்த பக்தியுடையவர் என்பதும் மந்திர தந்திரங்களில் வல்லவர் என்பதும் நூலாற் பெறப்படுகின்றன. முருகக் கடவுளுக்குரிய சட்டி நாளில் இக் கவச நூலை ஓதுவோர் எண்ணிய பயன்களைத் திண்ணமாகப் பெறுகின்றனர்.

"கந்தர் சட்டி கவசம் விரும்பிய
பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையின் மாலையிற் கருத்துடன் நாளும்
ஆசா ரத்துடன் அங்கந் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்
கந்தர் சட்டி கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்துநீ றணிய

அட்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர் செயல தருளுவர்
மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்.''

என்பது நூலில் ஒரு ப.

## ௧௦௬எ. தேவேந்திரநாத பண்டிதர்

செழுமணவை என்னும் ஊரினர். சித்திரகவி செய்தலினும் இவர் வல்லவராக விளங்கியபடியால் 'சித்திரகவி' என்னுஞ் சொல்லும் பெயருக்கு முன்னே அமைந்து நின்றது. இவர் பதினெண் சித்தர்களால் இயற்றப்பெற்ற பற்பல பாடல்களிலும் சிற்சில செய்யுட்களைச் சேர்த்து எளிதாகவும் விரைவாகவும் எல்லோருஞ் செய்துகொள்ளத்தக்க வகையில் "வைத்தியக் குறள்'' என்னும் பெயரோடு நூல் வெளிப்படுத்தியுள்ளார். மற்றும் வைத்திய மூலிகை அகராதி, கைகண்ட அனுபோக வைத்தியப் பெருங்குறள் முதலிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

''ஆப்பால் முந்திரிபருப்ப திற்கற்கண் டிம்மூன்றி
ராப்பாலுண் தாதுவலு வாம்.''

"பசுப் பாலில் முந்திரிப்பருப்பும் கற்கண்டும் சேர்த்து இம்மூன்றையும் இரவினில் மாருது உண்டு வரவும்: தாது வலுவைத் தரும்; போகம் அதிகரிக்கும்படி செய்விக்கும்; தேகம் குளிர்ச்சியாகும்,''

என்பது தாது வலுவுக்குக் கூறும் முறை.

## ௧௦௬அ. தேரையர்

இவர் அகத்திய முனிவர் மாணவர்களில் ஒருவர். ஆயுள் வேதத்தைக் கரைகண்டவர். இவரோடு இவருடைய ஆசிரியராகிய அகத்தியர் ஒரு சமயத்தில் மாறுபாடு கொண்டு இவருடைய மருந்துகள் பலியாமற் போகவேண்டுமென்று சாபங் கொடுத்துவிட்டாராம்.

இவர் ஒருமுறை ஒருவனுடைய கபாலத்தைக் அதன் உள்ளே மூளையில் இருந்து உணவு செய்துகொண்டிருந்த

தேரை ஒன்றைக் கிண்ணியில் வைத்திருந்த தண்ணீரின் ஒலி கேட்டு அதிற்பாயச்செய்து, அவனுடைய துன்பத்தைப் போக்கிய காரணத்தால் இவருக்குத் தேரையர் என்று பெயர் உண்டாகிய தாம். இவர் தமிழ் மொழியில் வல்ல அகத்தியருடைய மாணவ ராகையால் தமிழையும் நன்கு கற்றுத் தெளிந்திருந்தார்.

இவர் செய்த நூல்கள் கஅ0௪ பாடல்கள் அடங்கிய பதார்த்தகுண சிந்தாமணி, க௩௩ செய்யுட்கள் அடங்கிய நோயின்சாரம், ௩00 செய்யுட்கள் அடங்கிய கரிசல், சிகாமணி வெண்பா, நாடிக்கொத்து, நோயணுகா விதி முதலிய மருத்துவ நூல்கள் பலவாகும்.

இவர் மருத்துவத் துறையில் மட்டுமன்றிப் பொன்செய் வித்தையாகிய இரசவாதத்திலும் சிர்த்திபெற்றிருந்தாராம். நம்முடைய மாணவனால் உலகங் கெட்டுப்போகும் என்று எண்ணிய இவருடைய ஆசிரியராகிய அகத்தியர் இவரைக் கொன்றுவிட்டாராம். இவருடைய மாணவர்களில் ஒருவர் இறந்தாரைப் 'பிழைப்பூட்டும் வகையையும் உணர்ந்திருந்தா ராம். அவர் தம்முடைய ஆசிரியராகிய தேரையரைப் பிழைப் பித்து விட்டாராம். அதன்பின் தேரையர் இராமதேவர் என்னும் பெயரோடு மேலும் நீண்ட காலம் உலகில் வாழ்ந்திருந்தாராம்.

**"உண்பதிரு பொழுதொழிய மூப்பொழுதும் உண்ணோம்**
**உறங்குவது இராவொழியப் பகலுறக்கங் கொள்ளோம்**
**பெண்கள்தமைத் திங்களுக்கோர் காலன்றி மருவோம்**
**பெருந்தாகம் எடுத்திடினும் பெயர்த்துநீர் அருந்தோம்**
**மண்பரவு கிழங்குகளிற் கருணையன்றிப் புசியோம்**
**வாழையினம் பிஞ்சொழியக் கனியருந்தல் செய்யோம்**
**நண்புபெற உண்டபின்பு குறுநடையுங் கொள்வோம்**
**நமனுர்க்கிங் கேதுகவை நாமிருக்கும் இடத்தே"**

என்பது இவர் இயற்றிய நோயணுகா விதியில் ஒரு பாட்டு.

## க0௬௯. தேவராச பாரதிகள் - உ. வே.
## (19 - நூ.)

பாண்டிவள நாட்டில் இருந்தவர். இராமநாதபுரம் சமத் தானப் புலவர் சதாவதானம் முத்துச்சாமி ஐயங்காரிடந் தமிழ்

கற்றுத் தேறியவர். சிறந்த தமிழறிஞராக விளங்கிய இவர் சந்த்ரகலாமாலை, சடகோப திவ்ய சரித்திரம் முதலிய நூல்களை எழுதியிருக்கிறார். சடகோப திவ்ய சரித்திரம் 15 படலங்களை யும் ஆயிரத்து இருநூறு பாடல்களையுங் கொண்டது. மற்றும் இவர் பராங்குசர் வரலாறும் இயற்றியுள்ளார் என்று அறியப் படுகிறது.

"பொங்குவெண் டிங்களிகர் சங்கதனை லொருபுறம்
பொழிதரப் பகலவனையே
பொருவுசக் கரமிதன் றுரப்பவொரு புடையிலொரு
புடையிலிகல் வரவொளிர வோர்
பங்கினிற் கதைவிளக வலிகொள்வளை சார்ங்கமொரு
பக்கநின் றொளிர வொருபால்
பசுபதி கபாலவினை அகலவே குருதிநீர்
பாலித்த மறுவி லங்கக்
கொங்குலவு யாலையக லாதுவல மார்பினிற்
குதிகொளத் துளவ வணியல்
கோதிலை றயோட நின் றுடவச் வினிவேர்
துறைநீர்த்த பரம வருள்வாய்
திங்கண்மணி மாடமொளிர் துலைவில்லி மங்கலத்
திருநகர் உவந்து வாழும்
செங்கமல மீதுறையு நங்கைவல மார்பிலகு
தேவேச முகில்வண் ணனே."

என்பது இவர் இயற்றிய சந்த்ரகலாமாலையில் ஒரு பாட்டு. இந் நூலைப் பாராட்டிச், சதாவதானம் முத்துச்சாமி ஐயங்கார், சாமிநாத பிள்ளையன், சிவில்லிபுத்தூர் பத்தராவி ஐயங்கார், ஆழ்வார் திருநகரிசியர் கிருட்டிணமாசாரியார், கரிவலம் வந்த நல்லூர் வீரராகவ ஐயங்கார், வில்லூர் திருமலாச்சாரியார், தேவராச பாரதிகளின் மாணவர் சேஷய்யங்கார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௦௭௦. தையல்பாகம் பிள்ளை (ம)

(19 - நூ.)

சிவில்லிபுத்தூர் மணிமுத்துப் பிள்ளை என்பவருடைய மைந்தனுகத் தோன்றிய இவர் தமிழ்க் கல்வியையும் ஆங்கிலக் கல்வியையும் நன்கு கற்றுத் தெளிந்தார். பிறகு திருநெல்லையை

அடைந்து சில்லாக் கோர்ட்டில் வழக்கறிஞராகப் பணிபுரிந்திருந்தார். ஓய்வு நேரங்களிலெல்லாம் தமிழ் நூல்களைக் கற்றல் தமிழ் நூல்கள் இயற்றல் ஆகியவைகளை மேற்கொண்டார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்,

க. புதுவைச் சிவகாமசவுந்தரிமாலை
உ. திருச்செந்தில் வெண்பாவந்தாதி
ங. புதுவை வயித்திசுரர் இரட்டை மணிமாலை
ச. காந்திமதியம்மன் பதிகம்
ரு. திருச்செந்தூர் மாதாந்தக் கலித்துறை
சு. குறுக்குத்துறைக் குகன் பதிகம்
எ. கழுகுமலைக் கந்தர் பதிகம்
அ. சீராசைக் கோமதியம்மன் பதிகம்
கூ. நெல்லையந்தாதி

என்பன.

"நீர்கொண்ட வாவி புடைசூழ் கழனி நிறைந்திலங்கும்
ஏர்கொண்ட தென்புது வைக்கர சேயெனி யேற்கருள்வாய்
வார்கொண்ட பூண்முலை மாணிக்க மேமரு வார்ந்தகொன்றைத்
தார்கொண்ட வன்பங்கில் வாழ்சிவ காம சவுந்தரியே."

என்பது புதுவைச் சிவகாமசவுந்தரி மாலையில் ஒரு பாட்டு. நூல்களைப் பாராட்டித், திருநெல்வேலி கவிராச நெல்லையப்ப பிள்ளை, கவிராச முத்துக்குமாரசுவாமியா பிள்ளை, சுப்பிரமணிய பிள்ளை, பால்வண்ண முதலியார், ஓட்டப்பிடாரம் கயிலாசநாத பிள்ளை, வாசுதேவநல்லூர்ப் பழநியாண்டிப் புலவர், மேற்படியூர் திருமலையாண்டிக் கவிராயர், சித்திரபுத்திர பிள்ளை, தட்டப்பாரை வித்துவான் உமையொருபாகம் பிள்ளை, பண்பொழில் சண்முகசுந்தரம் பிள்ளை, பொன்னைமா நகரம் ஆர்யங்காவுப் பிள்ளை, சேற்றூர் அருணசலக் கவிராயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## க௦எக. தொட்டைய கவுண்டர் - வே
## (20 - நூ.)

இவர் கொங்கு நாட்டில் கோயம்புத்தூருக்கண்மையில் உள்ள சிரவணம்பட்டி என்னும் ஊரில் வேலப்பக் கவுண்டர்

என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இவரும் சிரவணம்பட்டிக் கௌமாரமடம் உயர்திரு. இராமானந்த அடிகளும் ஒருசாலை மாணவராகக் கல்வி கற்றவர்கள். நகமுஞ் சதையும்போல நட்புப் பூண்டு விளங்கியவர்கள். இளம் பருவத்திலேயே இருவருஞ் செய்யுளியற்றப் பழகினர். இவர் இரத்தினகிரிச் சத்திவேலவன் மாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"வெண்பொடி யுடனே கண்மணி மாலை
விருப்பமாய் அணிபவர் இருதாள்
கண்படு பொடியை இனிதணிந் திட்டுக்
கண்கள்நீர் வாரநின் றேத்திப்
பண்படு பரிபக் குவமது அடைந்து
பாவியேன் உய்வழி காட்டாய்
தண்படு சுனைசூழ் இரத்தின கிரிவாழ்
சண்முக சத்திவேல வனே."

இந்த இரத்தினகிரி சத்திவேலவன் மாலையில் ஒரு பாட்டு. இரத்தினகிரி யென்பது சிரவணம்பட்டியே.

## ௧௦௭௨. தோமாஸ் இயேசுதாச கவிராயர்
## (1897)

சிறந்த புலவராகிய இவர் பாளையங்கோட்டை ஆங்கிலக் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்துகொண்டிருந்தார். மாணவர்கட்கு எளிய முறையில் இலக்கணத்தைப் போதிக்க எண்ணிய இவர், "வாக்கிய இலக்கணம்" என்னும் நூலை எழுதினர். நூல் வெளியாவதற்குமுன் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். பிறகு கணபதிப் பிள்ளை என்பவர் அந் நூலை வெளியிட்டார். நூல் இனிய எளிய முறையில் அமைந்துள்ளது.

## ௧௦௭௩. தோம்பிலிப்பு நாவலர்

இவர் ஈழவள நாட்டில் யாழ்ப்பாணத்தையடுத்த தெல்லி நகரில் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கியிருந்தார். இவருடைய குலம் சோழிய வேளாள குலம். கிறித்து சமயம் புகுந்து அச்சமய ஒழுகலாற்றினை மேற்கொண்டிருந்தார். பலருடைய வேண்டுகோளின்படி கிறித்து சமய சத்திய வேதத்தை ஞானானந்த

புராணம் என்னும் பெயருடைய நூலாகப் பாடினார். அந் நூல் மூன்று காண்டங்களையும் இருபத்து நான்கு சருக்கங்களையும் ஆயிரத்து நூற்று நான்கு செய்யுட்களையுங் கொண்டது.

நூலின் அருமை பெருமைகளைப் பாராட்டி இயற்றமிழாசிரியர் திருத்தணிகை விசாகப்பெருமாளையர், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், கோமளபுரம் இராசகோபால பிள்ளை முதலிய பல அறிஞர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர் இந் நூல் 1874 ஆம் ஆண்டில் சென்னை இந்தியன் அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது.

"அருள் பூத்த நெடுங்கருணைக் கடலை யன்ன
அருந்தவத்தின் உயர்நிலையில் பிரிவி லாதான்
பொருள் பூத்த வேதமுன்னூல் அகத்தில் நீட்டிப்
பொலிவுறவே மெய்ஞ்ஞானப் போதம் ஓங்க
மருள் பூத்த மண்ணினுறு மாக்கள் யார்க்கும்
வந்துறுநோய் எனும்பாவ மயக்கம் என்னும்
இருள் நீக்குங் குருபரனை ஈன்ற அன்னை
இணையடித்தா மரையுளத்தில் எண்ணி வாழ்வாம்"

என்பது அப் புராணத்து உத்தான காண்டத்தில், பாதாளகமனச் சருக்கத்தின் முதற் செய்யுளாகும். செய்யுட்கள் யாவும் இன்னோசையும் பொருள் நயமுஞ் சிறந்து விளங்குகின்றன.

## ௧0எச. தோலாமொழித் தேவர்
(10 - நூ.)

இவருடைய இடுகுறிப் பெயர் சீவர்த்தமானதேவர் என்பது. இவர் ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றாகிய சூளாமணி என்னும் நூலினை இரண்டாயிரத்து நூற்று முப்பத்தொரு செய்யுட்களால் இயற்றியிருக்கிறார். இவர் தமது நூலில் தோலா என்னுஞ் சொல்லை வழங்கியபடியால் இவருக்குத் தோலாமொழித் தேவர் என்று பெயர் வந்திருக்கக்கூடும் என்று அறிஞர்கள் எண்ணுகின்றனர். இவர் சமண சமயத்தினர். சூளாமணியின் கதை சிபுராணம் என்னும் வடமொழி நூலில் உள்ளது. குணபத்திரர் என்பவர் சிபுராணத்தைக் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் முடிவில் வடமொழியிற் பாடினார் என்பர். சூளாமணி

சேந்தன் என்னும் அரசனுடைய அவையில் அரங்கேற்றஞ் செய்யப்பட்டதென்பது,

"நாமான் புரைக்கும் குறையென்னினு நாமவென்வேல்
தேமான் அலங்கல் திருமால்நெடுஞ் சேந்தன் என்னும்
தூமான் தமிழின் கிழவன் சுடர்ஆர மார்பில்
கோமான் அவையுள் தெருண்டார் கொளப்பட்ட தன்றே."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகின்றது.

## ௧0௭௫. தோலுலெப்பை மீராப்பிள்ளைப் புலவர்

காலங்குடியிருப்பில் தோன்றியவர். அசனலிப்புலவருக்கு மாணவராகிக் கல்வி கற்றுச் சிறந்து விளங்கினர். இசைப் பாடல்கள் பல இயற்றியிருக்கிறார்.

"ஆதியே எங்கும் அருளாய் நிறைந்தவொரு
சோதியே உன்னொளியின் ஆதரின்மேல்—கீதம்
தரும்பதம்யான் ஒன்று சாற்றிடக மேலாம்
கருணை புரிந் தாளுவை நீ காப்பு."

என்பது இசைப் பாடலின் காப்பு.

## ௧0௭௬. தௌட சுவாமிகள்
(1862)

இவர் திருத்தில்லையில் வசித்திருந்தவர். 'பஞ்சபத மகா வாக்கியம்' என்னும் நூலை வினவிடையாக எழுதியுள்ளார்.

"நிற்குணனுய் நித்தியனுய் நின்மலனுய் நிச்சலனுய்ச்
சற்குருவே யானசவு பாக்கியனும்—அற்புதனை
வாக்குந் அதிக்க மனநினைக்க என்சிரத்தில்
ஆக்கவவன் பொற்பதமே யாம்."

என்பது மேற்படி நூலிற் காப்புச் செய்யுள்.

## ௧0௭௭. நடராச ஐயர் - சொ
(1910)

சோழவள நாட்டில் தஞ்சையைச் சார்ந்த தென் பிரம்பூர் என்னும் ஊரில் இருந்த இவர் தமிழ்ப்புலமை நிரம்பப் பெற்

திருந்ததோடு ஆங்கில மொழியுங் கற்றிருந்தார். பலருக்குத் தமிழ் போதிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த இவர் செய்யுட்களும் நன்கு இயற்றும் ஆற்றல் அமையப்பெற்றிருந்தார்.

"சீராரும் வேளாளர் குலப்பெருமை
யாவருக்குந் தெளிவாய்த் தோன்றப்
பாராரும் வைசியரத் தினமெனு நா
வினையுலகில் பரிவாய்ச் செய்தான்
பேராரும் புலியூரில் அமரருணு
சலக்குரிசில் பெற்ற சீலன்
ஏராரும் புலமைநிறை சாமிநா
தப்பெயர்கொள் இனிமை யோனே."

என்பது இவர் வேளாள சூளாமணி என்னும் நூலுக்கு அளித்த சிறப்புப்பாயிரமாகும்.

## க௦எஅ. நடராச கவிராயர்
(1894)

தஞ்சை மாவட்டத்திலே மாயூரத்துக்கு அண்மையில் உள்ள சேந்தன்குடி என்னும் ஊரில் வேளாண் குலத்திலே இவர் தோன்றினார். இலக்கண இலக்கியங்களைத் தக்க ஆசிரியர்களிடத்திலே கற்றுச் சிறந்த புலமைபெற்றார். சமய தீட்சை முதலியவைகளையும் பெற்றுப் பின் சைவ சித்தாந்த நூல்களையும் ஓதியுணர்ந்தார். இவருடைய புலமை அந்நாளில் எல்லாவிடங்களினும் பரவி நின்றது தருமபுர ஆதீனத்தலைவர் இவரைத் தம் ஆதீனப் புலவராக இருக்கச் செய்து செய்ய வேண்டிய சிறப்புக்களையெல்லாஞ் செய்தார்.

செட்டிநாட்டில் வயிரவன் கோயில் என்னும் பெயருடைய கோவில் ஒன்று நகரத்தார்களுடைய கோவிலாகச் சிறந்து விளங்குகின்றது. அப் பதியில் கோயில்கொண்டெழுந்தருளிய அம்மையின் பெயர் வடிவுடையம்மை என்பது. அவ்வம்மையின் மீது பிள்ளைத்தமிழ் நூல் ஒன்று இயற்றுதல் வேண்டும் என்று தனவைசியச் செல்வர்கள் சிலர் விரும்பினர். இவர் அதற்கிணங்கி, "வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ்" என்னும் நூல் ஒன்றைப் பாடியரங்கேற்றினார். இப் பெண்பாற் பிள்ளைத் தமிழில் சிற்றிற் பருவம் அமைத்துப் பாடியுள்ளார்.

"சொல்லி னுவிற் றுசிரனுஞ் சோத்திரந்
தொல்லு மேற்சிவ ஞானம் உதித்திடும்
செல்லு மெய்யருணந்தி செய் சித்திக்கு
நல்ல ஞானப்ர காசன் நவிற்றுரை."

என்பது இவர் சிவஞான சித்தியார் சுபக்கம் ஞானப்பிரகாசர் உரையைக் குறித்துப் பாடிய பாட்டாகும்.

## கoஅக. நத்தத்தனுர்

சங்ககாலப் புலவர்களில் ஒருவர். இவர் தம்முடைய பெயரால் 'நத்தத்தம்' என்னும் யாப்பிலக்கண நூலை இயற்றியுள்ளார். அந் நூல் மறைந்துபோயது. பிற நூலுரையாசிரியர்களால் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்ட சில சூத்திரங்களே பிழைத்தன.

"ஆசிரியப் பாவின் சிறுமைக் கெல்லை
மூவடி யாகும் பெருமை யாயிரம்
ஈரடி முதலா வோரொன்று தலைச்சிறந்
தேழடி காறும் வெண்பாட் டுரிய
வாயுறை வாழ்த்தே செவியறி வுறூஉவே
கைக்கிளை மயக்கங் கலிவெண் பாட்டே
தத்தங் குறிப்பின வளவென மொழிப."

என்பது எஞ்சிய சூத்திரங்களில் ஒன்று.

## கoஅஉ. நமச்சிவாய சிவராசயோகி
(20 - நூ)

தொண்டைமண்டலத்தில் சென்னைமா நகரில் வேதாந்த ஞாயிறுக விளங்கியிருந்த சாது இரத்தின செட்டியாருடைய மகனுகத் தோன்றியவர் இவர். இலக்கண இலக்கிய நூல்களையும் வேதாந்த சித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுத் தேறிப் புலமை பெற்றதோடு மருத்துவ நூல்களையுங் கற்றுச் சிறந்த மருத்துவராகவுந் திகழ்ந்தார். தமது பெயரால் சிவராசயோகி வைத்திய சாலை என்னும் பெயரோடு மருத்துவ நிலையம் ஒன்று அமைத்து மக்களின் உடற்பிணியைப் போக்குந் தொழிலை மேற்கொண்டிருந்ததோடு மாணவர்கட்கு அறிவு நூல்களைப் போதித்துப் பிறவிப் பிணியைப் போக்குதற்கும் முயன்ருர்.

கிருட்டின லீலாம்ருத வசனம், குசேலர், இந்து செய பேரிகை, சென்னைபட்டணம் கேப்மாரிப்பட்டணமா? சென்னைக் கந்தர் ஆலய வைபவம், உருத்திரகோடித் தலமான்மிய வசனம் முதலியன இவரியற்றிய நூல்கள். இவருடைய உருத்திரகோடி மான்மியத்தைப் பாராட்டி, கோ. வடிவேலுச் செட்டியார், திருக்கழுக்குன்றம் கன்னியப்ப முதலியார், புசரவாக்கம் பால சுந்தர நாயகர், செ. அரங்கசாமி நாயகர் ஆகியோர் சிறப்புப் பாடல்கள் பாடியுள்ளனர்.

" வேதநிலை யுணர்ந்துசிவ விழுப்பொருளாய்
விளங்கியநம் விமலநாதன்
பேதநிலை யிரியவருள் ரத்தினசற்
குருதனயன் பிணக்கி லாது
நாதநிலை அறிபுலவன் நமச்சிவா
யப்பெயரான் நூல்நி லத்துள்
போதநிலை பெருகவைப்பான் புண்ணிய நூல்
பலவுணர்ந்தான் பொற்பு மிக்கான்,

அருத்தியுடன் உருத்திரகோ டித்தலமான்
மியமென்னும் அருமை நூலொன்
றுருத்திரநற் பிரசாதத் தால்வசன
மாயியற்றி உலகுக் கீந்தான்
கருத்தொருமித் திதுணர்வார் வேதாந்த
சித்தாந்தங் கண்டா ராவர்
வருத்தமொழி வழியறிவர் மாண்புபெறு
நெறியொழுகி வாழ்வர் தாமே,"

என்பது, கோ. வடிவேலுச் செட்டியாருடைய பாட்டு. இவருக்குச் சை. ந. பாலசுந்தரம் என்னும் பெயருடைய மைந்தன் ஒருவர் இருந்தார். அவர் தம்து பாட்டனார் பெயரால் சாது இரத்தின சற்குரு புத்தகசாலை என்னும் பெயரோடு புத்தகசாலை ஒன்றை நடத்தி வந்ததன்றி நூல்கள் பல வெளியிடும் பணியும் புரிந்து காலமானார்.

## ௧௦௪௫. நமச்சிவாயத் தம்பிரான்

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் சிறந்து விளங்கியவர். அருணந்தி சிவாசாரியர் அருளிச் செய்த இருபா இருபஃது என்னும் நூலுக்கு உரையெழுதியுள்ளார். இவருடைய சைவநூற் புலமையை உரைச் சிறப்பினால் ஒருவாறு உணரலாம்.

## க0அச. நமச்சிவாய நாவலர் - ப
## (20 - நூ.)

இவர் பண்ணுருட்டி என்னும் ஊரில் இருந்தவர். சொர்க்க புரம் இராமலிங்கத் தம்பிரானிடம் இலக்கண இலக்கியங்கற்றுச் சிறந்த புலமையடைந்தவர். பண்ணுருட்டியிலே கல்லூரி யொன்றில் தமிழாசிரியராகப் பணிபுரிந்ததன்றி நூலாராய்ச்சி, திருவிளையாடற் சொற்பொழிவு, மாணவர்கட்கு இலக்கண இலக் கியங் கற்பித்தல் முதலிய பணிகளிலும் ஈடுபட்டிருந்தவர். மயிலாசலத்தின் வரலாற்றையடக்கி, "மயிலாசல சதகம்" என்னும் பெயருடைய சதகம் ஒன்றையும் இவர் இயற்றியுள் ளார். இவர் சிவயோக அடிகள் என்னும் பெரியார்பால் பேரன்பு கொண்டு விளங்கினார். தாம் ஒருகால் அப் பெரியாரைக் கண்டு வழிபடச் சென்றபோது வணக்கச் செய்யுளாக அகவற்பா ஒன்றை இயற்றிக்கொண்டு சென்றார். அப் பெரியார் இப் புலவருடைய வருகையை மெய்யறிவுப் பார்வையினால் முன்னரே யுணர்ந்து பாடலமைத்த சில பாடல்களை இவரிடம் எடுத்துத் தந்தனர்.

"பயன்தரு வோர்கள் பத்தி யுடனே
நயம்பெற வாரார் நதியது கடந்து
செயம்பெறு வோராஞ் சிவனடி யாராம்
வயம்பெறு வோரம் வாசிப்பில் தானே."

"இருமணம் புரிந்தோர் இறைவியைத் துதிக்க
வருகிறார் இன்று வடதிசை இருந்து
உருதுவா ரையா உமைபதங் கருதித்
திருவெலா முடையர் தீதிலா தவரே."

என்பன அவற்றுள் இரண்டு பாடல்கள். சுப்பிரமணிய ஐயர், தமிழாசிரியர் சிவப்பிரகாச ஐயர் என்போர் இவருடைய புதல்வர் களாவர்.

## க0அரு. நமச்சிவாய நாவலர் - அ

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன் அரியக்குடி யில் மடம் ஒன்று அமைத்துக்கொண்டு அதில் வாழ்ந்திருந்தவர். திருவரங்கத்தில் எழுந்தருளிய சீரங்கநாதர்மீது,

௧. கார்வண்ணமாலை
௨. அரங்கப்பத்து
௩. இரங்கப்பத்து
௪. மெய்ஞ்ஞான சோதிமயம்
௫. இரகுராமப்பத்து
௬. கோவிந்தப் பத்து
௭. சிந்தைகுடிகொண்ட பதிகம்
௮. ஆதிசிரங்கப் பதிகம்
௯. இராமப் பத்து
௧0. கருடப் பத்து
௧௧. போற்றிப் பத்து
௧௨. பரப்பிரமப் பத்து
௧௩. குருவிருத்த மாலை
௧௪. ஆதிமூலப் பத்து
௧௫. சிந்தையின் பத்து
௧௬. அட்டாட்சரத் திருப்புகழ்
௧௭. அலர்மேல் மங்கைத்தாயார் பதிகம்
௧௮. நேரிசை வெண்பா
௧௯. இராமர் பேரில்பதம்

ஆகியவைகளைப் பாடியுள்ளார்.

"தேவரு மேலவர் நீங்கினைக் கூறச் சிவனயன்மால்
மூவருங் கூடி இராவண னுயிர் முடிப்பதற்கு
மேவுந் தசரதப் புத்திர னாக விளங்கவந்த
காவல னே நிதம் என்றனைக் காத்தருள் கார்வண்ணனே."

என்பது இவரியற்றிய கார்வண்ண மாலையில் ஒரு பாட்டு.

## ௧0௮௬. நமச்சிவாயப் பிள்ளை - ப

(20 - நூ.)[1]

திருமறைக் காட்டை யடுத்து விளங்கும் தோப்புத் துறை என்னும் ஊர் தெத்திமாநகர் என்று செப்பப்பெறும். இவர் அவ்வூரில் பழநியப்ப பிள்ளை என்பவருடைய மகனாகத் தோன்றினர். புலமைக் கல்விகற்றுச் சிறந்து திகழ்ந்த இவர் அவ்வூரில் எழுந்தருளிய கைலாச நாதப்பெருமான்மீது "பதிற்றுப்பத்

தந்தாதி" என்னும் நூல் ஒன்றைப் பாடினார். மற்றும் இவரால் யாழ்ப்பாணம் காசிச் சாமிகள் தோத்திரம் முதலிய பிறநூல்களும் இயற்றப் பெற்றன.

"தெந்திநகர் உற்றசிவ னேசிறிய னொருவன்
பத்திபுரி வண்ணமுட னேயுளது பாதம்
நத்திடவு மோர்பொழுதும் நாசமறு காத
முத்திபெற வும்மருள் செய் முப்பகையி னானே.
வேதமுடி வானபொரு ளானவுடை யானேயும்
நாதவடி யார்களுடன் நாக்கொருவன் ஆகிப்
போதநிலை யோடொழுகி டத்தமையுரிந்தால்
ஏதமறு தெத்தியம ரக்கினிய னாவேன்."

என்பன பதிற்றுப்பத் தந்தாதியில் இரண்டு பாடல்கள். இந்நூலைப் பாராட்டிக் கோவிந்தானந்த அடிகள், சோமாஸ் கந்த பட்டாரகர், திருத்தருப் பூண்ட இரத்தினம் பிள்ளை, மறைக்காடு சுப்பிரமணியப் பட்டாரகர், வ. சாமிநாதப் பிள்ளை, மௌ. செ. முத்தானந்த அடிகள், துலைசை-பொன்னம்பல உபாத்தியாயர், ஆலங்காடுது சுப்பையா பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௦௯௭. நமச்சிவாயப் புலவர் (1)

இவர் ஈழவளநாட்டிலே அச்சுவேலி தெற்கிலே கி. பி. ௧௭௪௧ ஆம் ஆண்டிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் கணபதிப் பிள்ளைச் செட்டியார். புலமை பெற்று விளங்கிய இவர் தனிப்பாடல்கள் பலவற்றை இயற்றியதன்றி நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை.

"நல்வனமார் புன்னை நறுங்கொன்றை யத்திமுதற்
பல்வனனும் பந்தற்போற் பாங்குசூழ்—நல்வினையின்
அத்திமுக அத்திமத அத்திநிற நித்தசுத
சித்திமுத்தி தந்துநமைத் தேற்று."

என்பது இவருடைய தனிப்பாடல்களில் ஒன்று. இவர் ௧௮௧௪ ஆம் ஆண்டிற் காலமானார்.

## ௧௦௯௮. நமச்சிவாயப் புலவர் (2)

இவர் ஏறக்குறைய இருநூற்றைம்பது யாண்டுகட்கு முன்பு

வில்லை. தொண்டைநாடு, நடுநாடு, சோழநாடு, பாண்டிநாடு முதலிய எல்லா நாடுகளிலுஞ் சுற்றித் திரிந்தார். இராமநாதபுரத்திற் சிறிது காலம் நிலைத்திருந்தார் என்று தெரிகிறது. இராமநாதபுரம் சமத்தானத்தில் அமைச்சராக இருந்த முத்திருளப்ப பிள்ளை என்பவர்மீது பிள்ளைத்தமிழ், மான்விடுதூது முதலிய நூல்களை இயற்றியுள்ளார். முத்திருளப்ப பிள்ளைமீது பல தனிப் பாடல்களை இயற்றியிருத்தலோடு ஆனைமுகக் கடவுள், மதுரைச் சொக்கநாதர், முருகக் கடவுள் முதலிய கடவுளர்கள்மீதும், தாண்டவராய பிள்ளை, சீதக்காதி, புதுவை ஆநந்தரங்கப் பிள்ளை, சொக்கன் என்னும் பெயருடைய ஒரு மருத்துவன், மஞ்சம் புத்தூர் ஆவுடையான், இராமகிருட்டிண பிள்ளை, தஞ்சை செவிசெட்டி, புதுச்சேரி வேங்கடராயன் என்பவர்கள் மீதுந் தனிப்பாடல்கள் பல இயற்றியுள்ளார். திருக்கோவலூர்த் தாண்டவராயன் மீது,

"பாங்குயர் பனிங்கு மேடை கொல்லுலையாம்
மாருதந் துருத்தியா நீடும்
பகர்நிலாக் கற்றை பதடியா மூடும்
படரிருட் குழாங்குடை கரியா
ஓங்கிய செக்கர் உள்ளிடுங் கனலா
உயர்பெரும் பனிகொடும் புகையா
உருவிலி என்னுங் கொல்லன்வான் பொன்னை
உருக்குமா றென்கொலோ உரையாய்
தூங்கிய விழியும் தாம்புடைக் கயிறும்
தூம்புறு கார்பீபற் குழலும்
துவருடைத் துகிலும் கவருடைக் கழியும்
தொறுவியர் உறிபடு குடமும்
தாங்கிய கையும் மெய்யுமாய் நின்று
தண்ணளி பெய்யுமா மூகிலே
தாண்டவ ராயா பாண்டவர் தூதா
தாழ்வில்சீர்க் கோவலை நிபனே."

என்னுஞ் செய்யுளைப் பாடினார். இவருடைய பாடல்கள் பல வேடிக்கையாக அமைந்துள்ளன. இவருக்கு நகைச் சுவைமிகுதி என்பதை இவருடைய பாடல்களால் நன்குணரலாம். சேதுபதியையும் அமைச்சர் முத்திருளப்ப பிள்ளையையும் மற்றோர்களையும் காடாகவும் கொடிய விலங்குகளாகவும் கல்விமான்களை மான்க

" சேதுபதி காத்தமுத்து ராமலிங்க துரைராச சிங்கமந்திரி
மாதுபதி முத்திருளப் பன்கொடிய வரிவேங்கை வளராதிக்கம்
கோதுறுபா மரக்காடு கருணீகர் மும்மதக்கொல் யானைமற்றோர்
மோதுபெரும் புலிக்காடு கல்விகரன் கருந்திரிந்தால் மோசந்தானே."

ரும் பாடல் நல்ல சுவையுடையதாகும். இவருடைய பாடல்களிற் சில வேறு சிலருடைய பாடல்களாகவும் வழங்குகின்றன.

## ௧௦௨௯. நமச்சிவாயப் புலவர் - கடிகை (19 - நூ.)

இவர் எட்டைய புரத்திற் பெருநிலக் கிழாருடைய அவைக்களப் புலவராக இருந்தார். பெருநிலக்கிழாருடைய கட்டளைப்படி 'வள்ளிதிருமணக் கதையை' வல்லிபரதம் என்னும் பெயரோடு நாடகமாக இயற்றியுள்ளார். நூலைப்பாராட்டிக், கடிகை பரமசிவப் புலவர், வேங்கடபதி ஐயங்கார், எட்டீசுவரக் குருக்கள், சிவகாமி நாதபிள்ளை, பாளையங்கோட்டை சண்முகநாதன் கவிராசர், திருநெல்வேலி கூபத்துக் குருக்களையா, கவிராச நெல்லையப்ப பிள்ளை, அழகிய சொக்கநாத பிள்ளை, புதூர் வள்ளிநாயகம் பிள்ளை, இராசவல்லிபுரம் முத்துச்சாமியா பிள்ளை, கழுகுமலை அட்டாவதானம் இராமசாமியா பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" பூவலஞ்செய் நாரதனுர் வள்ளிமலைப்
புனத்தயலிற் போகும் போது
காவல்மிகுந் திணைப்புனத்தில் ஆலோலம்
என்னுமின்சொல் காதிற் கேட்டுத்
தேவரக லியமிதெனத் தெரிந்துவள்ளி
சீரடியைச் சென்று போற்றி
ஆவல்மிகும் கழுகுமலை ஆண்டவருக்
குகந்தகனி ஆமென் றோர்."

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு. கலிப்பா, அறுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், கலித்துறை, கண்ணிகள் முதலிய பலவகைப் பாடல்களும் நூலில் விரவியுள்ளன.

## ௧௦௩௦. நமச்சிவாய முதலியார் (காஞ்சி)

திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகள் காலத்தில் காஞ்சிபுரத்தில் இருந்த ஒரு சிறந்த தமிழ்ப் புலவர். இ

டைய கல்விச் சிறப்பை நோக்கிப் பலரும் இவரை 'மகாவித்து வான்' என்று பாராட்டினர். இவரிடங் கல்விகற்க விரும்பிய ஒரு மாணவர் இவருக்கு அறிமுகக் கடிதந்தருமாறு இராமலிங்க அடிகளை வேண்டிக் கொண்டார். இராமலிங்க அடிகள்,

'' திருத்தகுசீர்த் தமிழ்மறையின் முதற்பொருளை
தமதுதிருப் பெயராக் கொண்டு
பொருத்தமுறு மேகம்பப் புத்தமுதை
உண்டுவக்கும் புனித னே! நின்
உருத்தகுசே வடிக்கடியேன் ஒருகோடி
தெண்டனிட்டே உரைக்கின் றேன் நின்
கருத்தறியேன் கவிகொடுநின் பாலன்பால்
வருபவரைக் காக்க வென்றே.''

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினர். இவ்வாறு இராமலிங்க அடிகளாலேயே போற்றப் பெற்ற இவருடைய முழுவரலாறும் இயற்றிய நூல்களும் விளக்கமாகத் தெரியவில்லை.

## ௧௦௬௧. நமச்சிவாயம் பிள்ளை
## (1893)

சோழவள நாட்டில் மாயூரத்தை யொட்டியுள்ள சித்தக்காடு என்னும் ஊரில் ''சித்தக்காடு வித்துவான்'' என்னும் பெயரோடு சிறந்து விளங்கிய இவர் சிறந்த தமிழறிஞர்களில் ஒருவர். கேட்போர் வியக்கத்தக்கவாறு உரையாடுவதினுஞ் செய்யுள் செய்வதினும் வல்லவர். திருப்பனந்தாட் காசிமடத் தலைவர் சாமிநாத சாமிகள்மீது இவர் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று,

' பூமேலான் பொற்மேலான் போற்றரிய
பெருஞ்செல்வப் பொலிவார் கொன்றைப்
பூமேலா னருள்கூர்ந்து பூரிக்குந்
திருப்பனந்தாட் புரியிற் கற்றோர்
நாமேலோ வாதுறைதல் புரிசாமி
நாதமுனி நாதா நாதா
நாமேலோர் குழாநடுவில் நண்ணியிடு
வாழ்வதனை நயத்தி லின்றே.''

என்பது.

## க0கூஉ. நமச்சிவாயம் பிள்ளை - மா
(20 - நூ.)

சென்னைமாநகரில் வசித்திருந்த இவர் சிவானந்த சாகர யோகீசுவரரிடம் கல்விகற்று அறிஞரானார். புரொக்ரசிவ் யூனியன் பாடசாலையில் தமிழாசிரியராகத் தொழில் புரிந்தார். திருவொற்றியூர்த் தியாகேசர் பஞ்சரத்தினம், வடிவாம்பிகை பதிகம் முதலிய நூல்களை இயற்றியதோடு சிவராத்திரி புராணம், நம்பியாண்டார் நம்பிபுராண வசனம், சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத் தமிழ், செவ்வந்திப் புராணம், சந்தான குரவர் நான்மணிமாலை முதலிய நூல்களைப் பிழையறத் திருத்திப் பதிப்பித்தும் வெளியிட்டார். திருவொற்றியூர்த் தியாகேசர் பஞ்சரத்தினப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"உளநெகிழும் அன்பர்பலர் உயர்திய மகிமைகளை
ஓர்ந்துபல பணிபுரிந்தே
உன்னரிய நின்னருட் செல்வமார்ந் தொழியாத
உயரின்பம் அடையநேர்ந்தும்
நினதுநீ பதியுறைது நிலையுடைய யானெனும்
நெறியதனை நன்குணர்ந்தும்
நின்னடிக் கணுசெய நாட்டமல ஆட்டியே
நீங்காத துன்பில் ஆழ்த்தி
நசையுலகில் ஆன்மாக்கள் இல்லாது பலரிடரும்
நாளுமடி யுண்பசுப்போல்
நலிவுறச் செய்யுமெய் தாழ்நிலைச் சேர்ந்து
நற்கதிய வித்திடாயோ?
நிலைமருவு தைலமென உலகெலாம் பரவியே
நிகழ்தரும் பரம பதியாம்
திருவொற்றி யூர்வாச! அருமைத் தியாகேச!
திருமிக்கு வாதேசனே!"

## க0கூ௩. நம்புசாமி ஐயர்
(19 - நூ)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள சிற்றூர் ஒன்றிலே தோன்றிய இவர் இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். சேகலம்பகடால நரசிம்மலு நாயுடு தாம் வடநாட்டிற்குப் பயணஞ் சென்று வந்த

போது, இடுகரை, வட்டமலை, பாளையம், செங்காளி பாளையம் முதலிய சிற்றூர்களுக்குச் சென்று தமது யாத்திரையின் நடைமுறைகளையும் பயனையும் பற்றிச் சொற்பொழிவுகள் பல செய்தார். அப்போது அதனைக் கேட்டு மகிழ்ந்த இவர் அடியில் வருஞ்செய்யுளைப் பாடி இவரைப் பாராட்டினர். அச்செய்யுள் ஆங்கிலப்பெயர்களும் ஆரியச்சொற்களும் விரவியுளது.

“ மகராச ராசஸ்ரீ சேலம்வாழ் பகடாலு
மதியூகி நரசிம் மலு
மாநாயு டவர்களின் நாடா னதுமித்திரர்
மனங்களின் புறுவ தாக
வட்டமலை என்னுமா நகர்தனில் தேசாபி
மானியாஞ் சபைமத் தியில்
வருடித்த மாரியால் அறிவிலா மூடராம்
வாடியசெஞ் சாலி யலவும்
சுகமாகி வளமாகி கதிரோங்கி விளையுமென்
சொல்லெலாம் வல்ல நிபுணர்
சொல்லரிய தமிழ்தெலுங் காங்கிலோ ஆரியம்
துளுக்குமுத லாம்பா டையில்
சொல்லியே எல்லவர்கள் அல்லல்தீ ரச்செயும்
சுந்தரக் கிருப நேயன்
சுதேசாபி மானியாம் சபைகளுள் வருடிக்கும்
சொல்லரிய கருணை மேகம்
செகமெலாம் புகழுநல் கல்கதா பம்பாயில்
சேர்ந்தகாங் கிரஸ்ச பையில்
சென்றவர்க் கறியவே மன்ருடி யாவையும்
தெரிவித்த சிவ ரத்தினம்
சென்னைமா நகரிலும் கும்பகோ ணத்திலும்
சேர்மகா சனச பையிலும்
செய்தஉபந் நியாசமதில் தேசாபி மானமே
தெரியவரு ஷித்த மேகம்
தகைமைசேர் கவர்னராம் ராபர்ட்டு பூர்க்குடன்
தனக்கே வருத்த மாபோல்
தடைசெய்து பாரஸ்டு லாக்களைத் திருத்தெனத்
தந்திரஞ் செய்யும் நிபுணர்
சகலரும் அறியவே கலாநிதி வழங்குநற்
சாதுகுண சங்க லோலன்
தனக்குவந் தனம்சொலச் சகசிரச் சென்னியுள
சக்கிரி தனக்கு வசமோ ?”

## ௧௦௬௪. நயனப்ப முதலியார்-பு

சென்னைக் கல்விச் சங்கத்துப் புலவராக இருந்தவர். தாண்டவராய முதலியாருடைய கட்டளைப்படி திவாகரம் 9, 10 ஆம் பகுதிகளைப் பரிசோதித்தவர்.

## ௧௦௬௫. நயினுத்தை முதலியார்

இவர் புதுச்சேரியிற் பிறந்து வளர்ந்து கல்வி கற்றுச் சிறப்படைந்து திகழ்ந்தவர். மிகுவிரைவாகச் செய்யுளியற்றுந் திறமையினால் நிமிடகவி யெனப் புகழ்பெற்றவர். இவர் செய்யுளாக இருந்த ஆரிய புராணத்தை உரைநடையாக இயற்றினர். அவ்வுரை நடை நூலைப் பாராட்டி, புதுவைச் சுப்பராய முதலியார், மயிலாப்பூர் கன்னுச்சாமி முதலியார், இராயபுரம் சவரிநாத முதலியார், பொன்னேரி சுந்தரம் பிள்ளை, சாமிநாத ஆச்சாரி ஆகியோர் சிறப்புப் பாடல்கள் அளித்துள்ளனர்.

"சீரியஆ ரியபுரா ணக்கோட் பாட்டைச்
செகமீதில் எளிதில்அனை வோருந் தேர
நேரியதல் வாசகமா நிகழ்த்த முக்கண்
நிலவுமதிச் சடைமுடிநீள் ஒற்றைக் கொம்பும்
வாருறும் மதயூர்ஜுங் கராநால் வாயும்
பாகணைப்பைம் பூணும்மன் அருளும் மல்கும்
ஏரியதோர் துதிக்கையும் உடைய எம்மான்
சன்மைந்தன் இணைமலர்த்தாள் ஏத்துவாமே."

என்பது காப்புச் செய்யுள்.

## ௧௦௬௬ நயினுமுகம்மதுப் புலவர்

இவர் பாசிப்பட்டணம் என்னும் ஊரில் பீருமுகமது சாகிப் என்பவரின் மகனாகத் தோன்றியவர் முகமதிய மதத்தினர். முன்சிரீமாலை முதலியன இவரால் பாடப்பட்டன.

## ௧௦௬௭. நரசிங்கப் பிள்ளை

இவர் அணியாபரண நல்லூர்ப் பரமேசுரம் பிள்ளையவர்களின் திருமகனாகத் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை

நன்குகற்றுப் பலராலும் புலவராகப் போற்றப்பட்டிருந்தவர் இவர் 'வயிரவசுவாமி பிள்ளைத் தமிழ்' என்னும் நூல் இயற்றினார். இது திருநெல்வேலிப் புலவர் சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகளால் பார்வையிடப் பட்டு வெளிவந்திருக்கிறது.

"பேரேறு சினவாள் எயிற்றரக் கன்படப்
புங்கவெங் கணைதொட்டமால்
புணரிநடு வடவிலைத் துஞ்சரிமெய் யொருபங்கு
பூண்டநட நக்கரிடமே
வாரேறு குவிமுலை மடந்தையுமை யபிராம
வல்லிவள ராலயங்கள்
வரிசேய முடுத்தபதி னுலுபுவ னங்களும்
மற்றுமுள பலவண்டமும்
ஏரேற மிக்கதிரு வாழ்வேற அடியவர்கள்
ஈடேற வேபுரிந்தே
இனியசொல் தமிழ்வாணர் கவிசேயற வேறேறும்
ஈசுரர் கடாட்சம் ஏறச்
சீரேறவந்தருளும் வயிரவா தமணியச்
சிறுதேர் உருட்டி அருளே
தென்னாணிகை உயர்மீனை நன்னகரில் வயிரவா
சிறுதேர் உருட்டி அருளே."

என்பது பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு. இப்பிள்ளைத் தமிழ் பருவத்துக்கு ஐந்து பாடல்களைக் கொண்டது.

## ௧0௯௨. நரசிம்ம ஐயர்
## (கி. பி. - 1899)

சோழவள நாட்டில் திருக்குடந்தையில் வாழ்ந்திருந்தவர். இவர் மார்க்கண்டேயர் நாடகம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். நூலில் விருத்தம், கட்டளைக் கலித்துறை, உரைநடை, இசைப் பாடல்கள் முதலியன அடங்கியுள்ளன.

"இட்டதோ ராக்கைபெற்ற
எமதூதர் நாங்கள் வந்து
விட்டகன் றிடுவ துண்டோ
வெறிகொண்டு பிதற்றும் இந்தத்
துட்டனைக் குண்டுக் கட்டாய்த்
துரிசினிற் கட்டிக் கொண்டு
பொட்டெனப் போவோம் வாரீர்
பொற்புய தூதர் நாமே."

என்பது எமதூதர்கள் மார்க்கண்டேயரைப் பிடிப்பதற்கு வந்து சொல்வது." அரிச்சந்திரோபாக்கியானா நாடகாலங்காரம் முதலிய பிற நூல்களும் இவரால் இயற்றப்பெற்றுள்ளன.

## க௦கூக. நரசிம்ம சாமியார்

கொங்குவள நாட்டில் ஒண்டி புதூர் என்னும் ஊரில் தேவாங்கர் குலத்தில் தோன்றிய இவர் துறவறத்தை மேற்கொண்டு வேதாந்த நூல்கள் பலவற்றை ஓதியுணர்ந்தார். தாமும் வேதாந்த நூல்கள் பலவற்றை இயற்றினர்.

## கக௦௦. நரசிம்மபாகவதர் - தி. ரா

நடுநாட்டில் திருவெண்ணெய் நல்லூரில் இருந்தவர். அவ்வூரில் இருந்த இராசப்ப நாவலரின் மாணவராகிய தி. ந. சுப்பிரமணிய முதலியாரிடம் கல்வி கற்றுப் புராணேதிகாசங்களைச் சொற்பொழிவு செய்யுந் திறம் பெற்று விளங்கினர். செய்யுள் பாடுந் திறமையும் அமையப் பெற்று விளங்கிய இவர் தம்முடைய ஆசிரியரின் ஆசிரியராகிய இராசப்ப நாவலர் இயற்றிய திருவெண்ணெய் நல்லூர்க் கலம்பகத்திற்குச் சாற்றுக் கவிகள் இரண்டு வழங்கியுள்ளார். ஒன்றை அடியிற் காண்க:

"நீர்சூழும் உலகுநிறுத்த நிலைமடந்தைக் கெழிலொழுகும்
சீர்சூழும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதின்
தக்கவள நடுநாட்டின் தகைமையுறு மருதநிழல்
தெக்கிணப்பெண் ணருவியிடைத் தெரிதிலகோ புரமதினார்
அத்தனன்று ஆட்கொண்ட அருட்டுறையாம் வெண்ணெய் நல்லூர்ப்
பித்தனுறை யகளிடத்தைப் பெற்றபிரான் நற்றவமே
பல்லுயிரும் பலவுலகும் பயிலுமொழித் தமிழ்வேதச்
சொல்லுணர்ந்து இறைவனுக்கே சொற்றணிக் கலம்பகமே
நாவலூர்ப் புராணமுனம் நவின்றபெருங் கவிவாணன்
சேவலான் திருவடியைச் சிந்திக்கும் நெஞ்சுடையான்
செங்குந்தக் குலம்விளங்கச் செய்தவனே திருவருளால்
எங்குந்தன் புகழிலங்கும் இராசப்ப நாவலனே."

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களின் மனோன்மணீயத்தின் மங்கலவாழ்த்துப் பாடலைப் பொருளாலும் நடையாலும் பின்பற்றியமைந்திருத்தலை ஊன்றியுணர்க.

## ௧௧௦௧. நரசிம்ம பாரதி - அ

(20 - நூ.)

இவர் திருநயம் என்னும் ஊரில் தோன்றியவர் செட்டிமார் நாட்டில் பள்ளத்தூர் முதலிய இடங்களில் வாழ்ந்திருந்தார். பள்ளத்தூர் அங்கயற்கண்ணம்மைமீது பிள்ளைத் தமிழ், சோம சுந்தரேசர் மீது பதிகம், மீனாட்சியம்மை பஞ்சரத்திநம், நேரிசை வெண்பாமாலை, அங்கயற் கண்ணம்மை அலங்காரமாலை, தோத் திரப்பாமாலை, கூடசதுக்கம், காதைகரப்பு, காலிலாவெண்பா, கொம்பிலாப்பா, முற்றுமோனை ஆசிரிய விருத்தம் ஆகியன பாடி யுள்ளார். காலிலா வெண்பாவும், கொம்பிலாப்பாவும் கீழ்வருவன.

"கரவு தவிர்வர் கனத னவணி
கரவிர்பள் ளத்தூர் கருதி—பருவு
கயல்விழி மையமெய் கலவு மழக
அயலி வரிலே யருள்.

"காயாகா ராகார காமா நாண் வில்விக்கும்
மீயாவந் தக்காயா விம்மாற்றத் தாள்யாசித்
துறைறை தியாபவாளா வுற்றல்லை லாகாதான்
மாறைடிப் பள்ளத்தூர் வந்து"

### முற்றுமோனை ஆசிரிய விருத்தம்

"கங்கையங் கமலங் கடுக்கையின் கண்ணிதிங்
கட்கலை கரந்தை காட்டும்
கடிகொளறு கம்புனும் கமழ்சடைக் கண்ணுதல்
கறைக் கந்தரன் கலைகள்
செங்கைசெவி சிரமார்பு சேர்தருகட் செவியதாச்
செய்ததேகச் சிவபிரான்
செம்பாதி சேல்விழித் தேவிசிலை திகழத்
தினந்தினஞ் சேவை திருமுன்
அங்கையில் அணிந்தகனி அடைகாயொ(டு) அன்னங்கள்
அறுசுவையின் ஆராதனை
ஆதிசைவரின் ஆற்றி அழகன்நீ யாவுமாம்
ஆலவா யாய்நின் அகம்
துங்கம துறும்படித் தொண்டராற் றும்பூசை
துய்த்துருற் றுந்தோமெலாம்
சுடர்முனம் துகினமாச் சுந்தரேச் சுரருள்வர்
தூயபள் ளத்தூரினே.

இந் நூல்களைப் பாராட்டித் தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், காரைக்குடி சதாவதானம் பாலசுப்பிரமணிய ஐயர், பள்ளத்தூர் விசுவநாதக் குருக்கள், திருமயிலை சண்முகம் பிள்ளை, திருநெல்வேலி சுந்தரமூர்த்தி பௌராணிகர், கண்டனூர். வீ வீரப்பையா, காரைக்குடிராம-சொ. சொக்கலிங்கச் செட்டியார், காரைக்குடி ரா. கு. மெய்யப்ப செட்டியார், கோட்டையூர் சித. சோமசுந்தரஞ் செட்டியார், உ. ரா. சாமிநாதப் பிள்ளை, உரத்தூர் கோ. வைத்தியலிங்கம் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

இவர் தென்திருப்பதி எனச் சிறந்தோங்கும் ஸ்ரீகுண சீலத்தல புராணமும் பாடியுள்ளார் அப்புராணம் பத்து அத்தியாயங்களையும் ஐந்நூற்று ஐம்பத்தெட்டுச் செய்யுட்களையுங் கொண்டது.

"தற்பெயர் சுருத தேவனும் மறையோன்
ஞானவா சிரியர்தம் அருகில்
பொற்புற நின்று வணங்கியெங் குருவே
பூரணா போதத்தான் உயர்ந்த
அற்பினை யாடி யாதனை லெண்ணுண்
அருள் புரிந் திடுகபோ திக்த
சிற்பொருள் வண்ணம் இவ்வுடல் மலமூத்
திரமிரி பாண்டமென் றுணர்ந்தேன்"

என்பது சுருததேவ முனிவர் கண்பெற்ற அத்தியாயத்தில் ஒரு பாட்டு. நூலினைப் பாராட்டிக் குரு. வித்துவான் சுப்பிரமணிய ஐயர் பி. ஏ, சாமிநாத ஐயர், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், துறையூர் நாகலிங்கப் பிள்ளை, உறையூர் பெரிய சாமிப் பிள்ளை முதலிய பல புலவர்பெருமக்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௧0உ. நரசிம்மதாசர்

இவர் சித்தூரில் வாழ்ந்திருந்தவர். வேமனானந்த சுவாமிகள் என்னும் பெரியாரை அடுத்து அவரால் அருளுரைபெற்றவர். இவர் தம்முடைய குருநாதர்மீது பதிகம் முதலிய தோத்திரப் பாக்கள் பாடியிருக்கிறார்.

"ஆதியாய் அந்தமாய் அந்தநடு நாதியாம்
ஆறுமுக ருட்ராட் சமாய்
ஆட்டமாய்ப் பாட்டமாய் ஓட்டமாய் நாட்டமாய்
ஆநந்த குஞ்சி ரிப்பாய்ச்
சோதியாம் மின்னலாய் மின்னல்நடு மாசியாய்ச்
சொக்கலிங் கக்கடவு ளாய்ச்
சோகமாய் மோகமாய்த் தாகமாய் என்மனதைச்
சோதிக்க வந்த கனமாய்
நீதியாய் நேமமாம் நேமநடு முத்தியாய்
நீரோட்ட வெளிகு ழியாய்
நீட்டமாய் வாட்டமாய்த் தோட்டமாய் எந்நாளும்
நீங்கா தநந்த வடிவாய்
வாதியாய்க் கோபியாய்க் கோபநடு அணுவாகி
வானேற விட்ட கனியே
வேதாந்த பரமசிவ மெய்ஞ்ஞான மூர்த்தியே
வேமனு நந்த குருவே"

என்பது, பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௦௩. நரசிம்மலுராசா - சி. கே

## (20 - நூ.)

கொங்குவள நாட்டில் ஓமலூரில் இருந்தவர். இவர் ஆங்கிலந் தமிழ் தெலுங்கு முதலிய மொழிகளில் வல்லவர். புட்பபால வரதராசர் என்பவர் ஆந்திரமொழியில் இயற்றிய "சன்மரகிதபோதினி" என்னும் நூலை இவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். செய்யுள் செய்வதிலும் வல்லவர்.

"சிற்றறிவோர் தமிழ்க்கடையேன் எடுத்தபொருள் மனத்தின்
சிந்தனைவாக் குக்கரிய செம்பொருளா மென்றால்
குற்றமிதில் இல்லையெனக் கொளப்படுமோ சிறுவர்
கூட்டுமணற் சோற்றிற்கல் லாய்வதொக்கு மன்றோ
மற்றுமொரு குணமிதன்கண் இலதெனினுங் கூறும்
வத்துவதன் பெருமைதனை மனங்கொளலே குணமாம்
கற்றபெரியோர்க் குளதாம் சடனையே போல்வார்
கழறியபுன் மொழியினலங்காண மதிப்பதுவே."

என்னுஞ் செய்யுளை நூலின் அவையடக்கமாகப் பாடியுள்ளார். நூலைப்பாராட்டி, கிருட்டிண சாமி ஐயர், அ. வரதநஞ்சைய பிள்ளை, வேங்கடாத்திரிப் பிள்ளை, சேலம் சுப்பிரமணிய பிள்ளை,

நாராயணசாமிப் பிள்ளை, பொன்னுசாமி நாயகர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௧௦௪. நரசிம்மலு நாயுடு சே. ப

மித்திரன் அரங்க சாமிநா யுடுதவப்
புத்திரன் என்றும் பொதுநலப் பிரியன்
குலாதிபர் வாழுங் கோயமா நகரான்
கலாநிதி பத்திரி காசிரி யன்சீர்
பெற்றிடும் பிரம சமாசப் பெற்றியன்
கொற்றவர் மதிக்குங் குணம்பல் உடையோன்
கணித நூல் தருக்க நூல் ஞான நூல் முதலிய
அணிபெறச் சுருக்கி அச்சிட் டுதவினோன்
ஆங்கிலே யத்துடன் ஆந்திரம் தமிழென
சங்கியற் பாடைகள் எழில்பெற உணர்ந்தோன்
பரவுறுஞ் சேலம் பகடால
நரசிம்ம நாயுடு நராபதின் தானே ''

எனவும்,

பெருமழை பொழியும் பிரசண்ட மேகம்
தரணியர் மகிழும் தருமதி யூகன்
தேசாபி மானி திகழ்பரப் பிரம
பூரா துரந்தர பொதுநலப் பிரியன்
நண்புறும் பகடால நரசிம்ம பூபன்
... ... .. ... ... ...''

எனவும் அறிஞர்களாற் புகழப்பெற்ற இவர் சேலம் அரங்கசாமி நாயுடு என்பவருக்கு அருமைத் திருமகனாகத் தோன்றினர். ஆங்கிலம், தமிழ், தெலுங்கு என்னும் மூன்றுமொழிகளையும் நன்கு கற்றுத்தேறினர். கோயமுத்தூரிற் குடியேறி ஆண்டே நிலைபெற்று வாழ்ந்திருந்தார். ''கலாநிதி'' என்னும் பெயரோடு பத்திரிகை யொன்றை நடத்தினர். வடஇந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் தலயாத்திரை செய்தார். தாம் பயணஞ்செய்த காலத்தில் ஏற்பட்ட அநுபவங்களையும் நிகழ்ச்சிகளையும் தலப் பெருமைகளையும் நாட்டுச் சிறப்புகளையும் விரிவாக எழுதி ''ஆரியர் திவ்விய தேசயாத்திரையின் சரித்திரம், தட்சண இந்தியா சரித்திரம்'' என்னும் பெயர்களோடு நூல்களாக வெளி

யிட்டார். அந்நூல்கள் தலயாத்திரை செய்பவர்களுக்குப் பெரிதும் பயன்பட்டதோடு செய்யாதவர்களும் அந் நாட்டின் சிறப்புக்களையும் செய்திகளையும் அறிந்து கோடற்கும் பெரிதும் பயன் பட்டன.

மற்றும் இவர் நூல்கள் எழுதுவதிலேயே தம்முடைய காலத்தைச் செலவிட்டார். இவரால் எழுதப்பெற்ற நூல்கள், மதவிருட்சம், ஆத்திகமத சித்தாந்தம், பெரும்பூதூர்த் தலமகத்துவம், திருநாராயண புரம் தலமகத்துவம், திருப்பதித்தலமகத்துவம், காஞ்சிமகத்துவம், காசிமகத்துவம், கலியுகதருமம், புனர்விவாக புண்ணியம், வேதாந்த சூரியோதயம், கோதையர் கொம்மி, பெண்களின் சரித்திரம், பூர்வஇந்து சமயம், தருக்க சாத்திரம், இந்துபைபில் என்னும் ஆரியர்வேதம், ஆரியர் ஆசாரம் முதலியன. இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் ஓர் உறுப்பினராக விளங்கினார். இவருடைய யாத்திரை நூல்கள் இவருடைய வரலாற்று நூல்களாகவே திகழ்கின்றன.

கோயமுத்தூரில் பெரும் புலவராகவும் வழக்கறிஞராகவும் சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களின் தந்தையாராகவும் விளங்கிய கந்தசாமி முதலியார், வீராச்சாமிப் பிள்ளை, சாமிநாத பிள்ளை, கும்பகோணம் சபாபதிப் பிள்ளை, பாலபாரதி முத்துச் சாமி ஐயர், திருச்சிற்றம்பலம் பிள்ளை, வேங்கடரமணதாசர், நாகூர் செவத்தி மரைக்காயர், நம்புசாமி ஐயர் முதலியோர் இவருடைய நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௧௦௫. நரசிம்மா சாரியர் - ரா
## (20 - நூ.)

இவர் மைசூர் நாட்டிலே சாசன இலாகாப் பொறுப்பாளராக விளங்கியவர். எம். ஏ. வரையில் கல்விகற்றவர். பெரும் பேராசான் (மகாமகோபாத்தியாயர்) இராவ் பகதூர் முதலிய சிறப்புப் பெயர்களைப் பெற்றவர். மு. இராகவ ஐயங்காருடைய தந்தையாராகிய சதாவதானம் முத்துச் சாமி ஐயங்காரிடம் தமிழ் நூல்களையும் பயின்றவர். தம் ஆசிரியராகிய முத்துச்சாமி ஐயங்கார் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதி அகவல், மணவாள

மாமுனிகள் நூற்றந்தாதி ஆகிய நூல்களை இவர் 1908 ஆம் ஆண்டில் அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார். அந்நூலின் பதிப்புரையில்,

"இவ்வாசிரியரிடம் படித்தவர்களில் யானும் ஒருவன். என்பதை இங்குக் கூறுவது மிகையாகாதென்று எண்ணுகிறேன். அக்காலத்தில் தாமியற்றிய இவ்விரு நூல்களின் கையெழுத்துப் பிரதியை ஆசிரியர் அடியேனிடம் அளித்து, அநுகூலப்படும் போது இவற்றைப் பதிப்பித்து வெளியிடுக என்று கட்டளையிட்டருளினர். நெடுநாள் சென்றபோதிலும் இக்கைங்கரியம் என்றும் நடத்தப்படாமலே இருந்தது அதனை நிறைவேற்றுதற்கு இப்போது சமயம் வாய்த்ததற்கு மகிழ்கின்றேன்" என்று எழுதியுள்ளார்.

## ௧௧௦௬. நல்லசிவன் பிள்ளை - கோ (20 - நூ.)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிமாவட்டத்தில் கவியாணிபுரம் என்னும் ஊரில் இருந்தவர். முருகதாச சுவாமிகள் எனப் பிற்காலத்தில் பெயர் வழங்கிய ஆழ்வாரப்ப பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியங்களையும் அறிவு நூல்களையும் ஓதி யுணர்ந்தவர். இவர் தம் ஆசிரியர்மீது,

"நன்றுவளம் பெருகும்வரை நகரா ரென்றும்
நற்கதியில் நாட்டமுறும் படிநீ அவ்வூர்க்
குன்றுவிலி சந்நிதியில் வெள்ளி தோறும்
குகன்பசனை இயற்றிவைத்த குருவேபோற்றி
அன்றகரர் கூரக்கிடுக்கஞ் செய்த தோர்ந்தே
அரன்விழித்தீ தராஆறு முகனுய்ச் சந்த
குன்றுறைவாழ் அறுமுகனுக் கன்பாம் என்றன்
குருஆழ்வார் அப்பனடி போற்றிபோற்றி."

என்னும் இதுபோன்ற பல செய்யுட்களை இயற்றியுள்ளார்.

## ௧௧௦௭. நல்லதம்பிப் பிள்ளை (20 - நூ.)

பாலைக் காட்டிற்கு அடுத்த தத்தைமங்கலம் என்னும் ஊரில் பொன்னப்ப பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றிய இவர்

தமிழ்மொழியையும் வடமொழியையும் நன்கு கற்றுத் தேறித் திருப்பத்தூர் முனிசிபல் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்தார் "சைவசித்தாந்த ரகசியம்" என்னும் நூல் ஒன்று இவரால் இயற்றப் பெற்றுள்ளது

"சிவமணங் கமழும் சைவசித் தாந்தச்
சீர்பெறும் அதிரக சியத்தைப்
பவமெனு முத்தி கடந்திறை கமல
பததடம் ஏறுவான வேண்டும்
நலையறு மனத்தோர் தமக்குநற் பாதை
ஆகவே நானிசைப் பதற்குக்
கவுரிதன் சுதனும் பிரணவ முகத்தைங்
கரக்கணி றருள்புரிந் திடுமால்."

என்பது நூலின் ஆனைமுகக் கடவுள் வணக்கம்.

## ககoஅ. நல்லபெருமாள் கவிராயர்

(20 - நூ.)

இவர் திருமந்திர நகரெனப் பெறும் தூத்துக்குடியில் வாழ்ந்திருந்தவர் "விவேக விளக்கமாலை" என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

"தத்துவந் தொண்ணூற்றி யாறெனச் சாற்றிச் சலனமதாய்
நித்தமலைந்து வழிதெரி யாமல்நிட் டூரமின்னார்
பற்றி யிழுக்கும் படுகுழி வீழ்ந்துபன் னாட்கழிந்த
தத்த நினைத்திரை நீக்கிக் கொண்டானந்த மாகினனே."

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## ககoகூ. நல்லவீரப்ப பிள்ளை

இவர் இராமநாதபுரம்மாவட்டத்தைச் சேர்ந்த முதுகுளத்தூரினர். ஏறக்குறைய அறுபது ஆண்டுகட்குமுன்னிருந்தவர். முருகக் கடவுள்மீது மிகுந்த அன்புடையவர். கொடுமளூர் முருகப்பெருமான்மீது பள்ளு, குறவஞ்சி முதலிய நூல்களும் அமையத்துக்கேற்ற தனிப்பாடல்களும் பாடியிருக்கிறார். அவை உலக வழக்குச் சொற்கள் மலிந்துள்ளன.

"வேண்டா மடாகாள வேலா யுதப்பெருமான்
ஆண்டுகொண்ட தென்னை அறியாயோ—தீண்டாதே
அப்புறத்தே போடா அறுமுகவன் கண்டக்கால்
தப்பாமற் சொல்வான் க்ஷணம்."

"காலாஎன் மீதினில் வந்தால் உனையுங் கடாவையுங்கைச்
சூலா யுதத்தையு தேரே பிளந்து துணிக்கும்படி
வேலா யுதன்வரு வாயவன் மூன்றுக்குள் வீரியமங்
கேளா நடாதப்பிப் போடா இவிடம்விட் டெங்கெட்டுமே"

என்பன இவருடைய தனிப் பாடல்களில் இரண்டு.

## ௧௧௦. நல்லாதனார்

இவர் சங்ககாலப் புலவர்களில் ஒருவர். இவர் 'மொழிவரி' என்னும் பெயருடைய இலக்கணநூல் ஒன்றை இயற்றினர். அந்நூலை அக்காலத்து ஆசிரியர்கள் தம்முடைய நூலில் மேற்கோளாக எடுத்தாண்டனர். காலப்போக்கில் நூலானது மறைந்துபோக மேற்கோளாகப் பிறநூலுக்குச் சென்ற சூத்திரங்கள் மட்டும் உயிர் பிழைத்தன.

"அஆ ஈஔ வென்றிவை யெழுஅ
இச எஏ வென்றிவை யெழுஅ
உஊ ஒழு வென்றிவை யெழுஅ
தசபவ ஞநவெனு மென்றிவை யெழுஅ
மூந்நா லுயிரும் மூவிரு மெய்யும்
தம்முன் மயங்கிறுந் நவமின் றென்ப."

என்பது உயிர் பிழைத்த சூத்திரங்களில் ஒன்று.

## ௧௧௧. நவநீதநடனார்

இவர் வாழ்ந்திருந்தகாலம் இடம் முதலியன புலனாகவில்லை. இவர் நவநீதப் பாட்டியல் என்னும் நூலை இயற்றியுள்ளார். இது பொருத்தவியல், செய்யுண் மொழியியல், பொதுமொழியியல், என்னும் மூன்று உறுப்புக்களை உடையது.

"மூன்றா சிரியம்பின் வெண்பாக்
கலித்துறை முப்பதென்று
சொன்னார்கள் மும்மணிக் கோவைக்கு
மும்மணி மாலைசொல்லின்

அந்நான் மறைப்பாக் கலித்துறை
ஆசிரி யம்விருத்தம்
இந்நால் வகைச்செய்யுள் நாற்பது
நான்மணி மாலையென்னே.''

என்னும் இக்கட்டளைக் கலித்துறை மும்மணிக்கோவை, மும்மணி மாலை, நான்மணிமாலை என்னும் நூல்களின் இலக்கணங் கூறு கின்றது.

## ௧௧௧௨. நற்கம்பர்

(1884)

இவர் மதுரைமாநகரில் இருந்த புலவர். திரிசிரபுரத்தில் இருந்த முத்துச்சாமி முனிவர் என்பவர் இயற்றிய விஞ்ஞான தீபம் என்னும் நூலுக்கு இவர் பதினெட்டுப் பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்

''ஏகநின் மலமாய் அகண்டபூ ரணமாய்
எண்ணுவோர் அறிவினுக் கறிவாய்
ஆகமோர் பொருளை மனவெளி யடைத்து
இயாவையும் பொய்யென மதித்துச்
சோகமே கொடுக்கும் ஆகாப் புரட்டைத்
தொலைத்துளக் கலக்கமற் றுலையின்
வேகமாய்ப் புடத்தின் பொன்னென களகம்
மேவிடாத் தூயவ னுகி''

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. முழுமுதற் கடவுளின் இயல்பும் மெய்ஞ்ஞானிகள் தன்மையும் விளங்கத் திகழ்கின்றது இச்செய்யுள்.

## ௧௧௧௩. நன்னூற் சிவப்பிரகாச சுவாமிகள்

இப் பெரியார் மெய்கண்ட சந்தானம் துறையூர்ச் சிவப்பிர காச சுவாமிகள் ஆதினத்தில் ஆறுவதுபட்டத்தில் அமர்ந்திருந் தவர். நன்னூலை நன்குகற்று அதனிற் சிறந்த புலமை பெற்று விளங்கியபடியால் இவருடைய பெயர்க்கு முன்னுல் நன்னூல் என்னும்சிறப்புப் பெயரும் அமைந்ததுபோலும். இவர் அத்துவித வெண்பா என்னும் நூலுக்கு உரையெழுதியுள்ளார். அத்துவித வெண்பா என்னும் நூலுக்குச் சிறப்புப்பாயிரமாக,

" திங்களணி சிவனருள்செய் வாதுளா
கமமதனில் திகழ்சா ரத்தை
எங்கள்பவப் பிணிதீர்க்கத் திரட்டியத்து
விதவெண்பா எனதன் கேந்தான்
துங்கமுறு மெய்கண்டான் சந்ததிக்கோர்
தீபமெனத் துதிபெற் றோங்கித்
தங்கருணைத் திருத்துறையூர்ச் சிவப்பிரகா
சப்பெரும்பேர் தரித்து ளானே.

செய்யதிரு வாவடுதண் டுறைநமச்சி
வாயகுரு தேசி கோத்மன்
துய்யகர சாதனனு யபிடேகந்
திருநாமஞ் சூட்டப் பெற்றோன்
ஐயதில்லை அம்பலவன் பொருட்டாயத்
துவிதசைவ அங்கலிங்கம்
தையல்பங்கன் சொற்படியே தரித்தசிவப்
பிரகாசத் தவத்தான் மாதோ."

என்னுஞ் செய்யுள்களைப் பாடியுள்ளார். இச்செய்யுட்கள் ஆசிரியரின் வரலாறு தவவொழுக்கம் கல்வியறிவு முதலியவைகளையும் அவர் திருவாவடுதுறை ஆதின குரவர்பால் அருளுரை பெற்ற செய்தியையும் செவ்விதின் விளக்குகின்றன.

## ௧௧௧௪. நாகநாத பண்டிதர்

ஏறக்குறைய நூற்றுமுப்பது ஆண்டுகட்கு முன்னே ஈழவள நாட்டிலே சுன்னுகம் என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே தோன்றியவர். தந்தையார் பெயர் அம்பலவாணப் பிள்ளை. வடமொழி தென்மொழி சிங்களம் ஆங்கிலம் என்னும் நான்கு மொழிகளிலும் வல்லவர். மானவதரும சாத்திரம், பகவத்கீதை, மேகதூதம், இதோபதேசம், சிசுபாலவதம் முதலிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார். அ. குமாரசாமிப் புலவருக்கு வடமொழி நூல்கள் சிலவற்றைத் தமிழில் விளக்கிக் கூறினர்.

" நீதி நெறிவிளக்கம் நேர்முறை ஆராய்ந்து
போதவுரை செய்யப் புலவோர்க்கு—மேதினியில்
ஆமோ வயிரவ நாதகு ணாசிரியன்
தாமோ தரக்கன்றித் தான்."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## ௧௧௧௫. நாகப்ப செட்டியார்
(19 - நூ.)

பாண்டிவள நாட்டிலே அருப்புக்கோட்டையிலே பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலே வாழ்ந்திருந்தவர். தேவாங்கர் குலத்தைச் சேர்ந்த இவர் இலக்கண இலக்கியங்கள் பலவற்றைக் கற்றுத் தமிழ்ப் புலவராக விளங்கினர். இவருடைய தொழில் முதலியவைகளைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியவில்லை. அந்நாளில் இருந்த வள்ளிநாயகம் பிள்ளை யென்பவர் பாடிய திருப்பரங்கிரிமாலை என்னும் நூலுக்கு இவர்,

> " குணகடல் குமரி குடகம்வேங் கடத்துள்
> குலவுசெந் தமிழிலக் கணத்தின்
> குழுமுழு தொருங்கா ராய்ந்தசித் தத்தோன்
> கொற்றமுற் றியபுரா ணிகன்
> மணமிகும் பசும்பூந் துணர்விரி பொதும்பர்
> வாசனை யோசனை கமழ்ந்து
> வளமிகுந் திடுஞ்சீர் நல்லைமா நகரில்
> வளர்கங்கைக் குலத்தில்வந் துதித்துக்
> கனிதமா ராய்ந்த சொக்கலிங் கேந்த்ர
> கவிஞன்நல் தவத்தில்வந் துதித்துக்
> கவிச்சக்ர வர்த்தி எனும்புகழ் பெறற்குக்
> கற்றிடுஞ் சாரதா பீடம்
> மணியொளி திகழும் முருகவேள் கழற்கே
> வனைந்தனன் பரங்கிரி மாலை
> வளமிக மேவு மணந்திசை பரவ
> வள்ளிநா யகவரோ தயனே."

என்னும் பாடலாற் சிறப்புப்பாயிரங் கொடுத்துள்ளார்.

## ௧௧௧௬. நாகப்ப முதலியார் - அ
(19 - நூ.)

சோழவளநாட்டில் திருத்தில்லைக்கு அண்மையிலுள்ள பெருமாத்தூர் என்னும் ஊரில் செங்குந்தர் குலத்தில் தோன்றினர். இவருடைய தந்தையார் பெயர் அருணாசல முதலியார். இவர் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றறிந்ததோடு, வேதம், உபநிடதம், பதினெண்புராணம், அறுவகைச் சமய நூல்கள்

முதலியவைகளை நன்கு ஓதியுணர்ந்தார். இவருக்கு அறிவாசிரியர் சுப்பராய அடிகள் என்னும் பெரியார் ஆவர். இவருடைய வரலாற்றுக் குறிப்புகள், கீழ்வரும் பாவில் வந்துள்ளன.

புண்டரீக புரத்தினில் ஓங்கும்
தண்டமிழ் வீர சைவ மரபினில்
வந்தவ தரித்து மறையாறு சாத்திரம்
சந்ததம் பன்னிரு சமய புராணமும்
முப்பத் திரண்டு மூதறை நூல்களும்
அப்படி இரட்டி அருங்கலைக் கியானமும்
நித்தியங் காட்டுப நிட்டதமா வாக்கியம்
சிந்தித் தறிவே சிவமெனத் தேர்ந்து
என்றனை வலிய இழுத்தாட் கொண்டோன்
சமயவா திகளைத் தண்டித்து மற்றவர்க்
கமையவே பொருவாழ் வளிக்கும் பெருந்தகை
அண்ணா மலையாறு அங்கயற் கண்ணியும்
அன்னா மலையார் அருளால் அமைந்த
சுப்பரா யப்பேர் சூட்டிய தேசிகன்
தப்பிலாப் பொற்கழல் தாழ்ந்தவன் அடியருள்

இவர் அன்பர்கள் சிலருடைய வேண்டுகோளின்படி அறிவு நூல் ஒன்று இயற்றினர். அது அத்வைத சிந்தாமணி எனவும் ஞான சாரம் எனவுங் கூறப்பெறுகிறது.

நூலைப் பாராட்டிப் பாதூர் சண்முகம் பிள்ளை, புவனகிரி சிவசிதம்பரபாகவதர், மதுரைமாவட்டம் விரை நல்லழகப்ப பிள்ளை, அதிவீரராமன் பட்டணம் காத்தமுத்து உபாத்தியாயர், முத்துப்பேட்டை பொன்னுச்சாமிப் பிள்ளை, பெருமாத்தூர் அருணாசல செட்டியார், சுத்துகுழி குப்புச்சாமிப் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சாத்திரங்கள் படித்தாலும் நதிகள் ஆடித்
    தலங்கள்தொறும் கைங்கரியம் புரிந்தாலுஞ்சற்
பாத்திரதா னங்கள்மிகச் செய்தாலுங்கூ
    பந்தடந்தேரப் புகள்மலர்க்கா அமைத்திட்டாலும்
விற்றிருந்தோர் இருநான்கு யோகந் தன்னை
    மிகமுயன்று செய்தாலும் மேலா முத்தி
மாத்திரம்வா ராதுமற்ற தெதுவந் தாலும்
    மைந்தனே மனமடங்கா வகையால்தானே."

என்பது நூலில் ஒரு பாட்டு. இவர் ஆனந்தக்களிப்பு முதலிய பிற நூல்களும் இயற்றியுள்ளார்.

"அந்தப் பரவெளி கண்டால்—யார்க்கும்
அதைவிட வேசுகம் ஆவதொன் றுண்டா
சந்ததம் இன்பம் ஊறும்—இது
சத்தியம் சத்தியம் தேறும்."

என்பது அந்நூலில் ஒரு கண்ணி.

## ௧௧௧௭. நாகமுத்துப் பிள்ளை - ௨

ஈழவள நாட்டில் வண்ணைநகரில் இருந்தவர். இவ்விருப தாம் நூற்றாண்டுத் தொடக்க காலத்தினர். நல்ல அறிஞர். க. வைத்தியலிங்க பிள்ளை என்பவர் இயற்றிய ஒருதுறைக் கோவை என்னும் நூலுக்கு இவர்,

"சீரா ரமிர்த கவிராச னோர்ந்துமுன் செய்தமிழ்க்கீ
டேரா ரொருதுறைக் கோவையி னூறிங் கிசைத்தனன்சொல்
பேரார்நல் தோத்திர மஞ்சரி பேசிப் பெரும்புகழ்செய்
தாரார் வயித்திய லிங்கக் கவிஞ நயவள்ளலே."

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௧௧௧௮. நாகமுத்துப் புலவர்
(19 - நூ.)

"இத்தரையிற் புலவர்களுக் கரசனென
வேவிளங்கும் இனிமை யான
முத்தமிழ்தேர் நாகமுத்துக் கவிராசன்
நல்லன்பு முதிர்ந்த வாக்கால்
அத்தியுரி போர்த்ததிர கிரிவாழும்
பெருமானுக் கருமையாய்ச் செய்
வித்தகஞ்சேர் பதிற்றுப்பத் தந்தாதி
வியப்பதனை விளம்பொ ணாதே."

என்று ஒப்பிலாமணி உபாத்தியாயரால் புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர் திருச்சிராப்பள்ளியில் வாழ்ந்திருந்தார். தாயுமானவர்மீது பதிற்றுப்பத்தந்தாதி பாடியுள்ளார். அவ்வந்தாதிக்கு, சிந்தாத்திரிப் பேட்டை முத்துசாமி நாயகர், திரிசிரபுரம்

முத்தைய உபாத்தியாயர், தரங்கம்பாடி குருவப்ப நாயகர், கற்குடி மதுரைமுத்துப் பிள்ளை, திரிசிரபுரம் ஒப்பிலாமணி உபாத்தியாயர், சரவண உபாத்தியாயர், அட்டாவதானம் சுப்ப ராயச் செட்டியார், திரிசிரபுரம் நீலகண்டம் பிள்ளை, பாலக்கரை வீரராகவ செட்டியார், திரிசிரபுரம் சோமசுந்தர முதலியார், தென்னூர் இருளாண்டி உபாத்தியாயர், திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை முதலிய அறிஞர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"நிமல னேமறைப் பொருளில் நின்றிடும்
அமல னேசிர மலையின் ஐயனே
குமர னைத்தரும் கொன்றை சூடிய
விமல எற்கருளும் வினையை நீக்கிடே."

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௧௧௧௧. நாகரத்தினம்மாள் - பெங்களூர்

இவ்வம்மையார் பெங்களூரில் வாழ்ந்திருந்தவர். தக்க பெரியார்களிடம் வேதாந்த நூல்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து வேதாந்தக்கலையிற் சிறந்த புலமை பெற்றுப், "பஞ்சீகரண பௌதிக விவேகவிளக்கம்" என்னும் வேதாந்தநூலை இயற்றியுள்ளார். நூல் மேற்கோட் செய்யுட்கள் பலவற்றுடன் உரை நடையில் அமைந்துள்ளது.

"மறை பொதுக்கி ஒருசொல்லா னந்த
வாழ்வைப் பெருக்கி மலகன்ம மாயையற
வாழ்வில் குடியேற்றிப் பரமசுகம் எனக்களித்தோன்
வாழி நெடுங்காலம் மாணக்கர்க் கருள் புரிந்தே"

என்பது அம்மையார் நூலில் இயற்றிய குருவணக்கம். தியாக ராச சிவயோகியார் என்பவர் சிறப்புப்பாயிரம் இயற்றியுள்ளார். அதனுடைய ஒரு பகுதி,

"மைசூ ராதி மலையாள நாட்டின்
ராச ராசாக்கள் ராசபூ பதிகள்
ஆதிகள் கூறி வாசமா யுள்ள
நித்தியா னந்த சங்கீத வித்யா
சுந்தரி யென்னும் பெயரும் அத்துடன்
தங்க மெடல்களும் தங்கத்தோ டாக்களும்

தரப்பெற் றிலகும் தகைமைக் கேற்ப
நாமமும் வகித்த சீமதி பெங்களூர்
நாகரத் தினமெனும் நங்கைநல் வள்ளல்
இயற்றும் இந்நூல் இளம்பிறை
ஒப்பநின் றோங்கி உலகில்வா ழியவே.''

என்பதாகும். இவ்வம்மையார் இசைபாடுவதிலும் சிறந்த சீர்த்தி அமையப்பெற்றவர்.

## ௧௧௨௦. நாகராசப் புலவர்
(16 - நூ.)

இவர் தினகரவெண்பா என்னும் நூலை இயற்றியிருக்கிறார். தினகர பிள்ளை என்னும் பெயருடையவர் ஒருவர் பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தார். அவரைப் பெருமைப் படுத்துவதற்காக இவர் திருக்குறளைப் பின்னிரண்டடியாக வைத்துத் தினகர வெண்பாவைப் பாடினார். தினகரவெண்பாவின் பாட்டுடைத் தலைவர் தினகர பிள்ளையாவார். இவர் திருமழிசைச் சிவபிரானுக்குச் சில தானங்கள் செய்தார். இவருடைய தந்தையாரின் பெயர் வீரைய பிள்ளை. தொண்டைநாட்டுக் கோவை மரபினர்; சீர்கருணீக குலத்தினர்; கல்வி கேள்விகளில் வல்லவர்; சைவ சமயத்தினர்; குன்றை அச்சுதேந்திரனுக்கு அமைச்சனாயிருந்தவர். நாகராசப் புலவர் தினகர வெண்பாவைப் பாடினார் என்பதற்குமேல் வேறு அவரைப் பற்றிய செய்திகள் தெரிந்தில.

## ௧௧௨௧. நாகலிங்க அடிகள்
(1868)

இவர் கோயமுத்தூரில் வாழ்ந்திருந்தவர். திருவாமாத்தூரில் திருக்கோயில் கொண்டுள்ள முத்தாம்பிகைமீது இவர் அந்தாதி பாடியுள்ளார். கட்டளைக் கலித்துறையாலான அவ்வந்தாதி நூறுபாடல்களைக் கொண்டது. கும்பகோணம் சிவகுருநாத ஐயர், அ. பெரியசாமிப் பிள்ளை, சு. வேலாயுதப் பிள்ளை, ச. நாராயணசாமி உபாத்தியாயர், சாமிப்பொன்னுப் பிள்ளை, பொய்கைப் பாக்கம் கரிவரதப் பிள்ளை, முத்துசாமிப் பிள்ளை என்போர் அவ்வந்தாதிக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பொன்னித முத்தொடைச் செஞ்சடை முக்கட் புராரியிட
மன்னிய கன்னி யுமாதேவி மாதை வளர்முதலே
என்னிரு கண்மணிப் பாவையன் னையன்ப ரேத்தல்செயும்
நன்மொழி போலவென் புன்மொழி கொண்டு நலமருளே."

என்பது அவ்வந்தாதியில் முதற்பாட்டு.

இப்பெரியார் புதுவை வேதபுரீசர் கோயிலில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலையும் பாடியுள்ளார். அந்நூலுக்குச் சிதம்பரம் இராமலிங்கப் பிள்ளை, புதுவை பொன்னு உபாத்தியாயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"அருணார் விழியும் வார்செவியும் அமுத கிரண மதிமுகமும்
வரைநேர் புயமும் நீபமலர் மார்பும் இடையும் இணையடியும்
மருணா ரனியேன் கண்டுதொழ மடவார் இருவ ரொடுமயிலின்
வருவாய் புதுவை வளருமெங்கள் வாழ்வே ஞான முழுமுதலே."

என்பது நூலில் இரண்டாவது பாட்டு.

## ககஉ௨. நாகலிங்க ஐயர்

### (20 - நூ.)

துறையூர் பெரியமடம் சிவப்பிரகாச சுவாமிகள் ஆதீனத்தில் ஆதீனப் புலவராக இருந்தவர். இலக்கண இலக்கியப் புலமை நன்கு அமையப்பெற்றவர். நாற்பாவும் மூன்றின மும்விரைந்து பாடும் ஆற்றலும் பெற்றவர். அறிவொழுக்கத்திற் சிறந்தவர்.

"அப்பெருஞ்சீர் நாடெனுமோர் அரிவையருக்
கணிகலமாய் அமைந்தெஞ் ஞான்றும்
விப்பிரரா தியர்பரவும் திப்பியதா
மும்பாடி வியன்மூ தூரில்
செப்புறுசீர்க்கருணீகர் குலமணியாய்
அவதரித்த திறத்துக் கேற்பத்
துப்புறுநல் அறிவுநிறை பொறையுடைமை
முதலியன துணையாக் கொண்டு"

என்பது இவர் கருணீகர் புராணம் என்னும் நூலுக்கு இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்றாகும்.

## ௧௧௨௫. நாகலிங்க தேசிகர்
## (கி. பி. 1850)

இவர் கோயிலூர் முத்துராமலிங்க தேசிகரிடம் வேதாந்த நூல்களைக் கற்றுத் தேறியவர். சிவன் முத்திப் பிரகரணம் என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. நூல் 684 பாடல்களைக் கொண்டது.

> "கனவுறு விடயம் யாவும்
> கனவுற்றோன் விடவே றன்றோ?
> நனவுறு விடயம் யாவும்
> நமைவிட அவைபோல் இல்லை
> வினவிடில் சகங்கள் நாமே
> மேவிய திருக்காம் நாமும்
> பினமறு பிரமம் என்னும்
> பிரலாப திட்டி யாலும்"

என்பது நூலில் ஒரு பாட்டு.

இவர் 'வாசுதேவர் மனனம்' என்னுஞ் செய்யுள் நூலும் இயற்றியுள்ளார். அந்நூல் இருபத்துமூன்று அதிகாரங்களையும் அறுநூற்றுப் பதினொரு செய்யுட்களையுங் கொண்டது.

> "சித்தசுத் திகள் வாராது செனனுதி துன்பம் போகா(து)
> அத்தன்மை யோர்ந்துகாமி யாதியாங் கருமம் விட்டுச்
> சுத்தமாங் கருமந் தன்னைச் சுவாமிக்கர் பணமாச் செய்து
> பத்தியாய் வருவ னத்தால் பரபத்தி யுண்டாமப்போ."

என்பது நூலின் பாடல்களில் ஒன்று.

## ௧௧௨௪. நாகலிங்க பிள்ளை - சி

நாகலிங்கபிள்ளை என்பவர் தமிழகத்தின் ஓர் பகுதியாகிய ஈழவளநாட்டில் யாழ்ப்பாணத்தில் உள்ள வதிரி என்னும் ஊரினர். சிறந்த செந்தமிழ்ப் புலவர். திருத்திலதைப் பதிப்புராணம் என்னும் நூலை இவர் பத்துப் படலங்களும் நானூற்று எண்பத்தாறு செய்யுட்களும் அமையுமாறு பாடியுள்ளார். சின்னத்தம்பி உபாத்தியாயர் என்பவர் அந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பண்புகல் மூவர் பாடல்
பயின்றன சோழ நாட்டின்
மண்புகழ் அரிசி லாற்றங்
கரையிசை மன்னி யோங்கும்
விண்புகழ் விமான மூதூர்க்
கோசனை யரையிற் கீழ்பால்
எண்புகழ் அம்பர் மேல்பால்
இருக்குமாந் திலதை மூதூர்."

என்பது சதுர்முகப் படலத்தில் ஒரு பாட்டு.

## ககஉரு. நாகலிங்க வாத்தியார்
### (20 - நூ.)

கொங்குவள நாட்டில் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த விலாரிப் பாளையத்தில் வாழ்ந்திருந்தார். இலிங்காயத் வகுப்பினர். புலமை பெற்றிருந்த இவர் திண்ணைப் பள்ளிக்கூடம் வைத்துக்கொண்டிருந்ததோடு பலருக்கு இராமாயணம் பாரதம் முதலிய நூல்களைப் பாடஞ்சொல்லிக்கொண்டு மிருந்தார். செய்யுள் நன்றாகப் பாடுந் திறம்பெற்றிருந்தார்.

ஒருசமயம் செல்வர்வீடு ஒன்றில் திருமணம் நடைபெற்றது. இவர் திருமணப் பரிசுபெறுவதற்காக அவ்வீட்டிற்குச் சென்றார். காவலர்கள் இவரை உள்ளேவிடாமல் தடுத்து நிறுத்திவிட்டனர். உடனே இவர்,

"காமட்டிக ளெலாங் கூடிக்
கொட்டாரங் கட்டிமேலே கட்டுங்கட்டி
நேமட்டி மத்தளங் கொட்டி
நிண்ணயமாய் நலுகுபெட்டி போட்டுக்கட்டும்
கோமட்டிக் கல்யாணமென் றே வந்தேன்
குற் கிட்டி மற் கட்டி
நீமட்டி நாமட்டி எனப்பிடித்து
நெட்டினானே குட்டினானே."

என்னும் பாட்டை எழுதித் திருமணத் தலைவருக்கு அனுப்பினார். அவர் உடனே இவரை அழைத்துச் செய்யவேண்டிய சிறப்புகளைச் செய்து தக்க நன்கொடை வழங்கி அனுப்பினார். இவர் எண்பது ஆண்டுகள்வரை வாழ்ந்திருந்து இருபது ஆண்டுகட்கு முன்பு காலமானார்.

## ௧௧௨௯. நாகிசெட்டியார் - செ

சேலத்தைச் சேர்ந்த செவ்வாய்ப் பேட்டையில் வீரசைவ சமயத்தில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் சென்னவசவப்ப செட்டியார். நாகி செட்டியார் ஆங்கிலம், தமிழ் வடமொழி தெலுங்கு முதலியவைகளை நன்குகற்றுத் தேறியவர். வீரசைவ நூல்களிலே மிகுந்த பயிற்சியுடையவர். சென்னை சென்ட்ரல் சிறையில் உதவிச் செயிலராக அலுவல் புரிந்திருந்தவர். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட சித்தாந்த சிகாமணி என்னும் நூலுக்கு இவர் சிறந்த உரை யெழுதியுள்ளார். அவ்வுரையைப் பாராட்டி ஞானியாரடிகள், உ.வே. சாமிநாதையர், மருவூர் கணேச சாத்திரியார், திருமழிசை சிவப்பிரகாச அடிகள், வீரசைவ கனகசபைக் கவிராயர், சென்னப்ப நாய்க்கன் பாளையம் துரைசங்க பச்சகந்தஸ்வாமியார், காஞ்சிபுரம் இராமானந்த யோகிகள், திருமயிலை வி. சுந்தர முதலியார், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், ஈக்காடு இரத்தின வேலுமுதலியார், கோ. வடிவேலுச் செட்டியார், கா. நமச்சிவாய முதலியார் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

சீர்சால் சேலஞ் செவ்வாய்ப் பேட்டை
பேர்சே வணுராத் ரியகுரு பீடம்
சென்ன வசவப்ப சிரேட்டிசெய் தவத்தின்
நன்னய மாவரு நாகி சிரேட்டி யென்
எழில்பெறு புலவன் இணக்கமி லாத
தொழின்மனம் வையாத் தூயன் அந்நூற்கு
முன்னூல் பலவும் முரணறக் கண்டு
பன்னரு நல்லுரை பளகற வரைந்து
கற்றவர் களிக்கக் கலைமகள் உவக்க
மற்றவர் தமக்கிது வரய்ப்பெனக் கொள்ள
வீரசை வத்தின் மேம்பா டுணர்த்திப்
பேரணிச் சீர்த்தியாற் பிறங்குற் றனனே.''

என்பது கோ. வடிவேலுச் செட்டியாரால், இயற்றப்பட்ட சிறப்புப்பாயிரத்தின் பிற்பகுதி. இவர் இந்நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருந்தவரே.

## ௧௧௨௭. நாகூர் முத்துப்புலவர்

இவர் நாகூரிலே பிறந்து வளர்ந்தவர். எட்டையபுரம் அரண்மனைப் புலவராக இருந்தவர். கடிகைமுத்துப் புலவரும் இவரும் ஒருகாலத்தினர் என்பர். இவருடைய பெயரால் பல தனிப்பாடல்கள் வழங்குகின்றன. இவர் வெங்கடேச எட்டப் பன்மேற் பாடிய பாடல்களில் ஒன்று,

> "அடிதங்கச்சி விவனென்ன மோதெரி
> யாதுசிந்தை யயருகி றளிந்தா
> பிடிதங்கச்சி விகையி லிருந்துநம்
> பிள்ளைதாண்கிளிப் பிள்ளையல் லோமயல்
> கொடிதங்கச்சிப் பரிபோச் சென்றேவராக்
> கூறென் றளிகல் கொண்டோ ரமர்கண்டு
> துடிதங்கச்சி மையப்புயங் கொட்டுமுத்
> துங்கனைவெங்க டேசரெட் டேந்திரனே."

என்பது.

## ௧௧௨௮. நாகேச ஐயர்

நாகேசஐயர் என்பவர் தென்னகத்திற் சிறந்ததெனக்கூறும் ஈழவள நாட்டிலே வட்டுக்கோட்டையிலே மறையவர் குலத்திலே ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டுகட்கு முன்னே பிறந்தவர். தந்தையார் பெயர் இராமசாமி ஐயர். இலக்கண இலக்கியங்களை நன்குகற்றுத் தேறியவர். இவர் பல தனிப் பாடல்களும் நாடக நூல்களும் "அமுதநுணுக்கம்" என்னும் விட மருத்துவநூலும், முருகக்கடவுள் பேரில், "நாணிக்கண் புதைத்தல்" என்னுந் துறையில் (ஒருதுறைக்கோவை) நூறுசெய்யுளும் இயற்றியுள்ளார். இவர் நாற்பத்தெட்டாவது அகவையில் சென்ற தன்மதியாண்டிற் காலமானார்.

> "பொன்பூத்த நாரணன் வேதன் முதலபுத் தேளிரெலாம்
> தென்பூத்த வேத முறையால் அருச்சனை செய்தமரும்
> மின்பூத்த வேலன் அடைக்கலக் கோவை விளம்புதற்குக்
> கொன்பூத்த குஞ்சரச் செஞ்சரண் தெஞ்சினிற் கொள்ளுவனே."

என்பது இவர் இயற்றிய கோவையில் ஒரு பாட்டு.

## கக௨கூ. நாகை மவுனசாமி

இவர் ஏறக்குறைய எண்பதாண்டுகட்குமுன் தஞ்சைமா வட்டம் நாகையில் வாழ்ந்திருந்தார். "அருவாசதேவ ஆரம்'' என்னும் செய்யுள் நூல் ஒன்று பாடியுள்ளார். நூலில் வேதாந்தக் கருத்துக்கள் செறிந்துள்ளன. இவர் அந்நூலுக்கு எழுதிய முக வுரையில், "எனக்கு இப்போது ஏறக்குறைய 45 வயதாகிறது. என் பாட்டி என்னைப் பள்ளிக்கு வைத்த காலத்தில் நான் பிள்ளையார் கோயிலிற் போய்த் தெரிசனம் செய்துகொண்டே பள்ளிக் கூடத்திற்குப் போவதாயிருந்தேன். படிக்கும்போது என் வகுப்பில் எல்லாருக்கும் நான் அடியவனாகக் கடைசியில் நிற்பதே யன்றி முதலிற் போகக்கூடியதான படிப்புக்கள் ஏறுபடவில்லை.'' என்று எழுதுகிறார். பிற்காலத்தில் தெய்வத்திருவருளால் கல்வியறிவு நன்கு அமையப் பெற்றார்.

'' சிற்றறிவும் சிறுதொழிலும் சேர்ந்தாரெனச்சிலபேர்
கற்றறிவு பேர்காட்டிக் கணக்குரைத்தே இகழ்ச்சி செய்வார்
முற்றறிவும் முழுத்தொழிலும் மூன்னவனே யுன்னதன்றோ
எற்றையறிந் தாரையா இலக்கணங்கள் கற்றவரே.

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கககூ௦. நாதகுத்தனார்

இவர் பௌத்த சமயத்தினர். மறைந்துபோனதாகக் கருதப் படுவதும் ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றானதுமாகிய குண்டல கேசி என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றது. எனச் சில புலவர் கூறுகின்றனர்.

'' எனதெனச் சிந்தித்த லான்மற்
றிவ்வுடம் பின்பத்துக் காமேல்
தினைப்பெய்த புன்கத்தைப் போலச்
சிறியவு மூத்தவு மாகி
துனிய புழுக்குலந் தம்மால்
துகரவும் வாழவும் பட்ட
இனைய உடம்பினைப் பாவி
யானென தென்னனு மாமோ.''

என்பது மறையாத பாடல்களில் ஒன்று.

## ௧௧௩௧. நாதமுனி நாயுடு - நா

இவர் தொண்டைநாட்டில் சென்னைமாநகரில் இருந்தவர். மகாவித்துவான் பென்னலூர் நாராயணசாமி நாயுடு என்பவரின் புதல்வராகத் தோன்றியவர். இவர் தந்தையாரிடமே கல்வி கற்றுச் சிறந்த புலவராக விளங்கினர். இவர் சிறியவும் பெரியவு மான சில நூல்கள் இயற்றியிருக்கிறார். மோசூர் முனிசாமி முதலியார் என்பவருடைய நூலுக்கு இவர்,

"பண்டைநாட்டுப் புத்றதமிழ் மணங்கமழும்
நாவலர்களாற் பரிசு பெற்ற
தொண்டைநாட்டுத் திருத்தலத்தோத் திரக்கோவை
அமிழ்தமெனச் சொற்றான் மாதர்
கொண்டைநாட்டுக் கடிமலரின் அறுபதங்கள்
முரன்மோசூர்க் கோமான் சீத்த
தொண்டைநாட்டுப் புலமையுறு முனிசாமி
எனும்பெயர்கொள் தூயன் மன்னே."

"பணியாம் இருவினைக்குப் பாறுவென மோசூர்
முனிசாமி வள்ளல் மொழிந்தான்—வனசக்
குருத்தலத்தின் கூர்துதியாக் கூறுபடுந் தொண்டைத்
திருத்தலத்தின் தோத்திரநற் சீர்."

என்னும் பாடல்களால் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## ௧௧௩௨. நாதமுனி முதலியார் - மயிலை
### (20 - நூ.)

சென்னை மயிலையில் இருந்தவர். மயிலையில் இருந்த மாபெரும் புலவராகிய தணிகாசல முதலியார் என்பவரிடந் தமிழ் கற்றுத் தேறினர். புராணச் சொற்பொழிவுகள் செய்வதில் இவர் சிறந்து விளங்கியபடியால் 'புராண ரத்நாகரம்' என்னுஞ் சிறப்புச் சொல் இவருடைய பெயருக்கு முன்னல் இயைந்து நின்றது. இவர் திருமயிலைத் தலபுராணத்தைப் பதினெரு படலங் களும் சில செய்யுட்களும் அமையப் பாடியுள்ளார். புராணத் திற்கு இராசகோபால பிள்ளை, கோ. வடிவேலுச் செட்டியார், ஆரூர் சிங்காரவேலு முதலியார், கி. குப்புச்சாமி முதலியார், கு. க. புழலை. திருநாவுக்கரசு முதலியார், வல்லி. ப. தெய்வநாயக

முதலியார், தி. க. கிருபாசங்கரராசா, மோசூர் சண்முக முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள்.

"உலகமாந் தைய லாளும்
ஒருபெருந் தவமி யற்றித்
தலமதாந் தொண்டை நாட்டைத்
தனக்கொரு மகவாய்ப் பெற்ருள்
அலகிலாப் புகழி னம்மா
தருந்தவம் நெடுநாட் செய்து
திலகமாய் மயிலை தன்னைத்
திருமுகத் தணியாய்ப் பெற்ருள்."

என்பது நகரப்படலத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௫௫. நாயனுகண்ணு முதலியார் - வி. செ.

"தரமெனும் விட்டா வரமெனு நகரினன்
கங்கையங் குலத்தில் திங்களின் விளக்கெனக்
குவலயந் தோன்றிக் குவளையந் தொடையணி
பொன்வரை யிரண்டெடன் ருன்னிடு தோளினன்
இரப்புரை யிலையெனப் புரப்புரை செய்து
திருந்துமா ணிக்கவேல் அருந்தவப் பயனுல்
வலம்புரி முகத்தில் குலம்புரி முத்தெனுத்
தந்தையென் ருேற்ருன் என்றசொல் போற்றி
ஆன்றவர் மகிழத் தோன்றிய புகழோன்
தெய்வநன் னெறியில் சைவநன் னெறியும்
கற்றவர்ப் போற்றலும் கற்றுணர்ந் தடங்கலும்
பொறையுங் கொடையும் நிறையும் ஆண்மையும்
கலைக் கொண்டு கவினும்
நாயனுக் கண்ணெனு நற்பெய ரோனே."

என்று புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர், "திருவொற்றியூர் மான்மியத் தெளிவு" "தியாகேசர் தோத்திரப்பா" என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

"சீர்கொண்ட மாமணியே தில்லைநக ருடையானே
தார்கொண்ட குழலுமையாள் தனிப்பாகம் வைத்தவனே
சூர்கொண்ட வினையகற்றித் தொண்டனெனைக் காத்தருள்வாய்
பார்கொண்ட அடியரெலாம் பரவுமொற்றிப் பெருமானே"

என்பது தியாகேசர் தோத்திரப்பாவில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டி, வி. கோ. சூரியநாராயண சாத்திரியார், திருமயிலை

வித்துவான் சண்முகம் பிள்ளை, ஈக்காடு இரத்தினவேலு முதலியார், ஏ. எஸ். செகராவு முதலியார், இராமலிங்கத்தம்பிரான் முதலிய பலர் சாற்றுக்கவி வழங்கியுள்ளனர்.

## ௧௧௩௪. நாரணன் (நன்னிலம்)

இவர் நன்னிலம் நாரணன் என்று வழங்கப்படுவதால் நன்னிலம் என்னும் ஊரில் தோன்றியவராக இருக்கலாம். இவர் சுபத்திரை கலியாணம் என்னும் நூலை, அகவல், விருத்தம், சிந்து முதலியன விரவ நாடகம் போற் செய்திருக்கிறார்.

"சீதர மூர்த்தி வாக
தேவநா ராய ணர்க்குச்
சோதரி யான ஞான
சுபத்திரை மணத்தைப் பாட
மாதவன் நன்னி லத்தில்
மதுவன நாதர் பெற்ற
காதல னான செல்வக்
கணபதி காப்புத் தானே."

என்பது காப்புச் செய்யுளாகும்.

## ௧௧௩௫. நாராயணகவி

இவர் தஞ்சை நகரை ஆட்சி செய்த சிவாஜி மன்னன் காலத்தில் இருந்தவர். சிவாஜியின் விருப்பத்திற்கிணங்கிப் பாண்டியன் ஒருவனுடைய வரலாற்றைப், "பாண்டி கேளிவிலாச நாடகம்" என்னும் பெயருடன் இயற்றியிருக்கிறார்.

"நீர்மேவு வையைநதி வளம்பெருகிச்
செந்நெல்மிக நிறைந்தெத் நாளும்
சீர்மேவு பாண்டியதே சந்தனிலே
மதுரையிற்செங் கோல்நடாத்தித்
தார்மேவு பாண்டியன்றன் விலாவி
லாசமதைச் சாற்றுதற்கு
ஏர்மேவிச் சுகம்பெருகச் சித்திவிநா
யகன்பதத்தை இறைஞ்சு வோமே."

என்பது நாடகத்தின் காப்பு.

## ௧௧௩௬. நாராயணக் கவிராயர்
(20 - நூ.)

பாண்டிவளநாட்டில் திருநெல்வேலியில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் கள்ளப்பிரான் கவிராயர். நாராயணக் கவிராயர் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைப் பாக்களையும் நன்கு பாடுந்திறம் பெற்றிருந்தபடியால் 'நாற்பாப் புலி' என்று சிறப்புப் பெயர் பெற்றிருந்தார். "மகாவித்துவ சிரோன்மணி" என்னுஞ் சிறப்புப் பெயரும் இவருக்கு அமைந்திருந்தது.

"ஆர்த்தியோடி தன்பினெல்லை அப்பவே ளமுதுந் தேனும்
சேர்த்தெனத் திகழுக் காஞ்சிச் சிவசாமி தேசி கன்மேல்
தோத்திர மாலை யொன்று சொற்றனன் அதுநன் காய்வோர்
நாத்திர மெய்தி யின்னுன் நாத்திறம் என்னென் பாரால்."

என்பது இவர் ஒரு நூலுக்குப் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. இவரிடம் மாணவர் பலர் கல்விகற்றுச் சிறந்த தமிழ்ப்புலவராயினர்.

## ௧௧௩௭. நாராயணசாத்திரி - டி. எஸ்.
(20 - நூ.)

இவர் சென்னைமா நகரத்தினர். பீ. ஏ. பி. எல் வரை கல்வி கற்ற இவர் சிறந்த தமிழ்ப்புலமையும் செய்யுள் பாடுந்திறமும் பெற்றிருந்தார். இவர் போச சரித்திர நாடகம் முதலிய தமிழ் நூல்களையும், ஆங்கிலம், வடமொழி முதலிய பிறமொழி நாடகங்களையும் இயற்றியுள்ளார்.

"சூரன் கருப்பன் கருப்பண்ணன்
சொக்கன் நொண்டி நல்லண்ணன்
தூற்றி தூண்டி சாமுண்டி
தோட்டி சின்னன் காட்டேரி
மாரி முனியன் மன்னூரன்
மாடன் சங்கிலி பாவாடை
மயான வாசி வழிபறித்தான்
மலையன் பக்கிரி மின்னடியான்

சேரிமின் ஞூரன் குழிபிரிசி
　　சிறுகாட் டுடையான் பனைமரத்தான்
செல்லன் இருளன் பெத்தண்ணன்
　　செல்விச் சடையன் சத்தகந்நி
வீரன் மோகினி யேகாத்தான்
　　வெறியன் பித்தன் படையாச்சி
வெள்ளி முருகன் வெட்டுண்ணி
　　வீரி பிடாரி கங்கம்மா.''

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## ககஙஅ. நாராயணசாமி (க)

இவர் கடுவை காவலன் நாராயணசாமி என்று வழங்கப் பெற்றார். கடுவை என்ற நகர் எது என்று அறிவதற்கு வழியின்று. அந்நகரிற் சிறப்புற வாழ்ந்தவர் இவர் என்பதைக் "காரார் பொழிற் கடுவைக்கிறை" என்பது காட்டுகிறது. இவர் வட மொழி தென்மொழிப் புலமையோடு கணிதநூற் புலமையும் அமையப் பெற்றவர். இவருடைய தந்தையார் பெயர் அமித சாகரர் என்பர். இவர் 'விதானமாலை' என்னும்காலக் கணித நூலை இயற்றியிருக்கிறார். அந்நூல் இருபத்தைந்து படலங்களையும் ஐந்நூற்று முப்பத்தைந்து கலித்துறைகளையுங் கொண்டது.

"பாரார் புகழும் பரிசார் விதானமா லைப்பனுவல்
பேராவ தானம் பிழையா துரைத்தனன் பேருலகில்
காரார் பொழிற்கடு வைக்கிறை பாற்கட லான்பயந்த
நாரா யணன்பொன்னி நாடன் மறைதெரி நாவலனே.''

என்பது நூலின் சிறப்புப்பாயிரம்.

## ககஙக. நாராயணசாமி அய்யர்
## (19 - நூ.)

பத்தொன்பதாம் நூற்றூண்டின் பிற்பகுதியில் கும்பகோணத்தில் இருந்தவர். ஆங்கிலத்திலும் தமிழ்மொழியிலும் வல்லவர். கும்பகோணம் கல்லூரியில் ஆசிரியராகத் தொழில் புரிந்தார். செகப்பிரியர் எழுதிய நாடகம் ஒன்றை இவர், "நடுவேனிற் கனவு" என்னும் பெயரோடு தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

## ககசo. நாராயணசாமி அய்யர் - அ
(20 - நா.)

மதுரைமாவட்டத்தில் பிள்ளையார்பட்டி என வழங்கும் கணேச மாநகரத்தில் வாழ்ந்திருந்த இவர் தென் மொழியிலும் வடமொழியிலும் வல்லவர். "சங்கிரக இராமாயணம்" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார் சண்முகாநந்த அடிகள் என்பவர் இயற்றிய "திருமுருகன் அருட்பாமாலை" என்னும் நூலுக்கு இவர்,

"பூதலமெ லாம்புகழும் பொன்னம்ப
லத்தனையே போற்றுஞ் செல்வ
நாதனடி மறவாதான் சண்முகா
நந்தனருள் நாமம் பெற்றோன்
ஆதவனூர் மருதமலைக் குகனடியார்
சுவைதெயன வே அருந்தும் வண்ணம்
ஓதரிய செந்தமிழால் முருகனருட்
பாமாலை உதவி னானல்."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ககசக நாராயணசாமிக் கவிராசர்
(1893)

இவர் சாமிமலையில் சிறந்த புலவராக விளங்கியிருந்தவர். திருவேரகம் என்னும் சாமிமலை முருகக்கடவுள்மீது "முருகக் கடவுள் அந்தாதி முருகக்கடவுள் கலம்பகம்" முதலியன இயற்றியுள்ளார்.

"கன்னல் கமுகெழி லந்நலங் காட்டும்
கரைசூழ் வாவியின் விரைந்து சென்று
மன்னி ராடி மின்னிடை துவளத்
தங்கள் மனைதனில் இங்கித முடன்செல்
பத்மினிப் பெண்கள் பான்மையின் விளங்கு
திருப்பனந் தாளில் விருப்புடன் வந்த
வாமி நாதனை வரன்முறை வணங்கிய
சாமி நாத சாமிதான் சரணே."

என்பது காசிமடத் தலைவராக விருந்த சாமிநாத சுவாமிகள்மீது இவர் இயற்றிய பாடல்களில் ஒன்று.

"சொல்லி னுயிர்ச் சுசிரமுஞ் சோத்திரந்
தொல்லு மேற்சிவ ஞானம் உதித்திடும்
செல்லு மெய்யநு ணர்ந்நிசெய் சிந்திக்கு
நல்ல ஞானப்ர காசன் நவிற்றுரை."

என்பது இவர் சிவஞான சித்தியார் சுபக்கம் ஞானப்பிரகாசர் உரையைக் குறித்துப் பாடிய பாட்டாகும்.

## ௧௦௩௧. நத்தத்தனார்

சங்ககாலப் புலவர்களில் ஒருவர். இவர் தம்முடைய பெயரால் 'நத்தத்தம்' என்னும் யாப்பிலக்கண நூலை இயற்றியுள்ளார். அந் நூல் மறைந்துபோயது. பிற நூலுரையாசிரியர்களால் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்ட சில சூத்திரங்களே பிழைத்தன.

"ஆசிரியப் பாவின் சிறுமைக் கெல்லை
மூவடி யாகும் பெருமை யாயிரம்
ஈரடி முதலா வொன்று தலைச்சிறந்
தேழடி காறும் வெண்பாட் டுரிய
வாயுறை வாழ்த்தே செவியறி வுறூஉவே
கைக்கிளை மயக்கங் கலிவெண் பாட்டே
தத்தங் குறிப்பின வளவென மொழிப."

என்பது எஞ்சிய சூத்திரங்களில் ஒன்று.

## ௧௦௩௨. நமச்சிவாய சிவராசயோகி

(20 - நூ.)

தொண்டைமண்டலத்தில் சென்னைமா நகரில் வேதாந்த ஞானியாக விளங்கியிருந்த சாது இரத்தின செட்டியாருடைய மகனாகத் தோன்றியவர் இவர். இலக்கண இலக்கிய நூல்களையும் வேதாந்த சித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுத் தேறிப் புலமை பெற்றதோடு மருத்துவ நூல்களையுங் கற்றுச் சிறந்த மருத்துவராகவுந் திகழ்ந்தார். தமது பெயரால் சிவராசயோகி வைத்திய சாலை என்னும் பெயரோடு மருத்துவ நிலையம் ஒன்று அமைத்து மக்களின் உடற்பிணியைப் போக்குந் தொழிலை மேற்கொண்டிருந்ததோடு மாணவர்கட்கு அறிவு நூல்களைப் போதித்துப் பிறவிப் பிணியைப் போக்குதற்கும் முயன்றார்.

கிருட்டிண லீலாமிருத வசனம், குசேலர், இந்து செய பேரிகை, சென்னைபட்டணம் கேப்மாரிப்பட்டணமா? சென்னைக் கந்தர் ஆலய வைபவம், உருத்திரகோடித் தலமான்மிய வசனம் முதலியன இவரியற்றிய நூல்கள். இவருடைய உருத்திரகோடி மான்மியத்தைப் பாராட்டி, கோ. வடிவேலுச் செட்டியார், திருக்கழுக்குன்றம் கன்னியப்ப முதலியார், புசரவாக்கம் பால சுந்தர நாயகர், செ. அரங்கசாமி நாயகர் ஆகியோர் சிறப்புப் பாடல்கள் பாடியுள்ளனர்.

"வேதநிலை யுணர்ந்துசிவ விழுப்பொருளாய்
விளங்கியநம் விமலநாதன்
பேதநிலை யிரியவருள் ரத்தினசற்
குருதனயன் பிணக்கி லாது
நாதநிலை அறிபுலவன் நமச்சிவா
யப்பெயரான் நால்நி லத்துள்
போதநிலை பெருகவைப்பான் புண்ணிய நூல்
பலவுணர்ந்தான் பொற்பு மிக்கான்,

அருத்தியுடன் உருத்திரகோ டித்தலமான்
மியமென்னும் அருமை நூலோன்
றுருத்திரநற் பிரசாதத் தால்வசன
மாயியற்றி உலகுக்கிந்தான்
கருத்தொருமித் திதுணர்வார் வேதாந்த
சித்தாந்தங் கண்டா ராவர்
வருத்தமொழி வழியறிவர் மாண்புபெறு
நெறியொழுகி வாழ்வர் தாமே."

என்பது, கோ. வடிவேலுச் செட்டியாருடைய பாட்டு. இவருக்குச் சை. ந. பாலசுந்தரம் என்னும் பெயருடைய மைந்தன் ஒருவர் இருந்தார். அவர் தம்து பாட்டனார் பெயரால் சாது இரத்தின சற்குரு புத்தகசாலை என்னும் பெயரோடு புத்தகசாலை ஒன்றை நடத்தி வந்ததன்றி நூல்கள் பல வெளியிடும் பணியும் புரிந்து காலமானார்.

## ௧௦௩௫. நமச்சிவாயத் தம்பிரான்

இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் சிறந்து விளங்கியவர். அருணந்தி சிவாசாரியர் அருளிச் செய்த இருபா இருபஃது என்னும் நூலுக்கு உரையெழுதியுள்ளார். இவருடைய சைவநூற் புலமையை உரைச் சிறப்பினால் ஒருவாறு உணரலாம்.

## கூ௪ச. நமச்சிவாய நாவலர் - ப
(20 - நூ.)

இவர் பண்ணுருட்டி என்னும் ஊரில் இருந்தவர். சொர்க்கபுரம் இராமலிங்கத் தம்பிரானிடம் இலக்கண இலக்கியங்கற்றுச் சிறந்த புலமையடைந்தவர். பண்ணுருட்டியிலே கல்லூரியொன்றில் தமிழாசிரியராகப் பணிபுரிந்ததன்றி நூலாராய்ச்சி, திருவிளையாடற் சொற்பொழிவு, மாணவர்கட்கு இலக்கண இலக்கியங் கற்பித்தல் முதலிய பணிகளிலும் ஈடுபட்டிருந்தவர். மயிலாசலத்தின் வரலாற்றையடக்கி, "மயிலாசல சதகம்" என்னும் பெயருடைய சதகம் ஒன்றையும் இவர் இயற்றியுள்ளார். இவர் சிவயோக அடிகள் என்னும் பெரியார்பால் பேரன்பு கொண்டு விளங்கினார். தாம் ஒருகால் அப் பெரியாரைக் கண்டு வழிபடச் சென்றபோது வணக்கச் செய்யுளாக அகவற்பா ஒன்றை இயற்றிக்கொண்டு சென்றார். அப் பெரியார் இப் புலவருடைய வருகையை மெய்யறிவுப் பார்வையினால் முன்னரே யுணர்ந்து பாடிவைத்த சில பாடல்களை இவரிடம் எடுத்துத் தந்தனர்.

"பயன்தரு வோர்கள் பத்தி யுடனே
நயம்பெற வாரார் நதியது கடந்து
செயம்பெறு வோராஞ் சிவனடி யாராம்
வயம்பெறு வோராம் வாசிப்பில் தானே."

"இருமணம் புரிந்தோர் இறைவியைத் துதிக்க
வருகிறார் இன்று வடதிசை இருந்து
உருகுவா ரையா உமைபதங் கருதித்
திருவேளை முடையர் தீதிலா தவரே."

என்பன அவற்றுள் இரண்டு பாடல்கள். சுப்பிரமணிய ஐயர், தமிழாசிரியர் சிவப்பிரகாச ஐயர் என்போர் இவருடைய புதல்வர்களாவர்.

## கூ௪ரு. நமச்சிவாய நாவலர் - அ

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன் அரியக்குடியில் மடம் ஒன்று அமைத்துக்கொண்டு அதில் வாழ்ந்திருந்தவர். திருவரங்கத்தில் எழுந்தருளிய சிரங்கநாதர்மீது,

க. கார்வண்ணமாலை
உ. அரங்கப்பத்து
௩. இரங்கப்பத்து
ச. மெய்ஞ்ஞான சோதிமயம்
ரு. இரகுராமப்பத்து
சு. கோவிந்தப் பத்து
எ. சிந்தைகுடிகொண்ட பதிகம்
அ. ஆதிசிரங்கப் பதிகம்
கூ. இராமப் பத்து
க0. கருடப் பத்து
கக. போற்றிப் பத்து
கஉ. பரப்பிரமப் பத்து
க௩. குருவிருத்த மாலை
கச. ஆதிமூலப் பத்து
கரு. சிந்தையின் பத்து
கசு. அட்டாட்சரத் திருப்புகழ்
கஎ. அலர்மேல் மங்கைத்தாயார் பதிகம்
கஅ. நேரிசை வெண்பா
ககூ. இராமர் பேரில்பதம்

ஆகியவைகளைப் பாடியுள்ளார்.

**“தேவரு மேலவர் நீங்கினைக் கூறச் சிவனயன்மால்**
**மூவருங் கூடி இராவண னாவி முடிப்பதற்கு**
**மேவுந் தசரதப் புத்திர னாக விளங்கவந்த**
**காவல னேநிதம் என்றனைக் காத்தருள் கார்வண்ணனே.”**

என்பது இவரியற்றிய கார்வண்ண மாலையில் ஒரு பாட்டு.

## க0அசு. நமச்சிவாயப் பிள்ளை - ப
(20 - நூ.)[1]

திருமறைக் காட்டை யடுத்து விளங்கும் தோப்புத் துறை என்னும் ஊர் தெத்திமாநகர் என்று செப்பப்பெறும். இவர் அவ்வூரில் பழநியப்ப பிள்ளை என்பவருடைய மகனாகத் தோன்றினார். புலமைக் கல்விகற்றுச் சிறந்து திகழ்ந்த இவர் அவ்வூரில் எழுந்தருளிய கைலாச நாதப்பெருமான்மீது “பதிற்றுப்பத்

தந்தாதி" என்னும் நூல் ஒன்றைப் பாடினார். மற்றும் இவரால் யாழ்ப்பாணம் காசிச் சாமிகள் தோத்திரம் முதலிய பிறநூல்களும் இயற்றப் பெற்றன.

"தெத்திநகர் உற்றசிவ னேசிறிய னேனுன்
பத்திபுரி வண்ணமுட னேயுனது பாதம்
நத்திடவு மோர்பொழுதும் நாசமனு காத
முத்திபெற வும்மருள்செய் முப்பகையி னானே.

வேதமுடி வானபொரு ளேபிடையி லேனும்
நாதவடி யார்களுடன் நான்ஒருவன் ஆகிப்
போதநிலை யோடொழுகி டத்தயைபு ரிந்தால்
ஏதமறு தெத்தியுட னக்கினிய னாவேன்."

என்பன பதிற்றுப்பத் தந்தாதியில் இரண்டு பாடல்கள். இந்நூலைப் பாராட்டிக் கோவிந்தானந்த அடிகள், சோமாஸ் கந்த பட்டாரகர், திருத்தருப் பூண்டி இரத்தினம் பிள்ளை, மறைக்காடு சுப்பிரமணியப் பட்டாரகர், வ. சாமிநாதப் பிள்ளை, மௌ. செ. முக்தானந்த அடிகள், குலசை-பொன்னம்பல உபாத்தியாயர், ஆலங்காடுது சுப்பையா பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## க0ஙஎ. நமச்சிவாயப் புலவர் (1)

இவர் ஈழவளநாட்டிலே அச்சுவேலி தெற்கிலே கி. பி. கஎசக ஆம் ஆண்டிற் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் கணபதிப் பிள்ளைச் செட்டியார். புலமை பெற்று விளங்கிய இவர் தனிப்பாடல்கள் பலவற்றை இயற்றியதன்றி நூல்கள் செய்ததாகத் தெரியவில்லை.

"நல்வனமார் புன்னை நறுங்கொன்றை யத்திமுதற்
பல்வனமும் பத்தற்போற் பாங்குசூழ்—நல்வளையில்
அத்திமுக அத்திமத அத்திநிற நித்தசுத
சித்திமுத்தி தந்துநமைத் தேற்று."

என்பது இவருடைய தனிப்பாடல்களில் ஒன்று. இவர் கஅகசு ஆம் ஆண்டிற் காலமானார்.

## க0ஙஅ. நமச்சிவாயப் புலவர் (2)

இவர் ஏறக்குறைய இருநூற்றைம்பது யாண்டுகட்கு முன்பு இருந்தவர். இவருடைய பிறப்பிடம் இன்னதென்று தெரிய

வில்லை. தொண்டைநாடு, நடுநாடு, சோழநாடு, பாண்டிநாடு முதலிய எல்லா நாடுகளினுஞ் சுற்றித் திரிந்தார். இராமநாத புரத்திற் சிறிது காலம் நிலைத்திருந்தார் என்று தெரிகிறது. இராமநாதபுரம் சமத்தானத்தில் அமைச்சராக இருந்த முத்திருளப்ப பிள்ளை என்பவர்மீது பிள்ளைத்தமிழ், மான்விடுதூது முதலிய நூல்களை இயற்றியுள்ளார். முத்திருளப்ப பிள்ளைமீது பல தனிப் பாடல்களை இயற்றியிருத்தலோடு ஆனைமுகக் கடவுள், மதுரைச் சொக்கநாதர், முருகக் கடவுள் முதலிய கடவுளர்கள்மீதும், தாண்டவராய பிள்ளை, சிதக்காதி, புதுவை ஆநந்தரங்கப் பிள்ளை, சொக்கன் என்னும் பெயருடைய ஒரு மருத்துவன், மஞ்சம் புத்தூர் ஆவுடையான், இராமகிருட்டிண பிள்ளை, தஞ்சை செவிசெட்டி, புதுச்சேரி வேங்கடராயன் என்பவர்கள் மீதுந் தனிப்பாடல்கள் பல இயற்றியுள்ளார். திருக்கோவலூர்த் தாண்டவராயன் மீது,

"பாங்குயர் பளிங்கு மேடை கொல்லுலையாம்
மாருதந் துருத்தியா நீடும்
பகர்நிலாக் கற்றை பதடியா மூடும்
படரிருட் குழாங்குடை கரியா
ஓங்கிய செக்கர் உள்ளிடுங் கனலா
உயர்பெரும் பனிகொடும் புகையா
உருவிலி என்னுங் கொல்லனான் பொன்னை
உருக்குமா றென்கொலோ உரையாய்
தூங்கிய விழியும் தாம்புடைக் கயிறும்
தூம்புறு காம்பியற் குழலும்
துவருடைத் துகிலுங் கவருடைக் கழியும்
தொறுவியர் உறிபடு குடமும்
தாங்கிய கையும் மெய்யுமாய் நின்று
தண்ணளி பெய்யுமா முகிலே
தாண்டவ ராயா பாண்டவர் தூதா
தாழ்வில்சீர்க் கோவலா திபனே"

என்னுஞ் செய்யுளைப் பாடினார். இவருடைய பாடல்கள் பல வேடிக்கையாக அமைந்துள்ளன. இவருக்கு நகைச் சுவைமிகுதி என்பதை இவருடைய பாடல்களால் நன்குணரலாம். சேதுபதியையும் அமைச்சர் முத்திருளப்ப பிள்ளையையும் மற்றோர்களையும் காடாகவும் கொடிய விலங்குகளாகவும் கல்விமான்களை மான்களாகவும் உருவகஞ் செய்து இவர் பாடிய,

" சேதுபதி காத்தமுத்து ராமலிங்க துரைராச சிங்கமந்திரி
மாதுபதி முத்திருளப் பன்கொடிய வரிவேங்கை வளராதிக்கம்
கோதறுபர மரக்காடு கருணீகர் மூப்மதக்கொல் யானைமற்றோர்
மோதுபெரும் புலிக்காடு கல்விமான் கருந்திரிந்தால் மோசந்தானே."

என்னும் பாடல் நல்ல சுவையுடையதாகும். இவருடைய பாடல்களிற் சில வேறு சிலருடைய பாடல்களாகவும் வழங்குகின்றன.

## ௧௦௮௯. நமச்சிவாயப் புலவர் - கடிகை (19 - நூ.)

இவர் எட்டையபுரத்தில் பெருநிலக் கிழாருடைய அவைக்களப் புலவராக இருந்தார். பெருநிலக்கிழாருடைய கட்டளைப்படி 'வள்ளிதிருமணக் கதையை' வல்லிபரதம் என்னும் பெயரோடு நாடகமாக இயற்றியுள்ளார். நூலைப்பாராட்டிக், கடிகை பரமசிவப் புலவர், வேங்கடபதி ஐயங்கார், எட்டீசுவரக் குருக்கள், சிவகாமி நாதபிள்ளை, பாளையங்கோட்டை சண்முக நாதன் கவிராசர், திருநெல்வேலி கூபத்துக் குருக்களையா, கவிராச நெல்லையப்ப பிள்ளை, அழகிய சொக்கநாத பிள்ளை, புதூர் வள்ளிநாயகம் பிள்ளை, இராசவல்லிபுரம் முத்துச்சாமியா பிள்ளை, கழுகுமலை அட்டாவதானம் இராமசாமியா பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" பூவணைந்செய் நாரதனுர் வள்ளிமலைப்
புனத்தயலிற் போகும் போது
காவல்மிகுந் திலைப்புனத்தில் ஆலோலம்
என்னுமின்சொல் காதிற் கேட்டுத்
தேவரக மெய்யிதெனத் தெரிந்துவள்ளி
சேரடியைச் சென்று போற்றி
ஆவல்மிகும் கழுகுமலை ஆண்டவருக்
குகந்தகனி ஆம்என் றூரே."

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு. கலிப்பா, அறுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், கலித்துறை, கண்ணிகள் முதலிய பலவகைப் பாடல்களும் நூலில் விரவியுள்ளன.

## ௧௦௯௦. நமச்சிவாய முதலியார் (காஞ்சி)

திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகள் காலத்தில் காஞ்சிபுரத்தில் இருந்த ஒரு சிறந்த தமிழ்ப் புலவர். இவரு

டைய கல்விச் சிறப்பை நோக்கிப் பலரும் இவரை 'மகாவித்துவான்' என்று பாராட்டினர். இவரிடங் கல்விகற்க விரும்பிய ஒரு மாணவர் இவருக்கு அறிமுகக் கடிதந்தருமாறு இராமலிங்க அடிகளை வேண்டிக் கொண்டார். இராமலிங்க அடிகள்,

"திருத்தகுசீர்த் தமிழ்மறையின் முதற்பொருளே
தமதுதிருப் பெயராக் கொண்டு
பொருத்தமுறு மேகம்பப் புத்தமுதை
உண்டுவக்கும் புனிதனே! நின்
உருத்தகுசே வடிக்கடியேன் ஒருகோடி
தெண்டனிட்டே உரைக்கின் றேன் நின்
கருத்தறியேன் கவிகொடுநின் பாலன்பால்
வருபவரைக் காக்க வென்றே."

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினர். இவ்வாறு இராமலிங்க அடிகளாலேயே போற்றப் பெற்ற இவருடைய முழுவரலாறும் இயற்றிய நூல்களும் விளக்கமாகத் தெரியவில்லை.

## க0கூக. நமச்சிவாயம் பிள்ளை
## (1893)

சோழவள நாட்டில் மாயூரத்தை யொட்டியுள்ள சித்தக்காடு என்னும் ஊரில் "சித்தக்காடு வித்துவான்" என்னும் பெயரோடு சிறந்து விளங்கிய இவர் சிறந்த தமிழறிஞர்களில் ஒருவர். கேட்போர் வியக்கத்தக்கவாறு உரையாடுவதினுஞ் செய்யுள் செய்வதினும் வல்லவர். திருப்பனந்தாட் காசிமடத் தலைவர் சாமிநாத சாமிகள்மீது இவர் பத்துப் பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று,

' பூமேலான் பொறிமேலான் போற்றரிய
பெருஞ்செல்வப் பொலிவார் கொன்றைப்
பூமேலா னருள்கூரந்து பூரிக்குந்
திருப்பனந்தாட் புரியிற் சுற்றோர்
நாமேலோ வாதுறைதல் புரிசாமி
நாதமுனி நாதா நாதா
நாமேலோர் குழாநடுவில் நண்ணியிடு
வாழ்வதனை நயத்தி யின்றே."

என்பது.

## ௧௦௪௨. நமச்சிவாயம் பிள்ளை - மா

(20 - நா.)

சென்னைமாநகரில் வசித்திருந்த இவர் சிவானந்த சாகர யோகீசுவரரிடங் கல்விகற்று அறிஞரானார். புரொக்ரசிவ் யூனியன் பாடசாலையில் தமிழாசிரியராகத் தொழில் புரிந்தார். திருவொற்றியூர்த் தியாகேசர் பஞ்சரத்தினம், வடிவாம்பிகை பதிகம் முதலிய நூல்களை இயற்றியதோடு சிவராத்திரி புராணம், நம்பியாண்டார் நம்பிபுராண வசனம், சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத் தமிழ், செவ்வந்திப் புராணம், சந்தான குரவர் நான் மணிமாலை முதலிய நூல்களைப் பிழையறத் திருத்திப் பதிப்பித்தும் வெளியிட்டார். திருவொற்றியூர்த் தியாகேசர் பஞ்சரத்தினப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"உனதுதொழும் அன்பர்பலர் உனதரிய மகிமைகளை
ஓர்ந்துபல பணிபுரிந்தே
உன்னரிய நின்னருட் செல்வமாரந் தொழியாத
உயரின்பம் அடைவதோர்ந்தும்
நிலவுநீ பதியுனது நிலையடிமை யானெனும
நெறியதனை நன்குணர்ந்தும்
நின்னடிக்கன்புசெய ஒட்டாமல் ஆட்டியே
நீங்காத துன்பில் ஆழ்த்தி
நலவுலகில் ஆன்பவர்கள் இல்லாது பலரிடமும்
நாளும்அடி உண்பசுப்போல்
தவிவுறச் செயவுமெனை' தூழினைச் சேதித்து
நற்கதியை வித்திடாயோ?
நிமைதுவு தைலமென உலகெலாம் பரவியே
திகழ்தரும் பரம பதியாம்
திருவொற்றியூர்வாச! அருமைத்தியாகேச!
திருமிக்குமாதேசனே!"

## ௧௦௪௩. நம்புசாமி ஐயர்

(19 - நா)

கொங்கு நாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள சிறுபூலுவப்பட்டியிலே தோன்றிய இவர் இலக்கண இலக்கியங்களைக் கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். சேகலம்பகடால ராசிப்பாடு நாடு தாம் வடநாட்டிற்குப் பயணஞ் சென்று வந்த

போது, இடுகரை, வட்டமலை, பாளையம், செங்காளி பாளையம் முதலிய சிற்றூர்களுக்குச் சென்று தமது யாத்திரையின் நடைமுறைகளையும் பயனையும் பற்றிச் சொற்பொழிவுகள் பல செய்தார். அப்போது அதனைக் கேட்டு மகிழ்ந்த இவர் அடியில் வருஞ்செய்யுளைப் பாடி இவரைப் பாராட்டினார். அச்செய்யுள் ஆங்கிலப்பெயர்களும் ஆரியச்சொற்களும் விரவியுளது.

“மகராச ராசஸ்ரீ சேலம்வாழ் பகடாலு
மதியூகி நரசிம் மலு
மாநாயு டவர்களின் நாடா னதுமித்திரர்
மனங்களின் புறுவ தாக
வட்டமலை என்னுமா நகர்தனில் தேசாபி
மானியாஞ் சபைமத் தியில்
வருடித்த மாரியால் அறிவிலா மூடராம்
வாடியசெஞ் சாலி யலவும்
சுகமாகி வளமாகி கதிரோங்கி விளையுமென்
சொலலலாம் வல்ல நிபுணர்
சொல்லரிய தமிழ்தெலுங் காங்கிலோ ஆரியம்
துலுக்குமுத லாம்பா டையில்
சொல்லியே எல்லவர்கள் அல்லல்தீ ரச்செயும்
சுந்தரக் கிருப நேயன்
சுதேசாபி மானியாம சபைகளுள் வருடிக்கும்
சொல்லரிய கருணை மேகம்
செகமெலாம் புகழுநல் கல்கதா பம்பாயில்
சேர்ந்தநாங் கிரஸ்ச பையில்
சென்றவர்க் கறியவே மன்றுடி யாவையும்
தெரிவித்த சீவ ரத்தினம்
சென்னைமா நகரினும் கும்பகோ ணத்தினும்
சேர்மகா சனச பையிலும்
செய்தஉபந் நியாசமதில் தேசாபி மானமே
தெரியவரு ஷித்த மேகம்
தகைமைசேர் கவர்னராம் ராபர்ட்டு பூர்க்குடன்
தனக்கே வருத்த மாபோல்
தடைசெய்து பாரஸ்டு லாக்களைத் திருத்தெனத்
தந்திரஞ் செய்யும் நிபுணர்
சகலரும் அறியவே கலாநிதி வழங்குநற்
சாதுகுண சங்க லோலன்
தனக்குவந் தனம்சொலச் சகசிரச் சென்னியுள
சக்கிரி தனக்கு வசமோ?”

## ௧௦௪௪. நயனப்ப முதலியார்-பு

சென்னைக் கல்விச் சங்கத்துப் புலவராக இருந்தவர். தாண்டவராய முதலியாருடைய கட்டளைப்படி திவாகரம் 9, 10 ஆம் பகுதிகளைப் பரிசோதித்தவர்.

## ௧௦௪௫. நயினுத்தை முதலியார்

இவர் புதுச்சேரியிற் பிறந்து வளர்ந்து கல்வி கற்றுச் சிறப்படைந்து திகழ்ந்தவர். மிகுவிரைவாகச் செய்யுளியற்றுந் திறமையினுல் நிமிடகவி யெனப் புகழ்பெற்றவர். இவர் செய்யுளாக இருந்த ஆரிய புராணத்தை உரைநடையாக இயற்றினுர். அவ்வுரை நடைநூலைப் பாராட்டி, புதுவைச் சுப்பராய முதலியார், மயிலாப்பூர் கன்னுச்சாமி முதலியார், இராயபுரம் சவரிநாத முதலியார், பொன்னேரி சுந்தரம் பிள்ளை, சாமிநாத ஆச்சாரி ஆகியோர் சிறப்புப் பாடல்கள் அளித்துள்ளனர்.

"சீரியஆ ரியபுரா ணக்கோட் பாட்டைச்
செகமீதில் எளிதில்அனை வோருந் தேர
நேரியதல் வாசகமா நிகழ்த்த முக்கண்
நிலவுமதிச் சடைமுடி நீள் ஒற்றைக்கொம்பும்
வாருதரமும் மதபூர்ணங் கரமதால் வாயும்
மாகனைப்பைம் பூணும்மன் அருளும் மல்கும்
ஏரியதோர் துதிக்கையும் உடைய எம்மான்
சகன்மைந்தன் இணைமலர்த்தாள் ஏத்துவாமே.''

என்பது காப்புச் செய்யுள்.

## ௧௦௪௬ நயினுமுகம்மதுப் புலவர்

இவர் பரங்கிப்பட்டணம் என்னும் ஊரில் பீருமுகமது சாகிப் என்பவரின் மகனுகத் தோன்றியவர் முகமதிய மதத்தினர். முனாஜாத்மாலை முதலியன இவரால் பாடப்பட்டன.

## ௧௦௪௭. நரசிங்கப் பிள்ளை

இவர் அணியாபரண நல்லூர்ப் பரமேசுரம் பிள்ளையவர்களின் திருமகனுகத் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை

நன்குகற்றுப் பலராலும் புலவராகப் போற்றப்பட்டிருந்தவர் இவர் 'வயிரவசுவாமி பிள்ளைத் தமிழ்' என்னும் நூல் இயற்றினர். இது திருநெல்வேலிப் புலவர் சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகளால் பார்வையிடப் பட்டு வெளிவந்திருக்கிறது.

"பேரேறு சினவாள் எயிற்றரக் கன்படப்
புங்கவெங் கணைதொட்டமால்
புணரிநடு வடவிலைத் துஞ்சரிசெய் யொருபங்கு
பூண்டநட நக்க ரிடமே
வாரேறு குளிமூலை மடந்தையுமை யபிராம
வல்லிவள ராலயங்கள்
வரியே யுடுத்தபதி னுலுபுவ னங்களும்
மற்றுமுள பலவண் டமும்
ஏரேற மிக்கதிரு வாழ்வேற அடியவர்கள்
ஈடேற வேபுரிந்தே
இனியசொல் தமிழ்வாணர் கவியேற வேறேறும்
ஈசுரர் கடாட்சம் ஏறச்
சீரேறிவந்தருளும் வயிரவா தமனியச்
சிறுதேர் உருட்டி அருளே
தென்னணிகை உயர்மீனை நன்னகரில் வயிரவா
சிறுதேர் உருட்டி அருளே."

என்பது பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு. இப்பிள்ளைத் தமிழ் பருவத்துக்கு ஐந்து பாடல்களைக் கொண்டது.

## க0கஅ. நரசிம்ம ஐயர்
(கி. பி. - 1899)

சோழவள நாட்டில் திருக்குடந்தையில் வாழ்ந்திருந்தவர். இவர் மார்க்கண்டேயர் நாடகம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். நூலில் விருத்தம், கட்டளைக் கலித்துறை, உரைநடை, இசைப் பாடல்கள் முதலியன அடங்கியுள்ளன.

"இட்டதோ ராக்ஞை பெற்ற
எமதூதர் நாங்கள் வந்து
விட்டகன் றிடுவ துண்டோ
வெறிகொண்டு பிதற்றும் இந்தத்
துட்டனைக் குண்டுக் கட்டாய்த்
துரிசினிற் கட்டிக் கொண்டு
பொட்டெனப் போவோம் வாரீர்
பொற்புய தூதர் நாமே."

என்பது எமதூதர்கள் மார்க்கண்டேயரைப் பிடிப்பதற்கு வந்து சொல்வது." அகிர்தம் சோபாக்கியான நாடகாலங்காரம்" முதலிய பிற நூல்களும் இவரால் இயற்றப்பெற்றுள்ளன.

## கoகக. நரசிம்ம சாமியார்

கொங்குவள நாட்டில் ஒண்டி புதூர் என்னும் ஊரில் தேவாங்கர் குலத்தில் தோன்றிய இவர் துறவறத்தை மேற்கொண்டு வேதாந்த நூல்கள் பலவற்றை ஓதியுணர்ந்தார். தாமும் வேதாந்த நூல்கள் பலவற்றை இயற்றினார்.

## ககoo. நரசிம்மபாகவதர் - தி. ரா

நடுநாட்டில் திருவெண்ணெய் நல்லூரில் இருந்தவர். அவ்வூரில் இருந்த இராசப்ப நாவலரின் மாணவராகிய தி. ந. சுப்பிரமணிய முதலியாரிடம் கல்விகற்றுப் புராணேதிகாசங்களைச் சொற்பொழிவு செய்யுந் திறமைபெற்று விளங்கினர். செய்யுள் பாடுந் திறமையும் அமையப் பெற்று விளங்கிய இவர் தம்முடைய ஆசிரியரின் ஆசிரியராகிய இராசப்ப நாவலர் இயற்றிய திருவெண்ணெய் நல்லூர்க் கலம்பகத்திற்குச் சாற்றுக் கவிகள் இரண்டு வழங்கியுள்ளார். ஒன்றை அடியிற் காண்க:

"நீர்சூழும் உலகுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
 சீர்சூழும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதின்
தக்கவள நடுநாட்டின் தகைமையொரு மருதநிழல்
 தெக்கிணப்பெண்ணருவியிடைத் தெரிநிலைகோ புரமதினார்
அத்தனன்றாட் டிதுகொண்ட அருட்டுறையாம் வெண்ணெய் நல்லூர்ப்
 பித்தனுறை யகலிடத்தைப் பெற்றபிரான் நற்றவமே
பன்னுயிரும் பலவுலகும் பயிலுமொழித் தமிழ்வேதச்
 சொல்லுணர்ந்து இறைவனுக்கே சொற்றனணிக் கலம்பகமே
நாவலூர்ப் புராணமுனம் நவின்றபெருங் கவிவாணன்
 சேவலான் திருவடியைச் சிந்திக்கும் நெஞ்சுடையான்
செங்குந்தக் குலம்விளங்கச் செய்தவனே திருவருளால்
 எங்குந்தன் புகழிலங்கும் இராசப்ப நாவலனே."

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களின் மனோன்மணீயத்தின் மங்கலவாழ்த்துப் பாடலைப் பொருளாலும் நடையாலும் பின்பற்றியமைந்திருத்தலை ஊன்றியுணர்க.

## ககoக. நரசிம்ம பாரதி - அ

### (20 - நூ.)

இவர் திருநயம் என்னும் ஊரில் தோன்றியவர் செட்டிமார் நாட்டில் பள்ளத்தூர் முதலிய இடங்களில் வாழ்ந்திருந்தார். பள்ளத்தூர் அங்கயற்கண்ணம்மைமீது பிள்ளைத் தமிழ், சோம சுந்தரேசர் மீது பதிகம், மீனாட்சியம்மை பஞ்சரத்நம், நேரிசை வெண்பாமாலை, அங்கயற் கண்ணம்மை அலங்காரமாலை, தோத் திரப்பாமாலை, கூடசதுக்கம், காதைகரப்பு, காலிலாவெண்பா, கொம்பிலாப்பா, முற்றுமோனை ஆசிரிய விருத்தம் ஆகியன பாடி யுள்ளார். காலிலா வெண்பாவும், கொம்பிலாப்பாவும் கீழ்வருவன.

"கரவு தவிர்வர் கனத னவணி
கரவிர்பள் ளத்தூர் கருதி—பருவு
கயல்வி ழியைமெய் கலவு மழக
அயலி வரிலை யருள்.

"காயாகா ராகாரா காமாநாண் வில்லிக்கும்
மீயாவந் தக்காயா விம்மாற்றத் தால்யாகித்
தூறுறு தியாய்வாளா வுற்றல்ல லாகாதாள்
மாறுடிப் பளளத்தூர் வந்து"

முற்றுமோனை ஆசிரிய விருத்தம்

"கங்கையங் கமலங் கடுக்கையின் கண்ணிதிங்
கட்கலை கரந்தை காட்டும்
கடிகொளறு கம்புனும் கமழ்சடைக் கண்ணுதல்
கறைக் கந்தரன் கலைகள்
செங்கைசெவி சிரமார்பு சேர்ந்தகட் செவியதாச்
செய்ததேகச் சிவபிரான்
செம்பாதி சேல்விழித் தேவிசிலை திகழுத்
தினந்தினஞ் சேவை திருமுன்
அங்கையில் அணிந்தகனி அடைகாயொ(டு) அன்னங்கள்
அறுசுவையின் ஆராதனை
ஆதிசைவரின் ஆற்றி அழகன்நீ யாவுமாம்
ஆலவா யாய்நின் அகம்
துங்கம துறும்படித் தொண்டராற் றும்பூசை
துய்த்துஞற் றுந்தோமெலாம்
சுடர்முனம் துகினமாச் சுந்தரேச் சுரரருள்வர்
தூயபள் ளத்தூரினே.

இந் நூல்களைப் பாராட்டித் தஞ்சை சதாவதானம் சுப்பிரமணியஐயர், காரைக்குடி சதாவதானம் பாலசுப்பிரமணிய ஐயர், பள்ளத்தூர் விசுவநாதக் குருக்கள், திருமயிலை சண்முகம் பிள்ளை, திருநெல்வேலி சுந்தரமூர்த்தி பௌராணிகர், கண்டனூர். வீ வீரப்பையா, காரைக்குடிராம-சொ. சொக்கலிங்கச் செட்டியார், காரைக்குடி ரா. கு. மெய்யப்ப செட்டியார், கோட்டையூர் சித. சோமசுந்தரஞ் செட்டியார், உ. ரா. சாமிநாதப் பிள்ளை, உரத்தூர் கே. வைத்தியலிங்கம் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

இவர் தென்திருப்பதி எனச் சிறந்தோங்கும் டிருகுண சிலத்தல புராணமும் பாடியுள்ளார் அப்புராணம் பத்து அத்தியாயங்களையும் ஐந்நூற்று ஐம்பத்தெட்டுச் செய்யுட்களையுங் கொண்டது.

"நற்பெயர் சுருத தேவனும் மறையோன்
ஞானவா கிரியர்தம் அருகில்
பொற்புற நின்று வணங்கியெங் குருவே
பூரணபோதத்தான் உயர்ந்த
அற்பிளை யாடி யாதலை யென்னுன்
அருள் புரிந் திடுகபோ தித்த
சிற்பொருள் வண்ணம் இவ்வுடல் மலமூத்
திரயிரி பாண்டமென் றுணர்ந்தேன் "

என்பது சுருததேவ முனிவர் கண்பெற்ற அத்தியாயத்தில் ஒரு பாட்டு. நூலினைப் பாராட்டிக் குரு. வித்துவான் சுப்பிரமணிய ஐயர் பி. ஏ, சாமிநாத ஐயர், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், துறையூர் நாகலிங்கப் பிள்ளை, உறையூர் பெரிய சாமிப் பிள்ளை முதலிய பல புலவர்பெருமக்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ககO௨. நரசிம்மதாசர்

இவர் சித்தூரில் வாழ்ந்திருந்தவர். வேமனானந்த சுவாமிகள் என்னும் பெரியாரை அடுத்து அவரால் அருளுரைபெற்றவர். இவர் தம்முடைய குருநாதர்மீது பதிகம் முதலிய தோத்திரப் பாக்கள் பாடியிருக்கிறார்.

"ஆதியாய் அந்தமாய் அந்தநடு நாதியாம்
ஆறுமுக ருட்ராட் சமாய்
ஆட்டமாய்ப் பாட்டமாய் ஓட்டமாய் நாட்டமாய்
ஆநந்த குஞ்சி ரிப்பாய்ச்
சோதியாம் மின்னலாய் மின்னல்நடு மாசியாய்ச்
சொக்கலிங் கக்கடவு ளாய்ச்
சோகமாய் மோகமாய்த் தாகமாய் என்மனதைச்
சோதிக்க வந்த கனமாய்
நீதியாய் நேமமாம் நேமநடு முத்தியாய்
நீரோட்ட வெளிகு ழிமியாய்
நீட்டமாய் வாட்டமாய்த் தோட்டமாய் எந்நாளும்
நீங்கா தநந்த வடிவாய்
வாதியாய்க் கோபியாய்க் கோபநடு அணுவாகி
வானேற விட்ட கனியே
வேதாந்த பரமசிவ மெய்ஞ்ஞான மூர்த்தியே
வேமனு நந்த குருவே."

என்பது, பதிகத்தில் ஒரு பாட்டு.

## கஉ0ரு. நரசிம்மலராசா - சி. கே
## (20 - நூ.)

கொங்குவள நாட்டில் ஓமலூரில் இருந்தவர். இவர் ஆங்கிலந் தமிழ் தெலுங்கு முதலிய மொழிகளில் வல்லவர். புட்ப பால வரதராசர் என்பவர் ஆந்திரமொழியில் இயற்றிய "சன்ம ரகிதபோதினி" என்னும் நூலை இவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். செய்யுள் செய்வதினும் வல்லவர்.

"சிற்றறிவோர் தமிற்கடையேன் எடுத்தபொருள் மனத்தின்
சிந்தனைவாக் குக்கரிய செம்பொருளா மென்றால்
குற்றமிதில் இல்லையெனக் கொளப்படுமோ சிறுவர்
கூட்டுமணற் சோற்றிற்கல் லாய்வதொக்கு மன்றோ
மற்றுமொரு குணமிதன்கண் இலதெனினுங் கூறும்
வத்துவதன் பெருமைதனை மனங்கொளலே குணமாம்
கற்றபெரியோர்க் குளதாம் சடனையே போல்வார்
கழறியபுன் மொழியினலங் காண மதிப்பதுவே."

என்னுஞ் செய்யுளை நூலின் அவையடக்கமாகப் பாடியுள்ளார். நூலைப்பாராட்டி, கிருட்டிண சாமி ஐயர், அ. வரதநஞ்சைய பிள்ளை, வேங்கடாத்திரிப் பிள்ளை, சேலம் சுப்பிரமணிய பிள்ளை,

நாராயணசாமிப் பிள்ளை, பொன்னுசாமி நாயகர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௧௦௪. நரசிம்மலு நாயுடு சே. ப

மித்திரன் அரங்க சாமிநா யுடுதவப்
புத்திரன் என்னும் போதுநலப் பிரியன்
குணாதிபர் வாழுங் கோயமா நகரான்
கலாநிதி பத்திரி காசிரி யன்சீர்
பெற்றிடும் பிரம சமாசப் பெற்றியன்
கொற்றவர் மதிக்குங் குணம்பல் உடையோன்
கணித நூல் தருக்கநூல் கான நூல் முதலிய
அணிபெறச் சுருக்கி அச்சிட் டுதவினோன்
ஆங்கிலே யத்துடன் ஆந்திரம் தமிழென
சங்கியற் பாடைகள் எழில்பெற உணர்ந்தோன்
பாவுறுஞ் சேலம் பகடால
நரசிம்ம நாயுடு நராபதின் நாவே ''

எனவும்,

பெருமழை பொழியும் பிரசண்ட மேகம்
தரணியர் மதிக்கும் தருமதி யூகன்
தேசாபி மானி திகழ்பாப் பிரம
பூசா துரந்தர போதுநலப் பிரியன்
நன்புகழ் பகடால நரசிம்ம பூபன்
... ... .. .. ... ...''

எனவும் அறிஞர்களாற் புகழப்பெற்ற இவர் சேலம் அரங்கசாமி நாயுடு என்பவருக்கு அருமைத் திருமகனாகத் தோன்றினார். ஆங்கிலம், தமிழ், தெலுங்கு என்னும் மூன்றுமொழிகளையும் நன்கு கற்றுத்தேறினார். கோயமுத்தூரிற் குடியேறி ஆண்டே நிலைபெற்று வாழ்ந்திருந்தார். "கலாநிதி'' என்னும் பெயரோடு பத்திரிகை யொன்றை நடத்தினார். வடஇந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் தலயாத்திரை செய்தார். தாம் பயணஞ்செய்த காலத்தில் ஏற்பட்ட அநுபவங்களையும் நிகழ்ச்சிகளையும் தலப் பெருமைகளையும் நாட்டுச் சிறப்புகளையும் விரிவாக எழுதி "ஆரியர் திவ்விய தேசயாத்திரையின் சரித்திரம், தட்சண இந்தியா சரித்திரம்'' என்னும் பெயர்களோடு நூல்களாக வெளி

யிட்டார். அந்நூல்கள் தலயாத்திரை செய்பவர்களுக்குப் பெரிதும் பயன்பட்டதோடு செய்யாதவர்களும் அந் நாட்டின் சிறப்புக்களையும் செய்திகளையும் அறிந்து கோடற்கும் பெரிதும் பயன் பட்டன.

மற்றும் இவர் நூல்கள் எழுதுவதிலேயே தம்முடைய காலத்தைச் செலவிட்டார். இவரால் எழுதப்பெற்ற நூல்கள், மதவிருட்சம், ஆத்திகமத சித்தாந்தம், பெரும்பூதூர்த் தலமகத்துவம், திருநாராயண புரம் தலமகத்துவம், திருப்பதித்தலமகத்துவம், காஞ்சிமகத்துவம், காசிமகத்துவம், கலியுகதருமம், புனர் விவாக புண்ணியம், வேதாந்த சூரியோதயம், கோதையர் கொம்மி, பெண்களின் சரித்திரம், பூர்வஇந்து சமயம், தருக்க சாத்திரம், இந்துபைபில் என்னும் ஆரியர்வேதம், ஆரியர் ஆசாரம் முதலியன. இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் ஓர் உறுப்பினராக விளங்கினர். இவருடைய யாத்திரை நூல்கள் இவருடைய வரலாற்று நூல்களாகவே திகழ்கின்றன.

கோயமுத்தூரில் பெரும் புலவராகவும் வழக்கறிஞராகவும் சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களின் தந்தையாராகவும் விளங்கிய கந்தசாமி முதலியார், வீராச்சாமிப் பிள்ளை, சாமிநாத பிள்ளை, கும்பகோணம் சபாபதிப் பிள்ளை, பாலபாரதி முத்துச் சாமி ஐயர், திருச்சிற்றம்பலம் பிள்ளை, வேங் கடரமணதாசர், நாகூர் செவத்தி மரைக்காயர், நம்புசாமி ஐயர் முதலியோர் இவருடைய நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

## கக0ரு. நரசிம்மா சாரியர் - ரா
(20 - நூ.)

இவர் மைசூர் நாட்டிலே சாசன இலாகாப் பொறுப்பாள ராக விளங்கியவர். எம். ஏ. வரையில் கல்விகற்றவர். பெரும் பேராசான் (மகாமகோபாத்தியாயர்) இராவ் பகதூர் முதலிய சிறப்புப் பெயர்களைப் பெற்றவர். மு. இராகவ ஐயங்காருடைய தந்தையாராகிய சதாவதானம் முத்துச் சாமி ஐயங்காரிடம் தமிழ் நூல்களையும் பயின்றவர். தம் ஆசிரியராகிய முத்துச்சாமி ஐயங் கார் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதி அகவல், மணவாள

மாமுனிகள் நூற்றந்தாதி ஆகிய நூல்களை இவர் 1908 ஆம் ஆண்டில் அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார். அந்நூலின் பதிப்புரையில்,

"இவ்வாசிரியரிடம் படித்தவர்களில் யானும் ஒருவன். என்பதை இங்குக் கூறுவது மிகையாகாதென்று எண்ணுகிறேன். அக்காலத்தில் தாமியற்றிய இவ்விரு நூல்களின் கையெழுத்துப் பிரதியை ஆசிரியர் அடியேனிடம் அளித்து, அநுகூலப்படும்போது இவற்றைப் பதிப்பித்து வெளியிடுக என்று கட்டளையிட்டருளினர். நெடுநாள் சென்றபோதிலும் இக்கைங்கரியம் என்னால் நடத்தப்படாமலே இருந்தது அதனை நிறைவேற்றுதற்கு இப்போது சமயம் வாய்த்ததற்கு மகிழ்கின்றேன்" என்று எழுதியுள்ளார்.

## கக0கூ. நல்லசிவன் பிள்ளை - கோ
## (20 - நூ.)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிமாவட்டத்தில் கலியாணிபுரம் என்னும் ஊரில் இருந்தவர். முருகதாச சுவாமிகள் எனப் பிற்காலத்தில் பெயர் வழங்கிய ஆழ்வாரப்ப பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியங்களையும் அறிவு நூல்களையும் ஓதியுணர்ந்தவர். இவர் தம் ஆசிரியர்மீது,

"நன்றுவளம் பெருகும்வரை நகரா ரென்றும்
நற்கதியில் நாட்டமுறும் படிநீ அவ்வூர்க்
குன்றுவிளி சந்நிதியில் வெள்ளி தோறும்
குகன்பசனை இயற்றிவைத்த குருவேபோற்றி
அன்றநகரர் கூரர்க்கிடுக்கஞ் செய்த தோர்ந்தே
அரன்விழித்தீ தரஆறு முகனுஞ் சந்த
நன்றுறைவாழ் அறுமுகனுக் கன்பாம் என்றன்
குருஆழ்வார் அப்பனடி போற்றிபோற்றி."

என்றும் இதுபோன்ற பல செய்யுட்களை இயற்றியுள்ளார்.

## கக0எ. நல்லதம்பிப் பிள்ளை
## (20 - நூ.)

பாலைக் காட்டிற்கு அடுத்த தத்தைமங்கலம் என்னும் ஊரில் பொன்னப்ப பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றிய இவர்

தமிழ்மொழியையும் வடமொழியையும் நன்கு கற்றுத் தேறித் திருப்பத்தூர் முனிசிபல் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்தார் "சைவசித்தாந்த ரகசியம்" என்னும் நூல் ஒன்று இவரால் இயற்றப் பெற்றுள்ளது

"சிவமணங் கமழும் சைவசித் தாந்தச்
சீர்பெறும் அதிரக சியத்தைப்
பவமெனு முத்தி கடந்திறை கமல
பதநடம் ஏறுவான வேண்டும்
நலையறு மனத்தோர் தமக்குநற் பாதை
ஆகவே நானிசைப் பதற்குக்
கவுரிதன் சுதனும் பிரணவ முகத்தைங்
கரக்கனி றருள்புரிந் திடுமால்."

என்பது நூலின் ஆனைமுகக் கடவுள் வணக்கம்.

## கக0௯. நல்லபெருமாள் கவிராயர்

(20 - நூ.)

இவர் திருமந்திர நகரெனப் பெறும் தூத்துக்குடியில் வாழ்ந்திருந்தவர் "விவேக விளக்கமாலை" என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

"தத்துவந் தோன்றாற்றி யாரெனச் சாற்றிச் சலனமதாய்
நித்தமலைந்து வழிதெரி யாமல்நிட் டூரமின்னூர்
பற்றி யிழுக்கும் படுகுழி வீழ்ந்துபன் னாட்கழிந்த
தத்த நினைத்திரை நீக்கிக் கொண்டானந்த மாகினனே."

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## ககக௧. நல்லவீரப்ப பிள்ளை

இவர் இராமநாதபுரம்மாவட்டத்தைச் சேர்ந்த முதுகுளத்தூரினர். ஏறக்குறைய அறுபது ஆண்டுகட்குமுன்னிருந்தவர். முருகக் கடவுள்மீது மிகுந்த அன்புடையவர். கொடுமளூர் முருகப்பெருமான்மீது பள்ளு, குறவஞ்சி முதலிய நூல்களும் அமையத்துக்கேற்ற தனிப்பாடல்களும் பாடியிருக்கிறார். அவை உலக வழக்குச் சொற்கள் மலிந்துள்ளன.

"வேண்டா மடாகாலா வேலா யுதப்பெருமான்
ஆண்டுகொண்ட தென்னை அறியாயோ—நீண்டாதே
அப்புறத்தே போடா அறுமுகவன் கண்டக்கால்
தப்பாமற் கொல்வான் க்ஷணம்."

"காலாஎன் மீதினில் வந்தால் உனையுங் கடாவையுங்கைச்
சூலா யுதத்தையு நேரே பிளந்து துணிக்கும்படி
வேலா யுதன்வரு வானவன் முன்னுக்குன் வீரியமங்
கேலா நடாதப்பிப் போடா இவிடம்விட் டெங்கிட்டுமே"

என்பன இவருடைய தனிப்பாடல்களில் இரண்டு.

## ௧௧௧௦. நல்லாதனார்

இவர் சங்ககாலப் புலவர்களில் ஒருவர். இவர் 'மொழிவரி' என்னும் பெயருடைய இலக்கண நூல் ஒன்றை இயற்றினர். அந்நூலை அக்காலத்துப் பேராசிரியர்கள் தம்முடைய நூலில் மேற்கோளாக எடுத்தாண்டனர். காலப்போக்கில் நூலானது மறைந்துபோக மேற்கோளாகப் பிறநூலுக்குச் சென்ற சூத்திரங்கள் மட்டும் உயிர் பிழைத்தன.

"அ ஆ ஐ ஔ வென்றிவை யெனஅ
இ ஈ எ ஏ யென்றிவை யெனஅ
உ ஊ ஒ ஓ வென்றிவை யெனஅ
தசமவ ஞநவெனு மென்றிவை யெனஅ
முந்நா லுயிரு மூவிரு மெய்யும்
தம்முள் மயங்குந் தவறின் றென்ப."

என்பது உயிர் பிழைத்த சூத்திரங்களில் ஒன்று.

## ௧௧௧௧. நவநீதநடனார்

இவர் வாழ்ந்திருந்தகாலம் இடம் முதலியன புலனாகவில்லை. இவர் நவநீதப் பாட்டியல் என்னும் நூலை இயற்றியுள்ளார். இது பொருத்தவியல், செய்யுண் மொழியியல், பொதுமொழியியல், என்னும் மூன்று உறுப்புக்களை உடையது.

"முன்னா சிரியம்பின் வெண்பாக்
கலித்துறை முப்பதென்று
சொன்னார்கள் மும்மணிக் கோவைக்கு
மும்மணி மாலைசொல்லின்

அந்நான் மறைப்பாக் கலித்துறை
ஆசிரி யம்விருத்தம்
இந்நால் வகைச்செய்யுள் நாற்பது
நான்மணி மாலையென்னே.''

என்னும் இக்கட்டளைக் கலித்துறை மும்மணிக்கோவை, மும்மணி மாலை, நான்மணிமாலை என்னும் நூல்களின் இலக்கணங் கூறு கின்றது.

## ககக௨. நற்கம்பர்

(1884)

இவர் மதுரைமாநகரில் இருந்த புலவர். திரிசிரபுரத்தில் இருந்த முத்துச்சாமி முனிவர் என்பவர் இயற்றிய விஞ்ஞான தீபம் என்னும் நூலுக்கு இவர் பதினெட்டுப் பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்

'' ஏகநின் மலமாய் அகண்டபூ ரணமாய்
எண்ணுவோர் அறிவினுக் கறிவாய்
ஆகுமோர் பொருளை மனவெளி யடைத்து
இயாவையும் பொய்யென மதித்துச்
சோகமே கொடுக்கும் ஆகாப் புரட்டைத்
தொலைத்துளக் கலக்கமற் றுலையின்
வேகமாய்ப் புடத்தின் பொன்னெனக் களங்கம்
மேவிடாத் தூயவ னாகி ''

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. முழுமுதற் கடவுளின் இயல்பும் மெய்ஞ்ஞானிகள் தன்மையும் விளங்கத் திகழ்கின்றது இச்செய்யுள்.

## கககங. நன்னூற் சிவப்பிரகாச சுவாமிகள்

இப் பெரியார் மெய்கண்ட சந்தானம் துறையூர்ச் சிவப்பிர காச சுவாமிகள் ஆதினத்தில் ஆறுவதுபட்டத்தில் அமர்ந்திருந் தவர். நன்னூலை நன்குகற்று அதனிற் சிறந்த புலமை பெற்று விளங்கியபடியால் இவருடைய பெயர்க்கு முன்னால் நன்னூல் என்னும்சிறப்புப் பெயரும் அமைந்ததுபோலும். இவர் அத்துவித வெண்பா என்னும் நூலுக்கு உரையெழுதியுள்ளார். அத்துவித வெண்பா என்னும் நூலுக்குச் சிறப்புப்பாயிரமாக,

" திங்களணி சிவனருள்செய் வாதுளா
  கமமதனில் திகழ்சா ரத்தை
எங்கள் பவப் பிணிதீர்க்கத் திரட்டியத்து
  விதவெண்பா எனநன் கீந்தான்
துங்கமுறு மெய்கண்டான் சந்ததிக்கோர்
  தீபமெனத் துதிபெற் றோங்கித்
தங்கருணைத் திருத்துறையூர்ச் சிவப்பிரகா
  சப்பெருமபேர் தரித்து ளானே.

செய்யதிரு வாவடுதண் டுறைநமச்சி
  வாயகுரு தேசி கோத்மன்
துய்யகர சாதனனு யபிடேகந்
  திருநாமஞ் சூட்டப் பெற்றோன்
ஐயதில்லை அம்பலவன் பொருட்டாயத்
  துவிதசைவ அங்கலிங்கம்
தையல்பங்கன சொற்படியே தரித்தசிவப்
  பிரகாசத் தவத்தான் மாதோ."

என்னுஞ் செய்யுள்களைப் பாடியுள்ளார். இச்செய்யுட்கள் ஆசிரியரின் வரலாறு தவவொழுக்கம் கல்வியறிவு முதலியவைகளையும் அவர் திருவாவடுதுறை ஆதீன குரவர்பால் அருளுரை பெற்ற செய்தியையும் செவ்விதின் விளக்குகின்றன.

## கககச. நாகநாத பண்டிதர்

ஏறக்குறைய நூற்றுமுப்பது ஆண்டுகட்கு முன்னே ஈழவள நாட்டிலே சுன்னாகம் என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே தோன்றியவர். தந்தையார் பெயர் அம்பலவாணப் பிள்ளை. வடமொழி தென்மொழி சிங்களம் ஆங்கிலம் என்னும் நான்கு மொழிகளினும் வல்லவர். மானவதரும சாத்திரம், பகவத்கீதை, மேகதூதம், இதோபதேசம், சிசுபாலவதம் முதலிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார். அ. குமாரசாமிப் புலவருக்கு வடமொழி நூல்கள் சிலவற்றைத் தமிழில் விளக்கிக் கூறினார்.

" நீதி நெறிவிளக்கம் நேர்முறை ஆராய்ந்து
போதவுரை செய்யப் புலவோர்க்கு—மேதினியில்
ஆமோ வயிரவ நாதரரு ளாசிரியன்
தாமோ தரற்கன்றித் தான்."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## ககக௫. நாகப்ப செட்டியார்
(19 - நூ.)

பாண்டிவள நாட்டிலே அருப்புக்கோட்டையிலே பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதியிலே வாழ்ந்திருந்தவர். தேவாங்கர் குலத்தைச் சேர்ந்த இவர் இலக்கண இலக்கியங்கள் பலவற்றைக் கற்றுத் தமிழ்ப் புலவராக விளங்கினுர். இவருடைய தொழில் முதலியவைகளைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியவில்லை. அந்நாளில் இருந்த வள்ளிநாயகம் பிள்ளை யென்பவர் பாடிய திருப்பரங்கிரிமாலை என்னும் நூலுக்கு இவர்,

"குணகடல் குமரி குடகம்வேங் கடத்துள்
குலவுசெந் தமிழிலக் கணத்தின்
குழுமுழு தொருங்கா ராய்ந்தசித் தத்தோன்
கொற்றமுற் றியபுரா ணர்கள்
மணமிகும் பசும்பூந் துணர்விரி பொதும்பர்
வாசனை யோசனை கமழ்ந்து
வளமிகுந் திடுஞ்சீர் நல்லைமா நகரில்
வளர்கங்கைக் குலத்தில்வந் துதித்துக்
கணிதமா ராய்ந்த சொக்கலிங் கேந்த்ர
கவிஞன்நல் தவத்தில்வந் துதித்துக்
கவிச்சக்ர வர்த்தி எனும்புகழ் பெறற்குக்
கற்றிடுஞ் சாரதா பீடம்
மணியொளி திகழும் முருகவேள் கழற்கே
வனைந்தனன் பரங்கிரி மாலை
வளமிக மேவு மணந்திசை பரவ
வள்ளிநா யகவரோ தயனே."

என்னும் பாடலாற் சிறப்புப்பாயிரங் கொடுத்துள்ளார்.

## கககசு. நாகப்ப முதலியார் - அ
(19 - நூ.)

சோழவளநாட்டில் திருத்தில்லைக்கு அண்மையிலுள்ள பெருமாத்தூர் என்னும் ஊரில் செங்குந்தர் குலத்தில் தோன்றினுர். இவருடைய தந்தையார் பெயர் அருணுசல முதலியார். இவர் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றறிந்ததோடு, வேதம், உபநிடதம், பதினெண்புராணம், அறுவகைச் சமய நூல்கள்

முதலியவைகளை நன்கு ஓதியுணர்ந்தார். இவருக்கு அறிவாசிரியர் சுப்பராய அடிகள் என்னும் பெரியார் ஆவர். இவருடைய வரலாற்றுக் குறிப்புகள், கீழ்வரும் பாவில் வந்துள்ளன.

"... ... ... ... ... ... ... ... ...
புண்டரீக புரத்தினில் ஓங்கும்
தண்டமிழ் வீர சைவ மரபினில்
வந்தவ தரித்து மறையாறு சாத்திரம்
சந்ததம் பன்னிரு சமய புராணமும்
மூப்பத் திரண்டு மூதறை நூல்களும்
அப்படி இரட்டி அருங்கலைக் கியானமும்
நித்தியங் காட்டுப நிடதமா வாக்கியம்
சிந்தித் தறிவே சிவமெனத் தேர்ந்து
என்றனை வலிய இழுத்தாட் கொண்டோன்
சமயவா திகளைத் தண்டித்து மற்றவர்க்
கமையவே பெருவாழ் வளிக்கும் பெருத்தகை
அன்று மலையோடு அங்கயற் கண்ணியும்
அன்று மலையார் அருளால் அமைத்த
சுப்பரா யப்பேர் சூட்டிய தேசிகன்
தப்பிலாப் பொற்கழல் தாழ்ந்தவன் அடியருள்
... ... ... ... ... ... ... ... ... ... ..."

இவர் அன்பர்கள் சிலருடைய வேண்டுகோளின்படி அறிவு நூல் ஒன்று இயற்றினர். அது அத்வைத சிந்தாமணி எனவும் ஞான சாரம் எனவுங் கூறப்பெறுகிறது.

நூலைப் பாராட்டிப் பாதூர் சண்முகம் பிள்ளை, புவனகிரி சிவசிதம்பரபாகவதர், மதுரைமாவட்டம் வீரை நல்லழகப்ப பிள்ளை, அதிவீரராமன் பட்டணம் காத்தமுத்து உபாத்தியாயர், முத்துப்பேட்டை பொன்னுச்சாமிப் பிள்ளை, பெருமாத்தூர் அருணாசல செட்டியார், சுத்துகுழி குப்புச்சாமிப் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சாத்திரங்கள் படித்தாலும் நதிகள் ஆடித்
தலங்கள் தொறும் கைங்கரியம் புரிந்தா லுஞ்சற்
பாத்திரதா னங்கள் மிகச் செய்தா லுங்கூ
பந்தடந்தோப் புகள்மலைக்கா அமைத்திட் டாலும்
விற்றிருந்தோர் இருநான்கு யோகந் தன்னை
மிகமுயன்று செய்தாலும் மேலா முத்தி
மாத்திரமவா ராதுமற்ற தேதுவந் தாலும்
மைந்தனே மனமடங்கா வகையால்தானே."

என்பது நூலில் ஒரு பாட்டு. இவர் ஆனந்தக்களிப்பு முதலிய பிற நூல்களும் இயற்றியுள்ளார்.

"அந்தப் பரவெளி கண்டால்—யார்க்கும்
அதைவிட வேசுகம் ஆவதொன் றுண்டா
சந்ததம் இன்பம் ஊறும்—இது
சத்தியம் சத்தியம் தேறும்."

என்பது அந்நூலில் ஒரு கண்ணி.

## கககஎ. நாகமுத்துப் பிள்ளை - உ

ஈழுவள நாட்டில் வண்ணைநகரில் இருந்தவர். இவ்விருபதாம் நூற்றாண்டுத் தொடக்க காலத்தினர். நல்ல அறிஞர். க. வைத்தியலிங்க பிள்ளை என்பவர் இயற்றிய ஒருதுறைக் கோவை என்னும் நூலுக்கு இவர்,

"சீரார மிர்த கவிராச னேர்ந்துமுன் செய்தமிழ்க்கீ
டேரா ரொருதுறைக் கோவையி னூறிங் கிசைத்தனன்சொல்
பேரார்நல் தோத்திர மஞ்சரி பேசிப் பெரும்புகழ்செய்
நாரார் வயித்திய லிங்கக் கவிஞ நயவள்ளலே."

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கககஅ. நாகமுத்துப் புலவர்
(19 - நூ.)

"இத்தரையிற் புலவர்களுக் கரசனென
வேவிளங்கும் இனிமை யான
முத்தமிழ்தேர் நாகமுத்துக் கவிராசன்
நல்லன்பு முதிர்ந்த வாக்கால்
அத்தியுரி போர்த்தசிர கிரிவாழும்
பெருமானுக் கருமையாய்ச் செய்
வித்தகஞ்சேர் பதிற்றுப்பத் தந்தாதி
வியப்பதனை விளம்பொ ணாதே."

என்று ஒப்பிலாமணி உபாத்தியாயரால் புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர் திருச்சிராப்பள்ளியில் வாழ்ந்திருந்தார். தாயுமானவர்மீது பதிற்றுப்பத்தந்தாதி பாடியுள்ளார். அவ்வந்தாதிக்கு, சிந்தாத்திரிப் பேட்டை முத்துசாமி நாயகர், திரிசிரபுரம்

முத்தைய உபாத்தியாயர், தரங்கம்பாடி குருவப்ப நாயகர், கற்குடி மதுரைமுத்துப் பிள்ளை, திரிசிரபுரம் ஒப்பிலாமணி உபாத்தியாயர், சரவண உபாத்தியாயர், அட்டாவதானம் சுப்பராயச் செட்டியார், திரிசிரபுரம் நீலகண்டம் பிள்ளை, பாலக்கரை வீரராகவ செட்டியார், திரிசிரபுரம் சோமசுந்தர முதலியார், தென்னூர் இருளாண்டி உபாத்தியாயர், திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை முதலிய அறிஞர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"நிமல னேமறைப் பொருளில் நின்றிடும்
அமல னேசிரா மலையின் ஐயனே
குமர னைத்தருங் கொன்றை சூடிய
விமல எற்குறும் வினையை நீக்கிடே."

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௧௧௧௯. நாகரத்தினம்மாள் - பெங்களூர்

இவ்வம்மையார் பெங்களூரில் வாழ்ந்திருந்தவர். தக்க பெரியார்களிடம் வேதாந்த நூல்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து வேதாந்தக்கலையிற் சிறந்த புலமை பெற்றுப், "பஞ்சீகரண பௌதிக விவேகவிளக்கம்" என்னும் வேதாந்தநூலை இயற்றியுள்ளார். நூல் மேற்கோட் செய்யுட்கள் பலவற்றுடன் உரைநடையில் அமைந்துள்ளது.

"ஊழை யொதுக்கி ஒருசொல்லா னந்த
வாழ்வைப் பெருக்கி மலகன்ம மாயையற
வாழ்விற் குடியேற்றிப் பரமசுகம் எனக்களித்தோன்
வாழி நெடுங்காலம் மாணுக்கர்க் கருள்புரிந்தே"

என்பது அம்மையார் நூலில் இயற்றிய குருவணக்கம். தியாகராச சிவயோகியார் என்பவர் சிறப்புப்பாயிரம் இயற்றியுள்ளார். அதனுடைய இறுதிப்பகுதி,

"மைசூ ராதி பலேயரச நாட்டின்
ராச ராசாக்கள் ராசபூ பதிகள்
ஆதிகள் கூறி வாசமா யுள்ள
நித்திய னந்த சங்கீத வித்யா
சுந்தரி யென்னும் பெயரும் அத்துடன்
தங்க மெடல்களும் தங்கத்தோ டாக்களும்

"தரப்பெற் றிலகும் தகைமைக் கேற்ப
நாமமும் வகித்த சீமதி பெங்களூர்
நாகரத் தினமெனும் நங்கைநல் வள்ளல்
இயற்றும் இந்நூல் இளம்பிறை
ஒப்பநின் றோங்கி உலகில்வா ழியவே."

என்பதாகும். இவ்வம்மையார் இசைபாடுவதிலும் சிறந்த சீர்த்தி அமையப்பெற்றவர்.

## ககஉ௦. நாகராசப் புலவர்
## (16 - நூ.)

இவர் தினகரவெண்பா என்னும் நூலை இயற்றியிருக்கிறார். தினகர பிள்ளை என்னும் பெயருடையவர் ஒருவர் பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தார். அவரைப் பெருமைப் படுத்துவதற்காக இவர் திருக்குறளைப் பின்னிரண்டடியாக வைத்துத் தினகர வெண்பாவைப் பாடினார். தினகரவெண்பாவின் பாட்டுடைத் தலைவர் தினகர பிள்ளையாவார். இவர் திருமழிசைச் சிவபிரானுக்குச் சில தானங்கள் செய்தார். இவருடைய தந்தையாரின் பெயர் வீரைய பிள்ளை. தொண்டைநாட்டுக் கோவை மரபினர்; சீர்கருணீக குலத்தினர்; கல்வி கேள்விகளில் வல்லவர்; சைவ சமயத்தினர்; குன்றை அச்சுதேந்திரனுக்கு அமைச்சனாயிருந்தவர். நாகராசப் புலவர் தினகர வெண்பாவைப் பாடினார் என்பதற்குமேல் வேறு அவரைப் பற்றிய செய்திகள் தெரிந்தில.

## ககஉக. நாகலிங்க அடிகள்
## (1868)

இவர் கோயமுத்தூரில் வாழ்ந்திருந்தவர். திருவாமாத்தூரில் திருக்கோயில் கொண்டுள்ள முத்தாம்பிகைமீது இவர் அந்தாதி பாடியுள்ளார். கட்டளைக் கலித்துறையாலான அவ்வந்தாதி நூறுபாடல்களைக் கொண்டது. கும்பகோணம் சிவகுருநாத ஐயர், அ. பெரியசாமிப் பிள்ளை, சு. வேலாயுதப் பிள்ளை, ச. நாராயணசாமி உபாத்தியாயர், சாமிப்பொன்னுப் பிள்ளை, பொய்கைப் பாக்கம் கரிவரதப் பிள்ளை, முத்துசாமிப் பிள்ளை என்போர் அவ்வந்தாதிக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பொன்னித ழித்தொடைச் செஞ்சடை முக்கட் புராரியிட
மன்னிய கன்னி யுமாதேவி மாதை வளர்முதலே
என்னிரு கண்மணிப் பாவையன் னையன்ப ரேத்தல்செயும்
நன்மொழி போலவென் புன்மொழி கொண்டு நலமருளே."

என்பது அவ்வந்தாதியில் முதற்பாட்டு.

இப்பெரியார் புதுவை வேதபுரீசர் கோயிலில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலையும் பாடியுள்ளார். அந்நூலுக்குச் சிதம்பரம் இராமலிங்கப் பிள்ளை, புதுவை பொன்னு உபாத்தியாயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"அருளார் விழியும் வார்செவியும் அமுத கிரண மதிமுகமும்
வரைநேர் புயமும் நீபமலர் மார்பும் இடையும் இணையடியும்
மருளா ரனியேன் கண்டுதொழ மடவார் இருவ ரொடுமயிலில்
வருவாய் புதுவை வளருமெங்கள் வாழ்வே ஞான முழுமுதலே."

என்பது நூலில் இரண்டாவது பாட்டு.

## ககஉஉ. நாகலிங்க ஐயர்
## (20 - நூ.)

துறையூர் பெரியமடம் சிவப்பிரகாச சுவாமிகள் ஆதினத்தில் ஆதினப் புலவராக இருந்தவர். இலக்கண இலக்கியப் புலமை நன்கு அமையப்பெற்றவர். நாற்பாவும் மூன்றின மும்விரைந்து பாடும் ஆற்றலும் பெற்றவர். அறிவொழுக்கத்திற் சிறந்தவர்.

"அப்பெருஞ்சீர் நாடெனுமோர் அரிவையருக்
கணிகலமாய் அமைந்தெஞ் ஞான்றும்
விப்பிரரா தியர்பரவும் திப்பியதா
ழம்பாடி வியன்மூ தூரில்
செப்புறுசீர்க்கருணீகர் குலமணியாய்
அவதரித்த திறத்துக் கேற்பத்
துப்புறுநல் அறிவுநிறை பொறையுடைமை
முதலியன துணையாக் கொண்டு"

என்பது இவர் கருணீகர் புராணம் என்னும் நூலுக்கு இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்றாகும்.

## கக௨௩. நாகலிங்க தேசிகர்
## (கி. பி. 1850)

இவர் கோயிலூர் முத்துராமலிங்க தேசிகரிடம் வேதாந்த நூல்களைக் கற்றுத் தேறியவர். சிவன் முத்திப் பிரகரணம் என்னும்நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. நூல் 684 பாடல்களைக் கொண்டது.

**"கனவுறு விடயம் யாவும்**
**கனவுற்றோன் விடவே றன்றோ?**
**நனவுறு விடயம் யாவும்**
**நமைவிட அவைபோல் இல்லை**
**வினவிடில் சகங்கள் நாமே**
**மேவிய திருக்காம் நாமும்**
**பினமறு பிரமம் என்னும்**
**பிரலாப திட்டி யாலும்."**

என்பது நூலில் ஒரு பாட்டு.

இவர் 'வாசுதேவர் மனனம்' என்னுஞ் செய்யுள்நூலும் இயற்றியுள்ளார். அந்நூல் இருபத்துமூன்று அதிகாரங்களையும் அறுநூற்றுப் பதினொரு செய்யுட்களையுங் கொண்டது.

**"சித்தசுத் திகள் வாராது செனனுறி துன்பம் போகா(து)**
**அத்தன்மை யோர்ந்துசுாமி யாதியாங் கருமம் விட்டுச்**
**சுத்தமாங் கருமந் தன்னைச் சுவாமிக்கற் பணமாச் செய்து**
**பத்தியாய் வருவ னத்தால் பரபத்தி யுண்டாமப்போ."**

என்பது நூலின் பாடல்களில் ஒன்று.

## கக௨௪. நாகலிங்க பிள்ளை - சி

நாகலிங்கபிள்ளை என்பவர் தமிழகத்தின் ஓர் பகுதியாகிய ஈழவளநாட்டில் யாழ்ப்பாணத்தில் உள்ள வதிரி என்னும் ஊரினர். சிறந்த செந்தமிழ்ப் புலவர். திருத்தில்லைதைப் பதிப்புராணம் என்னும் நூலை இவர் பத்துப் படலங்களும் நானூற்று எண்பத்தாறு செய்யுட்களும் அமையுமாறு பாடியுள்ளார். சின்னத்தம்பி உபாத்தியாயர் என்பவர் அந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பண்புகல் மூவர் பாடல்
பயின்றன சோழ நாட்டின்
மண்புகழ் அரிசி லாற்றங்
கரைமிசை மன்னி யோங்கும்
விண்புகழ் விமான மூதூர்க்
கோசலை யரையிற் கீழ்பால்
எண்புகழ் அம்பர் மேல்பால்
இருக்குமாந் தில்லை மூதூர்."

என்பது சதுர்முகப் படலத்தில் ஒரு பாட்டு.

## ககஉரு. நாகலிங்க வாத்தியார்
## (20 - நூ.)

கொங்குவள நாட்டில் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த விலாரிப் பாளையத்தில் வாழ்ந்திருந்தார். இலிங்காயத் வகுப்பினர். புலமை பெற்றிருந்த இவர் திண்ணைப் பள்ளிக்கூடம் வைத்துக்கொண்டிருந்ததோடு பலருக்கு இராமாயணம் பாரதம் முதலிய நூல்களைப் பாடஞ்சொல்லிக்கொண்டு மிருந்தார். செய்யுள் நன்றாகப் பாடுந் திறம்பெற்றிருந்தார்.

ஒருசமயம் செல்வர்வீடு ஒன்றில் திருமணம் நடைபெற்றது. இவர் திருமணப் பரிசுபெறுவதற்காக அவ்வீட்டிற்குச் சென்றார். காவலர்கள் இவரை உள்ளேவிடாமல் தடுத்து நிறுத்திவிட்டனர். உடனே இவர்,

"காமட்டிக னெலாங் கூடிக்
கொட்டாரங் கட்டிமேலே கட்டுங்கட்டி
நேமட்டி மத்தாளங் கொட்டி
திண்ணயமாய் நலுகுபெட்டி போட்டுக்கட்டும்
கோமட்டிக் கல்யாணமென்றே வந்தேன்
குற் கிட்டி மற் கட்டி
நீமட்டி நாமட்டி எனப்பிடித்து
நெட்டினனே குட்டினனே."

என்னும் பாட்டை எழுதித் திருமணத் தலைவருக்கு அனுப்பினார். அவர் உடனே இவரை அழைத்துச் செய்யவேண்டிய சிறப்புகளைச் செய்து தக்க நன்கொடை வழங்கி அனுப்பினார். இவர் எண்பது ஆண்டுகள்வரை வாழ்ந்திருந்து இருபது ஆண்டுகட்கு முன்பு காலமானார்.

## ௧௧௨௬. நாகிசெட்டியார் - செ

சேலத்தைச் சேர்ந்த செவ்வாய்ப் பேட்டையில் வீரசைவ சம்யத்தில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் சென்னவசவப்ப செட்டியார். நாகி செட்டியார் ஆங்கிலம், தமிழ் வடமொழி தெலுங்கு முதலியவைகளை நன்குகற்றுத் தேறியவர். வீரசைவ நூல்களிலே மிகுந்த பயிற்சியுடையவர். சென்னை சென்ட்ரல் சிறையில் உதவிச் செயிலராக அலுவல் புரிந்திருந் தவர். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட சித்தாந்த சிகாமணி என்னும் நூலுக்கு இவர் சிறந்த உரை யெழுதியுள்ளார். அவ்வுரையைப் பாராட்டி ஞானி யாரடிகள், உ.வே. சாமிநாதையர், மருவூர் கணேச சாத்திரியார், திருமழிசை சிவப்பிரகாச அடிகள், வீரசைவ கனகசபைக் கவி ராயர், சென்னப்ப நாய்க்கன் பாளையம் துரைசங்க பச்சகந்தஸ் வாமியார், காஞ்சிபுரம் இராமானந்த யோகிகள், திருமயிலை வி. சுந்தர முதலியார், அட்டாவதானம் பூவை கலியாண. சுந்தர முதலியார், ஈக்காடு இரத்தின வேலுமுதலியார், கோ. வடிவேலுச் செட்டியார், கா. நமச்சிவாய முதலியார் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

*சீர்சால் சேலஞ் செவ்வாய்ப் பேட்டை*
*பேர்சே வணுராத் ரியகுரு பீடம்*
*சென்ன வசவப்ப சிரேட்டிசெய் தவத்தின்*
*நன்னய மாவரு நாகி சிரேட்டி யென்*
*எழில்பெறு புலவன் இணக்கமி லாத*
*தொழின்மனம் வையாத் தூயன் அந்நூற்கு*
*முன்னூல் பலவும் முரணறக் கண்டு*
*பன்னரு நல்லுரை பளகற வரைந்து*
*கற்றவர் களிக்கக் கலைமகள் உவக்க*
*மற்றவர் தமக்கிது வரய்ப்பெனக் கொள்ள*
*வீரசை வத்தின் மேம்பா டுணர்த்திப்*
*பேரணிச் சீர்த்தியாற் பிறங்குற் றனனே.''*

என்பது கோ. வடிவேலுச் செட்டியாரால், இயற்றப்பட்ட சிறப்புப்பாயிரத்தின் பிற்பகுதி. இவர் இந்நூற்றுண்டின் முற் பகுதியில் வாழ்ந்திருந்தவரே.

## ககஉஎ. நாகூர் முத்துப்புலவர்

இவர் நாகூரிலே பிறந்து வளர்ந்தவர். எட்டையபுரம் அரண்மனைப் புலவராக இருந்தவர். கடிகைமுத்துப் புலவரும் இவரும் ஒருகாலத்தினர் என்பர். இவருடைய பெயரால் பல தனிப்பாடல்கள் வழங்குகின்றன. இவர் வெங்கடேச எட்டப் பன்மேற் பாடிய பாடல்களில் ஒன்று,

"அடிதங்கச்சி யிவளென்ன மோகெரி
யாதுசிந்தை மயருகி ருளிந்தா
பிடிதங்கச்சி விகையி லிருந்துநம்
பின்னைதான் கிளிப் பிள்ளையல் லோமயல்
கொடிதங்கச்சிப் பரிபோர் சென்றேவரக்
கூறென்றுளிகல் கொண்டோ ரமர்கண்டு
துடிதங்கச்சி மையப்புயங் கொட்டுமுத்
துங்கனேவெங்க டேசுரெட் டேந்த்ரனே."

என்பது.

## ககஉஅ. நாகேச ஐயர்

நாகேசஐயர் என்பவர் தென்னகத்திற் சிறந்ததெனக்கூறும் ஈழவள நாட்டிலே வட்டுக்கோட்டையிலே மறையவர் குலத் திலே ஏறக்குறைய நூற்றைம்பது யாண்டுகட்கு முன்னே பிறந்தவர். தந்தையார் பெயர் இராமசாமி ஐயர். இலக்கண இலக்கியங்களை நன்குகற்றுத் தேறியவர். இவர் பல தனிப் பாடல்களும் நாடக நூல்களும் "அமுதநுணுக்கம்" என்னும் விட மருத்துவநூலும், முருகக்கடவுள் பேரில், "நாணிக்கண் புதைத் தல்" என்னுந் துறையில் (ஒருதுறைக்கோவை) நூறுசெய் யுளும் இயற்றியுள்ளார். இவர் நாற்பத்தெட்டாவது அகவையில் சௌற தன்மதியாண்டிற் காலமானார்.

"பொன்பூத்த நாரணன் வேதன் முதலபுத் தேளிரெலாம்
தென்பூத்த வேதமுறையால் அருச்சனை செய்தமரும்
மின்பூத்த வேலன் அடைக்கலக் கோவை விளம்புதற்குக்
கொன்பூத்த குஞ்சரச் செஞ்சரண் தெஞ்சினிற் கொள்ளுவனே."

என்பது இவர் இயற்றிய கோவையில் ஒரு பாட்டு.

## ௧௧௨௯. நாகை மவுனசாமி

இவர் ஏறக்குறைய எண்பதாண்டுகட்குமுன் தஞ்சைமா வட்டம் நாகையில் வாழ்ந்திருந்தார். "அருவாசதேவ ஆரம்" என்னும் செய்யுள் நூல் ஒன்று பாடியுள்ளார். நூலில் வேதாந்தக் கருத்துக்கள் செறிந்துள்ளன. இவர் அந்நூலுக்கு எழுதிய முக வுரையில், "எனக்கு இப்போது ஏறக்குறைய 45 வயதாகிறது. என் பாட்டி என்னைப் பள்ளிக்கு வைத்த காலத்தில் நான் பிள்ளையார் கோயிலிற் போய்த் தெரிசனம் செய்துகொண்டே பள்ளிக் கூடத்திற்குப் போவதாயிருந்தேன். படிக்கும்போது என் வகுப்பில் எல்லாருக்கும் நான் அடியவனாகக் கடைசியில் நிற்பதே யன்றி முதலிற் போகக்கூடியதான படிப்புக்கள் ஏறுபடவில்லை" என்று எழுதுகிறார். பிற்காலத்தில் தெய்வத்திருவருளால் கல்வியறிவு நன்கு அமையப் பெற்றார்.

"சிற்றறிவும் சிறுதொழிலும் சேர்ந்தா ரெனச்சிலபேர்
கற்றறிவு பேர்காட்டிக் கணக்குரைத்தே இகழ்ச்சி செய்வார்
முற்றறிவும் முழுத்தொழிலும் மூன்னவனே யுன்னதன்றோ
எற்றையறிந் தாரையா இலக்கணங்கள் கற்றவரே.

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௧௩௦. நாதகுத்தனார்

இவர் பௌத்த சமயத்தினர். மறைந்துபோனதாகக் கருதப் படுவதும் ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றானதுமாகிய குண்டல கேசி என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றது. எனச் சில புலவர் கூறுகின்றனர்.

"எனதெனச் சிந்தித்த லான்மற்
றிவ்வுடம் பின்பத்துக் காமேல்
தினைப்பெய்த புன்கத்தைப் போலச்
சிறியவு மூத்தவு மாகி
நுனிய புழுக்குலந் தம்மால்
நுகரவும் வாழவும் பட்ட
இனைய உடம்பினைப் பாவி
யானென தென்னலு மாமோ,"

என்பது மறையாத பாடல்களில் ஒன்று.

## ௧௧௩௧. நாதமுனி நாயுடு - நா

இவர் தொண்டைநாட்டில் சென்னைமாநகரில் இருந்தவர். மகாவித்துவான் பென்னலூர் நாராயணசாமி நாயுடு என்பவரின் புதல்வராகத் தோன்றியவர். இவர் தந்தையாரிடமே கல்வி கற்றுச் சிறந்த புலவராக விளங்கினர். இவர் சிறியவும் பெரியவு மான சில நூல்கள் இயற்றியிருக்கிறார். மோசூர் முனிசாமி முதலியார் என்பவருடைய நூலுக்கு இவர்,

"பண்டைநாட்டுப் புற்றதமிழ் மணங்கமழும்
நாவலர்களாற் பரிசுபெற்ற
தொண்டைநாட்டுத் திருத்தலத்தோத் திரக்கோவை
அமிழ்தமெனச் சொற்றான் மாதர்
கொண்டைநாட்டுக் கடிமலரின் அறுபதங்கள்
முரன்மோசூர்க் கோமான் சீர்த்த
தொண்டைநாட்டுப் புலமையுறு முனிசாமி
எனும்பெயர்கொள் தூயன் மன்றோ."

"பனியாம் இருவினைக்குப் பானுவென மோசூர்
முனிசாமி வள்ளல் மொழிந்தான்—வனசக்
குருத்தலத்தின் கூர்துதியால் கூறுபடுந் தொண்டைத்
திருத்தலத்தின் தோத்திரநற் சீர்."

என்னும் பாடல்களால் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## ௧௧௩௨. நாதமுனி முதலியார் - மயிலை
(20 - நா.)

சென்னை மயிலையில் இருந்தவர். மயிலையில் இருந்த மாபெரும் புலவராகிய தணிகாசல முதலியார் என்பவரிடந் தமிழ் கற்றுத் தேறினர். புராணச் சொற்பொழிவுகள் செய்வதில் இவர் சிறந்து விளங்கியபடியால் 'புராண ரத்நாகரம்' என்னுஞ் சிறப்புச் சொல் இவருடைய பெயருக்கு முன்னால் இயைந்து நின்றது. இவர் திருமயிலைத் தலபுராணத்தைப் பதினொரு படலங் களும் சில செய்யுட்களும் அமையப் பாடியுள்ளார். புராணத் திற்கு இராசகோபால பிள்ளை, கோ. வடிவேலுச் செட்டியார், ஆரூர் சிங்காரவேலு முதலியார், கி. குப்புச்சாமி முதலியார், து. க. புழலை. திருநாவுக்கரசு முதலியார், வல்வி. ப. தெய்வநாயக

முதலியார், தி. க. கிருபாசங்கரராசா, மோசூர் சண்முக முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள்.

"உலகமாந் தைய லாளும்
ஒருபெருந் தவமி யற்றித்
தலமதாந் தொண்டை நாட்டைத்
தனக்கொரு மகவாய்ப் பெற்ருள்
அலகிலாப் புகழி னம்மா
தருந்தவம் நெடுநாட் செய்து
திலகமாய் மயிலே தன்னைத்
திருமுகத் தணியாய்ப் பெற்ருள்."

என்பது நகரப்படலத்தில் ஒரு பாட்டு.

## ககூ௯. நாயனுகண்ணு முதலியார் - வி. செ.

"தரமெனும் விட்டா வரமெனு நகரினன்
கங்கையங் குலத்தில் திங்களின் விளக்கெனக்
குவலயந் தோன்றிக் குவளையந் தொடையணி
பொன்வரை யிரண்டெடன் றுன்னிடு தோளினன்
இரப்புரை யிலேயெனப் புரப்புரை செய்து
திருந்துமா ணிக்கவேல் அருந்தவப் பயனுல்
வலம்புரி முகத்தில் குலம்புரி முத்தெனுத்
தந்தையென் ருேற்ருன் என்றசொல் போற்றி
ஆன்றவர் மகிழத் தோன்றிய புகழோன்
தெய்வநன் னெறியில் சைவநன் னெறியும்
கற்றவர்ப் போற்றலும் கற்றுணர்ந் தடங்கலும்
பொறையுங் கொடையும் நிறையும் ஆண்மையும்
கலனுக் கொண்டு கவினும்
நாயனுக் கண்ணெனு நற்பெய ரோனே."

என்று புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர், "திருவொற்றியூர் மான்மியத் தெளிவு" "தியாகேசர் தோத்திரப்பா" என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

"சீர்கொண்ட மாமணியே தில்லைநக ருடையானே
தார்கொண்ட குழலுமையாள் தனிப்பாகம் வைத்தவனே
சூர்கொண்ட வினையகற்றித் தொண்டனெனைக் காத்தருள்வாய்
பார்கொண்ட அடியரெலாம் பரவுமொற்றிப் பெருமானே"

என்பது தியாகேசர் தோத்திரப்பாவில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டி, வி. கோ. சூரியநாராயண சாத்திரியார், திருமயிலை

வித்துவான் சண்முகம் பிள்ளை, ஈக்காடு இரத்தினவேலு முதலியார், ஏ. எஸ். செகராவு முதலியார், இராமலிங்கத்தம்பிரான் முதலிய பலர் சாற்றுக்கவி வழங்கியுள்ளனர்.

## ௧௧௯௪. நாரணன் (நன்னிலம்)

இவர் நன்னிலம் நாரணன் என்று வழங்கப்படுவதால் நன்னிலம் என்னும் ஊரில் தோன்றியவராக இருக்கலாம். இவர் சுபத்திரை கலியாணம் என்னும் நூலை, அகவல், விருத்தம், சிந்து முதலியன விரவ நாடகம் போற் செய்திருக்கிறார்.

“சீதர மூர்த்தி வாசு
    தேவநா ராய ணர்க்குச்
சோதரி யான ஞான
    சுபத்திரை மணத்தைப் பாட
மாதவன் நன்னி லத்தில்
    மதுவன நாதர் பெற்ற
காதல னான செல்வக்
    கணபதி காப்புத் தானே.”

என்பது காப்புச் செய்யுளாகும்.

## ௧௧௯௫. நாராயணகவி

இவர் தஞ்சை நகரை ஆட்சி செய்த சிவாசி மன்னன் காலத்தில் இருந்தவர். சிவாசியின் விருப்பத்திற்கிணங்கிப் பாண்டியன் ஒருவனுடைய வரலாற்றைப், “பாண்டி கேளிவிலாச நாடகம்” என்னும் பெயருடன் இயற்றியிருக்கிறார்.

“நீர்மேவு வையைநதி வளம்பெருகிச்
    செந்நெல்மிக நிறைந்தெந் நாளும்
சீர்மேவு பாண்டியதே சந்தனிலே
    மதுரையிற்செங் கோல்நடாத்தித்
தார்மேவு பாண்டியன் றன்லீலாவி
    லாசமதைச் சாற்று தற்கு
ஏர்மேயிச் சுகம்பெருகச் சித்திவிநா
    யகன்பதத்தை இறைஞ்சு வோமே.”

என்பது நாடகத்தின் காப்பு.

## ககூகூ. நாராயணக் கவிராயர்
(20 - நூ.)

பாண்டிவளநாட்டில் திருநெல்வேலியில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் கள்ளப்பிரான் கவிராயர். நாராயணக் கவிராயர் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைப் பாக்களையும் நன்கு பாடுந்திறம் பெற்றிருந்தபடியால் 'நாற்பாப் புலி' என்று சிறப்புப் பெயர் பெற்றிருந்தார். "மகாவித்துவ சிரோன்மணி" என்னுஞ் சிறப்புப் பெயரும் இவருக்கு அமைந் திருந்தது.

"ஆர்த்தியோடி தன்பினெல்லை அப்பவே வமுதுந் தேனும்
சேர்த்தெனத் திகழக் காஞ்சிச் சிவசாமி தேசி கன்மேல்
தோத்திர மாலை யொன்று சொற்றனன் அதுநன் காய்வோர்
நாத்திர மெய்தி யின்னுன் நாத்திறம் என்னென் பாரால்."

என்பது இவர் ஒரு நூலுக்குப் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. இவரிடம் மாணவர் பலர் கல்விகற்றுச் சிறந்த தமிழ்ப்புலவராயினர்.

## ககூஎ. நாராயணசாத்திரி - டி. எஸ்.
(20 - நூ.)

இவர் சென்னைமா நகரத்தினர். பீ. ஏ. பி. எல் வரை கல்வி கற்ற இவர் சிறந்த தமிழ்ப்புலமையும் செய்யுள் பாடுந்திறமும் பெற்றிருந்தார். இவர் போச சரித்திர நாடகம் முதலிய தமிழ் நூல்களையும், ஆங்கிலம், வடமொழி முதலிய பிறமொழி நாடகங் களையும் இயற்றியுள்ளார்.

"சூரன் கருப்பன் கருப்பண்ணன்
சொக்கன் நொண்டி நல்லண்ணன்
தூற்றி தூண்டி சாமுண்டி
தோட்டி சின்னுன் காட்டேரி
மாரி முனியன் மன்னுரன்
மாடன் சங்கிலி பாவாடை
மயான வாசி வழிபறித்தான்
மலையன் பக்கிரி மின்னடியான்

சேரியின் னூரன் நம்பிச்சி
 சிறுகாட் டுடையான் பனையரத்தான்
செல்லன் இருளன் பெத்தண்ணன்
 செல்லிச் சடையன் சத்தகந்தி
வீரன் யோகினி யேகாத்தான்
 வெறியன் பித்தன் படையாச்சி
வெள்ளி முருகன் வெட்டுண்ணி
 வீரி பிடாரி கங்கம்மா."

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௯௰. நாராயணசாமி (௧)

இவர் கடிகை காவலன் நாராயணசாமி என்று வழங்கப் பெற்றார். கடிகை என்ற நகர் எது என்று அறிவதற்கு வழியின்று. அந்நகரிற் சிறப்புற வாழ்ந்தவர் இவர் என்பதைக் "காரார் பொழிற் கடிகைக்கிறை" என்பது காட்டுகிறது. இவர் வட மொழி தென்மொழிப் புலமையோடு கணித நூற் புலமையும் அமையப் பெற்றவர். இவருடைய தந்தையார் பெயர் அமித சாகரர் என்பர். இவர் 'விதானமாலை' என்னுங்காலக் கணித நூலை இயற்றியிருக்கிறார். அந்நூல் இருபத்தைந்து படலங்களையும் ஐந்நூற்றுமுப்பத்தைந்து கலித்துறைகளையுங் கொண்டது.

"பாரார் புகழும் பரிசார் விதானமா லைப்பனுவல்
பேரா வதானம் பிழையா துரைத்தனன் பேருலகில்
காரார் பொழிற்கடி கைக்கிறை பாற்கட லான்பயந்த
நாரா யணன்பொன்னி நாடன் மறைதெரி நாவலனே."

என்பது நூலின் சிறப்புப்பாயிரம்.

## ௧௧௯௧. நாராயணசாமி அய்யர்
## (19 - நூ.)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கும்பகோணத்தில் இருந்தவர். ஆங்கிலத்திலும் தமிழ்மொழியிலும் வல்லவர். கும்பகோணம் கல்லூரியில் ஆசிரியராகத் தொழில் புரிந்தார். செகப்பிரியர் எழுதிய நாடகம் ஒன்றை இவர், "நடுவேனிற் கனவு" என்னும் பெயரோடு தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

## ௧௧௪௦. நாராயணசாமி அய்யர் - அ.
(20 - நூ.)

மதுரைமாவட்டத்தில் பிள்ளையார்பட்டி என வழங்கும் கணேச மாநகரத்தில் வாழ்ந்திருந்த இவர் தென் மொழியிலும் வட மொழியிலும் வல்லவர். "சங்கிரக இராமாயணம்" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார் சண்முகாநந்த அடிகள் என்பவர் இயற்றிய "திருமுருகன் அருட்பாமாலை" என்னும் நூலுக்கு இவர்,

"பூதலமெ லாம்புகழும் பொன்னம்ப
லத்தனையே போற்றுஞ் செல்வ
நாதனடி மறவாதான் சண்முகா
நந்தனருள் நாமம் பெற்றோன்
ஆதவனூர் மருதமலைக் குகனடியார்
சுவைதெனவே அருந்தும் வண்ணம்
ஓதரிய செந்தமிழால் முருகனருட்
பாமாலை உதவி னானால்."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௧௧௪௧ நாராயணசாமிக் கவிராசர்
(1893)

இவர் சாமிமலையில் சிறந்த புலவராக விளங்கியிருந்தவர். திருவேரகம் என்னும் சாமிமலை முருகக்கடவுள்மீது "முருகக் கடவுள் அந்தாதி முருகக்கடவுள் கலம்பகம்" முதலியன இயற்றியுள்ளார்.

"கன்னல் கமுகெழி லந்தலங் காட்டும்
கரைசூழ் வாவியின் விரைந்து சென்று
மன்னி ராடி மின்னிடை துவளத்
தங்கள் மனைதனில் இங்கித முடன்செல்
பத்மினிப் பெண்கள் பான்மையின் விளங்கு
திருப்பனந் தாளில் விருப்புடன் வந்த
வாமி நாதனை வரன்முறை வணங்கிய
சாமி நாத சாமிதான் சரணே."

என்பது காசிமடத் தலைவராக விருந்த சாமிநாத சுவாமிகள்மீது இவர் இயற்றிய பாடல்களில் ஒன்று.

## ககசஉ. நாராயணசாமி நாயகர் - வெ

(19 - நூ.)

இவர் சிங்கப்பூர் வெள்ளையப்பு நாயகர் என்பவருடைய அருமைப் புதல்வராகத் தோன்றினார். நாகூரில் இருந்த க. முகமதுப் புலவர் என்பவரை ஆசிரியராகக்கொண்டு இலக்கண இலக்கியங்கள் கற்றுப் புலவரானார். செய்யுள் பாடுந்திறம் நன்கு அமையப்பெற்ற இவர் அபிராமியம்மன் பதிகம், இசைப்பாடல்கள், ஒயிடப் பாடல்கள் முதலியன பாடியிருக்கிறார்.

"தேவாமுவா தேகமினாதவா
சீவசீவகா சிதசபாந்த
ஆவல்தெந்திறை ஆவைராபரா
பாலநீமிடி பாதுகா வையனே."

என்பது இவருடைய இரட்டைநாகபந்தக் கலிவிருத்தப்பாட்டு. இவருடைய பாடல்களைப் பாராட்டிப் பெங்களூர் ஐயாச்சாமி முதலியார், யாழ்ப்பாணம் கண்டி மு. சண்முகம் பிள்ளை, நாகூர் க. முகமதுப் புலவர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கின்றனர். மற்றும் இவரால் பரப்பிரம பஞ்சரத்தினமாலை, குமரேசர், சப்தமாலை முதலிய நூல்களும் இயற்றப் பெற்றுள்ளன. இவர் மூக்குத்தூளைக் குறித்து,

நசைக்குக் கேடு ஒருதலைப்பூப் பூத்தாலே
ஊசிக்குக் கேடு நுனிபொடிந்தால்—நாசிக்குக்
கேடாகும் ஐயையோ கெட்டதூள் அஃதைநீ
நாடாதே சொன்னேன் நலம்."

என்று பாடியுள்ளார். இன்னும் இவர், தம் ஆசிரியராகிய க. முகமதுப் புலவர்மீது குரு வணக்கமாகப் பாடிய செய்யுளை அடியிற் காண்க.

"இலக்கண இலக்கிய வாரியின் வீறுண்
டுறைத்திடுங் கார மேகம்
இருநாழி வேளையில் நாகபந் தக்கவி
இசைக்கவே வல்ல தீரன்
துலக்கமாய்ச் சௌமிய சாகர நூற்குரை
சொல்லவே கற்ற தீரன்
சுகிர்தமிகு முகமது நபிபண் பிசைத்திடும்
சுத்தகவிப் பிரசங்கனும்

விளக்கமாய் முகம்மது கவுதெனும் காப்பியம்
விடங்கமாய்ச் சொன்ன சீலன்
வேதாந்த சித்தாந்த நூல்களும் மிக்கவே
விளங்கிய ஞான சொரூபன்
கலக்கமாய் என்னெஞ்சம் உழல்கின்ற நாளிலே
காரிகை தொன்னூல் முதல்
கனவவிழ்தம் ஈந்தெனைக் காத்திட்ட முகமதின்
காலையாம் துதிசெய் வோமே.''

## ௧௧௪௬. நாராயணசாமி நாயகர் (1867)

இவர் சோழவள நாட்டிலே தஞ்சைமாவட்டத்திலே உள்ள முத்தாம்பாள்புரம் என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்று இலக்கணப் பாடசாலை ஒன்று அமைத்து அதில் பலருக்கும் இலக்கண இலக்கியங்கள் போதித்துக் கொண்டிருந்தார். அந்நாளிலே தஞ்சைமாநகரத்தில் தாசில்தாராக இருந்த வீராச்சாமி நாயகர் என்பவர் வடமொழியில் உள்ள திருக்கண்ணபுர மான்மியத்தைத் தமிழிலே புராணமாகப் பாடி முடிக்க வேண்டும் என்று இவரைக் கேட்டுக்கொண்டார். இவர் தக்கார்களைக் கொண்டு தமிழிலே மொழிபெயர்க்கச் செய்து இருபது படலங்களும் ௯0௩0 செய்யுட்களும் அமையுமாறு, ''திருக்கண்ணபுரப் புராணம்'' என்னும் பெயருடன் புராணமாகப் பாடி முடித்தார்.

'கல்வியாங் கடலுண் டருத்தவப் பைங்கூழ்
களித்திடப் புராணமா மழையைப்
பல்வகை யாகப் பொழிந்திடு முகிலே
பலனெலாம் அடையயாங் கேட்ட
வல்லவத் தலத்தின் மகிமையைத் தொடுத்தே
வசனித்தீர் இனிவிரி வாகச்
சொல்லிட வேண்டும் எனப்புகழ்ந் ததனைத்
தொடர்ந்தினம் வினவுவ ரன்றே.''

என்பது கருட அத்தியாயத்தில் ஒரு பாட்டு. நூலினைப் பாராட்டித், திருத்தணிகை விசாகப்பெருமாள் ஐயர், திரிசிரபுரம் - வி. கோவிந்த பிள்ளை, தஞ்சாவூர் தாசில்தார் வீராசாமி நாயகர், உறையூர் முத்துவீர உபாத்தியாயர், தஞ்சை அண்ணாப் பிள்ளை

வேங்கடதாசர், சின்னத்தம்பிப் பிள்ளை, தஞ்சை - கோ. இராம கிருட்டிண பிள்ளை, மன்னார் கோயில்-இராமச்சந்திரராவ், அரங்கசாமி நாயகர், முத்தாம்பாள்புரம் சத்திரங் கல்விச்சாலை வீராச்சாமி நாயகர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

பரிதியப்பர் ஸ்தலபுராணம் என்னும் நூலும் இவரால் இயற்றப்பெற்றிருக்கின்றது. அந்நூல் ஒன்பது சருக்கங்களையும் ஐந்நூற்றறுபத்து மூன்று பாடல்களையுங் கொண்டு விளங்குகின்றது. இந்நூல் பரிதிநியமம் என்னுந் திருவூரைப்பற்றிய வரலாறு கூறும் புராணம் போலும்;

"திருப்பரிதி பூசித்திவ் வுலகமெலாஞ்
சூழ்வரவே திறமை பூணுந்
திருப்பரிதித் தலமகிமை செந்தமிழாக்
உரைத்திடவே செல்வம் நல்குந்
திருப்பருதிய கருமுதும் வரக்கடைந்தோன்
மருகனெனுஞ் செவ்வேள் என்றன்
திருப்பருதி மிராமரறக் கருணையுடன்
உளத்திருந்தே தெளிவித் தானே"

என்பது ஆதிச் சருக்கத்தில் முருகக்கடவுள் வணக்கம். இந்நூலுக்கு மதுரை முத்து உபாத்தியாயர் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அவர் தம் சிறப்புப்பாயிரத்தில்;

"கம்பரா தியமுற் புலவோர புராண
காவியஞ் சொலவேலோர் என்ன
இம்பரார் மொழிவ தெவன் சொலிப் புராணம்
இயற்றுவன் என்றியாரு மதிப்ப
வம்புலாம் பொழில்சூழ் முத்தாம்பா புரத்து
வசித்தநா ராயண சாமி
அம்பெரும் புலவன் ஆக்கினன் புகழ்வ
தாரையோ அறிகிலேன் அம்மா."

## ககசச. நாராயணசாமி நாயகர் - எ (1866)

இவர் அணைக்கட்டு என்னும் ஊரில் இருந்த எல்லப்ப நாயகர் என்பவருடைய அருமைப் புதல்வர். இவர் திருக்கழுக்குன்ற அந்தாதி ஒன்று பாடியுள்ளார். அவ்வந்தாதி புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் அவர்களால் ஆராயப்பெற்று

1866 ஆம் ஆண்டில் வெளியாகியுள்ளது. நூலைப் பாராட்டிப் புதுக்கோட்டைச் சமத்தான வித்துவான் பனையஞ்சேரி முருகேச கவிராயர், புதுப்பேட்டை அப்பாசாமி நாயகர், கந்தமங்கலம் - பூ. சுப்பராய நாயகர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"மாதரைக் கோர்முடி யாங்கழுக் குன்றினில் வாழரன்றாள்
மீதரைக் காற்கணைப் போதேனு மெண்மலர் சூட்டிலை
நீதரைக் காலமெ லாமடுத் தேயுழன் றாய்தினது
கோதரைக் காதிருந் தானலை மேதுசொல் கோண்மனமே."

என்பது அந்தாதியில் முதற்பாட்டு. இவ்வந்தாதி நூல் ஏனைய அந்தாதிகளிற் போன்றே சொன்னயம் பொருணயங்களாற் சிறப் புற்றுத் திகழ்கின்றது.

## ககசரு. நாராயணசாமி நாயுடு - பா.
## (கி. பி. 20 - நூ.)

பாண்டிவள நாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்திலே தச்சநல்லூரில் இவர் பிறந்தார். தந்தையார் பெயர் பாலு நாயுடு. கல்விகற்கத் தொடங்கிய நாராயணசாமி நாயுடு கல்வியை நன்கு கற்றுத் தேறிப் போலீசு இன்சுப்பெக்டராகத் தொழில் பார்க்கத் தொடங்கினார். அனைவரும் புகழுமாறு அவ்வலுவலைத் திறமையாகப் பார்த்தார். ஒழிந்த நேரங்களில் இலக்கண இலக்கியங்களைத் தக்க அறிஞர்களிடத்திலே இடைவிடாது கற்றார். இதனால் இவருக்குச் செந்தமிழ்ப்புலமை பெருகியது. செந்தமிழ்ப் பாக்களைத் தங்குதடையின்றிப் பாடும் திறமை பெற்றார். முருகக் கடவுள்மீது பாமாலைகள் பல பாடினார். சந்தப்பாடல் முதலிய எந்தப் பாடல்களும் இவருக்கு எளிதாக அமைந்தன.

இவருடைய கல்வித் திறமையை உணர்ந்து பாராட்டிய சிந்துபூந்துறைத் தட்சணாமூர்த்தி மடத்தலைவர் வேதநாயக அடிகள் என்பவர் கிட்டைபுரி என இக்காலத்தில் வழங்கிவரும் நெட்டூருக்குப் புராணம் இயற்றுமாறு இவரைக் கேட்டுக்கொண்டார். இவர் அவர் விரும்பியவாறே நெட்டூர்ப் புராணத்தை நானூற்று ஐம்பத்து நான்கு பாடல்களாகப் பாடினார். இடையே சந்தப் பாடல்களையும் அமைத்துள்ளார்.

" இப்புவியிற் கவுமார சமயத் தோர்கள்
எச்சமயத் தாரோரும் இகலார் மற்றோர்
ஒப்புயர்வென் றனம்முரணி நிற்பார் பேதம்
ஒழித்தவரே உறைவர்திட் டைநகரின் தன்மை
தப்புறுமென் னிருந்தாலும் இவ்வூர் சேரிற்
சமரசத்தைத் தருமித்தத் தலமே யென்றால்
செப்புவதற் கெளிதோஇம் மகிமை என்றால்
சேடன்மதி காணாது தெரியின் மாதோ."

என்பது தலமகிமைச் சருக்கத்தில் ஒரு பாட்டு. நூலினைப் பாராட்டித் திருச்செந்தூர் அட்டாவதானம் மகாதேவ ஐயர், மேலப்பாளூர் கோபால நாயுடு, சந்தப்புலி பார்த்தசாரதி நாயுடு, விநாயக ஓதுவார், வா. தி. கோவிந்தராசு முதலியார், பாலூர் வேலு தேசிகர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். மற்றும் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் 'கேமன் முனிவர் வெண்பா வந்தாதி,' 'வேதாந்த லட்சணத்திரைய விளக்கம்' முதலியன.

## ௧௧௪௧. நாராயணசாமி நாயுடு
## (1871)

தமிழ்ப்புலமையிலும் இசைப்பாடலிலும் வல்லவராகிய இவர் தொண்டைவளநாட்டில் வேலூரில் வாழ்ந்திருந்தார். நைடதச் செய்திகளை அமைத்து நாடக நூல் ஒன்றை இவர் இயற்றினார். அந்நூல் 'தமயந்தி நாடகம்' எனவும் 'நளச்சக்கரவர்த்தி நாடகம்' எனவும் பெயர்பெற்றது.

" வாலமதி போலுநுதல் தமயந்திக்
கினியமண வாளனான
சீலமிகு நிடதநக ராண்டநளன்
சரிதைதனைச் செப்ப முன்னாள்
மூலமென ஓலமிடும் வேழமதைக்
காத்தகரு முகில்மெய் போன்ற
வேலைநடுத் துயின்றதிரு மாலிருப
தாம்புயத்தை வேண்டுவோமே."

என்பது நூலில் திருமால் வணக்கப்பாட்டு. ௧௮௭௧ ஆம் ஆண்டில் இந்நூல் முதற்பதிப்பாக ௯௦௦ பிரதிகள் அச்சிடப்பட்டன. பிறகு வெளியானதாகத் தெரியவில்லை.

## ககசஏ. நாராயணசாமி நாயுடு - பெ
(1884)

புதுவைப் பாகூர் தாலுகா மணப்பட்டு என்னும் ஊரில் ஊர் அதிகாரியாகத் தொழில்புரிந்திருந்த இவர் நல்ல தமிழ்ப்புலமையும் பெற்றிருந்தார். இவருடையதந்தையார் பெயர் பெரியதம்பி நாயுடு. 'மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா' என்னும் நாடக நூலை இயற்றியுள்ளார். இவரிடம் பலர் கல்வி கற்றுப் புலமை படைந்தனர். இவருடைய நூலுக்கு சா. தெய்வசிகாமணிப் பிள்ளை, முருகேச முதலியார், பொன்னையா முதலியார், நம்பெருமாளையர், வில்வநல்லூர்ச் சுப்பையர், திருப்பாதிரிப்புலியூர் சண்முக அடிகள், க. ரா. சிவசிதம்பரம் பிள்ளை, திரிசிரபுரம் சுப்பராயச் செட்டியார், சென்னை வீரராகவசுவாமிகள், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, சீநிவாச சண்முகப் பிள்ளை, பு. இராகவலு நாயுடு, கோகுலாபுரம் அருணாசலக் கவிராயர், காரைக்கால் பொன்னுச்சாமிப் பிள்ளை, பொன்னரங்க பிள்ளை, திட்டைச்சேரி கொ. வா. முகமதுகுசைநிராவுத்தர், ஓகை. ஐ. சண்முகசுந்தர நாவலர், குலசேகரன் பட்டினம் முத்துசாமியா பிள்ளை, கணக்கிலவதானம் முத்துக் கறுப்பன் செட்டியார், திருவெண்ணெய் நல்லூர் சுப்பிரமணிய முதலியார், மாயவரம் சாமிநாத ஐயர், திருவேங்கடம் பிள்ளை, வேலாயுதப் பிள்ளை, தாசி பெரியகுப்பு என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

**"அஞ்சுகமே நீகேளடி—அடிவஞ்சியே**
**அஞ்சுகமே நீகேளடி**

**கெஞ்சியெனைக் கேட்டாலும் கொஞ்சமு நானிரங்கேன்**
**அஞ்சாமலேவதைக்க நெஞ்சந்துணிந்தேனடி (அஞ்)**

**வள்ளலருளாற் பெற்றபிள்ளையென்றும் பாராமல்**
**உள்ளபடி தேரினில் தள்ளிவதைப் பேனடி (அஞ்)**

**ஆதிசிவனருளாற் கோதிலாமல் சன்னூனும்**
**நீதிபிசகினுனும் மேதினியிலுய் வேனோ (அஞ்)**

**பாலனென் றெண்ணமல் பழிக்குப்பழி வாங்குவேன்**
**சாலமினிச் செய்யாதே தங்காதப் புறம்போடி." (அஞ்)**

இது மனுச்சோழன் தன் மகனைக் கொன்றேதீர்வேன் என்று மனைவியிடம் உரைக்கும் பகுதியாகும். இவர் சாரங்கதரன் நாடகம் முதலிய வேறு பல நாடக நூல்களையும் இயற்றியுள்ளார்.

## ௧௧௪௫. நாராயணசாமிப் பிள்ளை - கோ.
(1868)

இவர் திரிசிரபுரம் கோவிந்தபிள்ளை யவர்கள் புதல்வர் இருவரில் ஒருவர். தந்தையாரைப் போன்றே இவருங் கல்வி கேள்விகளில் வல்லவர் சென்னைமாநகரில் ஆசிரியத் தொழில் நடத்திக் கொண்டிருந்தார். இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவரவர்கள் அனுப்பிய சேதுபுராணம், திருக்குறள் பரிமேலழகர் உரை முதலிய நூல்களைப் பெற்றபோது, சில தனிப்பாடல்கள், இருபா இருபஃது என்னுஞ் சிறு நூல் ஆகியவைகளை எழுதியனுப்பினார்

### பாடல்களில் ஒருகட்டளைக் கலிப்பா

"சிப்பி கட்டருந் துளிவிழ முத்தமாஞ்
செய்ய நாவலர்க் குன்கரத் தாரையாற்
செப்பு மாபுகழ்ச் செம்மணி யாம்பல
செய்யு ளின்திரட் டுந்திரு வள்ளுவர்
நப்ப ரிமே லழக குரையுமென்
நாவி னுக்கறி விற்குச் சுவைபெற
வைப்பை யென்றும ளிக்கச் சலிக்கிலா
வாய்மை யாய்பொன்னுச் சாமி மகிபனே."

இவர் இயற்றிய இருபா இருபஃதை வியந்து ஏற்றுக் கொண்டதாகத் தேவர் அவர்களுடைய கட்டளைப்படி முத்து வீரப்பபிள்ளை இவருக்கு எழுதியனுப்பியது.

### நேரிசை வெண்பா

"இருபா இருபஃதை ஏற்றுங்கல் லாடம்
ஒருபாவே யாதலினே ரொவ்வா—திருவார்ந்த
நாரா யணசாமி நாவலவ நின்தமிழைக்
கூரா யரா ராய்தல் குணம்."

இவ்வாறு செய்யுளியற்றல் முதலியவைகளிற் சிறந்து விளங்கியவர் இவர். இவரால் இயற்றப்பெற்ற மங்களவல்லி விலாசம் ௨௪௨ பக்கங்கள் கொண்டது. மாமி மருகியர் போராட்டங்களை விரிவாய் எடுத்துரைப்பது. நாடக நூலாக அமைந்தது.

"இருகையால் மாறி மாறி இயன்றமட் டுக்கு மாமி
வரிதடி யாலே மாட்ட மங்கள வல்லி மாது
தரியாமற் கீழே வீழ்ந்து சரீரத்தில் உதிரம் சிந்தப்
புரண்மயிற் போலச் சோர்ந்து புலம்பிடத் தொடங்கி னாளே."

என்பது நூலில் ஒரு பாட்டு. 'சித்திரங்காட்டிச் சத்தியம் நிறுத்திய கதை' என்பது இவருடைய புனைந்துரைக் கதைகளில் ஒன்று.

விநோத சரித்திரம் என்னும் அரிய கற்பனைக் கதை, விவேக சரித்திரம், சுக்கிரீவபயங்க்கிரகம், சித்திரங் காட்டிச் சத்தியம் நிறுத்திய கதை, அரங்கர் அலங்காரமாலை, சீரங்க பட்டண சரித்திரம் முதலிய நூல்களையும் இயற்றியிருக்கிறார்.

"ஒன்றற்கொன் றுதவி யொன்றினுக் கொன்றே
யுதவிசெப் தலையுரைப் பதுவாம்
துன்றுதுர்ச் சனராஸ் விளங்குவ னடியேன்
துலங்குவர் துர்ச்சன ரென்றால்
கன்றுபின் செல்லு மானெனச் சென்று
காத்தனை யன்பரை யென்னை
என்றுதான் காப்பாய் என்றுதான் விடியும்
என்கலி அரங்கநா யகனே."

என்பது அந்யோந்யா அலங்காரத்தைப்பற்றிக் கூறிய பாட்டு.

## ககசகூ. நாராயணசாமிப் பிள்ளை - ம (1890)

தஞ்சைமாவட்டத்தில் உள்ள மன்னார்குடியில் சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கியிருந்தவர். உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்ததுடன் தனிப்பட்டவர்கட்கும் புலமைக் கல்வி கற்பித்தார். நற்றிணை உரையெழுதிய நாராயண சாமி ஐயருக்கு ஆசிரியரும் இவரே. இலக்கணப்புலவராக விளங்கியிருந்த - ம. நா. சோமசுந்தரம் பிள்ளை இவருடைய அருமைத் திருமகனாவார். அரித்துவாரமங்கலம், ப. சோமசுந்தர தேசிகர் என்பவர் இயற்றிய சிவாலய மான்மியக் கோவை என்னும் நூலுக்கு இவர்,

"பண்களிக்கு மறைமுடிவாழ் பரம்பொருளாம்
அரன்கமலப் பாதம் போற்றும்
எண்களிக்குந் திருவுளத்தான் இயற்சோம
சுந்தரன்தான் இனிது சொற்ற

மண்களிக்கும் புகழ்வாய்த்த சிவராயைமான்
மியக்கோவை மகிழ்ந்து பார்க்கில்
கண்களிக்கும் உறக்கேட்கில் செவிகளிக்கும்
மனங்களிக்குங் கருதிற் றேனே.''

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௧௫௦. நாராயணசாமி முதலியார் - செ
(20 - நூ.)

இவர் செங்கற்பட்டிலே தோன்றினார். தொண்டைமண்டலத் துளுவவேளாள குலத்தினர். இவர் ஞானானந்த விளக்கமென்னும் வேதாந்த நூலை இயற்றியுள்ளார். மற்றும் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் உண்மைப் பொருள் விளக்கம், எக்காலக் கண்ணி முதலியன.

''வளமுறு செங்கற் பட்டில் வருநாரா யணப்பேர்ச் சாமி
உளமகிழ் வாகச் சொன்ன உயர்ஞான நந்த நன்னூல்
இளர்பல நூல்க ளாலும் கேண்மையர் உதவி யாலும்
விளம்பிய ததனுள் மேலோர் விருப்பமாய்க் கொள்வர் மாதோ.''

என்பது நூலின் அவையடக்கம். நூலுக்கு அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், உ. வே. சாமிநாதையர் முதலியோர் பாராட்டுரை வழங்கியுள்ளனர்.

## ௧௧௫௧. நாராயணசாமி முதலியார் - அ.
(20 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் பனைப்பாக்கம் என்னும் ஊரில் செங்குந்தர் குலத்தில் அம்பலத்தாடி முதலியார் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். இவர் சிவப்பிரகாச ஐயர் என்னும் அறிஞர்பாற் கல்வி கற்றுச் சிறப்புற்றார். ஊரார்கள் விரும்பியபடி தாம் பிறந்த ஊரின் புராணத்தை இவரும் எல்லப்ப முதலியார் என்பவருஞ் சேர்ந்து இனிய செய்யுட்களாகப் பாடி முடித்தனர். அப்புராணம் ௧௧ படலங்களையும் ௧௧௩௨ திருவிருத்தங்களையும் உடையதாக விளங்குகின்றது. நூலில் ஓவியப் பாடல்களும் அமைந்துள்ளன. அட்டாவதானம்

பூவை கலியாணசுந்தர முதலியார், ஐயன்பேட்டைச் சிவப்பிரகாசையர், பாலூர் வேலுத்தேசிகர், காஞ்சி நாகலிங்க முதலியார், காஞ்சிபுரம் சோணாசல பாரதியார் ஆகியோர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"நகை யானனின் கன்னனே உறுந்தறு குவலனர்
வாகை விற்றிறந் திராகவன் பின்றரு வாளுங்
தோகை மாதரில் திலோத்தமை அழகினில தோற்பன்
மாக மீதுயர் மாளிகை மறுகிடை வசினே."

என்பது திருநகரச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## ககருஉ. நாராயணசாமி முதலியார் சி. கு.

கொங்குவளநாட்டில் கோயம்புத்தூரில் தோன்றியவர். இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமையடைந்தவர். பழந் தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளை நன்கு ஆராய்ச்சி செய்து பல நூல்கள் எழுதியுள்ளார். இவரால் இயற்றப்பெற்ற வரலாற்று நூல்கள்,

க. அருணகிரிநாதர் வரலாறு.
உ. ஒட்டக்கூத்தர் வரலாறு.
ங. படிக்காசுப் புலவர் வரலாறு.
ச. மாம்பழக் கவிச்சிங்க நாவலர் வரலாறு.
ரு. புகழேந்திப்புலவர் வரலாறு.
சு. இரட்டையர் வரலாறு.
எ. பொய்யாமொழிப் புலவர் வரலாறு.
அ. வில்லிபுத்தூரார் வரலாறு.

முதலியன.

## ககருங. நாராயணசாமி முதலியார் - பூ (1868)

இவர் சென்னைமா நகரினர். காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார் உயர்நிலைப்பள்ளியில் தமிழ்த் தலைமைப் புலமை நடத்திய கோபாலகிருட்டிண கவிராச சேகரர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்கற்றவர். இவர் எத்தொழிலில் ஈடுபட்டிருந்தார்

என்பதைப்பற்றிய செய்திகளொன்றுந் தெரியவில்லை. இராமநாத புரம் பொன்னுச்சாமித் தேவர்க்கு இவர் எழுதிய கடிதப் பாடல் ஒன்றைக் கீழே காண்க.

"செந்துநேர்ப் பொருப்பின் றிங்கள்வெண் கிரணஞ்
சிவணிய வாவுறப் பொலியும்
சுந்தரக் கடவுள் இணைமலர்க் கழலைச்
சுருதிசொல் விதிப்படி நாளும்
வந்தனை புரிந்து வழுத்துறு புதுவை
மன்னவ மால்பொன்னுச் சாமி
எந்தையே எவர்க்குஞ் சேதுமா னியந்தோ
டெழிற்றிருக் கோவையொன் றருளே."

## ௧௧௫௪ நாராயணசிவனார் - சே.

திருக்காளத்தி என வழங்கும் தெட்சண கைலாயத்தில் வசித்திருந்த மறையவர் குலத்தினராகிய சேடாத்திரி சிவனார் என்னும் பெரியாருடைய மாணவர் இவர். இவர் வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர். ஆசிரியராகிய சேடாத்திரிசிவனார் நாநாசிவவாதக் கட்டளை என்னும் அரிய நூலை வடமொழியில் இயற்றினார். அந்நூல் தென்மொழியாகிய தமிழ் மொழியிலும் வெளிவந்தால் தமிழுலகிற்குப் பயன்படும் என்று எண்ணிய இவர் தம் ஆசிரியரின் உடன்பாடு பெற்று அந்நூலைத் தமிழ் மொழியில் மொழிபெயர்த்தார். புகழ்ச்சி விருப்பிலராய் அந்நூல் தம்முடைய ஆசிரியரின் பெயராலேயே உலகில் வழங்குமாறு செய்தார். இந்நூல் வேதாந்த நூல்களைக் கற்பார்க்குச் சிறந்த பயனுடையதாகத் திகழ்கின்றது. இந்நூலைப் பாராட்டிச் சிதம்பரம் பொன்னம்பல அடிகள்,

"இப்பியி னிடையே எழுமிர சதம்போல்
என்றுமா யையின்பா லாகி
ஒப்பிட வேது மின்றிய பிரமத்
துற்றிடும் பகுதிமுன் னாய
அப்பிர பஞ்ச முறைமையைத் தால
அருந்ததி நியாயமே என்னச்
செப்பினன் யாருந் தெளிவுறச் சேஷாத்
திரிசிவ னென்னுமா தவனே."

என்று பாடியுள்ளார்கள்.

## ககருரு. நாராயண செட்டியார் - விரு (1866)

இவர் தஞ்சைமாவட்டத்தில் நாகபட்டினத்தில் இருந்தவர். இவர் தரகுத் தொழிலில் ஈடுபட்டிருந்தாராயினும் இலக்கண இலக்கியப் பயிற்சியிலும் சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்தார். ஐயாத்துரை ஞானியார் என்பவர் இயற்றிய தில்லைச் சிவகாம சுந்தரி சதகம் என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"அருந்தவர்கள் தினம்பரவும் புலிசைநட
ராசனுளந் தணியா வோங்கும்
திருந்துமெழிற் சிவகாம சுந்தரிபொற்
சதகமருட் டிறத்தி னிந்தான்
பொருந்துபுகழ்க் கிராமத்து மேடெனுமா
வளப்பதியான் புலவர்க் கென்றும்
விருந்தளியான் சிதம்பரமால் சன்றஐயாத்
துரைப்பெயர்கொள் மேன்மை யோனே."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களுள் ஒன்று.

## ககருசு. நாராயணதாசர்

இவர் சோழவளநாட்டில் பருவூர் என்னும் ஊரில் இருந்தவர். சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்த இவர் சீனிவாசவதாதாசாரிய சுவாமிகள் என்னும் வைணவ அந்தணர் இயற்றிய பூவராகரந்தாதி வேதநாராயணன் போற்றிமாலை என்னும் நூல்கட்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

"செருமலைந் தேபுவி யேந்துவ ராகநற் றேவருளைத்
தருமலை சூழ்புவி யோர்க்கமு தாகுமந் தாதிதந்த
திருமலை நம்பி குலசீநி வாசர் செழுமலர்த்தாள்
பெருமலைந் தாம்புல மும்மலம் போந்துதி பேசுமினே."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ககருஎ. நாராயண பாரதியார்

இவர் தொண்டை நாட்டில் வெண்மணி என்னும் ஊரில் இருந்தவர். களமூரில் இருந்த மணவாளநாராயணன் என்னுஞ்

செல்வன் இவரை ஆதரித்தான். நாராயண பாரதியார் தோன்றி விளங்கிய காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதி. இவருடைய குலம் அந்தணர் குலம். இவர் திவ்விய கவி நாராயண பாரதியார் என்வும் வழங்கப் பட்டாரென்று தெரிகிறது. இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் திருவெவ்வுளூரந்தாதி, மணவாள நாராயண சதகம் என்பன. இச் சதகம் மணவாள நாராயணனையும் பிணைத்துத் திருமாலின்மீது பாடப்பெற்றது.

"பூமேவு திசைமுகனை உந்திதனில் ஈன்றதும்
புனிதவேதாகமமெலாம்
புருடோத்த மன்தெய்வம் என்பதும் பூசுரர்
பொருந்துமந் திரமென்பதும்
தேமேவு மலர்மங்கை மார்பில்வளர் சீருஞ்
செகந்தனைக் காத்தருள்வதும்
தேவர்நரர் மிருகசெந் துபட்சிகிளை மரஞ்
செழிக கப்பதந் தருவதும்
பாமேவு பொருளலங் காரஞ் சிறப்பதும்
பல தமூநீயென்பரால்
பரதெய்வ முண்டென் றிருப்பார்கள் இந்நூல்
படிக்கும்விதமோவறிகிலார்
மாமேவு பைந்துளப மாலையணி மார்பனை
மணவாள நாராயணனை
மனதிலுறை அலர்மேலு மங்கைமண வாளனை
வரதவேங் கடநாயனை."

என்பது மேற்படி சதகத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௫௮. நாராயண பிள்ளை - அ
## (19 - நூ.)

புதுக்கோட்டைச் சமத்தானத்தில் அருணாசலம் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். அறுவை வாணிகத்தில் ஈடுபட்டிருந்த இவர் கலைத்தொழிலிலும் ஈடுபட்டு நூல்கள் கற்றுப் புலவராகத் திகழ்ந்தார். நூறுபாடல்களைக்கொண்ட பழநிவெண்பா முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவருடைய நூலுக்கு, மழவராயனேந்தல் இருநூறவதானம் சுப்பராமையர், சிதம்பர பாரதியார், கல்போது பிச்சுவையர், வேம்பத்தூர் முத்துவேங்கட சுப்பையர், சாமாவையர், காரையூர்

சாமி ஐயங்கார், திருவிடை மருதூர்ச் சொக்கலிங்க தேசிகர், நாங்கம்பாடி சண்முகக் கவிராயர், மதுரை தட்சணாமூர்த்தி நாயகர் புதுக்கோட்டை அருணாசலஞ் சேர்வை, சுப்பிரமணிய பிள்ளை, வைத்தியலிங்க உபாத்தியாயர், அண்ணாச்சாமி உபாத்தியாயர், சவுளிக்கடை முத்துக்கறுப்ப பிள்ளை மகன் அப்பாவுப் பிள்ளை, மதுரைநாயகம் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"கண்டுதரி சித்தோரைக் கண்டுதரி சித்தோர்க்கும்
பண்டுவினை போக்கும் பழனியே—கொண்டவிரு
வண்டார மாணூர் மகிழ்ந்துபா கங்கொளவோர்
பண்டார மாணூர் பதி."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ககருக. நாராயண பிள்ளை - க
## (19 - நூ.)

இவர் திருநெல்வேலியில் கள்ளப்பிரான் பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்ற இவர் இலக்கணப் பரீட்சை என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந்நூல் இலக்கண விதிகளை எளிமையாக விளக்குகிறது. திருநெல்வேலி சாலிவாடீசுர வோதுவாமூர்த்திகள், கள்ளப் பிரான் கவிராசர் அவர்கள், அம்பலவாணன் கவிராசர் அவர்கள், புதூர் வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் ஆகியோர் இந்நூற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். அவற்றுள் சாலிவாடீசுர வோதுவாமூர்த்திகளின் பாடல்.

"புலக்கணக் குறும்பை எறிந்தவர்க் கருளும்
பொன்னெடு மால்பதம் புகழும்
நலக்கணக் கிரன்கள் ளப்பிரான் தவத்தில்
நண்ணுநா ராயணன் நாவாம்
குலக்கண வணிக்கா சினியுளோர் எளிதாய்க்
குறித்துணர்ந் தோதிடச் செய்தான்
இலக்கணப் பரிட்சை என்றிடும் பெயர்பெற்
றிடுநூம் இயலினை இனிதே."

என்பது. நூல் உரைநடையில் அமைந்தது.

## ௧௧௪௦. நாராயணப் பெருமாள்
(1909

இவர் காட்டுப்புத்தூர் என்னும் ஊரில் இருந்தவர். புதுவை இராமாநுச நாவலரிடம் இலக்கண இலக்கியங் கற்றுத் தேர்ந்தார். இவரால் இயற்றப் பெற்ற நூல் பாஞ்சாலி கல்வளர் மான்மியம் முதலியன.

“ பூந்தளிர் கமலக் கண்ணன் பொன்னடி மறவாச் சிந்தை
வேந்தர்கோன் தருமன் றாற்றும் வேள்விமுன் பாலியன்று
பாந்தளங் கொடியன் றற்குப் பாவியாக் குறையு மென்பூங்
கூந்தற்பாஞ்சாலி நக்க குறையுமுட் கொதிப்ப நோந்தான்.”

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௧௪௧. நாராயணன் செட்டியார் - (முரு)
(20 - நூ.)

மதுரைமாவட்டம் மேலூர்ப்பிரிவு கணபதிபுரம் என்னும் ஊரில் முருகானந்த சுவாமிகள் என்பவருடைய மகனாகத் தோன்றியவர். இலங்கை - காங்கேசர் நகரத்தார் கோயில் ஆனைமுகக் கடவுள்மீது கணபதி வெண்பா, கதிரேசர்மீது கதிரேச வெண்பா எச்சரிக்கை, கட்டியம் முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

“ உள்ளும் புறத்தும் உயர்நலங்கொண் டின்பமெலாம்
கொள்ளும் அடியார் குடியரசே—என்னரிய
நித்தியா நந்தம் நிறைபொருளே காலிநகர்
முத்தனே முன்வந் திரு.”

என்பது கணபதி வெண்பாவில் ஒரு பாட்டு.

## ௧௧௪௨. நிசாநந்தர்
(20 - நூ)

இவர் சுயம்பிரகாசர் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர். தமிழிலும் வடமொழியிலுஞ் சிறந்த பயிற்சியுள்ளவர். இறைவியைப் போற்றி வழிபட்டு அவளுடைய திரு

வருளைப் பெற்றவர். இவர் தம்முடைய ஆசிரியராகிய சுயம்பிர காசர்மீது "அவதூத வெண்பாமாலை" என்னும் நூலைப் பாடி யிருக்கிறார். இவருடைய பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"நீயேநான் நானேநீ என்றே நினைக்கவைத்த
தாயே பராபரையே சற்குருவே—நாயேனை
என்றென் றும் நின்வடிவில் ஏற்றும் அவதூத
குன்றாத நின்னருளிற் கூட்டு."

## ௧௧௩௩. நித்தியாநந்த சரசுவதி
## (20 - நூ.)

இவர் திரிசிரபுரத்தினர். குழுமியானந்த முனிவர் சற்குரு மணிமாலை, தோத்திரத் திரட்டு முதலிய நூல்கள் பாடியிருக் கிறார்.

"உரியகா ரணமாம் ஓமெனும் பொருளை
உணர்ந்துணர்ந் தருந்தவம் இயற்றும்
அரியமா தவர்கள் அடைந்தனர் அமல
அகாரகா ரணப்பெரு வெளியாய்
கரியநீ மனத்துக் கள்வனு யிழிந்த
கடையனே னையும்புரந் தருளாய்
துரியவான் பொருளே குழுமியா னந்தத்
தூயனே சற்குரு மணியே."

என்பது குழுமியானந்த முனிவர் சற்குருமணி மாலையில் ஒரு பாட்டு.

## ௧௧௩௪. நித்தியானந்த அடிகள்
## (19 - நூ.)

இவர் கேரளநாட்டில் கோட்டாறு என்னும் ஊரில் தோன் றியவர். இளம்பருவத்திலேயே இல்லந் துறந்து கோயிலூரை யடைந்து முத்திராமலிங்க ஞானதேசிகர் என்னும் பெரியவரைக் கண்டு அருளுரை வழங்கவேண்டுமென்று வேண்டினார். அப் பெரியார் இவரைத் தம் மாணவராகிய துறவாண்டவர் என் னும் அருணசல அடிகள்பால் அனுப்பினர். அப்பெரியாரிடம் அருளுரை பெற்று அறிவுநூல்களை ஓதியுணர்ந்தார். காசிமா

நகருக்குச் சென்று வடமொழியையுங் கற்றுப் புலமை பெற்று வடமொழியில் மும்முடித் தேவர் என்பவர் "லகுயோகவாசிட்ட (சுலோகம்)" என்னும் நூலுக்கு எழுதிய சம்சாரதரணி என்னு விரிவுரையைத் தமிழில் மொழிபெயர்த்தார். சதாசிவப் ட மேந்திர சரசுவதி என்பவர் வடமொழியில் செய்த "அத்வை ரசமஞ்சரி மூலமும் உரையும்" என்னும் நூலைத் தமிழில் பா டாகவும் உரையாகவும் மொழிபெயர்த்தார். வித்தியாரண அடிகள் என்னும் பெரியார் வடமொழியில் இயற்றிய பஞ்சத என்னும் நூலின் பத்துப் பிரகரணங்களைத் தமிழ்ச் செய்யுளா மொழிபெயர்த்தார். சங்கராச்சாரியார் வடமொழியில் இய றிய "தட்சணாமூர்த்தி அட்டகம்" என்னும் நூலைத் தமிழ் செய்யுளாக மொழிபெயர்த்தார். இப்பெரியார் மொழிபெயர்த் பஞ்சதசிச் செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

"தந்தைநுகர் அன்னத்தாம் விரியத்தில்
சனித்தன்னத் தாமே நீடும்
இந்தவுடம் பன்னமயம் சதான்மா
அலமுன்பின் இன்மை யாலே
முந்தையுறும் பவத்தின்றும் ஆதலினிப்
பவமேங்ஙன் முயன்று நேடும்
பிந்தைவரு பவத்தின்று மாதலினிங்
கீட்டுன்மம் பெறற் றேகும்"

## ௧௧௬௫. நிரஞ்சன நாதர்

அந்தகக்கவி வீரராகவ முதலியார் காலத்தில் இருந்தவர் அவரோடு நெருங்கிப் பழகி நண்பராகவும் இருந்தார். இவர் கச்சியில் வாழ்ந்திருந்தவர் போலும். சீட்டுக்கவி பாடுவதில் அந்த கக்கவி வீரராகவ முதலியார் மிக வல்லவர். அவருடைய சீட்டுக் கவிகளைப் பாராட்டி இவர்,

"சீட்டுக் கவியென்று சொல்வர் சிலரந்தச் சீட்டுக்கவி
காட்டுக்கெறித்த நிலவாகிப் போஞ்செங் கனகரத்னச்
சூட்டுக் கிரீட முடிவேந்தர் உற்பத்தி சூறைகொள்ளும்
நாட்டுக் கிலக்கியங் கவிவீர ராகவன் நற்கவியே."

என்று பாராட்டிப் பாடியுள்ளார். இவர் இயற்றியதாக வேறு எதுவும் அகப்படவில்லை.

## ௧௧௬௬. நீலகண்ட செட்டியார்
## (19 - நூ.)

இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சென்னை மாநகரில் இருந்தவர். சிந்தாதிரிப்பேட்டை அ. வடிவேலுச் செட்டியார் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேறினார். திருத்தணிகை வெண்பாவந்தாதி, இரட்டைமணி மாலை ஆகிய நூல்கள் இவரால் செய்யப்பட்டன. நூல்களைப் பாராட்டி, அ. வடிவேலுச் செட்டியார், கோ. வடிவேலுச் செட்டியார், ஆ. மே. சென்னகேசவுலு நாயுடு, கு. அப்பன்செட்டியார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "சாந்தஞ்சேர் சாலைகளும் சாம்பூ நதமெங்கும்
> ஏந்துமா புனலும் இடையரு—தோங்கும்
> தணிகைப் பதிவாழும் தத்துவனைப் போற்றும்
> பணியொன்றே நல்ல பணி."

என்பது திருத்தணிகை வெண்பாவந்தாதியில் ஒரு பாட்டு.

## ௧௧௬௭. நீலகண்டதாசர் - திருவ
## (20 - நூ.)

இவர் திருவனந்தபுரம் கரமனை என்னும் ஊரினர். இலளிதா தேவீமான்மியக் கீர்த்தனங்கள் என்னும் இசைப்பாடல் நூலை இவர் இயற்றியிருக்கிறார்.

> "பாலாழி கடையவொரு பாசமாகப்
> பணித்தபெரும் பையரவங் கொதித்துச் சீறும்
> ஆலாலம் வந்தபொழு தரன்முன் னோடி
> அரியயனும் அமரர்களும் அபயங் கேட்கக்
> கோலால விடமருந்திப் பரமன் காக்கக்
> குரைகடலைப் பின்னுமவர் கடைந்து வந்த
> மேலான அமுதவர்க்கு விளம்பு தற்காய்
> மின்னனைய மோகினியாய் வந்தான் மாயோன்."

என்பது இசைப்பாடலில் ஒரு விருத்தப் பாடல். இக் கீர்த்தனைப் பாடல்களைத் தவிர வேறு சில இலக்கிய நூல்களையும் இவர் இயற்றியிருப்பதாகத் தெரிகிறது.

## ௧௧௬௮. நெல்லைநாதர்

இவர் சிவராத்திரிப் புராணம் என்னும் நூல் இயற்றியிருக்கிறார். இவர் வாழ்ந்த காலம் இடம் முதலியன விளக்கமாகவில்லை.

> "மறைதொ ழுஞ்சிவ ராத்திரி மான்மியம்
> அறிவின் மிக்க அருந்தவர்க் காரிய
> முறைசொல் சூதன் மொழிந்தனன் நற்றமிழ்த்
> துறையி லோதினன் சூழ்நெல்லை நாதனே."

என்பது ஆக்கியோன் பெயர் உரைக்கும் பாட்டு. இவர் இயற்றிய சிவராத்திரிப் புராணம் ஐந்து அதிகாரங்களையும் ௩௦௯ செய்யுட்களையுங் கொண்டது. இச் சிவராத்திரிப் புராணத்தையன்றி வேறுசிலரும் சிவராத்திரிப் புராணம் பாடியுள்ளனர்.

> "அண்ட ரண்டம் அழித்துல கேழையும்
> கொண்ட லேழுங் குரைகட லேழுமே
> மண்டி யேறி மலைந்தபின் மாதவன்
> பண்டு போலப் படைக்கவென் றெண்ணினான்."

என்பது இவர் இயற்றிய சிவராத்திரிப் புராணத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௬௯. நெல்லையப்ப கவிராச பண்டாரம்
(1868)

இவர் "திருமலையமகவந்தாதி" என்னும் நூல் பாடியிருக்கிறார். எவ்வூரினர் என்பது முதலிய பிற விவரங்கள் எவையும் புலப்படவில்லை. இவர் பாடியுள்ள யமகவந்தாதி கந்தரந்தாதி திருவரங்கத்தந்தாதி முதலியவைகளைப்போல் ஆழ்ந்து கருத்தூன்றிப் பொருள் உணரத்தக்க நிலையில் அமைந்துள்ளது.

> "திருமலை யந்தங்கு கொங்கைக்குள் வாழ்செங்கண் மான்மருகன்
> திருமலை யந்தனைச் சேறுட் டிறைசெந்திற் செட்டிமுத்து
> திருமலை யத்தனில் வேளாளன் வள்ளிகைத் தேன்றினைமாத்
> திருமலை யந்தனைமூதாயென் றுளென் றியானைந்தனே."

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு. இந்நூல் உரையோடு அச்சிடப்பட்டிருக்கிறது.

## ௧௧௭௦. நெல்லையப்பபிள்ளை - கவிராசர்

இவர் திருநெல்வேலியில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் முத்துக்குமாரசாமிக் கவிராசர். இவர் சந்தி விநாயகர் இரட்டைமணிமாலை, முருகக் கடவுள் உயிர் வருக்கப் பத்து, சந்தத் தமிழ்ப்பத்து முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். இராசவல்லிபுரம் முத்துசுவாமியா பிள்ளைபேரில் தச்சநல்லூர் அழகிய சொக்கநாத பிள்ளை இயற்றிய காதற்பிரபந்தத்திற்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பாமதுரப் பொலிவுகண்டோர் பாமரருஞ் சிதரும்
பண்டிதருஞ் சிதமுமிதில் உண்டெனக் கொண்டாடச்
சோமனுஞ்சூ ரியனுமுள்ள மட்டினுந்தன் கீர்த்தி
துலங்கிடப்பா பவிநாசன் சுதனெனப் பேர்படைத்து
மாமருவும் ராசவல்லி புரத்தினுநெல் வேலி
மாநகரத் தினும்வளர்சந் தானலட்ச ணஞ்சேர்
காமன்முத்து சாமிமன்னன் மீதினிற்செந் தமிழால்
காதல்அழ கியசொக்க நாதன்மொழிந் தனனே."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

"ஆனந்தத் தானடஞ் செய்யு மயூரன் அணிபொதிகை
ஆனந்தத் தானயன் போற்றும் பதாம்புயத் தாதிவைவேல்
ஆனந்தத் தானவர்ச் செற்றுனென் றேத்திமெய் யன்புடையேம்
ஆனந்தத் தானவை போக்கும் உருமலை ஆள்பவனே."

என்பது உயிர்வருக்கச் செய்யுளில் ஒரு பாட்டு.

## ௧௧௭௧. நெல்லையப்ப பிள்ளை- மா. வே.

திருநெல்வேலியில் சிந்துபூந்துறையில் வாழ்ந்த இவர் பி. ஏ வரை ஆங்கிலங் கற்றுத் தாசில்தாராகப் பணிபுரிந்தார். செந்தமிழ் நூல்களையும் சைவசமய நூல்களையும் நன்கு கற்றுத் தமிழ் மொழியிலுஞ் சிறந்த புலமை யடைந்து விளங்கினர்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கும் அதனுடைய அறநிலையங்களில் ஒன்றாகிய தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்திற்கும் தலைவராக அமர்ந்து பணிபுரிந்தார். செந்தமிழ்ச் செல்வியின் இதழாசிரியர் கூட்டத்திலும் ஒருவராக இருந்து பல கட்டுரைகள் எழுதினர். நெல்லையிற் பல பொதுத்தொண்டு

களிலும் கலந்துகொண்டு பணியாற்றினார். சைவசித்தாந்தக் கொள்கைகள் யாண்டும் நன்றாகப் பரவவேண்டுமென்பது இவருடைய கொள்கையாகும்.

சித்தாந்தம், செந்தமிழ்ச் செல்வி முதலிய இதழ்களில் சிவலிங்கம், சமரசம் முதலிய பல கட்டுரைகள் எழுதினார். உமாபதி சிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டுக்கு உரையெழுதினார். திருவாசகத் திரட்டுக்குத் தெளிவான விளக்கம் வரைந்தார். திருக்குறளில் சைவசமய உண்மைகள் தக்கவாறு விளங்குதல் குறித்தும் இவர் ஆராய்ச்சி, சொற்பொழிவு முதலியன செய்தார். இக்கவாறு தமிழ்த் தொண்டும் சைவத்தொண்டும் செய்துகொண்டிருந்த இவர் ௧௯௪௬ ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினான்காம் நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நீழலை எய்தினார். இவர் பிறந்த ஊர் திருநெல்வேலிக்கு மேற்கே பத்துக்கல் தொலைவில் உள்ள மாறாந்தை என்பது. இவர் எண்பதாண்டுகட்கு மேலும் உயிர் வாழ்ந்தவர்.

## ௧௧௭௨. நெல்லையப்ப முதலியார்

(20 - நா.)

இவர் திருநெல்வேலியினர். கச்சி ஆளவந்த வள்ளலார் ஆதீனம் சிவசாமி தேசிகர்மீது தெரிசனமாலை, தோத்திரமாலை முதலியன பாடியுள்ளார். தி. க. வேலுச் சாமிப்பிள்ளை, சோமசுந்தர பாரதியார், ஏகாம்பர ஐயர், மகா திருவேங்கட முதலியார், காற்பாப்புலி நாராயணக் கவிராயர், முத்தைய பாரதியார் முதலியோர் நூலைப் பாராட்டிச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> "வண்டாலுஞ் சோலை வயல்வளைக் காஞ்சியின் மாநகரத்தன்
> தொண்டாளும் பூசைச் சுபசிவ சாமி சுகப்பவனி
> கொண்டாளுங் குஞ்சக் கடைபூது சின்னங் கொடி சிவிகை
> கண்டாலும் போதக் கருத்தோமுற் பாவங் கழிந்திடுமே."

என்பது தெரிசன மாலையில் ஒரு பாட்டு. சிவசாமி தேசிகர் நல்ல அறிஞர்; அன்பும் அருளும் உடையவர். இப்பொழுதும் அவ்வாதீனத்தில் இருக்கிறார் ஆங்கு செல்லும் அன்பர்களைக் கவனிக்கிறார். நல்ல இயற்கை அமையப்பெற்றவர்.

## ௧௧௭௩. நெல்லையப்பர் - கா. நா

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் வீரவ நல்லூர் என்னும் ஊரினர். இவர் மேலக்கொழுந்து மாமலைக் குமரன் பிள்ளைத்தமிழ், சுதந் திரப்பரணி, மகாத்மா காந்தியடிகள் வரலாறு, பழநியாண்டவர் பாராயணத் திரட்டு, எடப்பாடி ஆறுமுகசாமி கலம்பகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். பிள்ளைத் தமிழ்நூலில் பருவத்திற்குச் சில செய்யுட்களே காணப்பெறுகின்றன. மற்றவை கொள்ளைத் தமிழாயின போலும்.

"ஏர்கொண்ட செம்மைபஞ் சூட்டிய நின் சேவடி
இருநிலந் தோய்ந்தி டாமல்
இலகுசெந் தாமரைக் கிணைசெய்முக மண்டலத்
தெழில்நலம் அழிந்தி டாமல்
கார்கொண்ட கூந்தலஞ் சடைமுடியின் மோலியும்
கலைந்துந் திரிந்தி டாமல்
களபமணி மார்பலங் காரமுயர் மேனியின்
கவினும் அழிந்தி டாமல்
தார்கொண்ட சண்பகந் தான்செருகு மாலையும்
தண்மணங் குன்றி டாமல்
தண்டையங் கால்களுங் கடகமணிக் கைகளும்
தவழலால் உராய்ந்தி டாமல்
சீர்கொண்ட மேலைக் கொழுந்துமலைத் தேவனே
செங்கீரை யாடி யருளே
தேவர்துயர் தீரவரு காவலா சேவலா
செங்கீரை யாடி யருளே."

என்பது பிள்ளைத் தமிழில் ஒரு பாட்டு.

## ௧௧௭௪. பக்கீர்முகியித்தீன் புலவர்

(19 - நூ.)

இவர் யாழ்ப்பாணத்தில் இருந்தவர். இவருடைய தந்தை யார் பெயர் பரிகாரி மரைக்காயர். பக்கீர் முகியித்தீன் பல இசைப் பாடல்களும் சில நூல்களும் இயற்றியுள்ளார். பீர் முகமது சாகிபு என்பவர் இயற்றிய ஞானரத்தினக் குறவஞ்சி என்னும் நூலுக்கு இவர்,

"வன்னவிற நூலுரைத்த வழிமுறை போல்
நீறோர்கள் மகிழ்ந்து நீடற
என்னவில்லா வழிநான்கின் இயல்பான
அரிஅந்நெறி நன்புற்றோங்கும்
தென்னமுத தரிக்கத்துக் கேத்து
மருவிபத்துந் தெளிவாய் நான்கும்
உன்னடக்கிக் குறவந்நி எனவுரைத்தார்
பிரமுகம தென்றுங் கொண்டல்."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௧௭௫. பச்சையப்ப நாயகர் - சி
(1896)

இவர் சென்னைமாநகரிலே சிந்தாதிரிப் பேட்டையில் அண்ணாமலை நாயகர் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். சென்னை நகரில் "வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்" என்னும் புகழுடன் விளங்கிய சோமசுந்தர நாயகரிடஞ் சில இலக்கண இலக்கியங் கற்றுத் தேறினார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள், வல்லாள மகாராசன் சரித்திரக் கீர்த்தனை, சிவநாம கீர்த்தனை முதலியன. அமைச்சன் கணிகையரைத் தேடிச் சென்று மீண்டு வந்து வேந்தனிடம் கூறுவது,

"ஐயனே அரசர் கோவே அடிமலர்த் துணைகள் போற்றி
பொய்யிலாக் கணிகை மாதர் புகலரு மனைக ளெல்லாம்
தெய்வசங் கமர்ந்துறைந்து திகழ்சுகம் நுகரு கின்றார்
மெய்யனே ஒருமா தேனுங் கிடைக்கிலாள் விந்தை தானே"

இந் நூலுக்கு நூலாசிரியரின் ஆசிரியர் சோமசுந்தர நாயகர், சின்னச் சாமிப்பிள்ளை, திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை, திருவோத்தூர் பானுகவி, அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், குன்றத்தூர் மதுரகவி மாணிக்க முதலியார், சென்னை கு. சுப்பராய நாயகர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௧௭௬. பஞ்சநத சாத்திரிகள்
(19 - நூ.)

சோழவள நாட்டில் தஞ்சையைச் சார்ந்த கருந்திட்டைக் குடியில் இருந்தவர். வடமொழி, தென்மொழி, தெலுங்கு

முதலியவைகளில் வல்லவர். இவர் பிரமவித்தியாமுதசாகரம் என்னும் வேதாந்த உரைநடை நூலை எழுதியுள்ளார். வீடு பேற்றிற்கு வேண்டிய செய்திகளெல்லாம் இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. திருப்பாதிரிப் புலியூர் இயற்றமிழாசிரியர் க. ரா. சிவசிதம்பர முதலியார், கும்பகோணம் சிஉகுருநாதையர், பு. அ. பெரியசாமிப் பிள்ளை, திருப்பாதிரிப்புலியூர் கார்த்திகை மடம் சண்முக அடிகள், உருத்திரப்ப நாயுடு என்பவர்கள் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"தானுணர் பன்னூற் பொருளையும் அதனில்
சார்த்தியே பிரமவித் யாமிர்த
மானுஞ்சா கரப்பேர் வைத்தினி தளித்தான்
மாநகர்த் தஞ்சையின் வடபால்
கானுயர் கருந்தட் டாங்குடி வசிக்கும்
கண்ணியன் புண்ணிய நீற்றன்
வானுயர் சீர்த்திப் பஞ்சநதப்பேர்
வாய்ந்தமா மறையவன் மாதோ."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## கசுஎ. பஞ்சாட்சரக் கவிஞர்

இவர் பாண்டிவள நாட்டில் ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருந்தவர். இவருடைய பெயர் சிவாயக் கவிராயர் எனவும் வழங்கியது. இவர், "கலியுகப் பெருங்காவியம்" என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இந்நூல் வீரபாண்டியக் கட்டபொம்மு ஆங்கிலேயர்களோடு நிகழ்த்திய போரைப் பற்றி விரிவாகக் கூறுகிறது. ஆற்றுப்படலம்' நாட்டுப் படலம், நகரப்படலம் முதலியவற்றோடு பழைய புராண முறையில் இயற்றப்பட்டது. நாலாயிரஞ் செய்யுட்குமேல் அடங்கப்பெற்றது. பாடல்கள் அவ்வளவு சிறப்புடையனவாகக் காணப் பெறவில்லை. மாதிரிக்குச் சில பாடல்களைக் கீழே காண்க.

"கதிர திர்ந்தன ககனமும் அதிர்ந்தன ஒன்னார்
பதிஅ திர்ந்தன பற்றலர் அதிர்ந்தனர் விண்மீன்
உதிர் டும்படி அதிர்ந்தன உடுவினு டுதிசெய்
மதிஅ திர்ந்தன மன்னவன் வாள்கொண்ட போதே."

"சென்னறுங் கந்தி கட்டிச் சேவித்து நின்று தங்கள்
தன்னய மரபுக் கேற்ற நல்லுப சாரஞ் செய்து
மன்னவர் மன்னீ என்றும் மனமகன் துரை நீ என்றும்
சொன்னவரைத் தையுமேன் மேலும் துலங்கிய பாஞ்சாச நாடு."

## ககஎஅ. பஞ்சாட்சரக் குருக்கள் - சிவ (20 - நூ.)

ஈழவள நாட்டு யாழ்ப்பாணத்திற் புலோலி கிழக்கிலிருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சிவசங்கரக் குருக்கள். இவர் இலக்கண இலக்கிய நூல்களிலும் சிவாகமங்களிலும் வல்லவர். யாழ்ப்பாணம் வடமராட்சி மேற்கைச்சேர்ந்த வல்லிபுரத்திற் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் மாயவப் பெருமாள் மீது மும்மணிமாலை, பிரமோற்சவ விருத்தம் முதலிய நூல்களைப் பாடியிருப்பதுடன் சுப்பிரமணியக் கடவுள் மீதும் நூல்கள் சில இயற்றியுள்ளார். இவருடைய நூலைப் பாராட்டி, அருணாசல சாத்திரிகள், இராமசாமி சர்மா, க. சின்னத் தம்பி உபாத்தியாயர், த. [illegible] பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"வைத்தநன் மைத்தந் தேமியானே வல்லிபுர வங்கசனுக்
கொத்தருவா ளுறச்செய்புன்—றொத்திரமாய்ச்
சொறுவர்ந்த சிடமொடுந் தேரப் பசிதணித்தெம்
கன்றிடர் தீர்த்தாயெற் கனி."

என்பது வல்லிபுரமாயன் மும்மணிமாலையில் ஒரு பாட்டு.

## ககஎகூ. படம்பக்க நாதன்

இவர் திருவொற்றியூர்ச் செங்குந்த விநாயகர் மாலை என்னும் நூலைப் பாடியிருக்கிறார். முப்பது பாடல்களால் ஆகிய இம்மாலை கட்டளைக் கலித்துறையாலியன்றது.

"கூடாப் பொருட்குணம் குன்றிடைந் வேணங்கை கூடியென்றும்
வாடாப் பொருளெனும் வாழ்க்கையில் பேண வகையறியேன்
தேடாப் படிக்குன் திருவருள் நன்றெனச் சிந்திக்கிலேன்
விடாப் புகழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே."

என்பது நூலில் பதினேழாவது பாடல்.

## ௧௧௮௦ பட்டர்

பாண்டிவள நாட்டில் வெம்பத்தூரில் சோழிய அந்தண குலத்தில் தோன்றிய இவர் தென்மொழியினும் வடமொழியினும் சிறந்த புலமைபெற்றுத் திகழ்ந்தார். கிருட்டிண பகவான் அருச்சுனனுக்குப் போர்க்களத்திலே மெய்ஞ்ஞானத்தை உண்டாக்குமாறு போதித்தருளிய பகவத்கீதை என்னும் நூலை வடமொழியிலிருந்து ௬௭௩ பாடல்களடங்கிய தமிழ் நூலாக மொழிபெயர்த்தார். ஞானநூல்களில் பகவத்கீதை தலைசிறந்ததென்று எல்லோராலும் பாராட்டிப் போற்றப் பெறுகிறது. இதற்குப் பொன்னம்பல சுவாமிகள் என்னும் பெரியார் அரிய விரிவுரை எழுதியுள்ளார்.

"காத லாற்றவிக் காயம் புலன்களை
வாயி லாப்புகுந் துள்ள மயக்குவ
தாத லாற்புலன் ஐந்தும் அடக்கியே
ஏதி லாங்கடுங் காமம் இறுக்குவாய்"

என்பது கருமயோக அத்தியாயத்திலே ஒரு பாட்டு.

## ௧௧௮௧ பட்டுவையங்கார்

(1893)

இவர் மணலூர் என்னும் ஊரில் வைணவ அந்தணர் குலத்தில் தோன்றியவர். சூரியனூர் கோயிலாதீனம் முத்துக்குமாரதேசிக சுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமைபெற்றார். திருப்பனந்தாள் காசிமடத் தலைவர் மீது இவர் இயற்றிய பாடல்களில் ஒன்று,

"அப்பணியை நிலைநிறுத்தல் ஆகாது
பிறர்க்கென்ன அகற்றி யிட்டுத்
துப்பவிருஞ் சடையப்பர் துணைப்பாதந்
தொழுதேத்தித் தூயோர் வாழ
இப்பனசை அறமோங்க இனிதளிப்பே
னெனவிசைந்தான் யாரோ வென்னில்
தப்பனைத்து மறியாத சாமிநா
தப்பெயர்கொள் தவமிக் கோனே"

என்பது.

## ககஅ௨. பண்டாரக் கவிராயர்

இவர் திருக்குற்றாலத்திற் கடுத்த மேலகரம் என்னும் ஊரில் இருந்த திரிகூடராசப்பக் கவிராயருடைய முதன்மைந்தராவர். இவர், திருக்குற்றாலத்திற்கு வடக்கே உள்ள திருவிலஞ்சி என்னும் பதியில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது உலா ஒன்று பாடியிருக்கிறார். அவ்வுலா, "திரு இலஞ்சி முருகன் உலா" என்னும் பெயருடையது; நானூற்றறுபது கண்ணிகள் அமைந்தது.

"முத்திதருங் குற்றால முற்றுமே வாழிவெற்றிச்
சத்தியணி வேள்முருகர் தாம்வாழி—எத்திசையும்
சீர்வாழி பத்தர் செயம்வாழி தென்னிலஞ்சி
ஊர்வாழி வாழி உலா."

என்பது உலாவின் இறுதியில் பாடியுள்ள வாழ்த்து.

## ககஅ௩. பண்டிதராசர்

ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகட்குமுன்னே திரிகோணமலையில் கோணேசுரர் கோவிலில் பூசகராக இருந்தவர். வடமொழியிலும் தென்மொழியிலுஞ் சிறந்த புலமைபெற்றவர். தமிழ்மொழியை மயில்வாகனப் புலவரிடங் கற்றவர் என்று தெரிகிறது. தக்கிணகைலாச புராணம் என வழங்கும் கோணாசல புராணம் இவரால் இயற்றப் பெற்றது அப் புராணத்தில் சுஎகு பாடல்கள் உள்ளன.

"பூவெலாந் துய்ய வாசம் புனமெலாம் முனிவர் வாசம்
மாவெலாங் குயிலின் ஓசை மலையெலாங் குயிலின் ஓசை
காவெலாம் உயர்ந்த தாழை கரையெலாங் கமழுந் தாழை
பாவெலாம் அரனார் தஞ்சீர் பகர்வரி தன்னோர் தஞ்சீர்."

என்பது அப் புராணத்தில் ஒரு பாட்டு.

## ககஅ௪. பதுமநாப பிள்ளை - வ

விழுப்புரந்தாலுகாவில் உள்ள ஆரியூர் என்னும் ஊரில் தோன்றியவர். தந்தையார் பெயர் வரதராச பிள்ளை. இவர் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறியவர். வைணவ

சமயத்தினர். பத்திரிகைகளில் இவரெழுதிய கட்டுரைகள் பல. 'இல்லற ரகசியம்' என்னும் உரைநடை நூலும் எழுதியுள்ளார். இவர் பாடிய தனிப்பாடல்கள் பல பத்திரிகைகளில் வெளியாகி யுள்ளன. காந்தியடிகளைப் பற்றிப் பாடிய பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"இன்னுசெய் தாரையொறுத் திடுதலவர்
நாணநயம் இயற்றல் என்னச்
சொன்னூர்முன் வள்ளுவனூர் சொல்லதனுக்
கிலக்கியமாய்த் துலங்கு கின்றூர்
நன்னுட்டக் காந்திமகான் தகைச்சுவையால்
பகைவர்களும் நவில்செருக்கை
உன்னுது வசப்படுத்தல் உறுதியெனும்
உண்மையவர் உணர்த்தி னுரே."

## ககஅரு. பதுமநாப ஆசாரி - பூ

இவர் சென்ற நூற்றூண்டின் இறுதியில் இருந்தவர். விசுவப் பிரமகுலத்தினர். கொச்சி ஏரணுகுளத்தில் வணிகத் தொழிலில் ஈடுபட்டிருந்த இவர் சிறந்த தமிழ்ப் புலமையுற்றுத் தமிழறிஞராக விளங்கினூர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய செய்தியொன்றும் தெரியவில்லை. 'விசுவப்பிரம புராணம்' என்னும் நூலுக்கு இவர் பின்வரும் பதினூறடி விருத்தத்தைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்:

' சிற்ககன வட்டநடு வில்திகழும் முச்சுடர்செ
றிந்தொளிர் திரியம்ப கன்பால்
செப்பரிய மெய்ப்பொருளை அப்பரற் கோதிடும்
செய்யவேள் இனிது ணர்ந்து
சித்தமதி கைத்தெழு மிருட்பகை தடிந்தெழில்
சிறந்தநற் காசி பற்குத்
தெரித்திட விரித்தவன் அருத்திசேர் காளத்தி
தேர்ந்திட உரைக்க வன்னூன்,
தற்பதநிலைப்பட வே இப்புவியிலை ஒப்பிலாத்
தகைமைசால் சுவிர தற்குத்
தந்தமறை அந்தமிலசை முந்துறுவி ராட்விஸ்வ
தனிப்ரம்ம புராண மதனைத்
தவளநிற அமுதினும் சுவையுதனி பொருந்துதண்
தமிழினை வனைதல் செய்தான்

தக்கபுகழ் மிக்கெழுச்சக் கிரியிறை யணிவன்
தவமுனி அகத்திய னனான்
விற்பனைக்கன் பவிற்றுமை யாற்றிடைவ திந்துளோன்
வின்னவ ராக்கிரபம்
மெய்ச்சுறு தவவிருடி கோத்திரபு கிக்கெழில்
வினைடதவ நாக்க கோரத்தான்
விந்தைவ துத்ம டமி துயபிரிய குபாடிக
வில்வகராய் பிரிய ரேவை
விண்டலரும் மண்டலமுமட வண்டிசையும் ஆர்த்திலகு
மேனையயார திருவின்மிக்கான்
சத்துணம் பெ ருபுகவி னயபரிஞ்ஞமுத்தமன்
சாதுரிய மாதாமுகவ்
சரபாதி பெயாபபெலவ வருடிகத்து நாவினன்
சரன்யதிவி வாச முற்றோன்
சட்சமய பாற்புன் கூசவமெ உசிதமாத்
தழுவுமெய்ஞ் ஞான முத்துச்
சாமிபா ரதிபெறும் பருபெயர்கொள் நாவலன்
தாளிதுவில் வாழ்க மன்றே.''

## ககஉ௩. பதுறுதத்ன புலவா

இவர் பெருப்புலவர் எனப் பெயர் பெற்றவர். இவர் முகி மித்தின் புராணம் இயற்றியவர் இதன் முதற்பாகத்தில் பாயிரம் முதல் சேனம் உயிர்பெற்ற படலம் ஈறுக நாற்பது படலங்களும் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட செய்யுட்களும் உள்ளன.

''மேதினி யிடத்தில உற்று விளங்குதீன் பயிரை யேற்றிக்
கோதிலைப் புவியு மாலும் குறுமுயற் குடமு மாவும்
மீதிரைக் கயனுஞ் சோதும் விண்மதி யாயி னோடு
மாதவத் துடனே பேசு முகம்மதைப் புகழு வாமே.''

என்பது பாயிரம். இப் புலவரை கா. ப. ஷெய்குத்தம்பிப் பாவலர்,

'' மூன்றுறு புலவர் முழுதுமோர் உருவாய்
இந்நிலத் துதித்த இயல்பினை யொத்தோர்
பதுறுத் தீனென்று பகர்பெயர் தாங்கிச்
சதுருற் றிடுமித் தலத்திசை யாவும்
கதிர்படு சூரிய காந்திக் கொப்ப
முதிர்புகழ் பெற்ற முக்கிய நாவலர்.''

என்று புகழ்ந்து பாராட்டியிருக்கிறார்.

## ககஅஎ. பரசிராமக் கவிராயர்

இவர் சென்னைமாநகரில் புரசவாக்கத்தில் வாழ்ந்திருந்தவர். வேளாள குலத்தினர். இலக்கண இலக்கிய நூல்களை இனிது கற்றுச் சிறந்த அறிஞராக விளங்கியிருந்த இவர் சிறுத்தொண்டர் புராணத்தை விலாசமாக இயற்றியுள்ளார். சிறுத்தொண்டர் தம் அருமைத் திருமகனை அறுத்துக் கறிசமைத்துச் சிவபெருமானுக்குப் படைத்தார் என்பது வரலாறு. இக்கவிராயர் சிறுத்தொண்டர் விலாசம் பாடினார் என்பது,

"அறந்தழைத் திலங்குஞ் சிறுத்தொண்டன் சரித்தி
ரந்தனை விலாசம தாகச்
சிறந்திட உரைத்தான் சண்மதத் தோரும்
தெளிந்துவே தாகமங் கலைகள்
அறைந்திடுஞ் சிவமே பரந்துவம் எனஉள்
அறிந்தின்ப வீட்டினை அடைவான்
பிறந்திற வாத பரந்தரு ஞானப்
பரசிரா மப்பெரி யோனே"

என்னுஞ் செய்யுளால் பெறப்படும்.

"பூவார் சடைப்பரமன் பொன்னம் பதம்போற்று
மூவா றுபத்துமூவர்தலை—யாவரினும்
விந்தைசிறுத் தொண்டர் விலாசந் தனைப்பாடக்
கந்தமதத் தந்திமுகன் காப்பு."

என்பது நூலின் காப்புப் பாடல்.

## ககஅஅ. பரசிவானந்தகுரு சுவாமிகள்
(19 - நூ.)

இவர் சிங்கபுரி என்னும் ஊரினர். கல்விகற்றுச் சிறப்புற்ற இவர், திருத்தில்லை, திருமுதுகுன்று, திருவதிகை, திருப்பாதிரிப் புலியூர் என்னும் நான்கு சிவப்பதிகளையும் நான்கு எல்லையாகக் கொண்டு விளங்கும் வேலுடையான் பட்டினம் என்னும் சத்தி புரியில் எழுந்தருளிய முருகக்கடவுளிடத்தில் பேரன்புகொண்டு அவ்விடமே தங்கியிருந்தார். அவ்வூர் திருப்படை வீடுகள் முப்பத்தாறனுள் ஒன்றாக எண்ணப்படும். இவர் அப்பதியில் எழுந்தருளிய முருகப்பெருமான்மீது "'பஞ்சரத்தினத் திருப்புகழ்''

முதலிய புகழ் நூல்கள் பாடியுள்ளார். பஞ்சரத்தினத் திருப்புகழில் ஒரு பாட்டை அடியிற் காண்க.

“முருகான பக்தியோடு துதியாத வர்க்குவீடு
முடியாது சத்யமாக உணர்வாரே
முலைமாதர் கட்டுமாசை மிகவேகொடுத்து வீணில்
முயலா திருக்கஞானம் அருள்வாயே
குருவா யெனக்குமோன அறிவா யுனத்நின்மேவு
தமரா பிடிக்குவேல னெனும்வேலை
குகனே அரற்குஞான உபதேச செட்டியான
குலிசா யுதத்தன் மாயன் மருகோனே
திருவாணிகட்குவேயுன் மணியாய்விளக்கமாகி
நிலையாயிருக்குமாறு முகனேயா
விலையே வணக்கமோடு புகழ்பாட எற்குநாவில்
நிதமேயிருக்கவேணும் உமைபாலா
தருவாய நட்சிவானு பவஞான சித்திவீடு
தவறு தெனக்குநீல மயிலோனே
தவயோகர் சித்தர்ஞானி அடியார் தொழக்குலாவு
தணிவேல்ப நிக்குமார பெருமானே”

இத் திருப்புகழைத் தவிர வேறு சில நூல்களும் இயற்றியிருப்பதாகத் தெரிகிறது ஆனால் அவைகள் கிடைக்கவில்லை இவர் முருகக் கடவுளிடத்துக் கொண்டிருந்த அன்பு மிகவும் பாராட்டற்குரியது.

## ககஅக. பரஞ்சோதி ஆசாரியார்

இவர் ஐம்பதாண்டுகட்கு முன்னிருந்தவர். முருகதாச சுவாமிகளிடம் கல்விகற்றவர். இவர் முருகக் கடவுள்மீது புகழ்நூல்கள் பல பாடியுள்ளார்

“சீதநதி மதியரவம் செங்குவளை வில்வம்
செஞ்சடையில் புனைந்தபர சிவன்சுதனே பஞ்ச
பாதகமே புரிந்தேன்நின் பதுமவடி இரண்டும்
பணிந்தநிலை பைந்தமிழால் பாமாலை சாற்றும்
கோதகன்ற மெய்யடியார் கூட்டுறவு சற்றுங்
கொண்டதிலை குணக்கேடுங் கொலைக்கேடும் உடையேன்
தீதகற்றும் பெரும்பேற்றுச் சிகரிமிசை ஞான
சித்தரெலாந் தொழுதேத்தத் திகழாறு முகனே”

என்பது இவர்பாடிய திருப்பெரும்பேற்றுப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௯௦. பரத சூடாமணி

இவர் இருந்த காலம் நாடு முதலியன விளங்கவில்லை. தாள இலக்கணங் கூறுவதாகிய 'தாள சமுத்திரம்' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். தாளசமுத்திர நூலுக்கு இவர் ஆசிரியர் என்பது,

" திண்மை பெரிய திருவடிநா யன்மங்கை
வண்மை......வளநாடன்—மண்மகள்சேர்
தோளனுலன் வன்'பரத சூடா மணி'யுரைத்தான்
தாள சமுத்திர நூல் தான்."

என்னும் பாடலாற் பெறப்படுகிறது.

" தாள மிரண்டெழுத்தின் தன்பெருமை தன்னைமிக
வாளகிரி சூழு மகிதலத்தீர்—கேளும்
தகரவுருச் சொக்கர் தனியாம் ளகரம்
பகரங் கயற்கண்ணியார் பற்று "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௧௯௧. பரதேசியா பிள்ளை - கு (20 - நூ.)

இவர் சேரநாட்டில் கோட்டாறு வடிவைமாநகரில் தோன்றியவர். தந்தையார் பெயர் குமாரவேலுப் பிள்ளை. பரதேசியா பிள்ளை இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றவர். இவர் திருவனந்தபுரம் பத்மநாப சுவாமிமீது தோத்திரம், கன்னியாகுமரிப் பகவதியம்மன்மீது அருண்மணிமாலை, திருவாங்கூர் அரசர்மீது மகாராசா பதிகம் ஆகிய சிறுநூல்கள் இயற்றியிருக்கிறார்.

" மருவுற்ற மலைநாடு புரிவுற்ற தவமெனாம்
வடிவுற் றெழுந்த தென்ன
வந்ததிரு வாளன் நிதம் முந்துதிரு வானனெழில்
மன்னுமதி யாளன் மனுவைப்
பொருவுற்ற நெறிகொண்டு பெருகுற்ற கீர்த்திகொடு
புனிதமுறு தரும வாளன்
புத்தமுத மென்னமலர் வித்தகதன் வாக்கினுக்
பொலியுமன் பொழுகு துதியால்

இருவுற்ற மாண்பதம் பரவுற்ற செல்வனுயர்(வு)
எய்த்தமத வாதன் மார்தாம்
இகனுறவொ றுதென்று மகிழுறத் தனிகடொறும்
இயல்மணைச் சந்து நன்றும்
திருவுற்ற பொறையாளன் உரனுற்ற திறலாளன்
செகன்மாது மெச்ச வாழ்வோன்
தெய்வமணம் இவர்திருவ னந்தபுர மேவிவளர்
திருமூல மகா ராசனே.''

என்பது மகாராசாபதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௯௨. பரமசிவப் புலவர் - கடிகை
(19 - நூ)

இவர் எட்டையபுரத்தில் பெருநிலக்கிழாருடைய அவைக் களப் புலவராக அமர்ந்து பெருநிலக்கிழாருடைய அவையை அழகுபடுத்திக்கொண்டிருந்தார். நமச்சிவாயப் புலவர், வேங்கடபதி ஐயங்கார், எட்டீசுரக் குருக்கள், சிவகாமி நாதபிள்ளை முதலியோர் இவரோடு அவைக்களப் புலவராக அமர்ந்திருந்தனர். நமச்சிவாயப் புலவர் இயற்றிய 'வல்லிபரதம்' என்னும் நூலுக்கு இவர்,

''நற்றனைசேர் கழுகுமலைக் குமரனைச்சேர் வள்ளி
நாடகச்செந் தமிழென்னும் நங்கையைச்செய் தவத்தால்
பெற்றவனைத் தான்நமச்சி வாயஇயல் வல்லோன்
பின்புகுறி சுரம்ராகம் கெதியொடுதா ளமுமாய்
உற்றபணி யாத்சுப்ப ராமஇசை வல்லோன்
உரிமையுடன் அவனையலங் கரித்திளசை மூதூர்க்
கொற்றவன்கு மாரஎட்ட வேள்சந்தோ டிக்கக்
கொடுத்தனைதக்கண் டவர்களுங்கண் டாடிமகிழ்ந் தாரே.''

என்னும் பாடலால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை.

## ௧௧௯௩. பரமசிவம் பிள்ளை - பொ
(19 - நூ.)

இவர் பொன்னேரி சுந்தரம் பிள்ளை என்பவருடைய மகனாவார். பொன்னேரி சுந்தரம் பிள்ளை திருவருட்பிரகாச வள்ள

ஊர் வடலூர் இராமலிங்க அடிகளாருடைய தமையனாரின் மருகராவர். பரமசிவம் பிள்ளை ஆங்கிலத்தையும் தமிழையும் நன்கு கற்றுணர்ந்தார். தமிழிற் சொற்பொழிவுகளும் செய்யுளும் செய்யக் கூடியவர். சென்னை உதவிக் கணக்காய்வாளருடைய அலுவலகத்தில் எழுத்தாளராக அலுவல் பார்த்துக்கொண்டிருந்தார். செய்யப்ப முதலியார் என்பவர் இயற்றிய மும்மணிமாலை என்னும் நூலுக்கு இவர்,

"செய்யவயல் சூழ் புதுவை செய்யப்ப நாவலன்தான்
மெய்யன்போ டேயிசைத்தான் விண்மண்ணில்—உய்யுமவர்
மாமதுரை மீறும் மணிமாலை சூட்டல்கண்
டேலென்றார் மேலாம் இனிது."

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கககூச. பரமானந்த பாரதி

கடம்பை என்னும் ஊரில் இருந்த அந்தணர். "மாதவஞ் செய்பாரதி" "கன்னல் உலாவும் வயல்சூழ் கடம்பையான்" "செழுமுனி பாரதி" எனப் பலவாறு சிறப்பித்துப் பேசப்பெற்றவர். தமிழ்நூற் பயிற்சியில் வல்லவராகிய இவர், "பாரதி தீபம்" என்னும் நிகண்டு ஒன்றை இயற்றியிருக்கிறார். கலித்துறைப்பாவினால் இயன்ற அந்நிகண்டு பன்னிரண்டு தொகுதிகளையும் எழுநூற்று முப்பத்தேழு பாடல்களையுங் கொண்டது.

"சங்கரி மைந்தன் விநாயகன் சண்முகன் தன்முன்வந்தோன்
ஐங்கர னானை முகத்தோன் கணபதி ஆகுபரிப்
புங்கவன் மான்மரு கன்னொரு கொம்பன் பொழிமதத்தோன்
பங்கய மோதக பாசாங் குசம்பயில் பாணியனே."

என்பது காப்புப் பாடல்.

## கககூரு. பரமானந்தர்

யாழ்ப்பாணத்து நல்லூரிலே கந்தப்பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். ஆறுமுகநாவலருக்குத் தமையனார் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத்தேறியவர். பல ஆண்டுகள் அரசாங்க அலுவலில் இருந்தவர். விநாயக மூர்த்திச் செட்டியார் என்பவர் செய்த கதிரையாத்திரை விளக்கம் என்னும் நூலுக்கு

இவர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கிறார். இவர் பாடிய இசைப் பாடல்கள் பல அச்சாகி வெளிவந்துள்ளன.

"சுந்தரதல் ஊர்க்வாழ் சோதிவடி வேல்பிடித்த
கந்தன்மேற் கீர்த்தனங்கள் கட்டுரைக்கப்—பந்தமுறும்
அஞ்சநடை மாதுமையாள் அன்பிலருள் அத்திமுகன்
கஞ்சமலர்ச் செஞ்சரணங் காப்பு"

என்பது இசைப்பாடல்களின் காப்புப் பாடல்.

## ககக௯. பரமேசுரப் புலவர்

பதினாறாம் நூற்றாண்டில் திருவண்ணாமலையில் இருந்தவர். இவர் காலத்தில் திருவண்ணாமலையில் உண்ணாமுலை எல்லப்ப நயினார் என்னும் புலவர் ஒருவரும் இருந்தார். இவர்கள் இருவருக்கும் எவ்வாறோ பகையேற்பட்டு வளர்ந்துகொண்டிருந்தது. அந் நாளில் கவிராச சிங்கம் என்பவர் அண்ணாமலையார்மீது வண்ணம் ஒன்றுபாடி அரங்கேற்றஞ் செய்தார். அப்போது கவிராச சிங்கத்திற்கு மிகுந்த சிறப்புக்கள் நடைபெற்றன. ஊர்வலமும் நடைபெற்றது. உண்ணாமுலை எல்லப்ப நயினார் தெருவின் ஒரு மூலையில் நின்று ஊர்வலச் சிறப்புக்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரைக் கண்டவுடன் இவர்,

"கண்ணாய் மதிக்குங் கவிராச சிங்கம் கடந்துதிரு
அண்ணா மலையப்பர் மேல்வண்ணம் பாடிமுத் தாலத்திகொண்
டெண்ணா யிரமட வார்சூழப் பல்லக்கி லேறிவந்தான்
உண்ணா முலையெல்லன் மூலைகள் தோறும் ஒதுங்கினனே."

என்று பாடினார். உண்ணாமுலை எல்லப்ப நயினார் இப்பாட்டைக் கேட்டுவிட்டுச் சும்மா இருக்கவில்லை. இவர்மீதும் வசை பாடினார். அதனை உண்ணாமுலை எல்லப்ப நயினார் என்னுந் தலைப்பில் காண்க.

## ககக௦. பராங்குசதாச அடிகள்
## (1887)

இவர் வைணவ சமயத்தினர். திருமால்மீது பெருமால் கொண்டவர். அம்மால்மீது அரிய இசைப் பாடல்கள் பலவற்றைப் பாடியுள்ளார் அவை, "அரிபசனை கீர்த்தனை" என்னும்

பெயருடன் வழங்குகின்றன. பாடல்கள் யாவும் உலக வாழ்க்கையின் பொய்ம்மையை வலியுறுத்துகின்றன.

இராகம்—சங்கராபரணம்—அடதாளம்

பல்லவி

ஐயையோ மனமே அரியென்று சொல்லு
அழிந்துபோ முனமே— (ஐயை)

அனுபல்லவி

பொய்யான வாழ்க்கையை மெய்யாகவே நம்பி
வையகந்தனிற் சும்மா வாதைபட்டேன் போருய் (ஐயை)

சரணங்கள்

மூத்திரக்குழியாலே மாத்துகிற பெண்களை
நேத்திரத்தால் கண்டு நீயேன் மோசம் போருய் (ஐயை)

தேகமா னதநித்திய மாகையாலிந்தப்
போகத்துக் காசித்துப் புத்திகெட்டேன் போருய் (ஐயை)

நீங்ககலச் செய்யும் பராங்குச நாமனை
பாங்குடன் நினையாமல் பாழாய்நீயேன் போருய் (ஐயை)

## ௧௧௧௮. பராங்குச ராமாநுச ஏகாங்கி சுவாமிகள் (20 - நூ.)

சோழவள நாட்டில் கம்பர் பிறந்த திருவழுந்தூரில் வைணவ குடும்பத்தில் தோன்றியவர். இவருடைய இயற்பெயர் கிருட்டிண ராமாநுசர் என்பர். இவர் மன்னார்குடிக்குச் சென்று தக்க வைணவ அறிஞரிடத்தே வைணவ சம்பிரதாய நூல்களையும் இலக்கண இலக்கியங்களையும் நன்கு ஓதியுணர்ந்து பின்னர்த் திருத்தில்லையை அடைந்து அங்கு வசிக்கலானார். 'திருவரங்கத் திருப்பதிகம்' தனித்வயம் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

"சிமதே யென்னுமுத் தாவாக்கி யம்பெரிய
சிமாட்டி யோடு திகழும்
சிதர விறைப்போது மகலாத நும்மிருவர்
சேர்த்தியிற் ப்ராப்ய விர்த்தி

*ஆமிதிற் றிருமந்த்ர அந்தபத விவரணம*
*தறிமிதுன கைங்கரி யமாம்*
*அனவரத மிலையபெரு மாளெனச் சேர்த்தியினிக்*
*அடிமைசெய லேழுறைமை யாம்*
*ஏமமீது சித்திரசம் நாராய ணையபதம்*
*ஏற்றமாந் தலைவ தேவர்க்*
*கிதனிலே திருமேனி குணபூர்த்தி சொற்றிடும்*
*ஏற்றசே வடிக்கடிமையே*
*ஊமிரச மிந்தச் சதுர்த்தியே கைங்கர்யம்*
*உற்றதம கலைபோக் களாம்*
*உபயகா வேரிநடுப் பிரணவ விமானமொடும்*
*உறைதிரு வரங்க பதியே.''*

என்பது திருவரங்கப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௧௯௯. பரிதி

திருவள்ளுவ நாயனருடைய திருக்குறளுக்கு உரையெழு தியவர்களில் இவர் ஒருவர். இவருடைய பெயர் பருதி எனவும் வழங்கும். இவருடைய காலம் பரிமேலழகருடைய காலத்திற்கு முற்பட்டதாகும்.

## ௧௨௦௦. பரிப்பெருமாள்

திருக்குறள் உரையாசிரியர்களில் ஒருவர். சேதுநாட்டில் உள்ள செழுவை என்னும் ஊரிற் பிறந்தவர். திருக்குறள் உரையை அன்றிச் சொல்லிலக்கண நூல், காமநூல் முதலியவை களுஞ் செய்துள்ளார். இச்செய்தி,

*'' தென்னி மொழியியலைத் தேர்ந்துரைத்துத் தேமொழியார்*
*ஒன்னிய காமநூல் ஓர்ந்துரைத்து—வள்ளுவனூர்*
*பொய்யற்ற முப்பாற் பொருளுரைத்தான் தென்செழுவைத்*
*தெய்வப் பரிப்பெருமான் தேர்ந்து.''*

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகிறது.

## ௧௨௦௧. பரிமளக்கார பக்கீறுப் புலவர்

பரமக்குடியில் இருந்தவர். இசைப்பாடல்கள் பல இயற்றி யிருக்கிறார்.

## ௧௨0௨. பரிமாணனார்

சங்ககாலப் புலவர்களில் ஒருவர். குணசாகரர் மயிலைநாதர் முதலிய புலவர்களுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்திருந்தவர். இவர் யாப்பிலக்கண நூல் ஒன்று இயற்றினார். ஆனால் அந்நூல் மறைந்துபோய்விட்டது. பிற நூல்களின் உரையாசிரியர்களால் மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்ட சூத்திரங்கள் மட்டும் பிழைத்தன.

"அவற்றுள்,
ஆசிரிய மென்ப தகவலின் வழாது
கூறிய சீரொடுந் தளையொடுந் தழீஇ
முச்சீ ரடியா யீற்றயல் நின்று
மச்சீ ரடியிடை யொரோவழித் தோன்றியு
மவ்வியல் பின்றி மண்டில மாகியும்
மூவடி முதலா முறைசிறந் தேந்த்
தொள்ளா யிரத்துத் தொண்ணூற் றெண்ணிரண்
டெய்து மென்ப வியல்புணர்ந் தோரே."

என்பது சூத்திரங்களில் ஒன்று.

## ௧௨0௩. பல்காப்பியனார்

தொல்காப்பியருக்குப் பிற்பட்ட காலத்தில் இருந்தவர். இவர் இயற்றிய நூல்கள் பல் காப்பியம், பல் காப்பியப் புறநடை முதலியன. செய்யுளிய லுணர்த்துவனவாகிய இந்நூல்கள் மறைந்து போயின.

"கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்ந்த தொல்காப் பியன்றன்
ஆணையின் தமிழறிந் தோர்க்குக் கடனே."

என்பது பல்காப்பியப் புறநடையில் ஒரு சூத்திரம்.

## ௧௨0௪. பல்காயனார்

தொல்காப்பியருக்குப் பிற்பட்ட காலத்தில் இருந்தவர். இவர் பல்காயம் என்னும் இலக்கண நூலை இயற்றியிருக்கிறார். தொல்காப்பியம் விரித்துக் கூறியதை இவர் பகுத்துக் கூறினார் என்பது,

"தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்
பல்காய னார்பகுத்துப் பன்னினார்—நல்யாப்புக்
கற்றார் மதிக்கும் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தம் நூலுட் டொகுத்து."

என்பதனாற் பெறப்படுகின்றது. பல்காயநூலின் சூத்திரங்கள் யாப்பருங்கல விருத்தி, யாப்பருங்கலக்காரிகை உரை ஆகியவை களில் மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்டன. பல்காய நூல் மறைந்து போய்விட்டது.

"இமிழ்கடல் வரைப்பி னெல்லையின் வழாஅத்
தமிழியல் வரைப்பிற் றமினிது விளங்க
யாப்பிய றானே யாப்புற விரிப்பின்
எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோ
டிழுக்கா மரபின் இவற்றொடு பிறவும்
ஒழுக்கல் வேண்டும் உணர்ந்திசி னோரே."

என்பது சூத்திரங்களில் ஒன்று.

## ௧௨௦௫. பவர் ஐயர்

இவர் யூரேஷியர். தமிழ்மொழியைச் சாத்திரம் ஐயர் என்னுஞ் சைவப் புலவரிடம் நன்குகற்றார். திருநெல்வேலியில் வேதியர் புறத்தில் சமய ஊழியஞ் செய்தார். சமயசம்பந்தமாகப் பல நூல்களை எழுதினார். புதிய ஏற்பாட்டுத் தமிழ் மொழிபெயர்ப்பை நல்லமுறையில் திருத்தியமைத்தார். இவரால் எழுதப்பெற்ற நூல்கள் வேத அகராதி, நியாயப்பிரமாண விளக்கம், விசுவாசப் பிரமாண விளக்கம், தருமசாத்திரசாரம், இந்து மதத்துக்கும் பரப்பு மதத்துக்கும் இருக்கிற சம்பந்த விளக்கம் முதலியன.

## ௧௨௦௬. பவழக்கொடி சுவாமிகள் (1858)

இவர் சோம்பட்டு என்னும் ஊரில் இருந்தவர். சவுந்தரியந்தாதி என்னும் நூலைக் கலித்துறை, அறுசீர் விருத்தம், எழுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம் முதலியவைகளைக் கொண்டு பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

"இழை நுழை யாதிடை அழகுறு பூண்முலை
இளவெயின் மேனியிலே
நிழலுறு சாமள மணிவட மாடிய
நிலவெழு பூதியினன்
கழைபெறு தோளியை அழகொழு காநிறை
கருணையி னாமுதைத்
தொழுமவ ரேசிவ னடியவர் காணிது
சுருதியி னுறுரையே."

என்பது நூலின் முப்பத்திரண்டாவது பாட்டு.

## ௧௨௦௭. பவழப்பாடிப் புலவர்

இவர் பவழப்பாடி என்னும் ஊரில் இருந்தவராதலின் பவழப்பாடிப் புலவர் என்று பெயர்பெற்றிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. பிறப்பு, வளர்ப்பு, நல்வினை, தீவினை, மறுமைத் துன்பம், சிவபெருமான் பெருமை, அருள்பெற்றோர் அடையுஞ் சிறப்பு ஆகியவைகளைக் கூறும் சானந்தகணேசர் புராணம் என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். நூல் ஆறுசருக்கங்களையும் நானூற்றுத் தொண்ணூற்றெட்டுப் பாடல்களையுங் கொண்டு விளங்குகின்றது.

"பரசிவ மந்திரத் தைப்
பகர்ந்திடார் மகஞ்செய் தாலும்
தரைநதி களிற்றோய்ந் தாலும்
சருகினை அருந்தி னாலும்
உரனொடு தேச கால
பாத்திரம் உணர்ந்து பூமி
அருநிதி முதலீந் தாலும்
அவைதரும் பயனொன் றில்லை."

என்பது சிவமகிமைச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௦௮. பழநிக்குமார பண்டாரம்

இவர் வீரவனல்லூரில் வீரசைவ மரபில் தோன்றியவர். தந்தையார் பெயர் சுப்பிரமணியபண்டாரம். பழநிக்குமார பண்டாரம் எழுத்துச், சொல், பொருள், யாப்பு, அணி, என்னும் ஐந்திலக்கணங்களையும் நன்குகற்றுத் தேறினர். பின்னுளில்

கோட்டாறு என்னும் ஊரில் வாழ்ந்திருந்தபடியால் கோட்டாறு வித்துவான் என வழங்கப் பெற்றார்.

இவர் செய்த நூல்களுள் திருச்சுசிந்தைக் கலம்பகம், திருச்சுசிந்தை மும்மணிமாலை, கன்னியாகுமாரி இன்னிசைப் பாமாலை, திருமங்கை ஒருதிணைமாலை, திருவிரைக் கலம்பகம், திருவிரைப் புராந்தக மாலை, திருவிரை மரகதவல்லியம்மை பிள்ளைத்தமிழ், திருவிரை மரகதவல்லியம்மை இன்னிசைப்பாமாலை என்னும் எட்டுநூல்கள், "பழனிக்குமாருப் பண்டாரம் பிரபந்தங்கள்" என்னும் பெயருடன் வழங்குகின்றன.

இந்நூல்களைப் பாராட்டி நாகர்கோயில் கணேச பிள்ளை, தேரூர் தருமவிநாயகம் பிள்ளை, குளத்தூரையர், ஆறுமுக நயினார்ப் பிள்ளை என்போர் சிறப்புப்பாயிரங்கள் பாடியுள்ளனர்.

திருச்சுசிந்தை என்பது சுசிந்திரம். இது கன்னியாகுமரிக்கு மேற்கும் தென்கடலுக்கு வடக்கும், குமாரர் கோயில் வேள்வி மலைக்குக் கிழக்கும், மகேந்திரமலைக்குத் தெற்குமாய்க் கோட்டாறு என்னும் ஆற்றுக்கரையில் அமைந்த ஒரு சிவப்பதி. இந்திரன் வழிபட்டுத் தீவினை நீங்கப்பெற்ற இடம் என்பர்.

"ஓநம சங்கர சம்போவென் றன்பர்நைந் தோதுமொலி
வான மளக்கும் பொழிற்சுசிந் தாபுரி மன்னுதல்போல்
நான மலர்க்குழல் நாயகி யேநந்தம் நாயகன்றன்
மான மணத்தின் வருநதேர் மணியொலி வந்ததுவே."

என்பது திருச்சுசிந்தைக்கலம்பகத்தில் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைமகன் மீண்ட செய்தியைப் பாங்கி தலைமகட்குக் கூறுந்துறைக் கருத்தமைந்த ஒரு பாட்டு.

"சாவேத்தி யெங்கெங் குதிக்கினும்
அங்கங்குன் தாள்பணிந்து
நாவேத்தி யென்றும் உனைப்பாட
எற்குன் னலமருள்வாய்
காவேந்தன் அந்தணன் மாலோடு
மூன்று கணக்குறுமோர்
பூவேந்த ருந்தொழும் விரைப்பு
மீசப் புராந்தகனே."

என்பது திருவிரைப் புராந்தக மாலையில் ஒரு பாட்டு.

## ௧௨௦௯. பழநிச்சாமி அடிகள்

இவர் வேதாந்த நூல்களிலே சிறந்த புலமை பெற்றவர். ஈசூர் சச்சிதானந்த அடிகளாருக்கு மாணவராகி வேதாந்த நூல் களை யோதியுணர்ந்தவர். சிவஞான போதத்திற்கு இவர் "வேதாந்த தீபிகை" என்னும் உரை இயற்றியுள்ளார்.

"தத்துவமல் லாத சராசரங்கள் எங்கணுள
தத்துவத்தைச் சோதித்துத் தானுநற்—சித்துறையே
அன்றிப் பிறிதிலையால் ஆய்ந்துய்ம்மின் இந்நூலை
அன்றிச் சுருக்கமெனுந் தாம்."

என்பது வேதாந்ததீபிகை உரையின் இறுதியிற் கூறிய செய்யு ளாகும். இவர் தஞ்சைமாவட்டத்தில் தண்டாங்கோரை என் னும் ஊரில் அகமுடையார் குலத்தில் தோன்றியவர்.

## ௧௨௧௦. பழநிச்சாமிச் சிவாச்சாரியார்

(20 - நூ.)

இவர் திருக்கோவலூர் பாணிபாத்திர தேசிகர் ஆதீனத் தலைவர் ஆறுமுக சிவாச்சாரியார் என்பவர்க்குப் புதல்வராகத் தோன்றியவர். துளுவவேளாள குலத்தினர். திண்டிவனம் உயர் தரப் பாடசாலையில் தலைமைத் தமிழாசிரியராக இருந்தவர். மதுரை இராமையாப் பிள்ளை என்பவர் எழுதிய 'துளுவ வேளாளர் வரலாறு' என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பா யிரம் பாடியுள்ளார்.

"துதிபூத்த நறுங்கொன்றைச் சடைமகுடப்
பரனுமெம் பராசத்தித் தோகையாரும்
கதிபூத்த மனுகுலத்துத் தழைத்திடத்தங்
கருணைநதி சுரந்து பாய்ச்ச
மதிபூத்த தம்மரபும் தம்மொழியும் தந்நாடும்
துளுவமென மலர வேளாண்
நிதிபூத்த தகவுடைய நிமலகுணத் தவரன்றோ
துளுவரென நிகழ்த்து மேலோர்."

என்பது சிறப்புப்பாயிரப் பாடலுள் ஒன்று. இப்பாடலால் இவர் புலமைத் திறம் நன்கு தெரியும். இவர் இயற்றியனவாக வேறு நூல்களோ தனிப்பாடல்களோ எதுவும் கிடைக்கப் பெற்றில.

"ஏறுறு புதுவை வாழ்வர தற்கன்
பேய்ந்தேனைக் குரியசற் குருவாம்
பேருறும் பெரிய சாமிவேள் நன்று
பேசிய கலம்பகத் துற்ற
நாருறுஞ் சுவையைக் காணின்முன் னோர்கள்
நவில்வரோ கலம்பகப் பாவில்
சீருறும் இரட்டைப் புலவர்மே லென்றே
செந்தமி ழோர்ந்தநா வலரே."

என்றும் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௧௨௧௫. பழநியப்ப அடிகள்

(20 - நா.)

வாலை சமுத்திரம் என்னும் முரட்டுமாநகரில் இருந்த குப்பானந்த அடிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றுச்சிறந்து விளங்கியவர். தமிழ்ப் புலமை மிக்க இவர் பவானி சங்கமேசு-வேதநாயகி அம்மன் பதிகம் முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

"முன்னாளி லேசெய்த பாவதோ டங்களால்
மூடனா யுற்பவித்தேன்
முத்தமிழ் தெரியாமல் ஆசையெனு மொருபெரிய
மூதேவி யான்மயங்கிப்
பின்னுள்ள பிறவியில் பேய்போல வாடிடும்
பித்தனை உனக்கடிமையாய்ப்
பேர்வைத்த தெய்வமே உனதுசொற் படியான
பெருமையுன ஆலயத்தில்
என்னைவந் திருவென்ன ஏற்படுத் தியபடிக்
கெளியனேன் கூடவந்தே
இன்பமொடு பொருளுதவி தந்துகோ விற்பூசை
எப்போது மாகவருள்செய்
மின்னலென வொளிவிசு காவிரி பவானியும்
விளங்குதண் ணாறூரினில்
விரவுவன வதரியுறை சங்கமே சுரலிங்க
வேதநா யகியம் மையே."

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. இவர் இயற்றிய நூல்களிற் சில அச்சாகி வெளிவந்துலவுகின்றன. சில வெளிவந்ததாகத் தெரியவில்லை.

## கஉகசு. பழநியப்ப அய்யா - சேவு - பழ.

(19 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் செட்டிமார் நாட்டில் காரைக்குடியில் தனவணிக குலத்தில் தோன்றியவர். கோயிலூர் வேதாந்த மடாலய வழிமுறையைச் சேர்ந்தவர். மேற்படி மடாலயத்தில் எழுந்தருளியிருந்த சிதம்பரஞான தேசிகர் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர். முத்துராமலிங்க ஞான தேசிகர் வரலாறு, தோத்திரப்பாமாலை முதலிய பல நூல்களை இவர் இயற்றியிருக்கிறார். இவர் இயற்றிய தோத்திரப்பாமாலை என்னும் நூலில் அறிவு, அம்மானை, அடைக்கலம் முதலிய பல வகையான எண்ணூறு பாடல்கள் அடங்கியுள்ளன. இந் நூலுக்குச் சதாவதானம் பால சுப்பிரமணிய ஐயர், புதுக்கோட்டை இராயவரம் இராமசாமி ஐயர், வே. சாமிநாதையர், திருவாவடுதுறை தொண்டர் சிர்பரவுவார் தம்பிரான் சுவாமிகள், காரைக்குடி சுந்தரதேசிகர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"திருமலி கழனித் திருநக ரெழுந்த
தேவனும் எமதுசற் குருவே
கருவிடை அழுந்து துன்பம தகற்றிக்
கண்ணளித் தென்னையாண் டருள்வாய்
திருமல மாக நித்தமுந் துதிக்க
நேசமாய்த் திருவருள் புரிவாய்
சொருபமாய் நிறைந்த சோதியாம் பொருளே
சுத்தமாஞ் சிவசிதம் பரமே."

என்பது சிவசிதம்பர சங்கீர்த்தனம் என்னும் பகுதியில் ஒரு பாட்டு. முத்துராமலிங்கஞான தேசிகர் வரலாறு ஒரு சிறந்த வரலாற்று நூலாகத் திகழ்கிறது.

## கஉகஎ. பழநியப்ப ஐயா - சொ

(1898)

இவர் சொர்னநாத புரம் என்னும் ஊரினர். வெயிலுகந்த விநாயகர் பதிகம், பழநிமலைச் செட்டியார் மாலை, கல்லுளி மாலை, பொன்மாரியந்தாதி, விடுதிக்கவிகள் முதலியன பாடியிருக்கிறார்.

"வல்லாருக் கும்பெரிய செட்டியாரே—பொல்லா
மயலையும் பயமுறுத்துஞ் செட்டியாரே
கல்லாத மூடருக்குச் செட்டியாரே—யொரு
கலைஞரும் அறியாத செட்டியாரே
பொல்லார்க்கும் பொல்லாத செட்டியாரே—அன்பு
புரிவார்தமக்கினிய செட்டியாரே
தில்லைபுரியனருள் செட்டியாரே—எற்குத்
திருமிகத் தாருமையா செட்டியாரே."

என்பது இவருடைய செட்டியார் மாலையில் ஒரு பாட்டு.

## கஉகஅ. பழநியப்பக் கவிராயர்
## (19 - நூ.)

இவர் புளியனூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். தோத்திரமாலை என்னும் நூல் பாடியுள்ளார்.

"அந்தரி வாலை மனோன்மணி அமலை
ஆரணி சதுர்மறை போற்றும்
சுந்தர விடத்தில் பாகம துற்ற
சூலிசண் டிகைசுர நதியே
பந்தபா சத்தின் அலைந்திடுஞ் சிறியேன்
பாவம தகற்றியாண் டருள்வாய்
கந்தமே மிருந்த புளியனூர்க் கரிய
காளிநா ளும்பிகை யுமையே."

என்பது முதற்பாட்டு. இந் நூலுக்கு, வாகரை பழநியப்ப செட்டியார், பழநிமௌனகுரு ருத்திரமூர்த்தி, பொருளூர் கனகசபை வேங்கடாசலக் கவிராயர், பழைய ஆயபுரி இராமலிங்கக் கவிராயர், புளியமாநகர் பழநிச்சாமிக் கவண்டர், பழநி இரத்தினகிரி நாவலர், வாலசமுத்திரம் மதுரமுத்துச் செட்டியார், சென்னை பாலகுருசாமிகள் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கஉககூ. பழநியப்பக் குருக்களையர்
## (1883)

இவர் பாறைநகர் என வழங்கிய பிரமபுரியில் சுத்த சைவ முத்துச்சாமிக் குருக்களையர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். புலமைப் பண்பு நன்கு அமையப் பெற்ற இவர்

மாணவர் பலருக்குக் கல்விகற்பித்துக் கொண்டிருந்தார். இவர் இயற்றிய நூல்கள், திருப்பழனியங்கிரிப் பதிகம், உய்யற்பத்து, முருகர் உயிர் வருக்கமாலை என்பன.

"நிலமிசை யானுன் இணையடி பணிந்து
நெறியலா நெறியினிற் பொருந்தைம்
புலவழி கடந்து மடநலார் மயலாம்
பொய்மைநீத் துய்யுநாள் உளதோ
மலர்தலை யுலகின முலையெனப் பொலிந்து
வளரொளித் தரளநேர் அருவி
குலமணி கொழிக்கும் பழநியங் கிரிவாழ்
குருபர குமரதேசிகனே"

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டி இராம சாமி முதலியார், காளியப்ப செட்டியார், அரங்கசாமிப் பிள்ளை, ஆறுமுகம் பிள்ளை, கோவிந்த பணிக்கர் ஆகியோர் சிறப்புப்பா யிரம் பாடியுள்ளனர்.

## ௧௨௨௦. பழநியப்ப செட்டியார் - வா (19 - நூ.)

இவர்வாகரை என்னும் ஊரில் இருந்தவர். பழநியப்ப கவி ராயர் என்பவர் இயற்றிய தோத்திரமாலை என்னும் நூலுக்கு இவர் பின்வருஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"தடவரை குலுங்கநட மிடுமா மயிற்றுரக
சண்முகனை சன்றுலகெலாம்
தான்பணிய வேகிருபை பாலித்து மயிடனைச்
சங்கரித் ததிகுணன்பால்
திடமொடு குலாவிநற் புனியமா நகரிலுறை
சீர்கரிய காளிதேவி
செம்பொற் பதந்திற் கலங்கார கவிமாலை
செய்துநற் சீர்த்திபெற்றன்
கடகளி முகத்தனிரு திருவடி வழுத்துசீர்க்
கருணைவே வாளர்திலகன்
கல்விப்ர சங்கனுயர் வியாசகோத் ராதிபன்
கருணை கடாட்சதிபன்
மடவரல்கள் மடலெழுத வரும்நாக ரீகவேள்
மதுரகவி நாவலர்க்கு
வடமலை நிகர்ப்பநிதி அருளொடு குவிப்பமதி
வளர்பழநி யப்பமுகிலே."

## கஉஉக. பழநியாண்டி யாசாரி
(19 - நூ.)

பாண்டிவள நாட்டில் கடலாடி என்னும் ஊரில் விசுவப் பிராமண குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் வேலாச் சாரி. சங்கநூல்களையும் பிற நூல்களையுங் கற்றுச் சிறந்த புலமை பெற்று விளங்கினர். பெருநாழி இராமலிங்கம் பிள்ளை என்பவர் இயற்றிய கந்தபுராண வண்ணப்பாட்டிற்கு இவர்:

"சுந்தரன மதிநிறைப்பத் தொடுமொழியும்
வளந்தெரியன் கவின்கொள நாட்டும்
சுந்தரன மதியுதய னிருநகர்நேர்
பதிபொதுவைக் கூழணிச் செந்நெற்
சுந்தரன மதிகளங்க ணைகரா
ளரசர்பணி கனக மாயோ
சுந்தரன மகிழ்க்குடையார் நவநீத
கிருட்டிணைம வருட்கரன் பரதே."

"மணிக்கடந்தார் வரதகங்கைப் புகழ்விசைய
ராமலிங்க வல்லோன் சூளரந்
தணிக்கடந்தார் வரதகந்தன் கதையுலந்
துளங் வண்ணஞ் சாற்ற வோர்ந்து
பணிக்கடந்தார் வரமுறத்தென் மலையுனியுங்
கலைதெரிந்துப் பகர்வோ ரூற்றன்
துணிக்கடந்தார் வரகவிப்பெண் வெண்டரித்தா
னாதிவிளைக் கலையே தன்றே."

என்னும் பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கஉஉஉ. பழநியாண்டி பிள்ளை
(20 - நூ.)

இவர் சேலம் மாவட்டத்தில் காக்காவேரி என்னும் ஊரில் கந்தசாமிப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி இலக்கண இலக்கியங்களை நன்குகற்றுப் புலமையடைந்துசிறந்து விளங்கினர். இருசாலூர் என்னும் ஊரில் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துக்கொண்டு அதில் கணக்காயராகத் தொழில்புரிந்து கொண்டிருந்தார். நன்கு செய்யுள் பாடுந்திறமுடைய இவர் கருணீகர் புராணம் என்னும் நூலுக்கு இயற்றிய சிறப்புப்பா யிரப் பாடல்களில் ஒன்று,

"அத்திரிமா முனிவரன்கோத் திரனப்பா
சாமிமகிழ் அருமை மைந்தன்
எத்திரிபும் அறவுணர்ந்தோன் சீர்கருணர்
குலஞ்செய்தவ உருவீ தென்ன
அத்திரிவேந் திரன்வரத்தின் வரும்வரத
நஞ்சையவேள் அறைந்தான் யார்க்கும்
பத்திமுத லியநான்கும் சனகாதி
யோர்க்குரைசெய் பரமன் போன்றே."

என்பதாகும்.

## கஉஉ௩. பழநியாண்டிப் புலவர்
(1890)

இவர் பாண்டிவள நாட்டிலே திருக்குற்றாலத்திற்கு அணித்தாக இருக்கும் வாசுதேவ நல்லூரில் பெரும் புலவராக விளங்கியிருந்தார். பெரிய சுப்பாரெட்டியார் என்பவர் பாடிய அன்னதான மகத்துவ புராணம் என்னும் நூலுக்கு இவர்,

"அன்னத் துவசன் விதித்த உயிர்க்(கு)
அன்னந் துவசம் நாட்டியனம்
கன்னற் பாகு கனிதேன்பால்
கலந்து கனிந்தெக் காலுமருள்
செந்நெற் பழன வளஞ்சேரும்
தெய்வந் திருக்கூ வலப்புரஞ்சீர்
மன்னத் தரும புராணமென
வரைந்தான் மகிழ்சுப் பையவேளே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் ~~இயற்றிய நூல்~~ திருமலைக்குமாரகவி இவைப்பற்றிய விவரந் தெரியவில்லை. அவர் இரட்டைமணிமாலை என்னும் நூலை இயற்றியுள்ளார்

## கஉஉ௪. பழநிவேல் உபாத்தியாயர்
(1888)

இவர் திருச்செங்கோடு என்னும் ஊரில் இருந்தவர். சிற்றம்பல நாவலர் என்பவரிடத்தில் இலக்கண இலக்கியங்கள் கற்றுப் புலமை யெய்தினர். பழநி மாம்பழக் கவிச்சிங்க நாவலர் இயற்றிய சந்திர விலாசம் என்னும் நூலுக்கு இவர்,

"ஆம்பல்தோணித் தாத்திரட்டு மரிமருகன்
மூநகமென அவனி யோர்கள்
தாம்புகழும் வேன் நறிச்சி நகர்க்கதிபன்
வேலப்பன் தரிக்க நாளும்
தேம்பலைசொற் சந்திரவி லாசமெனும்
நூற்ப.றுலவற் றெரியல் தந்தான்
பூம்பழனம் நம்பழநி மாம்பழக்
கனிச்சிங்கப் புலமை யோனே"

என்றுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கஉஉரு. பனம்பாரனார்

செந்தமிழ் முனிவராகிய அகத்தியனாரிடம் தமிழ் கற்ற மாணவர்கள், அதங்கோட்டாசிரியர், பனம்பாரனார், செம்பூட் சேய், வையாபிகர், அவிநயர், காக்கை பாடினியர், துராலிங்கர், வாய்ப்பியர், கழாரம்பர், நற்றத்தர், வாமனர், தொல்காப்பியர் என்னும் பன்னிருவராவர் பனம்பாரம் என்பது ஓர் ஊராக இருக்கலாம் என்றும் அவ்வூரில் தோன்றியபடியால் இவர் பனம் பாரனார் என்று பெயர் பெற்றிருக்கக்கூடும் என்றும் அறிஞர்கள் எண்ணுகின்றனர். தொல்காப்பியரோடு உடன்கற்ற மாணவர் பன்னிருவரும் தனித்தனியே தம் பெயரால் இலக்கணம் இசை முதலிய நூல்களை இயற்றினர். அவற்றுள் தொல்காப்பியர் இயற்றிய தொல்காப்பியத்தைத் தவிர ஏனையோர் நூல்களெல் லாம் மறைந்தொழிந்தன. பனம்பாரனார் தம்முடன் கற்றவ ராகிய தொல்காப்பியருடைய தொல்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். 'தன்னாசிரியன் தன்னொடு கற்றோன், தன்மாணாக்கன் தகுபுரை காரனென்று, இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே" என்பவாகலின் இவர் தொல்காப்பியத் திற்குச் சிறப்புப்பாயிரஞ் செய்தார். தொல்காப்பியத்திற்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரம்,

"வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு

முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்
தறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரிறபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே ''

என்பது. பிற் காலத்தில் அஃதாவது சங்ககாலத்திலும் பனம் பாரனார் என்னும் பெயரையுடையவர்கள் சிலர் இருந்திருக்கலாம் என்பது சிலருடைய கொள்கை.

இவர் "பனம்பாரனார் சூத்திரம்'' என்னும் நூல் ஒன்றையும் இயற்றினார். ஆனால் அந்நூல் இக்காலத்தில் இல்லை.

## கஉஉகூ. பனி அகமது மரைக்காயர்

இவர் சின்னச்சீறா என்னும் நூலை இயற்றியிருக்கிறார்.

" மதிகெடும் கஃபென்பான் உம்
மாட்டின்வந் தரிய பாதம்
துதிசெய்து பரவு வானேல்
தொடுகடல் உடையாய்ச் சூழ்ந்த
பதியின்முன் செய்த குற்றம்
பழிப்புள்ள தெவையும் நீக்கிக்
கதிபெறு தீனில் கூட்டும்
கருத்துமக் குளவோ என்றார்.''

என்பது சின்னச் சீறாவில் ஒரு பாட்டு.

## கஉஉஎ. பாகம் பிரியான் புலவர்

படிக்காசுப் புலவர் காலத்தில் கொங்கு நாட்டில் இருந்த ஒரு புலவர். குமாரசாமிக் காங்கேயரின் அவைக்களத்தில் இருந் தவர். படிக்காசுப் புலவர் பாடிய பாம்பலங்காரர் வருக்கக் கோவையைப் பாராட்டிப் பாடியதுடன் தனிப்பாடல்களும் பாடி யிருக்கிறார்.

## ௧௨௨௮ பாகை அழகப்பன்

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களில் இவரும் ஒருவர். ஒருவர் கூறுஞ் செய்யுளை ஒரு முறை கேட்ட அளவில் தம்முடைய உள்ளத்தில் பற்றிவிடக் கூடிய நினைவாற்றல் பொருந்தியவர். அதனால் இவருக்கு, "ஏகசந்தக் கிராகி" என்னும் பெயரும் வழங்கியது. இவர் வடமலையப்ப பிள்ளையன் என்பவர்மீது வடமலை வெண்பா என்னும் நூலைப் பாடியிருக்கிறார். வடமலையப்ப பிள்ளை திருமலைநாயக்கரின் காரியத் தலைவராக வேலை பார்த்தவர். பாகை அழகப்பன் என்னும் புலவரை இவர் ஆதரித்தமையால் வடமலை வெண்பா என்னும் நூல் இவர்மீது பாடப்பெற்றது. மேற்படி நூல் நூற்றெட்டு வெண்பாக்களால் ஆகியது. பின் இரண்டடிகள் திருக்குறளாக அமையுமாறு இயற்றப் பெற்றது இந்நூல்.

"சீரோங் குலகை மனுவினைப் போலச் சிறந்தளித்த
பேரோங்கு காவை வடமலை யப்பநற் பிள்ளையன்மேல்
பாரோங்கு வன்னவர் பாவுடன் வெண்கவி பாடுதற்குத்
தாரோங்கு பூங்குழல் வாணியென் நாவினில் தங்கினளே."

என்பது கலைமகள் வணக்கச் செய்யுள்.

"வாயால் இகழ்ந்துரைத்து மாண்டான் சிசுபாலன்
மாயோனைக் காவை வடமலையே—ஆயுங்கால்
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

தென்னு தமிழ்ச் சங்கத்தார் சீர்புகழ்ந்து பாடினர்
வள்ளுவரைக் காவை வடமலையே—ஒள்ளொளியாய்க்
கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து."

என்பன நூலில் இரண்டு பாடல்கள்.

## ௧௨௨௯. பாச்சில்வேள் நம்பன்

இப் புலவர் 'பாச்சில்' என்னும் ஊரைச் சேர்ந்தவராக இருக்கலாமென்று பெயரைக்கொண்டு ஊகிக்கின்றனர். இவர் பாடிய வெண்பாக்கள் பல கற்சாதனங்களில் பொறிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

"வெங்கட் பொருகயல்சேர் வெல்கொடியோன் வாண்மாறன்
செங்கட் கரும்பகடு சென்றுழக்க—வங்குலந்தார்
தேரழுந்தி மாவழுந்தச் செங்குருதி மண்பரந்து
ஊரழுந்தி யூரென்னு மூர்."

என்பது அவ்வெண்பாக்களில் ஒன்று.

## ௧௨௩௦. பாண்டிக் கவிராசர்
## (16 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டினர். 'வீரமாலை' என்னும் பெயருடைய நூல் ஒன்றை இவர் இயற்றினார். இதன் பொருட்டு இவருக்குப் பூதானம் வழங்கப்பெற்றது. "ரோத்திரி வருடம் தைமீ 30உ ஸ்ரீமது வெங்கள நாயக்க ரய்யன் காரியத்துக்குக் கர்த்தரான தீத்தாரியப்பரும் பொன்னமராபதி நாட்டுத் தென்பற்று இராசிமங்கலம் ஊரவரும் புலவர் பாண்டிக் கவிராசர் வீரமாலை பாடுகையில் இவற்கு இறையிலியாக விட்டநிலம் மாரனேரி வயலில் வேம்படிப் புலவர் செய்அஞ்சாள் நடுகையும் சந்திராதித்தவர் வரைக்கும் பற்றி அனுபவிக்கக் கடவாராக" என்பது கல்வெட்டு.

## ௧௨௩௧. பாண்டியன் மனைவி

இவள் வரதுங்கராம பாண்டியனுடைய மனைவி. சிறந்த தமிழ்ப் புலமை பெற்று நூலாராய்ச்சி செய்தலையே இனிய பொழுது போக்காகக்கொண்டிருந்தவள். பாண்டியனைச் சில காலம் பிரிந்திருக்க நேரிட்ட ஒரு சமயத்தில் இவள்;

"என்னையவர் அறமறந்தும் யானவரை
மிகநினைந்திங் கிருந்து வாட
முன்னைவினைப் பயன்தானோ இப்பிறப்பில்
செய்ததவம் முடிந்த வாறோ
கன்னன்மதன் அபிராமன் வரதுங்க
ராமனியற் காசி நாட்டில்
அன்னவயற் குருகினங்கா ளினியெவ்வா
றுயிர்தரித்திங் காற்று மாறே.

செப்பாரும் முகிழ்முலையார் எல்லாரும்
கணவருடன் சேர்ந்து வாழ

ஒப்பாரும் இல்லாவென் கணவருடன்
யான்கூடி உறவா டாமல்
வெப்பாலும் மிகுகாமத் துயராலும்
நாடோறும் மெலிந்து வாடி
இப்பாடு படவென்றோ இறையவனென்
தலையோட்டில் எழுதி னானே."

என்னுஞ் செய்யுட்களைப் பாடித் தன்னுடைய ஆற்றாமையைப் புலப்படுத்தினாள். இவள் இயற்றிய தனிப்பாடல்கள் இன்னும் பலவுள.

## ௧௨௩௨. பாதூர் சண்முகம் பிள்ளை
## (19 - நூ.)

இவர் பாதூரில் தோன்றியவர். இவர் காலத்திய புலவர்கள், பெருமாத்தூர் நாகப்ப முதலியார், புவனகிரி சிவசிதம்பர பாகவதர் முதலியோராவர். நல்ல புலமைபெற்று விளங்கிய இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. பெருமாத்தூர் நாகப்ப முதலியார் என்பவர் இயற்றிய அத்வைத சிந்தாமணி என்னும் நூலுக்கு இவர்,

"சீர்பூத்த செங்கமல நறவொழுகு கழனிசூழ்
தில்லையம் பதியின் மேல்பால்
திரைமிகு வேதநதி சூழ்பெரிய மாத்தூரர்
செய்நதற் பேற்றி னாலும்
ஏர்பூத்த நவவீரா மரபிலரு ணாசலம்
தன் றநா கப்பன் என்போன்
இசையான நால்வேத சாரமா வாக்யமும்
எண்ணான்கு உபநி டதமும்
பார்பூத்த சட்சமய சாத்ரபே தங்களும்
பதினெண் புராண முதலாய்ப்
பல்லோர் உரைத்தவற நூலெலாந் தம்முளே
பார்த்துத் தெளிந்த பின்னர்
கார்பூத்த கொண்மூவென உலகுளோ ருய்ந்திடக்
கருணையாய்த் திராவி டத்தில்
கழறினன் அத்துவித ஞானசா ரம்மெனும்
கனகசிந் தாமணி யரோ."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கஉ௲௫. பாபநாச முதலியார்

இவர் பதினேழாம் நூற்ருண்டிலே கும்பகோணத்திலே வாழ்ந்திருந்தவர். இவர் காலத்தில் தஞ்சைமாநகரில் மகாராட்டிரராகிய ஏகோசி என்பவர் அரசராக அரசாட்சி செய்துகொண்டிருந்தார். இவர் இசைப்பாடல்கள் பலவற்றை இயற்றியிருப்பதுடன் கும்பேசர் குறவஞ்சி என்னும் நூலையும் இயற்றியிருக்கிருர்.

கும்பகோணம் என்னும் குடந்தையில் எழுந்தருளிய கும்பேசர்மீது ஒருதலைவி காதல்கொண்டு காமநோயினுல் துன்பம் அடைகிருள். நிலவையுந் தென்றலையும் காமனையும் வெறுத்துப் புலம்புகின்ருள். அப்பொழுது குறத்தி யொருத்திவந்து தன் நாட்டு வளத்தையும் மலைவளத்தையும் சொல்லிக் குறிகூறுகிருள். கும்பேசர் திருவருள் நினக்குண்டாகும் என்கிருள். அப்பொழுது அவளைத் தேடிக்கொண்டு அவளுடைய தலைவனுகிய குறவன் வருகிருன். குறத்தியுங் குறவனுஞ் சேர்ந்து கும்பேசரைப் போற்றுகிருர்கள் என்னுஞ் செய்திகள் இக்குறவஞ்சியில் அடங்கியுள்ளன. கும்பேசர் குறவஞ்சியில் ஒரு பாட்டு:

" பவளமே னியிற்கவளக் களிற்றுரியார்
திருக்குடந்தைப் பதியின் மேவு
திவளணிசேர் கொங்கைமங்கை பங்கரெங்கள்
கும்பலிங்கர் திருவி திக்கண்
தவளவிடை மேற்பவனி கண்டுமயல்
கொண்டுமலர்த் தைய லென்னத்
துவளுமிடைச் செகன்மோகி னிப்பெணக
முருகிமிகத் துதிக்கின் ருளே "

## கஉ௲௪. பாம்பாட்டிச் சித்தர்

நமது நாட்டில் ஏறக்குறைய நாற்பதுக்குமேற்பட்ட சித்தர்கள் வசித்திருந்தனர். அவர்களாவார் சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர், அகத்தியர், போகர், கோரக்கர், கயிலாசநாதர், சட்டைமுனி, திருமூலர், நந்தி, கூன்கண்ணர், மச்சமுனி, வாசமுனி, கூர்மமுனி, கமலமுனி,

இடைக்காடர், புண்ணாக்கீசர், சுந்தரானந்தர், உரோமரிஷி, பிரமமுனி, புலிப்பாணி, கருவூரார், கடுவெளியார், அகப்பேய், அழுகணி, குதம்பை, பாம்பாட்டி முதலியோராவர்.

இப்பாம்பாட்டிச் சித்தர் பொதுவான பாம்பாட்டியல்லர். புராண அறிவிலும், வேதாந்த சித்தாந்த அறிவிலும், யோகத்திலும் தவத்திலும் பேரறிவு பெற்றிருந்தார். இவர் பாண்டி நாட்டின் கண்ணுள்ள காடுகளில் தங்கித் தவஞ்செய்துகொண்டிருந்தார். ஒருநாள் தவத்தினின்றும் நீங்கி வெளியே சென்றுகொண்டிருந்தார். ஓரிடத்தில் ஒருபெரிய பாம்பு இறந்துகிடந்தது. அதன்மீது இவருக்கு மிகுந்த இரக்கம் உண்டாயிற்று. அப்பாம்பை உயிர்ப்பிக்க வேண்டும் என்று தமது உள்ளத்தில் எண்ணினார்

"ஆடுபாம்பே—தெளிந் தாடுபாம்பே—சிவன்
அடியிணை கண்டோமென் றாடு பாம்பே
தெளிந்து தெளிந்துதெளிந் தாடுபாம்பே—சிவன்
சீர்பாதங் கண்டுதெளிந் தாடுபாம்பே."

என்று தொடங்கும் பாடலைப் பாடினார். அவ்வளவில் அப்பாம்பு உயிர்பெற்றெழுந்து ஆடத்தொடங்கியது. இப்புதுமையினைக் கண்ட வேறுசில தவசிகள் இவருக்குப் பாம்பாட்டிச் சித்தர் என்று காரணப் பெயர் கொடுத்துவிட்டனர். அன்றுமுதல் இப்பெயரே வழங்க இவருடைய இடுகுறிப் பெயர் மறைந்து போய்விட்டது. மேலும் இவர் தம் பாடல்களிலெல்லாம் பாம்பைக் குறிப்பிட்டே பாடியிருக்கிறார். பாடல்கள் யாவும் மெய்யறிவுக் கருத்துக்கள் செறிந்து விளங்குகின்றன. இவருடைய பாடல்கள் இன்றும் எல்லோராலும் பாடவும் படிக்கவும் பெற்றுவருகின்றன.

"செண்டுமுலை வண்டுவிழி கொண்டதோகையைச்
சித்தப்பாம்பால் விழுங்கியே சீயென்றொறுத்தோம்
குண்டுகட் டெருமையேறும் கூற்றப்பருந்தைக்
கொன்றுதின்று விட்டோமென் றாடாய்பாம்பே."

"சிக்குநாறுங் கூந்தலைச் செழுமேகமாய்ச்
செப்புவார்கள் கொங்கைதனைச் செப்புக்கொப்பதாய்
நெக்குநெக் குருகிப்பெண்ணை நெஞ்சில்நினைப்பார்
நிமலனை நினையாரென் றாடாய்பாம்பே."

"மலக்குடமீதிலேமஞ் சட்பூச்சென்றும்
வலக்கும் புழுக்கூட்டின்மேல் வண்ணத்தோலென்றும்
சலக்குழிக் குள்ளேநாற்றஞ் சார்ந்தசேறென்றும்
தானறிந்து தள்ளிநேறுமென் றுடாய்பாம்பே."

என்பன இவருடைய பாடல்களிற் சில. எல்லாம் வல்ல சித்தராக விளங்கிய இவர் கொங்குவள நாட்டில் மேலைச் சிதம்பரமாகிய திருப்பேரூர்க்கு வடமேற்கில் உள்ள மருதமலை என்னும் மலையை அடைந்து மலையின் ஒரு பக்கத்தில் நெடுங்காலந் தவம் புரிந்துகொண்டிருந்து விடுபேற்றை யடைந்தனராம். சித்தரின் மாணவர் சிலர் சித்தரின் உடலை மலைமீது கொண்டுபோய்ச் சமாதி வைத்துச் சித்தரின் உருவத்தையும் அமைத்துப் பூசை செய்தனராம் நாளடைவில் அவ்விடம் முருகன் திருக்கோயிலாக மாறிவிட்டது என்கின்றனர். இவருடைய பாடல்கள் பதினெண் சித்தர்கள் ஞானக்கோவை என்னும் நூலிற் சேர்த்து அச்சிடப் பட்டு எல்லோராலும் விரும்பிப் படிக்கப்பெறுகிறது.

## கஉஙரு. பார்த்தசாரதி நாயுடு - பா. மு. (1914)

முருகதாச சுவாமிகள் எனவும் தண்டபாணி சுவாமிகள் எனவும் வண்ணச்சரபம் எனவும் திருப்புகழ்ச் சுவாமிகள் எனவும் பெயர் பெற்று விளங்கிய பெரியாரிடத்திலே இவர் மாணவராகிக் கல்வி கற்றூர். அப் பெரியாருக்கு அடிமைபூண்டு ஒழுகினர். விருதுப்பட்டி சத்திரிய வித்தியாசாலை உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். சந்தப்பாக்களை விரைவாகப் பாடுவதில் இவர் புகழ் பெற்றமையால் இவருடைய பெயர் சந்தப்புலி எனவும் வழங்கி நின்றது. நாராயணசாமி நாயுடு என்பவர் இயற்றிய நெட்டூர்ப் புராணத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியவர்களில் இவரும் ஒருவர்.

"நத்தப்பெறு பாவாணுயர் நாகத்தவ ரமுதாம்
நட்புச்சொலி ஞனேகவி நாளுக்கொரு முகிலே
சத்தச்சுர மாணுர்விழை சாயற்பெறு பவனேர்
சட்டத்திறை நாராயண சாமிப்பெய ரினனே."

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௧௨௩௬. பாலகிருட்டிண ஐயர்

பாண்டிவளநாட்டில் அம்பா சமுத்திரத்தில் வழக்கறிஞராக விளங்கியிருந்த இவர் தமிழ்ப்புலமையும் பெற்றிருந்தார். பாப விநாசப்பதிகம், சிவசைலப்பதிகம், திருக்குற்றாலப்பதிகம் தேவ தானப்பதிகம், இராமேசுரப்பதிகம், திருநெல்வேலிப்பதிகம், திருப்புடைமருதூர்ப்பதிகம், பூவைப்பதிகம், கல்லிடைக்குறிச்சிப் பதிகம், அம்பைப்பதிகம் முதலிய பதிகங்களை இவர் இயற்றி யுள்ளார். நூலைப் பாராட்டி அரிகரபாரதி, முத்துச்சுப்பபாரதி முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"தாயொடு தந்தை மக்கள்
தாரமுந் தாணி வாழ்வும்
மாயையென் றெண்ணப் பேதை
மயக்கமுற் றுழன்று நித்தம்
பேயனைப் போலே சுற்றிப்
பிரமைகொண் டலையா நின்றேன்
சேயிழை சிறந்து மேவும்
சிவசைலச் செல்வ னேரே."

என்பது சிவசைலப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௩௭. பாலகிருட்டிண முதலியார் – வே. (1907)

ஏகநாத சுவாமி என்பவர் மகாராட்டிர மொழியில் இயற்றிய 'பிட்சு கீதை' என்னும் நூலை இவர் தமிழில் இயற்றி யிருக்கிறார்.

## ௧௨௩௮. பாலகுமாரசாமிப் பிள்ளை (அருட்கவி) (19 - நூ.)

இவர் சோழவளநாட்டில் தஞ்சையில் வேங்கடாசல பண்டிதர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவருடைய உடன் பிறந்தாராகிய வைரக்கண் வேலாயுதப் புலவர் என்பவருஞ் சிறந்த புலவர். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய செய்தி யொன்றுந் தெரியவில்லை. சாங்குசித்த சிவலிங்க நாயனார் என்ப

ர் இயற்றிய பூரணானந்தோதயம் என்னும் நூலுக்கு இவர் நீண்டகிலமண்டில ஆசிரியப்பாவாற் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளார்.

"பொன்னவிர் சலசப் பொகுட்டா தனத்திருந்
திந்நில மாதி யெவ்வுல கும்படைத்
திலகயன் முராரி யிந்திரன் செவ்வேள்
தலைகயா நநபா சாங்குசன் விண்ணோர்
எண்ணரு முனிவ ரியாவரு மறியாப்
பண்ணவன் கைலைப் பருப்பத மூர்த்தி
இடப்பா கத்தமர் இறைவிமெய்ஞ் ஞானக்
கொடைப்பால் அளிக்கக் குடித்து வளர்ந்து
சிவபெரு மானைச் செய்யுளாற் பாடி
நவம்பல வியற்று நலங்கிளர் பிள்ளை."

என்பது சிறப்புப்பாயிரத்தின் தொடக்கம். இப் பாயிரத்துள் இவர்தம் அருட்கவிப் புலமை குறிப்பால் உணர்த்தப்பட் டுள்ளது.

## கஉ௲கூ. பாலகுருசுவாமிகள்
## (கி. பி. 1878)

இவர் சென்னைமாநகரில் சைவசித்தாந்தச் செல்வராக விளங் கிய சோமசுந்தரநாயகருடைய இளவல் என்று அறியப்பெறு கிறார். செந்தமிழ்ப் புலமைபெற்றுத் திகழ்ந்த இவர் சிவப்பதி கட்கு இறைவழிபாட்டிற்குச் செல்வதையே தமது வாழ்க்கைக் குறிக்கோளாகக்கொண்டிருந்தார். இவர் எவ்வளவு நூல்கள் இயற்றியுள்ளார் என்பதைப்பற்றிய விவரம் எதுவுந் தெரிய வில்லை. 'சிவகிரிப் பதிற்றுப்பத்தந்தாதி' என்னும் நூல் ஒன்று இயற்றியிருப்பதாக அறியப்படுகிறது. அந்நூல் 1878 ஆம் ஆண்டில் பழநியில் அரங்கேற்றஞ் செய்யப்பட்டிருக்கிறது. ஆயக்குடிப்பெருநிலக்கிழார் இம்முடிப்பட்டம் ஓபளக்கொண்டம பாண்டியர், மாம்பழக்கவிச்சிங்க நாவலர் ஆகிய இருவரும் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"மனதுசெவித் துணைபுனித வாக்கிவைக்கெல்
லாமொருங்கா மதுர மேபெற்
றனகர்மதித் திடவெளிரு தமையமுதொன்
றுளதேன்மற் றதற்கொப் பாகப்

புனமயிலைப் புணர்பழனு புரிமுருகர்க்
கந்தாதி புனைந்தான் மிக்க
தனதுபெயர்ப் பொருளியல்பாய்த் தகவளரெம்
பாலகுரு சாமி தானே.''

என்பது மாம்பழக்கவிச்சிங்க நாவலருடைய சிறப்புப்பாயிரம்

''விண்ணவர் போற்று ஞான விபவமே விளங்கு மூன்று
கண்ணவர் மகிழ்தாறு கண்ணுடை மணியே யுன்றன்
தண்ணடிப் போதை எற்குத் தந்தருள் புரியா யோங்கும்
திண்ணிய வயிரவேற்கைத் திகழ்சிவ கிரிப்பெம் மானே.''

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௧௨௪௦. பாலசித்தானந்தர்

இவர் ஏறக்குறைய அறுபது யாண்டுகட்கு முன்பு பொம்மைய பாளையத்தில் சிறந்த அறிவாளியாகவும் திருவருட் பயன் கைவந்த பெரியாராகவும் விளங்கியிருந்தார். பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்வி கற்றுப் புகழ்பெற்று விளங்கிய சவராயலு நாயகரைப் பாராட்டி இவர்,

''மீனாட்சி சுந்தரப்பேர் மேவு தமிழ்க் கடலில்
தானாட்சி யாம்அமிர்தம் தானுண்டு—வானுன்
புரந்தரனை மீறுசவ ராயலுபொற் பார்மால்
புரந்தருளும் என்னுரையும் பூண்டு.''

என்னுஞ் செய்யுளைப் பாடியுள்ளார். இவரைப்பற்றிய பிற செய்திகள் விளக்கமாகவில்லை

## ௧௨௪௧. பாலசுப்பிரமணிய ஐயர்

இவருக்கு அப்புக்குட்டி ஐயர் என்றும் பெயர் வழங்கியது. யாழ்ப்பாணம் நல்லூரிலே சிகிவாகன ஐயர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். கலி 4888 சாலிவாகன சகாப்தம் 1709-க்குச் சரியான பிலவங்க ஆண்டு மாசித்திங்கள் இருபத்தெட்டாம் நாள் பிறந்து 76 ஆண்டு வரையில் வாழ்ந்திருந்தவர். கவிவாற்றலிற் சிறந்து விளங்கியவர். 'சூதுபுராணம்,' 'நல்லூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத் தமிழ்' என்னும் இரண்டு நூல்களை இயற்றியதோடு பல தனிப்பாடல்களையும் இயற்றியிருக்கிறார்.

## கஉசஉ. பாலசுப்பிரமணிய ஐயர் – (சதாவதானம்) (1894)

இவர் மழவராயனேந்தல் சிதம்பர ஐயர் என்னும் பெயருடையவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். கண்டனூர் மீனாட்சியம்மைமீது பிள்ளைத் தமிழ், சுந்தரேசர்மீது பதிகம் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவருடைய வழிமுறையினருஞ் சிறந்த புலவர்களாக விளங்கியவர்களே. இவருடைய நூலுக்குத் தேவிகோட்டை, வீர. லெ. சிங்கயச் செட்டியார், அமராவதிபுதூர் - அ. இராமநாதச் செட்டியார், அரியக்குடி அரங்கநாதச் செட்டியார், காரைக்குடி சின்னமெய்யப்பையா, ராம-சொ. சொக்கலிங்கச் செட்டியார், கண்டனூர் வீரப்பையா, மழவைச் சிதம்பர பாரதியார், அரியக்குடி கிருட்டிணமாச்சாரியார், கோட்டையூர் - அண்ணுச்சாமி ஐயர், இராயபுரம்-இராமசாமி ஐயர், பஞ்சாபகேச ஐயர், குன்றக்குடி-அப்பாப்பிள்ளை, வீரபத்திரக் கவிராயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

“சென்னியின் மீதணி செம்மணி வெண்மணி
சீர்மைய தான மணி
சேரவிழைத்திடு பொன்முடி மீதெழு
திவளொளி பலபலென
மின்னி யருக்கனை நிதுணி படுகொடு
விடமுறு மரவாலே
மெலிவுவ யடைந்தனை நானதை மாலையின்
மேவின னதனுலே
நின்னிலு நானதி கம்மென வோதிமுன்
நின்ருடுதலேபோல்
நிகழ்கின் றதுவென உலகம் புகழ்தர
நேரின சைந்தாட
அன்னிய வத்துவி லாத பெரும்பொருள்
ஆடுக செங்கீரை
அண்டர்கள் போற்றிய கண்டனல் லூர்க்கொடி
ஆடுக செங்கீரை.”

என்பது மேற்கூறிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழின் செங்கீரைப் பருவத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௪௩. பாலசுப்பிரமணிய பிள்ளை - அ.

(20 - நூ.)

இவர் தஞ்சைமாநகரில் இருந்தவர். குப்புச்சாமி ராசு என்னும் பிரமானந்த சுவாமிகளிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றவர். இவர் இயற்றிய நூல் விவரந் தெரியவில்லை. தம் ஆசிரியர் மொழிபெயர்த்த 'தருக்க கௌமுதி' என்னும் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

" பொன்மலர் பொதுளிப் பொலிகற் பகத்தின்
மன்பெரு நிழற்கீழ் அரசுவீற் றிருக்கும்
வானுயர் சிகரக் கிரிப்பறை யெறிந்த
காலுயர் தொங்கற் கவின்பெறு குலிசத்(து)
இந்திர னுடமர் இயற்றுதல் வேண்டி
ஒளிபொற் சிலையென ஓங்குபொற் கிரிகள்
தொக்கென விளங்கும் தூமணி குயிற்றி
மன்பெருஞ் சிறப்பின் வகையுளி புரிந்த
விட்புலத் தவர்க்குக் கட்புலன் கதுவா."

என்பது சிறப்புப்பாயிர அகவலின் முதல் ஒன்பது அடிகள்.

## ௧௨௪௪. பாலசுப்பிரமணிய பிள்ளை – தே.

(20 - நூ.)

இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்லவர். 'விவேக ரச வீரன் கதை' என்னும் நூலை ஆயிரத்து அறுநூற்றுக்கு மேற்பட்ட கண்ணிகள் அமையுமாறு செய்யுளாகப் பாடியுள்ளார். இவர் மலையாளநாட்டில் திருவாங்கூரில் வாழ்ந்திருந்தவர் என்று தெரிகிறது. கதையின் கண்ணிகளிற் சிலவற்றை அடியிற் காண்க:

1394 " வைக்கும் சுருள்குறையும்; மாமி அருள்குறையும்;
கைக்கு மணமகளின் காற்கும் அணிகுறையும்
1395 மருவிவினை யாடார்கள் மைத்துனர்கள்; தங்கள்
சருவுங் கொழுந்தியொடு சல்லாபஞ் சொல்லார்கள்
1396 மாமியார் வீட்டில் மருமகன்தான் போனுல்லனை
நேமியார்; நேமித்தால் நெய்யும் பருப்புமில்லை
1397 கனமென்ற காலநுட்பம் கற்பமென நீண்ட
மனமென்ற வாக்கு மணமொழிந்து நாற்றமுற்ற

1398 சிரநோயி ஞநிபதி னெட்டினையும் நீக்கும்
வரமுடைய மஞ்சளதை வையார் மணவகனிலே
1399 ஒருமலை யாளமுருக்கெகன் றுபசரிக்கும்
சிரணஞ்செய் தாம்பூலஞ் செவ்வாய் வழங்கார்கள்.''

1904 ஆம் ஆண்டில் ஒரு பதிப்பு வெளிவந்த இந்நூல் அதற்குமேல் மறுபதிப்பு வந்ததாகத் தெரியவில்லை. கதைக்கு மூலம் ஆங்கிலமென்று தெரிகிறது.

## ௧௨௪௫. பாலசுப்பிரமணிய முதலியார் – ச. (20 - நூ)

பெரும்புலவர் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் அவர்களுடைய இளைய புதல்வராகத் தோன்றியவர். மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தவர். கிருட்டிணாம்பேட்டைச் சிங்காரவேலு முதலியார் என்பவர் பாடிய திருப்போரூர் இன்னிசைப் பாமாலை என்னும் நூலுக்கு இவர்,

'' திங்களங் கங்கைசெங் கொன்றைகூ விளமறுகு
தேனுலா மத்த மரவும்
திகழ்சடைப் பரமனருளாலவ தரித்திலகு
செம்மணிசெய் முடிகளாறும்
பங்கயில் லாக்கடப் பந்தொடை யணிந்திடும்
பகரிரண் டாறு புயமும்
பதமலர் இரண்டுமொளிர் போரூர்க் குமரனைப்
பரவியின் னிசைப்பா வினைச்
சிங்கார வேலனுஞ் செந்தமிழ்ப் பாவலன்
செப்பினன் அதைமகிழ்ந்து
சித்தசன் கரச்சிலையின் வட்டினற் பெயர்பெறும்
சீர்த்திமிகு தூயன் சன்ற
பங்கயத் தவணிதம் வாழ்திருப் பாளையப்
பதியில்வாழ் குரிசில் அச்சில்
பதித்தளித் தனனவன் பரம்பரைகள் மாறாது
பல்லாண்டு வாழ்க மாதோ.''

என்னுஞ் செய்யுளால் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௨௪௬. பாலபாரதி (க)

இவர் இராமாயணச் செய்தியை 'இராமசெயத் திருப்புகழ்' என்னும் பெயருடன், திருப்புகழ்ப் பாடல்களைப்போன்ற பாடல்க

ளால் இயற்றியவர். இதனைத் துறையூர் கோவிந்தசாமிப்பிள்ளை என்பவர் அச்சிற் பதிப்பித்து வெளியிட்டார். அந்நூலுக்குத் தோரமங்கலம் அ. வரதநஞ்சைய பிள்ளையவர்கள் சாற்றுக் கவி கொடுத்துள்ளனர்.

"பாரநிகெஞ் சானுணர்ந்து மெல்வருமென் றேதெளிந்து
பாடியநன் காதைபண்டை மொழிவேதம்
பாவவரந் தூயமந்த்ர நோய்முழுதுந் தீர்மருந்து
பாலமிர்தந் தேனெதிர்ந்த வினையீர்வாள்
ஈரமில்வெம் பாறைநெஞ்சு நேருருகும் பாடலண்டர்
ஈசனயன் பேணுமின்ப மறவாதோர்
யாதுநினைந் தாலுமந்த வாழ்வுதருந் த்யாகசிந்தி
ராமசெயம் பாடவந்து துணையாவாய்
வாரிகடந் தேகிவஞ்சி யாருயிர்பொன் ஞானுகண்டு
மாதுகருஞ் சூழைகொண்டு களமீதே
வானின்மருந் தேகொணர்ந்து வீரர்மயங் காவிதந்த
மாவிருதிண் தோள்விளங்க அமராடிச்
சோரர்மடிந் தேகுமன்று தேவிபதஞ் சூடிநின்று
சோபனமுங் கூறிவந்து கடுகீமுன்
சூழ்பரதன் காணமுந்தி ஆவிபுரந் தேயுகந்த
தூதெனலும் பேர்புனைந்த பெருமாளே."

என்பது அனுமான் வணக்கப்பாடல்.

## ௧௨௭௭. பாலபாரதியார் (உ)

இவர் தில்லைவிடங்கன் மாரிமுத்துப் பிள்ளை காலத்தில் இருந்த ஒரு சிறந்த புலவர். இளமைப் பருவத்திலேயே நன்கு செய்யுளியற்றுந் திறனடைந்து விளங்கினர். இளம்பருவத்தி லேயே கலைமகளருள்பெற்றுச் சிறந்து விளங்கிய இவருக்குப் 'பாலபாரதி' என்னுஞ் சிறப்புப்பெயர் உண்டாகியது. இவ ரியற்றிய தனிப்பாடல்கள் சில காணப்பெறுகின்றன. மாரிமுத் துப் பிள்ளையின் பெருமையைக் குறித்தும், காலமானபோதும் இவர் கீழ்வரும் பாடல்களை இயற்றியிருக்கின்றார்.

"தில்லை விடங்கன் தனில்வாழும்
தெய்வங்கள் பெருமாள் திருப்புதல்வன்
தெளிந்த மனத்தன் முத்தமிழோர்
தினமும் புகழும் குறுமுனிவன்

முல்லை நகையார் மதன்மாரி
முத்துப் புலமைத் திறம்போல
முயன்ற சுகுணம் அதுபோல
முழுதுந் தெளிந்த மனம்போல
எல்லை இகழ்ந்த பாரதலம்
எழில்வான் தனிலு மேகாண
இதயத் தெண்ணி விழிதுயிலா
திருந்தும் அதுவே நினைவாகி
ஒல்லை அரன்மால் அயன்பிச்சைக்
குழன்றும் பன்றி வடிவெடுத்தும்
ஓங்கிப் பறக்கும் ஒதிமமாய்
உயர்ந்துந் திரிந்துங் காணாரே.''

'' சீர்கொண்ட பிலவங்க நாமவரு டத்தினில்
சித்திரைத் திங்கள் அதனில்
தேதிபன் னொன்றினிற் சோமவா ரத்தில்
திறங்கொண்ட பூர்வபட்சத்
தேர்கொண்ட சத்தமியின் நிசியினில் கடிகைஇரு
பானே ழினவமணியிலங்
கிந்திர விமானத் தெழுந்தருளி உலகத்தில்
யாவருங் காணமிக்க
பேர்கொண்ட நதிகுலன் புலிசைவளர் தெய்வங்கள்
பெருமாள் அருந்தவத்தால்
பெற்றசுதன் மேழியங் கேதனன் தமிழ்மாரி
பெய்மாரி முத்தேந்திரன்
பார்கொண்ட நெடுமால் பணிந்திடும் பொன்னம்
பலந்தனில் நலந்தருபுலி
பதஞ்சலி மகிழ்ந்திட நிதந்திரு நடம்பயில்
பதந்தனில் அடைந்தனனரோ.''

## கஉசஅ. பாலுச்சாமிவாத்தியார்
## (20 - நூ.)

கொங்குவளநாட்டில் சேலம் சிறு பிரிவைச்சேர்ந்த வேப்பிலைப்பட்டி என்னும் சிற்றூரிற் பிறந்தவர். இலிங்காயத்து வகுப்பினர். இலக்கண இலக்கியப் பயிற்சியை நன்கு பெற்று இளம் பருவம் முதற்கொண்டே திண்ணைப்பள்ளிக்கூட ஆசிரியராக இருந்தவர். இவர் வல்லாளராச நாடகம், சாவித்திரி நாடகம், இலிங்கமாம்பதி விலாசம் முதலிய நாடகங்களை இயற்றி

யுள்ளார். இவற்றில் வல்லாளராச நாடகம் அச்சாகியுள்ளது. எழுபத்தைந்தாண்டளவு வாழ்ந்திருந்த இவர் ஏறக்குறைய முப்பது ஆண்டுகட்குமுன் காலமானார்.

## ௧௨௪௯. பாஷ்ய உபாத்தியாயர் – சீ.
## (20 - நூ.)

புதுச்சேரியிற் சிறந்த தமிழறிஞராக விளங்கியிருந்த இவர் கல்வி நிலையம் ஒன்றில் ஆசிரியராக விளங்கியிருந்ததோடு பொது நலப் பணிகள் பலவற்றிலும் ஈடுபட்டிருந்தார். பு. அ. பெரிய சாமிப் பிள்ளை என்பவர் இயற்றிய புதுவைக் கலம்பகம் என்னும் நூலுக்கு இவர்,

*“ தெய்வமென் பதுவே வரதநா மத்துத்*
*தேவனென் றேயவன் பரிசு*
*திகழ்ந்துறும் புதுவைக் கலம்பகமென்றோர்*
*சீருள நூலைதைப் புகன்றான்*
*பெய்யென முகிலைப் பொழிதரச் செய்வோர்*
*பிறங்கிடும் புதுவைமா வித்வான்*
*பின்னிடாக் கவிஞர் புகழ்ந்திடு மதிஞன்*
*பெரியசா மிப்பெயர்ப் புனிதன்*
*மெய்ம்மைசேர் மன்னர் பின்வரு மரபோன்*
*விசிட்டவே தாந்தநன் குணர்ந்தோன்*
*விமலகோ விந்த மேதையன் புதல்வன்*
*விளங்கிடுஞ் சுப்பரா யப்பேர்த்*
*துய்யனெல் வயல்சூழ் நெல்விமா நகரில்*
*துதைமண வாளமா மலையன்*
*தொல்புவிக் கதனை அச்சினிற் பதித்துச்*
*சுகமுறத் தந்தனன் கனித்தே.”*

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௨௫௦. பாலையானந்தசாமி

இவருடைய காலம் இடம் முதலியன அறியப்படவில்லை. இவர், ‘சச்சித-னந்தமாலை’, ‘ஞானக்கும்மி’ என்னும் இரண்டு நூல்களை இயற்றியிருக்கிறார்.

## ௧௨௫௧. பாவநாச தேசிகர்

இவர் செங்கோட்டையில் இருந்தவர். சிவப்பதியாத்திரை யாகத் திருக்காளத்தியை அடைந்தபோது திருக்காளத்திநாதர் கட்டளைக்கலிப்பா, திருக்காளத்திநாதர் பதிகம் முதலிய நூல்களை இயற்றினர்.

"சீரேறு பொற்கமல பீடிகைச் செல்வன்
திருக்கர வருத்தமுந்தென்
திசைநாதன் உள்ளத்தில் ஓயா வருத்தமும்
செனனந் தொறுஞ்சுமக்கும்
நாரேறு சிந்தைமா தாவருத் தமுமேக
நாயினுங் கடைப்பட்டிடு
நானுமொரு கதிசேர்ந் திளைப்பாற வேண்டியும்
நலம்புரிசந் நிதியடைந்தேன்
போரேற தாய்ச்சுமந் தானும்அடி காணுத
புண்ணியா தண்ணியார்கைப்
புகுநெல்வி யங்கனியில் எளிதுகண் டேத்தும்
புராதனு இனியிரங்காய்
காரேறு நீள்சிமைய விபினவைப் பெங்கும்
கலந்தமரர் கணநெருங்கும்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதல்மலையே."

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௫௨. பாவாடைச் செட்டியார் – நா. வ.
## (19 - நூ.)

தஞ்சைமாவட்டத்தில் பிறையாறு என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண இலக்கிய வல்லுநரான இவர் சித்திரப்பாடல்களை நன்ருகப் பாடியபடியால் இவருடைய பெயர் "சித்திரக்கவி" எனவும் வழங்குவதாயிற்று. யாப்பிலக்கண விளுவிடை என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சாத்துக்கவியை அடியிற் காண்க:

"பாற்கடலார் இன்னமுதைப் பாம்பணையான் ஈந்தனனென்
ஞற்கடலா ரின்னமுதை நூதனமாய்—யாப்பணியென்
நாமமே தந்துலகில் நல்கிஞன் கோவிந்த
சாமிமா லன்னவிபு தன்."

## ௧௨௫௩. பாஸ்கரசேதுபதி

இவர் சேதுநாட்டு மன்னராக இருந்தவர். தமிழ் இலக்கண இலக்கியத்தில் வல்லுநர். ஆங்கிலத்திலும் தமிழிலும் நன்றாகச் சொற்பொழிவுகள் பல செய்தவர். இவர் காலத்தில் இவரிடம் பரிசு பெறாத புலவர்கள் எவரும் இலர். இவர் தமது நேரத்தைப் பெரும்பாலும் தமிழ்ப்புலவர்களோடு உரையாடி மகிழ்வதிலேயே செலவிட்டு வந்தார். இவர் சிவப்பதிப்பயணஞ்சென்று குற்றாலம் முதலிய சிவப்பதிகளில் இறைவழிபாடு செய்துகொண்டு கல்லிடைக்குறிச்சியில் உள்ள துறைசை ஆதீனமடத்தில் தங்கியிருந்தபோது 1903 ஆம் ஆண்டு டிசம்பர்த்திங்கள் 29 ஆம் நாள் இறைவன் திருவடி நீழலை அடைந்தார். இவர் காலமானபோது அகவை 33. மூன்று மனைவியரும் ஒரு பெண்மகவும், இரண்டு ஆண்மக்களும் இவர் காலமானபோது இருந்தனர். இவர் மறைவு புலவர்கட்கு மிகுந்த கலக்கத்தை யளித்தது.

## ௧௨௫௪. பிங்கலமுனிவர்

இவர் திவாகரமுனிவருடைய புதல்வர் என்பது,

"செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த
பிங்கல முனிவன் தன்பெயர் நிறீஇ
உரிச்சொற் பகுதி உரைக்குங் காலை."

என்பதனாற் பெறப்படுகிறது. இவர் பிங்கல நிகண்டு எனவும் பிங்கலந்தை எனவும் வழங்கும் நிகண்டைச் சூத்திர யாப்பால் இயற்றினார். இவர் மண்டல புருடன் பவணந்தி முனிவர் ஆகியோருக்கு முற்பட்ட காலத்தில் இருந்தவர் என்பது "பிங்கலந்தை தன்னில் ஒருங்குள பொருளுமோர்ந்திட் டுரைத்தனன்" எனச் சூடாமணி நிகண்டிலும், "பிங்கல முதலா நல்லோருரிச் சொலில் நயந்தனர் கொளலே" என நன்னூலிலும் கூறப்படுதலால் பெறப்படும்.

## ௧௨௫௫. பிச்சுச் சாத்திரிகள்
### (கி. பி. – 19)

இவர் திருவிடைமருதூரில் இருந்தவர். தென்மொழி வடமொழி என்னும் இருமொழியினும் வல்லவர். இவர் சூதசங்கிதை

பின் மூன்றுவதாகிய முத்திகண்டத்தைத் தமிழ்ப்பாவாகப் பாடி யிருக்கிறார்.

"சத்திய ஞான னந்த
சாந்தமாய் நேரே யார்க்கும்
நித்தநா யகமே யாகி
நிகழுறு விகாரம் இன்றி
மெத்துமிப் பவரோ கத்தின்
மெய்ம்மருந் தாகி நின்ற
அத்துவாம் பரசிவத்தை
மகிழ்வுடன் வணங்கு கின்றேன்."

என்பது நூலின் தொடக்கப்பாட்டு.

## ௧௨௫௬. பிச்சை இபுருகிம் புலவர் - ஆ கா.

இவர் திரிசிரபுரத்தில் இலக்கண உபாத்தியாயராக இருந் தவர். கு. சோமசுந்தரம் பிள்ளை, வே. அ. சாமிநாத பிள்ளை என்போர் இவரிடங் கல்வி கற்றுத் தேர்ச்சியடைந்தனர். திரு மதினத்தந்தாதி என்னும் நூல் இவரால் இயற்றப்பட்டது.

"அத்தந்தி யாக விலைமாதர் மம்ம ரகப்பட்டு நான்
அத்தந்தி யாக வலாதளித் தெய்தினே யாவினிநின்
அந்தந்தி யாகத் திலகுறச் செய்யன் பராமணத்தில்
அத்தந்தியாகத் துறுமதி னத்தவ ரன்பனென்றே."

என்பது அந்த அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௧௨௫௭. பிச்சைப்பிள்ளை

தென்பாண்டி நாட்டிற் சிறந்து விளங்கியவர். திருக்குற் றலத்திறைவன்மீது இவர் ஓர் அந்தாதி பாடியுள்ளார். இவரை மேலகரம் திரிகூடராசப்ப கவிராயர் தமது திருக்குற்றலக் குறவஞ்சியிற் பாராட்டியிருத்தலின் இவருடைய காலம் திரிகூட ராசப்ப கவிராயர் காலத்திற்கு முற்பட்டதாகும்.

"மன்னன் கிளைவையிற் சின்னணைஞ் சேந்திரன்
வடகரை வீட்டுக்கு மந்திரி யாகவும்
செந்நெல் மருதூர்க்கு நாயக மாகவும்
தென்காசி யூருக்குத் தாயக மாகவும்

தன்னை வளர்க்கின்ற குற்றால நாதர்
 தலத்யுத வளர்க்கின்ற நாளிக றாகவும்
தன்னகர்க் குற்றாலத் தந்தாதி சொன்னவன்
 தன்னார் தொரூர் பிச்சைப் பிள்ளை.''

என்பது குறவஞ்சியிற் பாராட்டப்பெற்றது. செய்புட் செய்தி யால் வரலாற்றுக் குறிப்புக்கள் சிலவும் பெறப்படுகின்றன.

## கஉ௫அ. பிரகாசாநந்த அடிகள்
## (20 - நூ.)

இவர் பாண்டிவளநாட்டில் அருப்புக்கோட்டை என்னும் ஊரில் இருந்தவர். சுப்பிரமணிய தேசிகர் என்னும் பெரியாரிடத்தில் அருளுரைபெற்றுச் சிறந்து விளங்கிய இவர் நடன கணபதி மாலை, நடன கணபதிபஞ்சகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

'' அற்பமு நினது செயலை தகையா
 ஆதலின் உனைத்துதி புரிதல்
பொற்புறும் உனது லீலையே அலதோர்
 பொருளினைப் புகலுமா றுளதோ
நற்பயனுலகர்க் களித்திட வுலக
 நடனசா லையினிலைந் தொழிலாம்
அற்புத மிகவே அணிகழ லசைத்திங்
 கருணடம் புரிகண பதியே.''

என்பது நடன கணபதி மாலையில் ஒரு பாட்டு.

## கஉ௫௬. பிரமதந்திரசுவதந்திர சீயர்

இவர் வாழித்திருநாமம் என்னும் நூலைப் பாடியுள்ளார். மூப்பத்துநான்கு பாடல்களால் அமைந்த அந்நூலில் வைணவ சமயப் பெரியார்கள் பலர் வாழ்த்தப்பெறுகின்றனர்.

'' உய்யக்கொண் டாரடியை உகந்தடைந்தான் வாழியே
 ஒப்பில்மணக் காற்பதியில் உதித்தருள்வோன் வாழியே
துய்யகும்ப மசநாளில் தோன்றனுற்றோன் வாழியே
 தூயரில்குணக் குழுவாகிச் சகம்புகழ்ந்தோன் வாழியே
ஐயமற ஆளவந்தார்க் கருள்புரிந்தோன வாழியே
 அவர்பணிய அரங்கனடி நிதிகொடுத்தான் வாழியே.''

என்பது மணக்கால் நம்பிகளுக்குக் கூறிய வாழ்த்து.

## ௧௨௬௦. பிரமமுனி

பதினெண் சித்தர்களுள் இவர் ஒருவர். இவரால் இயற்றப் பெற்ற வைத்தியநூல், "பிரமமுனி வைத்தியம்" எனப் பெயர் பெற்றது. இதிலே முந்நூற்றிரண்பது பாடல்கள் உள்ளன.

"சீரரு ளான சோதி சின்மய மான சோதி
ஆரணி கொன்றை சூடி அரவணிந் தவனைப் போற்றி
வாரணி ருஷிகள் பாதம் வணங்கியே வைத்ய நூலைக்
காரண மாகப் பாடக் கணபதி காப்புத் தானே"

என்பது அந்நூலில் காப்புப் பாடல்.

## ௧௨௬௧. பிரமயனப்புலவர்

கொங்குவளநாட்டில் இருந்தவர். இவர் "பொங்கலூர்க் குறவஞ்சி" என்னும் நூல் இயற்றியுள்ளார்.

## ௧௨௬௨. பிரமாநந்த அடிகள்

மதுரைமாநகரில் இராமசாத்திரிகள் என்பவருடைய புதல்வராகத் தோன்றிய இப்பெரியார், அசுவத்தநாதர் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்று மெய்ஞ்ஞானியாக விளங்கினர். தமிழ் மொழியிலும் வடமொழியிலும் வல்லவராகிய இப்பெரியார் சொரூப இலட்சணவிருத்தி, விவேக சூடாமணி, சர்வ வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகம், தட்சணாமூர்த்தி வீட்சா விலாசம், அசுவத்தநாத சரித்திரம், பிரமானந்த அனுசந்தான யுத்தி ரத்தினகரம் முதலிய நூல்களை இயற்றினர். இப் பெரியாருடைய சமாதி மதுரைமாநகரின் தெற்கு வாசலிலே அமைந்துள்ளது.

## ௧௨௬௩. பிரான்சிஸ் பிள்ளை

ஈழவளநாட்டிலே வயாவிளான் என்னும் ஊரிலே வேளாண் குலத்திலே ஏறக்குறைய நூற்றைம்பதாண்டுகட்கு முன்பிருந்தவர். கிறித்துவ சமயத்தைத் தழுவியவர். இலக்கண இலக்கியங்களைத் தக்காரிடத்திலே நன்கு கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். இவர் இயற்றிய நூல்கள், மூவிராசகர் வாசகப்பா கிறித்து நாதர்பிள்ளைத் தமிழ், தசவாக்கிய விளக்கப்பதிகம்

திருவாசகம், (கிறித்துவச் சார்புளது) இசைப்பாடல் திரட்டு, பச்சாத்தாபப் பதிகம், இரட்சகப் பதிகம் முதலியன. இவர் மருத்துவத் துறையிலுஞ் சிறந்து விளங்கினர்

"குவளைத் தவரன்பு கொண்டாட வண்டாடு
குளிர்மலர்ப் பொழில்களாடக்
கோலமயி லாடவயல் நீடுகுயில் ஆடநெற்
குலைகலை லென்றாடிடக்
கவலையற் றிடுமாயர் களியாட இளவாழை
களிநீடு தளிர்கள் ஆடக்
காராடு மொய்குழலி னாராட அழலனைய
கழிநீடு தளிர்களாடத்
தவில்முர சடித்தும்பர் சபையாட நவகோடி
சனமாட வளமைகொளித்
தண்ணிழல் பரந்தாட விண்மணி யொடுங்கிரண
தாரகை நயங்கியாடத்
திவலையமு தைப்பருகு தெய்வீக பாலனே
செங்கீரை யாடியருளே
திருமருவு பரமகனி மரியுதவு பாலனே
செங்கீரை யாடியருளே."

என்பது இவர் இயற்றிய பிள்ளைத் தமிழ்ப்பாடல்களில் ஒன்று.

## ௧௨௯௪. பிலிப்பு - தெ - மெல்லோ (1723—1790)

இவர் ஈழவள நாட்டில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் சைமன்-தெ-மெல்லோ. இவர் தமிழ், எபிரேயு, கிரீக்கு, இலத்தீன், டச்சு, போர்ச்சுகீஸ் முதலிய மொழிகளை நன்கு கற்றவர். இவர் பாடசாலை ஆசிரியராகத் தொழில்புரிந்த தன்றியுஞ் சமய குருவாகவும் பணிபுரிந்தார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் சத்தியத்தின் செயம், மருதப்பக் குறவஞ்சி முதலியன. கூழங்கைத் தம்பிரான் இவருடைய நண்பர்களில் ஒருவர் என்பர்.

## ௧௨௯௫. பிறவாநெறிகாட்டியார்

சோழவளநாட்டில் திருமலைராயன் பட்டினத்தில் அவனுடைய அவைக்களப் புலவர்களில் ஒருவராக இருந்த இவ

அதிமதுரகவிக்கு அடுத்தபடியில் பெருமைபெற்று விளங்கினுர் காளமேகப்புலவர் எமகண்டம் பாடியபோது, "கடுங்காற்று மழைகாட்டும் கடுநட்புப் பகை காட்டும்" என்பது இறுதியில் அமையுமாறு ஒரு வெண்பாப் பாடவேண்டும் என்றார். அப்போது காளமேகப்புலவர்,

"நீரோ பிறவா நெறிகாட்டி யாரெமக்கு
நீரோ சமுசை நிலையிட்டீர்—நீரோவில்
வீங்களமேன் செய்நீர் விடுங்கடுங்காற் றும்மழைகாட்
டுங்கடுநட் புப்பகைகாட் டும்."

என்று பாடினுர்.

## கஉகூகூ. பிறைசை அருணுசல சுவாமிகள் (19 - நூ)

இவர் சோழவளநாட்டில் பிறையாறு என்னும் ஊரில் இல்லறஞானியாக விளங்கியிருந்தார். வேதாந்த நூல்களிற் சிறந்த புலமைபெற்றுப் பலருக்கும் போதித்துக்கொண்டிருந்த தன்றி ஞானவாசிட்டம், வேதாந்த சூடாமணி முதலிய பல நூல்களுக்கு உரையெழுதினுர். வேதாந்த சூடாமணி உரை இராமநாதபுரம் முத்துவிசய ரகுநாதசேதுபதியின் விருப்பப்படி இயற்றப் பட்டது. உரையைப் பாராட்டிப் பாசிப்பாக்கம் முனியப்ப முதலியார், காஞ்சிபுரம் இராமசாமி நாயகர், வருதிபுரம் வேலுச் சுவாமிகள், சேலம் அப்பாச்சாமிப்பிள்ளை, ஈசூர் சச்சிதானந்தப் பிள்ளை, செ. வேங்கடாசல முதலியார், புரசை முருகப்ப உபாத்தி யாயர், தென்பயறு இராமசாமி நாயகர், வளவனூர்க் குமாரபுரி வீராச்சாமிப் பிள்ளை, விக்கிரபாண்டி காளத்தி ரெட்டியார், செங்காடு கிருட்டிணப்ப செட்டியார், கஞ்சம் சீனிவாச உபாத்தி யாயர், பொய்கைப்பாக்கம் அப்பாச்சாமி உபாத்தியாயர், புதுவை வெ. பொன்னியார், வளவனூர் வீரபத்திர செட்டியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"நாதாந்தப் பேரொளியாய் நவையற் றெங்கும்
நண்ணுபரி பூரணமாய் நடுவாய் நின்ற
போதாந்தம் பெற்றவருள் மதத்தை வீசும்
பொற்களிற்றின் அடிவழுத்திப் புலன்கள் தம்மிற்

> பேதாந்தம் அகற்றிதிர நசயா நந்தப்
> பெற்றியுள கடைந்துய்யப் பெருமை யோங்கும்
> வேதாந்த மரபினிலை விளக்கும் ஒம் வே
> தாந்தரு ளாயணியைய விரித்தல் செய்வாம்.''

என்பது இவர்தாம் இயற்றிய தற்சிறப்புப் பாயிரத்தில் ஒரு பாட்டாகும்.

## கஉகூஎ. பீதாம்பரப் புலவர்

ஈழவளநாட்டு நீர்வேலியிலே வேளாண் குலத்திலே ஏறக்குறைய அறுபதாண்டுகட்கு முன் தோன்றியவர். தந்தையார் பெயர் சண்முகம் பிள்ளை. இருபாலைச் சேனாதிராய முதலியாரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேறினார். இவர் பாடிய நூல்கள் மறைசைக் கலம்பகம், மறைசைத் திருப்புகழ், நீர்வை வெண்பா, வல்லிபுரநாதர் பதிகம் முதலியன.

> "தேமேவு மாலயன் தேடியுங் காணாத
> சிற்பரந் துரியமலையைத்
> தேரா தகந்தைகொடு பாரோ டெடுத்திடும்
> செப்பரிய திறன்நிருதனைப்
> பூமேவு சுராசுரர் பொற்பொடு துதிக்கவே
> பூவைதுல நிலைகுனிப்
> போரகத் திருபது சிரங்களும் உருண்டிடப்
> பொருதபுய பரராமனே
> கார்மே வரங்கம் பொருந்துகா குத்தனே
> காமனைப் பெற்றகண்ணா
> காசினி விசும்பங்கி கமலமா லானவா
> கம்பேறு கையினனே
> ஊமேவு முல்லைசெறி மார்பனே மாயனே
> மகிழ்வினுடன் என்னையாள்வாய்
> வல்லிபுர நகர்வாச வல்லிநிக ரிடைவனச
> வல்லிமகிழ் நேயமாலே.''

என்பது வல்லிபுரநாதர் பதிகத்தில் ஒரு பாட்டு.

## கஉகூஅ. பீர்முகம்மது சாகிப்

இவர் மலையாளத்தைச் சேர்ந்த தற்கலைப்பதியில் இருந்தவர். இவர் 'மஹரிபத்துமாலை' என்னும் நூலைச்செய்தார். இந்நூல்

பொருட்பால், அருட்பால், காமப்பால் என முப்பாலாகவும் ககடு பாடல்களடங்கியதாகவுஞ் செய்யப்பட்டிருக்கிறது.

"புட்டுப் புட்டங்கனை வகுத்துச் சொன்னேனை
புறுக்கான் முகம்மது மகரிபத்தைச்
சட்ட மாகவே விரித்துச் சொன்னேவன்
சாகா முகம்மது மகரி பத்தைக்
கட்டுமட்டாகப் பிரித்துச் சொன்னேனன்
ஹபீபு முகம்மது மகரி பத்தை
எட்டு ஏர்த்தியிலே அறியச் சொன்னேனன்
எங்கள் முகம்மது மகரிபத்தை"

என்பது இந்நூலின் பாடலில் ஒன்ருகும். இதே நூலை இவர் 'பிசுமில் குறம்' என்னும் பெயரோடு 590 கண்ணிகளாக எளிய நடையிலும் இயற்றியிருக்கிருர். மெய்ஞ்ஞான சர நூல் என்னும் நூலும் இவரால் இயற்றப்பட்டிருக்கிறது.

## கஉகூகூ. புத்ததத்தமகாதேரர்

இவர் சோழவளநாட்டிலே பிறந்த தமிழர். காவிரிப்பூம் பட்டினம், உறையூர், பூதமங்கலம், காஞ்சிபுரம், இலங்கை அநுராதபுரம் முதலிய இடங்களில் தங்கியிருந்தார். தம் மாணவராகிய புத்தசிகா என்பவருடைய வேண்டுகோளின்படி 'மதுராத்த விலாசினி' என்னும் நூலை எழுதினுர். இந்நூல் சூத்திரபிடகத்தின் ஐந்தாவது பிரிவாகிய குட்ட நிகாய என்னும் நிகாயத்தின் உட்பிரிவாகிய புத்தவம்சம் என்னும் 14 ஆவது பிரிவுக்கு உரையாகும். இவ்வுரை நூலைப் புத்தவம்சம் சாட்ட கதா என்றும் கூறுவர்.

மற்ருெரு மாணவராகிய சுமதி என்பவருடைய வேண்டுகோளின்படி அபிதம்மாவதாரம் என்னும் நூலை இயற்றினுர். இஃது அபிதம்மபிடகத்திற்குப் பாயிரம் போன்றது. பூதமங்கலம் என்னும் ஊரில் தங்கியிருந்தபோது, புத்தசிகா என்பவருடைய வேண்டுகோளின்படி வினயவினிச்சயம் என்னும் நூலை இயற்றினுர். இலங்கையில் தங்கியிருந்தபோது உத்தர வினிச்சயம் என்னும் நூலை இயற்றினுர். சினலங்காரம் என்னும் நூல் ஒன்றும் இவரால் எழுதப்பெற்றது. இவருடைய மாணவர்களாகிய புத்தசிகா சுமதி என்னும் இருவரும் நல்ல புலமையுடையவர்கள் என்பர்.

## கஉ௭0. புத்தமித்திரனார்

இவர் பொன்பற்றி என்னும் ஊரில் இருந்தவர். வீர சோழியம் என்னும் இலக்கண நூல் இவரால் இயற்றப்பட்டிருக் கிறது. பொன்பற்றி என்னும் நகர்க்கு அரசராக இருந்தவராகக் கூடுமென்று எண்ண இடந்தருகிறது. பெயரின் முன்பு பொன் பற்றி காவலன் எனவும் பொன்பற்றிமன் எனவுங் காணப்படு கிறது. இவர் பௌத்த சமயத்தினர் என்பது நன்கு உணரப் பட்ட செய்தி; "திகடசக்கரச் செம்முகம் ஐந்துளான்" என் னுஞ் செய்யுளின் திகழ்தச-திகடச என்பதற்கு விதி இந்நூலில் இருந்து காட்டப்பட்டது.

"மேதக நற்றெருழில் செய்வான் கருத்தா வியன்கருவி
நீதிக் கரணஞ் செயப்பட்ட தாகுந் திறற்கருமம்
யாதனி னீங்கு மவதிய தாமிட மாதாரமாங்
கோதறு கோளிமன் கொள்பவ னாகுங் கொடியிடையே."

என்பது உபகாரகப் படலத்தில் ஒரு பாட்டு.

## கஉ௭க. புருடோத்தமநம்பி

இவர் சைவவேதியர் குலத்தில் பிறந்தவர். சிவபெருமானி டத்திலும் சிவனடியார்களிடத்திலும் மெய்யன்புகொண்டு ஒழுகி வந்தார். தில்லையம்பதியிலேயே பெரும்பாலுந் தங்கித் தம் முடைய காலத்தைப் போக்கிக்கொண்டிருந்தார். கல்வி கேள்வி களில் வல்லவரான இவர் இறைவன்மீது பல பாடல்களைப் பாடினார். அவற்றுள் இரண்டு பதிகங்கள் மட்டும் ஒன்பதாந் திருமுறையிற் சேர்ந்து அழியாவரம் பெற்றுள்ளன.

"வாரணி நறுமலர் வண்டுகெண்டு
பஞ்சமஞ் செண்பக மாலைமாலை
வாரணி வனமுலை மெலியும்வண்ணம்
வந்துவந் திவைநம்மை மயக்குமாலோ
சீரணி மணிதிகழ் மாடமோங்கு
தில்லையம் பலத்தெங்கள் செல்வன்வாரான்
ஆரெனை அருள்புரிந் தஞ்சலென்பார்
ஆவியின் பரம்என்றன் ஆதரவே."

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## ௧௨௭௨. புருடோத்தமப் பிள்ளை – தம்பி
(1906)

இவர் புதுச்சேரியிலே பிறந்தார். தந்தையார் பெயர் அவோக்காத் தம்பி, தாயார் பெயர் அம்மணியம்மை. இவர், தமிழ், ஆங்கிலம், பிரஞ்சு முதலிய மொழிகளை நன்கு கற்றுணர்ந்தார். மற்றவர்களிடத்திலே அன்பும் அருளும் அமையப்பெற்றவராகச் சிறந்து விளங்கினார். இதனால் இவருக்குப் புருடோத்தமன் என்னும் பெயர் நன்கு பொருந்துவதாமென்று பலரும் பாராட்டினர்.

சேக்கிழாரால் இயற்றப்பெற்ற பெரிய புராணத்தின் ஒரு பகுதியாகிய காரைக்கால் அம்மையார் புராணச் செய்யுட்கு ஒப்பான செய்யுட்களைச் சிந்தாமணி சிலப்பதிகாரம் முதலிய பல நூல்களினும் இருந்து திரட்டி ஒன்றுபடுத்தி அதற்கு, "காரைக்கால் அம்மையார் புராணம் மூலமும் அரும்பொருள் உவமைச் செய்யுட் டிரட்டும்" என்று பெயர் கொடுத்து வெளியிட்டுள்ளார்.

நூலினைப் பாராட்டிப், புதுவை பெரியசாமிப் பிள்ளை, பங்காருப்பத்தர், காரைக்கால் வேங்கடராம நாயுடு, புதுவை சீனிவாச ஆறுமுகம் பிள்ளை, காரைக்கால் முத்துவேல் முதலியார், தியாகராச ஐயர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'கடலெடுத் தெறியுங் குடவளை முத்தம்
மறுகெலா நிறைந்து மடவார் நடக்கப்
பருக்கைக் கல்போல் உறுத்தலிற் சிவப்புற்
றடிமலர் பொருஅ தஞ்சி யொதுங்கும்
மதுவையூற் றும்பொழில் புதுவையம் பதியான்
சாற்றரும் அவோக்காத் தம்பிப் பிள்ளையும்
மெய்ம்மைசேர் கற்பின் அம்மணி அம்மையும்
இழைதவக் கடலில் எழுந்த சந்திரன்
மழையென வழங்குஞ் செழுமலர்க் கரத்தான்
பிரெஞ்சுப் பாடையில் பெரிதும் வல்லவன்
அமிழ்தென விளங்குந் தமிழெனப் படுமோர்
ஆழ்கடல் அதனுள் மூழ்கிய புலவன்
பற்பல பாடை பயின்ற நாவனை
அன்புஞ் சாந்தமும் அருளும் ஈகையும்

என்பன ஒருநூ லெடுத்தெனைப் பொலிவோன்
புருடோத் தமனெனப் புகலொரு பெயர்க்குத்
தக்கசற் குணங்கள் சார்ந்திடப் பெற்றோன்.”

என்னும் பகுதி பு. அ. பெரியசாமிப் பிள்ளை என்பவருடைய சிறப்புப் பாயிரத்தின்கண் உள்ளது.

## ௧௨௭௩. புருடோத்தம முதலியார் - கூ
(19 - நூ.)

இவர் கூடலூரில் இராமசாமி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார். சென்னை திருவல்லிக்கேணி உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். இராமாயணக் கருப்பொருள் உரை, பாலதிராவிட பாஷா சந்திரிகை முதலியன இவரால் இயற்றப் பெற்ற நூல்கள். இவருடைய நூலைப்பாராட்டி, சீனிவாசராகவாசாரியார், கோ. இராசகோபால பிள்ளை, பு. செ. இராசகோபால முதலியார், காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, பள்ளிகொண்டான் பிள்ளை, இராயப்பேட்டை சீனிவாசமுதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

“ பிறையிருந்த செஞ்சடிலப் பிஞ்ஞகனு நியர்பொருட்டாக்
பிணங்கு வாரூர்ச்
சிறையிருந்தா ளேற்றமதைச் செப்புதமிழ்க் கம்பரா
மாய ணத்தின்
மறையிருந்த கருப்பொருணூற் கோருரைசெய் தச்சிட்டு
வழங்கி னானால்
நறையிருந்த பொழிற்கூட லூர்ப்புருடோத் தமப்பெயர்கொள்
நாவ லோனே.”

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௧௨௭௪. புலத்தியர்

இவர் கற்பம் முந்நூறு, புலத்தியர் வாதசூத்திரம் முந்நூறு, ஞானகற்பம் இருநூற்று இருபத்திரண்டு முதலிய மருத்துவ நூல்கள் இயற்றியவர். பதினெண் சித்தர்களில் ஒருவர். அகத்தியருக்கு அடுத்தபடியாக மற்றைய முனிவர்களால் மதிக்கப் பெற்றவர்.

"அறிந்தறி யாமல் அம்புவி மனிதர்
அநந்தசாத் திரங்களா ராய்ந்தே
அகப்படா துருவின் கருவறி யாமல்
அண்டகு டாகமுந் திரிந்து
பறிமய லாசை பிடித்துப்போய்ப் பித்தர்
பாரிலுள் ளோர்களை மயக்கிப்
பலபல சரக்கைக் கருக்கிச்சுட் டதன்பின்
பணங்களைப் பறித்திந்தப் பாரில்
வெறிபிடித் தவர்போல் வேடமுற் றுலவி
வேசியர் மயல்மிக விரும்பி
விரகமு நாகிக் கள்ளுடன் கஞ்சா
எதமுண் டுவா மங்கொண் டலைந்து
நெறிதவ மறந்து வாய்மதம் பொழிந்து
நிலையறி யாமல்ஞா னத்தை
நிகழ்த்தியே நாய்போல் குலைத்துமே திரிந்து
நிதமும்வாய் புலம்பியே வாழ்வார்."

என்பது போலி மருத்துவர்களைக் குறித்துக் கூறிய ஒரு பாட்டு.

## ௧௨௭௫. புலவர் முகமது லெப்பை

அம்மாப்பட்டணம் என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய முழுப்பெயர் புலவர் 'முகமது லெப்பை ஆலிம் மரைக்காயர்' என்பது. இசைப்பாடல்கள் பல பாடியுள்ளார்.

## ௧௨௭௬. புலிக்குட்டிப் புலவர்
## (19 - நூ.)

இவர் திருப்பூரில் தோன்றியவர். கல்விகற்றுச் சிறந்த புலமையடைந்த பின் பல விடங்களினுஞ் சென்று தங்கினர். பிறகு பட்டுக்கோட்டைக்கு அண்மையில் உள்ள சில்லத்தூர்ப் பெருநிலக்கிழார் ஒருவருடைய அவைக்களப்புலவராக நீண்ட காலந் தங்கியிருந்தார். அப்போது இவரிடம் பலர் கல்விகற்றுச் சிறப்படைந்தனர். அவர்களிற் சிலர் சிறந்த புலவர்களாக விளங்கி நூல்களும் இயற்றியுள்ளனர். இவர் தனிப்பாடல்கள் பல இயற்றியிருக்கிறார். முருகப்பநாவலர் என்பவர் இயற்றிய கேதாரீசுர புராணத்திற்கு,

"மஞ்சரிக மெனுமனக மடமயிலார் எழில்வதன
மதியாம் என்னச்
சஞ்சரிக முகன்பதுமந் தனையவிழ அறல்வாவித்
தடஞ்சூழ் காவில்
விஞ்சரிகள் இயற்கெருவிகேட் டாடவர்தம்
மனைதேடி வியக்குஞ் சீர்சால்
வஞ்சரிக னுகவிய லாவணி யம்பாடிப்
பதியான் மேலோன்."

........................................................................

"ஆதார மெனவுலகந் தாற்றுதரும் வேட்டிதயத்
தன்பால் நோற்பான்
காதாரக் கேட்குநரும் கதிவேய வந்திலேயார்
கருத்துக் கேற்பக்
கேதார மாவிரதக் காப்பியமொன் றாமுதாய்க்
கிளந்தருள் செய்தான்
போதார மணியணியும் புயன்முருகப் பேந்திரனெனும்
புலவ ரேறே."

என்பன ஆதிடாக நான்கு செய்யுட்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கஉஎஎ. புலிப்பாணி முனிவர்

கலியுகம் இருநூற்றைந்தாம் ஆண்டில் இவர் உலகத்தில் வாழ்ந்திருந்தார். காலாங்கிநாதருடைய மாணவராகிய போகர் இவருக்கு ஆசிரியர். இவர் போகரிடத்தில் தாம் கற்கவேண்டியவைகளையெல்லாம் கற்றுணர்ந்தார். இவரும் இவருடைய ஆசிரியராகிய போகரும், சித்துவல்லமையால் விண்வழியாக எல்லா நாடுகளுஞ் சுற்றித் திரிந்தனர். இவர்கள் சுற்றித் திரியாத நாடுகளே உலகத்தில் இல்லை. இவர் பாண்டிவளநாட்டில் சிவகிரி மலையில் சிலகாலந் தங்கியிருந்தார். இவர் மலைச்சுனையில் இருந்து தண்ணீரைக் குடத்தில் முகந்துகொண்டு புலியின்மீது ஏறிச்சென்று பூசை செய்தவர் என்பது,

"கேளேநீ கலியுகத்தில் இருநூற் றைந்தில்
கேசரிபோற் புலிப்பாணிப் பேரும் பெற்றேன்
சூளேநீ சலந்திரட்டிக் கரத்தில் ஏந்திச்
சுகமாக வேங்கையின்மேல் ஏறிச் சென்று

நானே நீ சிவகிரிபால் தண்ட பாணி
நாதருக்குப் பூசித்தே அருளைப் பெற்றும்
ஆனே நீ போகரிட குகைமேல் ஐயா
அட்டசத்தி பதிதனிலே வாழ்ந்தேன் பாரே.''

என்று இவரே இயம்புவதால் பெறப்படுகின்றது.

இவர் இயற்றிய நூல்கள், புலிப்பாணி சோதிடம், சூத்திரம் பதினாறு, சூத்திரம் இருபத்தைந்து, சூத்திரம் ஐம்பது, சூத்திரம் நூறு, சண்முக பூசை, காலம் இருநூறு, பல திரட்டு முந்நூறு, தொக்கோகம் முந்நூறு, வைத்தியம் ஐந்நூறு என்பன.

வைத்தியம் ஐந்நூற்றில் சுரக்குளிகை, தலைப்பேனுக்கு மாரணம் வரையில் நூற்றெண்பதுவகையான மருந்துகள் செய்யும் வகை கூறப்படுகிறது.

''எண்ணவே தலையிலுள்ள பேன்கள் சாவ
எடுத்துரைப்பேன் சூதமொரு கழஞ்சு வாங்கி
நண்ணவே மேனிச்சா றிட்டு ஆட்டு
நன்றாகவே தான்புரட்டி நவிலக் கேளு
திண்ணவே சிகையில்சிக்கம் போல்செருகச்
சிரசில்உள்ள பேன்களெல்லாம் செத்துப் போகும்
கண்ணவே போகருடைக் கடாட்சத் தாலே
கலையறிந்து புலிப்பாணி காட்டி னேனே.''

என்பது பேன்மாள வகைசெய்யும் பாட்டு.

இவர் இயற்றிய மருத்துவ நூலில் ஐந்நூறு செய்யுட்களும், பல திரட்டில் நூறு செய்யுட்களும், சாலத்திரட்டில் இருநூறு செய்யுட்களும் உள்ளன. சாலத்திரட்டிலே, கண்கட்டு வித்தை, பச்சைப்பாம்பு வித்தை, மாம்பழச் சாலம் ஆகிய பல சாலங்கள் செய்யும்முறை அடங்கியுள்ளன. வேறு பல நூல்களையும் இவர் இயற்றியிருக்கிறார்.

''ஆமேதான் பண்டிதரே அறையக் கேளும்
அவனிதனில் எளியோருக் கவிழ்தம் ஈந்து
தாமேதான் அன்னமிட்டு வஸ்திரம் ஈந்து
தயவாகத் தன்னுயிர்போல் அவரைக் காத்துத்
தீமேதான் சேராமற் புண்ய வானாய்த்
தீர்க்கமுள்ள வைத்தியனாய் இருந்து வாழ்வாய்
நாமேதான் போகருடைக் கடாட்சத் தாலே
நலமாகப் புலிப்பாணி நவின்றிட் டோமே.''

என்பது இவர் இயற்றிய மருத்துவம் ஐந்நூற்றில் இறுதிச் செய்யுள்.

## ௧௨௭௮. புவனேக வாகு

யாழ்ப்பாணத்தில் இருந்து அரசு செலுத்திய விசயகூழங் கைச் சக்கரவர்த்திக்கு அமைச்சராக இருந்தவர் இவர். திசை யுக்கிரசிங்க சோழனின் மகனும், சிங்ககேதுவின் மருமகனும், ஒரு கை கூழையாய் இருந்தபடியினால் விசயகூழங்கைச் சக்கர வர்த்தியென்று பின் பட்டம் பெற்றவனுமாகிய சிங்கையாரியன், யாழ்ப்பாணத்தில் இருந்த பொன்பற்றியூர் வேளாளன் பாண்டி மளவன் வேண்டுகோளுக்கு இணங்கி இவ்வூருக்கு அரசனாக வந்த பொழுது, இவர் அமைச்சராக உடன் வந்தவர். கல்வியில் மிகச் சிறந்து விளங்கியவர்.

அரசரும் இப்புலவரும் தெல்லிப்பழைக் கோயிற்பற்றைச் சேர்ந்த மாவிட்டபுரத்துக்குச் சென்றபோது, அங்குள்ள கந்த சாமிகோயிற் பூசகரும் தொடக்கத்தில் மாவிட்டபுரத்துக்கு வந்த பெரிய மனத்துள்ளார் என்னும் அந்தணருக்குப் பௌத்திரரும் சிதம்பர திட்சிதரின் குமாரரும் ஆகிய சின்னமனத்துள்ளார் அரசருக்குந் தமக்கும் செய்த விருந்துப் பொருள்கள் ஒவ்வொன் றையும் தனித்தனியே புகழ்ந்து இவர் பல செய்யுட்கள் பாடினார் அவைகளுள்,

> ''சின்ன மனத்தார் செயும்விருந்தின் சாற்றுருசி
> அன்னதினம் விண்ணோர் அறிந்திருந்தால்—முன்னலைவாய்
> வெற்பதனைக் காவியுய்த்து வேலைவிட்டு நின்றலைதல்
> அற்பமெனத் தன்னுவரே யாய்.''

என்பது ஒன்றாகும்.

## ௧௨௭௯. புன்கூர் சிவப்பிரகாச முனிவர்

தருமபுர ஆதினத்தின் பத்தாவது ஞானசாரியராக எழுந் தருளியிருந்த சிவஞானதேசிகரிடத்தில் அருளுரை பெற்றவர். வெள்ளியம்பலவாணத் தம்பிரானிடங் கல்வி கற்றவர். சிவப் பிரகாசக் கட்டளை என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது.

## கஉஅ௦. புன்னைவனக் கவிராயர்
(19 - நா.)

பாண்டிவளநாட்டிற் கல்போது என்னும் ஊரில் இருந்தவர். ஊற்றுமலைப் பெருநிலக்கிழார் இருதயாலய மருதப்பதேவர் காலத்தினர் அவர்மீது செய்யுட்கள் இயற்றியுள்ளார்.

"இருமலையா னையைத் துணைந்தாய் மன்மதன்பூஞ்
சரத்தாலே யிதளு லென்று
யிருமலையார் மொழுகாயிற் றினியலைவாய்
புலவீர்காள் இங்கே வாரும்
இருமலையாச் செல்வமுடைக் கேவனென்
றருள் புரியும் இணையில் வள்ளால்
இருமலையா ரப்புயனை இருதயா
லயபாண்டிய எழிற்சிங் கேறே"

என்பது அப்பாடல்களில் ஒன்று.

## கஉஅக. பூங்காவனக் கவிராயர்

இவர் சென்னை பூவிருந்தவல்லியில் இருந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ந்த அறிஞராயிருந்த இவர் பள்ளிக்கூடம் ஒன்றுவைத்து அதில் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார். பூவை கலியாணசுந்தர முதலியார் தமது இளமைப்பருவத்தில் இவரிடங் கல்விகற்றார். அந்தாதி, கலம்பகம், மாலை முதலிய நூல்களை மாணவருக்குப் போதிப்பதில் இவர் வல்லவர்.

ஒருநாள் கவிராயர் தமது இல்லத்தில் இருந்து பள்ளிக்கு வந்தார். மாணவர்களிற் பெரும்பாலோர் விளையாடிக்கொண்டிருந்தனர். ஆசிரியர் மாணவர்கள் எல்லோரையுந் தண்டிக்கத் தொடங்கினார் பிரம்பையெடுத்து எல்லோருடைய தொடையிலும் அடித்தார். அடி, விளையாடியவர்கள் விளையாடாதவர்கள் எல்லோருக்கும் விழுந்தது. விளையாடாமலிருந்தும் அடிபெற்ற கலியாணசுந்தரர்,

"எந்தவிதக் குற்றமுமியான் இன்றுசெய் யாதிருக்க
என்தன் தொடையதனில் ஏன்சூடு—வந்ததெனப்
பூரணமாய்க் கல்விகற்ற பூங்கா வனக்கவியைக்
காரணநீ கேட்டிடுக கண்டு."

என்று பாட்டொன்றின்மூலம் தந்தையாருக்குத் தெரியப்படுத்தினார். தந்தையார் பூங்காவனக் கவிராயரைக்கண்டு காரணம் உசாவினார். கவிராயர் உண்மையை உணர்ந்தார். இனிமேல் உசாவாமல் எதனையுஞ் செய்வதில்லையென்று மன்னிப்புக்கேட்டார். ஆயினும் கல்யாணசுந்தரரின் தந்தையார் தம் மைந்தரை வேறு பள்ளியிற் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டார். இக்கவிராயர் காஞ்சிபுரம் டச்சையப்ப முதலியாரைப் பாராட்டிப் பின்வருஞ் செய்யுளைப் பாடியிருக்கிறார்:

"தலைமெலாம் புகழ்கச்சிப் பச்சையப்பன்
கொடைக்கிணை நீ தானோ வல்லை
புலவரெலாம் முகிலேசெல் செல்லெனவப்
பேரதனைப் பூண்டு மேலும்
அலகிலாப் பயம்பிடித்து வல்லிடிபட்
டுடல்கருகி அகல்விண் ணேகிச்
சொலவரிய மலைக்கண்ணீர் பொழிந்துதவி
எந்நாளுஞ் சுழலு மாதோ."

## ௧௨௮௨. பூங்கோதையார்

கொங்குவளநாட்டில் சங்ககிரிதுர்க்கத்தில் எம்பெருமான் என்று பெயருள்ள ஒரு புலவர் இருந்தார். அவர் ஆயர் குலத்தில் தோன்றியவர். இளமைப்பருவத்தில் மதுரை திருநெல்வேலி முதலிய இடங்களில் தங்கித் தமிழ்மொழியை நன்குபயின்றார். கடவுளிடத்தில் அன்புள்ள அடியார்களைக் கண்டால் அவர்களைப் புகழ்ந்து பாடுவார். அதனால் இவருக்குப் 'பத்தர்ப்பாடி' என்னும் ஒரு பெயர் உண்டாகியது. மதுரைமாநகரில் தங்கியிருக்கும்போது இவர் அங்குக் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய ஒரு மாதரசியைத் திருமணம் புரிந்துகொண்டார். அம்மாதரசியின் பெயர் பூங்கோதையார். அவ்வம்மையாரே இவர். இவர் செய்யுட்பாடும் ஆற்றலமைந்து சிறந்த புலமையாட்டியாகத் திகழ்ந்தார்.

பிறகு எம்பெருமான் புலவர் தம்முடைய ஊரான சங்ககிரிதுர்க்கத்தையடைந்து சிறப்புடன் வாழ்ந்துகொண்டிருந்தார். ஒருநாள் எம்பெருமான் புலவரைப் பார்ப்பதற்கு வேறு சில புலவர்கள் எம்பெருமான் புலவர் இல்லத்திற்கு வந்தனர். அப்பொழுது எம்பெருமான் புலவர் வெளியே சென்றிருந்தார். வந்

தோர் வீட்டில் அமர்ந்து உரையாடிக்கொண்டிருந்தார்கள். புலவரின் மனைவியார் பூங்கோதையாரும் புலமைநலம் அமையப் பெற்றவர் என்பதை அவர்கள் நன்கறிவார்கள். அவர்களுடைய உரையாடலினிடையே பெண்களுடைய அறிவைப்பற்றியும் பேச்சு நிகழ்ந்தது. ஒருவர் மற்றவரைப் பார்த்துப், "பெண் மக்கள் எவ்வளவு நூல்களைக் கற்று எவ்வளவு புலமையடைந் திருப்பினும் அவர்களுடைய அறிவு முதிர்ச்சி பெறாததேயாகும்" என்று பெண்களின் அறிவுத்திறனைத் தாழ்வாகப் பேசினர்.

உள்ளிருந்து இவர்களுடைய உரையாடலைக் கருத்துடன் கேட்டுக்கொண்டிருந்த அம்மையார்க்குச் சிறிது மனவருத்தம் உண்டாகியது. அம்மையார் உடனே,

"அறிவில் இளைஞரே ஆண்மக்கள் மாதர்
அறிவின் முதிஞரே ஆவர்—அறிகரியோ
தாம்கொண்ட சூலறிவர் தந்தையர் ஆண்மக்கள்
தாம் கொண்ட சூலறியார் தாம்."

என்னும் வெண்பாவை ஒரு சீட்டில் எழுதி ஒரு சிறுமி வசம் அனுப்பினார்.

புலவர்கள் இதனைப் படித்துப் பார்த்துவிட்டு ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துப் பேச நாணங்கொண்டு திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தனர். வெளியே சென்றிருந்த எம்பெரு மான் புலவர் வீட்டிற்குத் திரும்பிவந்தார். புலவர்களைக் கண்ட தும் நல்வரவு கூறி உரையாடிக்கொண்டிருந்தார். பூங்கோதை யார் அனுப்பிய சீட்டைப் புலவர்கள் எம்பெருமான் புலவருக்குக் காட்டினர். எம்பெருமான் புலவர் அதனைப் பார்த்துப் புன் முறுவல் கொண்டார். "ஆண்மக்களை இழித்துக் கூறலாமா?" என்று கேட்டார்.

மனைவியார் உள்ளிருந்தபடியே, "நான் இகழ்ந்து கூறவில் லையே" என்று சொல்லிவிட்டு ஆன்மாவானது நீர்த்துளிவழியாக நிலத்திற் சேர்ந்து உணவு வழியாக ஆடவருடைய கர்ப்பத்தில் தங்கிப் பெண்ணின் கருப்பையுற்றுக் கர்ப்பம் முற்றிக் குழந்தை பிறக்கிறதென்பதை உபநிடதம் முதலிய நூலாதாரங்காட்டி நிலை காட்டினார். பெண்கள் தாங்கள் கருக்கொண்டதை அறிந்து கொள்வதுபோல ஆண்மக்கள் தாங்கள் கர்ப்பமுற்றதைத் தெரிந் திலர் என்றனர்.

வந்திருந்த புலவர்கள் அம்மையாருடைய அறிவு நலத்தைக் கண்டு மிகுந்த இறும்பூதுகொண்டனர். அம்மையாரைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டிச் சென்றனர். அம்மையார் அவ்வச் சமயங்களில் தனிப்பாடல்கள் பல இயற்றியிருப்பதாக அறியப்படுவதன்றித் தனிநூல் செய்ததாகத் தெரியவில்லை. அந்நாளில் விசயமங்கலத்தில் இருந்த கார்மேகக் கவிஞர் என்பவர் தாம் இயற்றிய கொங்குமண்டல சதகத்தில் பூங்கோதையாரைப் பற்றிய மேற்கூறிய செய்தியை,

> "குறுமுனி நேர்தமிழ் ஆழ்புல வாணர் குழாம்வியப்ப
> அறுசீர் இரண்டு பாதம் ஆண்மக்கள் என்ன அறுதியிட்ட
> சிறிய இடைஎங் பெருமாள்மனைவி சிறந்துவளர்
> மறுவறு சங்க கிரிசேர் வதுங்கொங்கு மண்டலமே"

என்று பாடியுள்ளார். நம் செந்தமிழ்நாட்டில் இத்தகைய பேரறிவு வாய்ந்த பெண்மணிகள் எத்தனையோ பேர் வாழ்ந்திருந்தனர்.

## ௧௨அரு. பூந்துருத்தி நம்பிகாடநம்பி

இவர் சோழவளநாட்டிலே காவிரியின் தென்கரையில் உள்ள திருப்பூந்துருத்தியில் இருந்தார். இப்பதியிலேதான் திருநாவுக்கரசு நாயனார் திருமடம் ஒன்று அமைத்து அதில் தங்கியிருந்தார். இக்காடநம்பியும் பல சிவப்பதிகட்குப்போய் இறைவழிபாடு செய்தலையும் திருப்பணி செய்தலையும் மேற்கொண்டிருந்தார். இவர் திருவாரூர், திருத்தில்லை ஆகியவிடங்களில் திருவாய் மலர்ந்தருளிய இரண்டு திருப்பதிகங்கள் ஒன்பதாந்திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன.

> "முத்து வயிரமணி மாணிக்க மாலைகண்மேல்
> தொத்து மிளிர்வன போல் தூண்டு விளக்கேய்ப்ப
> எத்திசையும் வானவர்கள் ஏத்தும் எழில்தில்லை
> அத்தனுக்கும் அம்பலமே ஆடரங்கம் ஆயிற்றே."

என்பது கோயில் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௨அ௪. பூபால பிள்ளை-௪

ஈழநாட்டு மட்டக்களப்பில் உள்ள புளியந்தீவிலே வேளாண் குலத்திலே ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன்னே தோன்றி

டவர். தந்தையார் பெயர் சதாசிவபிள்ளை. தமிழும் ஆங்கிலமும் நன்கு கற்றவர். மதுரைத் தமிழ்ச்சங்கத்து உறுப்பினராகவும் தேர்வாளராகவும் இருந்தார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் சிட்சதனி புராணம், விநாயக மான்மியம், தமிழ்வரலாறு முதலியன.

விநாயகமான்மியத்திற்கு, கண்டிநகர் குமாரசாமிக் குருக்கள், புலவை கலியாணசுந்தர முதலியார், வட்டுக்கோட்டை சிவசுப்பிர மணிய சிவாசாரியார், சுன்னாகம் அ. குமாரசாமிப்புலவர், மு. ஆறுமுக உபாத்தியார், திரிகோணமலை தி. சந்திரசேகர பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"வெள்ளி மால்வரை விமலனுக் கன்பால்
அள்ளி மாமலர் அருச்சனை புரியும்
நந்தியந் தேவன் நவையற மேனாள்
முந்திய புராணம் முதன்மூ வாறு
மறைவழி சனற்கு மாரற் குரைத்தான்
அறையவை கிரந்தம் இலக்க நான்காகும்."

என்பது நூலின் தொடக்கம்.

## ௧௨௮௫ பூரணாநந்த அடிகள்
## (20 - நூ.

இவர் திருவண்ணாமலையை அடுத்த வட்டாரப்புத்தூரில் வாழ்ந்திருந்தவர். இவருக்கு மாணவர் பலர் இருந்தனர். இவர் 'சிவயோகசாரம்' என்னும் நூலை இயற்றியுள்ளார். நூலைப் பாராட்டிப் பராங்குச நாவலர், அங்கு செட்டிப்பாளையம் சின்னச் சாமிச்செட்டியார், கானிலப்பாடி தாண்டவராய அடிகள், ஆருஞ்சி சாமிநாதபிள்ளை, ஆ. வேங்கடசுப்பா ரெட்டியார், வள்ளிவாகை ஆறுமுகம் பிள்ளை, அரங்கசாமிப் பிள்ளை, இராம சாமிப்பிள்ளை, சின்னத்தம்பிப் பத்தர், ச. நாராயணசெட்டியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பூமேவுஞ் சான்றோர் புகழ்யோக நன்னிலையைத்
தாமே சிவயோக சாரமதாப்—பாமேவும்
பூரணா நந்தனெனும் புண்ணியன்பு கன்றனனால்
நாரணன்போற் றுனை நயந்து."

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பாட்டு.

"ஆரணசாத் திரமனைத்தும் உணர்ந்து சீடர்
அவித்தையெலாம் அகற்றியருள் புரியும் ஞான
பூரணறு லெழுந்தெளியேற் குபதே சித்துப்
பூரணானந்தனென நாமந் தந்த
நாரணதே சிகனுமென் குருநா தன்றன்
நளினமலர் அடியிணையைச் சிரமேற் கொண்டு
தாரணியிற் சிவயோக சாரம் என்னும்
தகைபெறுமிந் நூலடியேன் சாற்ற லுற்றேன்."

என்பது இவர் இயற்றிய ஆசிரிய வணக்கப்பாடல்.

## க௨௬ பூரணானந்தர்
## (19 - நூ.)

இப்பெரியார் கோவலூர் என்னுஞ் சிற்றூரில் எழுந்தருளி யிருந்தவர். மெய்யறிவு மிக்கராராகலின் வியத்தகு செய்கைகள் பலவற்றை இயற்றினார். பிறவிப்பிணி மருத்துவராக விளங்கிய இவர் பேய், பசாசு, பில்லி சூனியம் முதலியவற்றால் வருந்தினவர்களுடைய அல்லலைப் போக்கினார். மற்றும் வயிற்று வலி, குருடு, செவிடு, வாதம், மயக்கம் முதலியவைகளையும் திருநீறளித்துப் போக்கினார். இவருடைய பெருமை அந்நாளில் யாண்டுஞ் சிறந்து விளங்கியது. இவர், 'சமரசகலைக்கியானம்' என்னும் நூலை இயற்றி யுள்ளார். அந்நூல் இரண்டாயிரத்தைந்நூறு செய்யுட்களை யுடையது. அருணாசல முதலியார், கலவை அப்பாவையர், இராம நாதபுரம் முத்துநாயுடு, பூரணானந்தராசயோகி, நாராயணப் பிரமேந்திரர் என்போர் அந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

"தாயான சிவயோகி மூலந் தன்னைச்
சங்கையுடன் ஆதாரப் புதுமை கண்டு
வாயார உண்ணுகின்ற இன்பந் தன்னை
வந்ததுவும் போனதுவுங் கண்டாயானால்
ஆயாத அருளதையும் அஞ்சிப் பார்க்கில்
அக்கணமே யோகவழி அறிய லாகும்
சேயான சுந்தரனே செயலைக் கண்டால்
தெளிந்தசிவ யோகமென்ற சமாதி யாச்சே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௨௭௭. பூழியன் குடிப்புலவர்

பூழியன்குடி என்னும் ஊரில் வசித்திருந்தமையால் இவ்வாறு பெயர்பெற்றார். பூழியன்குடி எனபது இக்காலத்தில் புளியன்குடி என்று மருவி வழங்குகிறதாம். இப்புலவருடைய இயற்பெயர் முதலிய செய்திகள் தெரியவில்லை. செங்கோட்டைக்கு மேற்கேயிருக்கிற ஆரியங்கா ஐயனார் மீது இவர்,

"ஊராரைப் பின்சொல்லி உற்றவூரப்
பின்சொல்லி ஒவ்வொறனினும்
தாராரைப் பின்சொல்லித் தந்தாரைப்
பின்சொல்லிச் சற்றுமுகம்
பாராரைப் பின்சொல்லிப் பார்ப்பா
ரெனச்சொல்லிப் பாழ்த்த கும்பிக்
காராரைப் பின்சொல்லு வேன்திரு
ஆரியங் காவையனே"

என்னும் பாடலைப் பாடியுள்ளார்.

## ௧௨௭௮. பெத்தநாயகம் பிள்ளை - சி (1868)

பாண்டிவளநாட்டில் திக்கெலாம் புகழுந் திருநெல்வேலியிற் பாடசாலையொன்றில் ஆசிரியராக இருந்த இவர் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். இவர் காலத்தில் இராமநாதபுரத்தில் பொன்னுச்சாமித்தேவர் சேதுமான்மியம், தனிப்பாடற்றிரட்டு, திருக்கோவையார் முதலிய நூல்களை அச்சிட்டுப் பலருக்கும் வழங்கிக் கொண்டிருந்தார். அப்போது இவர் தேவருக்கு மேற்படி நூல்களைப்பற்றி ஆசிரிய விருத்தம், நேரிசை வெண்பா, நேரிசையாசிரியப்பா முதலிய பாக்களாற் கடிதமொன்று எழுதியனுப்பினார்.

"மங்குல்தவழ் புதுவையின்வாழ் சிவஞான மாறன்
மகிழ்ந்தின்ற மணமுல்லை மலர்மாலை மார்பன்
சங்கமுறும் பாவலர்க்குப் பொருளுதவுந் தகையன்
சங்கநிதிக் கரகமல முடையபொன்னுச் சாமி
கங்கையணி பகவரண்ட ருய்யவன்று வந்த
காரிதனை யுண்டமுத மவர்க்கருள்கை போலப்
பங்கமுறு வகைசேதுப் புராணமதை அச்சிற்
பதித்துதவிப் புகழ்படைத்துப் பாருலகாண் டனனே."

என்பது அப்பாடல்களில் ஒன்று.

## கஉ௯க. பெரியகருப்பன் செட்டியார் - ஏ
(20 - நூ.)

பாண்டிவளநாட்டிலே தேவிகோட்டை என்னும் ஊரில் ஏகப்ப செட்டியார் என்னுந் தனவணிகருக்குப் புதல்வராகத் தோன்றியவர். திரிசிரபுரத்தில் இருந்த மு. நடேச முதலியாரிடம் கல்வி கற்றுத் தமிழ்ப்புலமை நிரம்பப்பெற்று விளங்கினர். அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை என்பவர் பாடிய வயலூர் வெண்பா வந்தாதிக்கு இவர்,

'சுந்தர நாதனுஞ் சொற்றவைக அன்பினொடு
தந்தி முகவனார் தம்பின்னுப்—நந்தம்
வயலூர்வாழ் கந்தனுக்கு வண்வெண்பா வாலோர்
நயமாரந் தாதிசொற்றான் நன்கு.''

## கஉ௯௰. பெரியசாமிச் சேர்வை - வெ
(20 - நூ.)

இவர் பாண்டிவளநாட்டில் சிவகங்கையில் அறுவை வாணிகஞ்செய்துகொண்டிருந்த வெள்ளைச்சாமிச் சேர்வை என்பவருடைய மகனாகத் தோன்றியவர். முத்துக்கிருட்டிண பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமையடைந்த இவர் ஆண்டிப்பட்டிப் பெருநிலக்கிழார் பெத்தாச்சி செட்டியார்மீது 'கீர்த்திரசமஞ்சரி' என்னும் நூலைப் பாடியிருக்கிறார். அந்நூலில் இராமன் செயல்களைக் கூறி அவனே பெத்தாச்சி மன்னன் எனப் புகழ்ந்திருப்பது வியக்கத்தக்கது. ந. மு. வேங்கடசாமி நாட்டார், இவருடைய ஆசிரியராகிய முத்துக்கிருட்டிண பிள்ளை, ஆண்டிப்பட்டி சமத்தான வித்துவான் வி. திருஞான சம்பந்தக் கவிராயர், நாட்டரசங்கோட்டை ப. இராம ஐயங்கார், கும்பகோணம் சுப. வெள்ளைவாரணம் பிள்ளை, வேலு உபாத்தியாயர், சிவகங்கை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் மு. ப கணபதியா பிள்ளை, ஆதி காத்தய்யா பிள்ளை, அரு. சு. வெண்ணிமலைப் பிள்ளை, முத்து சவாதுப்புலவர், பழ. மு. சுந்தரராச நாயுடு ஆகியோர் அந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"நீகன்னிதனில் தேர்ந்துயர்ந்த கேடில் கௌசிகற்கு
நீவன்னிதனைக் காத்தளித்த விற்பனன்பெத் தாச்சி மன்னன்
சொல்லெடுக்கப் பல்லோர் துகளெடுக்க நன்மிதிலை
வில்லெடுக்க மேவுமுயர் வேந்தன்பெத் தாச்சிவள்ளல்"

என்பன நூலிற் சில அடிகள்.

## கஉகூக. பெரியசாமிப் பிள்ளை - தே
(20 - நூ.)

திரிசிரகிரிக்கடுத்த உறையூரில் வாழ்ந்திருந்தவர். சைவசித்தாந்த நூல்களையும் இலக்கண இலக்கிய நூல்களையும் நன்கு கற்றுத் தேறியவர். இவர், கருவூர்ப் பசுபதீசுரர் பாமாலை, திருவானிலைநாதர் போற்றிப்பதிகம், சௌந்தரிய நாயகி சதகம் முதலிய சிறு நூல்களைப் பாடியுள்ளார். நூல்களைப் பாராட்டி, கா. கதிரைவேற்பிள்ளை சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

'நாரணன் கமல நாண்மலர்ப் பொகுட்டின்
தனியமர் நான்முகன் வெள்ளை
வாரணன் மூன்றும் உயிரெவற் றினையும்
வயங்குறக் காரியப் படுத்துங்
காரண ராய கடவுளின் னலது
கடையனேன் கருதுவேன் கொல்லோ
ஆரண வொலியே மலகுறுங் கருவூர்
ஆனிலைப் பசுபதீச் சுரனே."

என்பது பாமாலையில் ஒரு பாட்டு.

## கஉகூஉ. பெரியசாமிப் புலவர் - அ
(19 - நூ.)

சோழவளநாட்டில் வேளூர்வடித் தொறப்பு என்னும் ஊரில் பிறந்த இவர் தமிழ்ப்புலமையிலும் இசைப்புலமையிலுஞ் சிறப்புற்று விளங்கினர். மேலக்கடம்பூர் என்னும் ஊரில் எழுந்தருளிய சுப்பிரமணியர் பேரில் இவர் இசைப்பாடல்கள் பல இயற்றியுள்ளார். அப்பாடல்கள் முழுவதும் இப்போது காண்பது அரிது. ஒவ்வோர் பாடலின் இறுதியிலும் தம் பெயரை நாட்டி இசைச் சுவைகாட்டி அமைத்திருக்கின்றனர் எனத் தெரிகிறது.

பல்லவி

வேலாயுதப் பொருளே இந்த
வேளையில் வரமருளே

அனுபல்லவி

சீலா வுனைத்துதிக்கச் செய்தேனெமபயந்
தீரும் தீரும் தீரும் ஹரஹர— (வேலா)

சரணங்கள்

சூலாயுதந்தன்னைக் கைதன்னிலெடுத்து
சுந்தரராவரும் துயர்தன்னைத் தடுத்து
வாராய் குகனே நீ என்னிடம் அடுத்து
வரவேணுமயில் சாரியைத் தொடுத்து (வேலா)

என்ன குறையுமக்குச் செய்தேனோ
எண்ணமில்லாமற்பெரியோரைவை தேனோ
சொன்னகவிகளெல்லாம் பொய்தானோ
சொல்லிவராமலிருப்பது மெய்தானோ (வேலா)

சிறியேன் கல்வி நிலை தெரியேனே
அதைச்சொல்லும் புலவர்தமை அறியேனே
பெரியசாமிபுகழும் முருகோனே
புகழுங்கடம்பூர்தனில் வருவோனே. (வேலா)

என்பது இசைப்பாடல்களில் ஒன்று. இவருடைய பெயருக்கு முன்னால் இராமநாடகம் என்னுஞ்சொல்லுங் காணப்பெறுகிறது. சிதம்பரம் பிரிவு மன்னார்குடி சரவணமுத்தையர், வீரநாராயணபுரம் சீநிவாசராமாநுசதாசர், உடையார்குடி சொ. முத்துக்குமாரசாமிப் பிள்ளை, வைத்தியலிங்க முதலியார், மேலக்கடம்பூர் சாமிநாதப் பிள்ளை, சோ. அண்ணாமலைப் பிள்ளை முதலியோர் 'சுப்பிரமணிய சுவாமி கீர்த்தனை' என்னும் இவருடைய நூலுக்குச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளனர். இவர் இயற்றிய பிற நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. இவர் குமரகுருபர ஐயர் என்பவரிடங் கல்வி கற்றார் என்பது,

"வில்வ வாரணி யந்தனில் மேவிவாழ்
நல்ல நற்கும ரகுரு நாவலன்
கல்வி யேசொலக் கற்றனை நேயனாய்
வல்ல பாச்சொலும் வாக்கினில் வல்லனே."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகிறது.

## ௧௨௯௩. பெரியசாமியா பிள்ளை

(19 - நா.)

பாண்டிவளநாட்டில் சங்கரநயினார்கோயில் தாலுகா திருவேங்கடத்தைச்சேர்ந்த வெள்ளாளகுளம் என்னும் ஊரில் இருந்த மாணிக்கவாசகம் பிள்ளை என்பவரிடங் கல்விகற்றுத் தேறினர். 'சரவணப்பதிகம்' என்னும் நூலைப் பாடியுள்ளார். மாணிக்கவாசகம் பிள்ளை, தூத்துக்குடி சுப்பிரமணிய பிள்ளை, பரதபண்டித முனுசாமி நாயுடு, நாராயண பிள்ளை, திரிசிரபுரம் பொன்னுச்சாமிப் பிள்ளை ஆகியோர் பதிகத்தைப் புகழ்ந்து சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"சீர்கொண்ட புவியின்வளர் மானுடர்கள் யாவரும்
செய்கின்ற பாவம்எல்லாம்
சேர்த்துமட வியராக உருவமைத் தங்கம்
சிறப்பிக்க எண்ணிநாளும்
ஏர்கொண்ட பூங்கமல பீடமிசை வாசனும்
இம்பரும் பருமதிக்க
இணைவிழிகள் அயிலென்றும் வதனமதி யென்றுமெழில்
நாகபடம் அல்குல்என்றும்
வார்கொண் டிலங்குதனை பாதுளங் கனியென்று
மாகமின் னிடையதென்றும்
வாய்பவள மொண்டரள வெண்மூறுவ லென்றுமொழி
வானமுதின் மிக்கதென்றும்
தார்கொண்ட கூந்தன்முகி லாமென்றும் என்னைச்செய்
தையலர்கள் மையல்நீக்கிச்
சரவண பவாகுமர குருபர குகாகுழக
தமியனுக் கருள்புரிகவே."

என்பது பதிகத்தின் முதற்பாட்டு.

## ௧௨௯௪. பெரியண்ண பிள்ளை - ௧

(1881)

இவர் திரிசிரபுரம் என்னும் ஊரில் இருந்தவர். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்விகற்றுத் தேர்ந்தவர். திண்ணைப்பள்ளிக்கூடம் ஒன்று அமைத்து மாணவர்கட்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார். இவர் திருவாரூரில் எழுந்

தருளியுள்ள தியாகராசர் மீதும் அல்லியங்கோதைஅம்மை மீதும் பஞ்சரத்தினங்கள் பாடியுள்ளார்.

"சீர்கொண்ட புதுமது அருந்திவண் டிசைபாடு
தேந்துழாய்ப் படலைதிகழும்
திருமார்பில் இருளகல ஒளிவிடு கவுத்துவச்
செம்மணி விளக்கேற்றியே
நார்கொண்ட திருமனைவி யைக்குடி புகச்செய்து
நாகமிசை துயிலுமாலும்
நளினமலர் மண்டபத் தினிதுகுடி யேறியே
நாமக ளொடும்புணர்ந்து
பேர்கொண்ட அண்டங்கள் பலவின்ற பிரமனும்
பிரசமலர் நனியுதிர்க்கும்
பெருங்கற் பகத்தரகும் நின்னரு ளினிற்சிறந்து
பெற்றவர்கள் என்கில்அடியேன்
ஆர்கொண்ட நின்கருணை யின்றியெவ் வாறுய்வன்
அணிதிகழும் ஆரூரில்வாழ்
அல்லியங் கோதையமை செல்லெனுங் கோதையமை
அல்லியங் கோதை உமையே."

என்பது அல்லியங்கோதையம்மை பஞ்சரத்தினத்தில் ௫ பாட்டு.

"பொய்யான பலசொல்லில் மெய்யொன்று நுவலாது
பொறிகள்போம் வழியில்நெஞ்சைப்
போக்கியே நின்நேயம் நீக்கியே திரிகின்ற
புலையனேன் தலைமீதிலே
பையாடராவணையில் அறிதுயில் அமர்ந்திடும்
பகவானும் நறவுகமழும்
பதுமா சனத்திலுறை பழமறைக் கிழவனும்
பண்ணவரு நண்ணியேதம்
கையார மலர்கொண் டிறைத்தன புளத்துறக்
கண்ணீர் ததும்பநின்று
கவினத் துதிக்குநின் கழலைவைத் தாளுவாய்
கமலமது ஊற்றெடுத்துச்
செய்யார் செழுஞ்சாலி வளரச்செ யாரூர்
செழித்திடுந் தேவதேவ
தேவிரா சற்கரிய பூவிரா சற்கெளிய
தியாகரா சக்கடவுளே."

என்பது தியாகராசர் பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௬௫. பெரிய திருவடிக் கவிராசர்
(19 - நூ.)

இவர் ஆழ்வார் திருநகரியில் சிறந்து விளங்கியிருந்தவர்; அட்டாவதானம் செய்வதிலும் வல்லவர். மூத்தம்மாள் என்னும் பெண்மணி இயற்றிய திருச்செந்தின் மாலையென்னும் நூலுக்கு இவர்,

"திருவளரும் விசையநகர்க் கதிபதியாம்
　　செல்வனெனுஞ் செயபூ மானும்
தருமவடி வுற்றவனும் சரசகவிக்
　　குஞ்சரனுந் தயாள சீமான்
மருவளருஞ் செவந்திமன மார்த்தாண்டன்
　　மகிழ் வரத்தால் வந்துதித்த
குருமணியென் றுரைபுதல்வி கோலாக
　　லத்துடனே நெல்லை வாழ்வோன்."

"கோனாட்டு மன்னவரும் புகழ்ந்தேத்தும்
　　மதிப்புடைய கொள்கை யோனு
பானாட்டு வீரவா கேந்திரன்மன்
　　மனைவிமுத்தம் மாளென் றோதும்
வானாட்டுச் சசிபுகழுக் கலையுணர்ந்த
　　ஞானமுறு மகிமை யுள்ளாள்
தேனாட்டுக் கதலிநிறை திருச்செந்திற்
　　றேவர்பிரான் சேவ டிக்கே."

"கலைமகளும் மனமிளகக் கவிமாலை
　　புனைவித்தாள் காதிற் கேட்டு
மலைகளிலும் வலிவான பணியரசன்
　　உளமடங்கா மகிழ்ச்சி யாலே
தலையை அசைத் திடவுடனம் புவியாடத்
　　தடங்கயிலை தானும் ஆடி
நிலையுரு தசைந்திடவே திடுக்கிட்டே
　　உமைசிவனை நேர்ந் திட்டானே."

என்பன முதலிய பாடல்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௨௬௬. பெரியசுப்பா ரெட்டியார்
(1900)

இவர் பாண்டிவளநாட்டில் பால்வனம் என்னும் ஊரில் இருந்தவர். அருணாசல தேசிகர் என்பவரிடத்தில் இலக்கண

இலக்கியங் கற்றுத் தேறியவர். அன்னதான மகத்துவ புராணம் என்னும் புராணத்தை இவர் இயற்றியிருக்கிறார்.

> "சொல்லரிய கூடன்மா நகரி லென்றுந்
> துலங்கியகந் தரமூர்த்தி கருணை யாலே
> பல்லுயிர்க்கும் அனதானம் பரிவி னாற்றும்
> பண்பினைத்தென் பாலுவனப் பதியி னானும்
> கல்வியறி வொழுக்கமுயர் புகழ்பெற் றோங்கும்
> கவின்கொளரு ணாசலதே சிகன்பாற் கற்ற
> வல்லதமிழ் நாவலன்கப் பையவே ளிந்த
> மாநிலத்தில் புராணமதாய் வழுத்தி னானால்."

என்பது நூலின் தற்சிறப்புப் பாயிரம். நூலைப் பாராட்டித், திரிசிரபுரம் காத்தபெருமாள் பிள்ளை, மயில் சுந்தர சுவாமிகள், தாமோதரபுரம் சுப்பிரமணியபிள்ளை, குமந்தாபுரி திருஞானசண்முகம் பிள்ளை, குட்டுலொட்டி அழகிரிசாமி ரெட்டியார், விருதுப்பட்டி கந்தசாமிப்பிள்ளை, விருதுப்பட்டி இராமலிங்க சுவாமிகள், வாசுதேவநல்லூர் பழனியாண்டிப் புலவர், பால்வனம் வாழவந்த பிள்ளை முதலியோர் சார்த்துக் கவி கொடுத்திருக்கின்றனர்.

## கஉகூஎ. பெரிய - நூகுலெப்பை ஆலிம் சாகிப்

இவர் காயற்பட்டணத்தில் இருந்தவர். 'வேதபுராணம்' என்னும் நூலை இருபத்தெட்டுப் படலங்கள் அமையுமாறு இயற்றியுள்ளார். கலிமா முதலிய காரணப்படலம், தொழுகைப் படலம், அல்கம்துப்படலம், இன்னிசைப் படலம், குத்துபாப் படலம், வாங்குப் படலம், நோன்புப் படலம், சிபாத்துப் படலம், இல்முசிசாப் படலம், தௌகீதுப் படலம், மிகுறுசுப் படலம், உபாத்துப் படலம், மகுஷர்க்கேள்விப் படலம், மூலாதாரப் படலம், வேதவுதிப்புப் படலம், பூரணப் படலம், வேத புகழ்ச்சிப் படலம், முச்சுடர்ப் படலம், முஷாகிதாப் படலம், ஈரடிக்கொச்சகப் படலம், இன்சான் படலம், நுஜூம் படலம், ஹதீது குதுசிப் படலம், ஷகாதத்துப் படலம், முரீதுப் படலம், யோகமூலி புனுகுகரந்தைப் படலம் என்பன படலத்தின் பெயர்கள். தொளாயிரத்து இருபத்து இரண்டு பாடல்கள் அடங்கியுள்ளன.

"குறித்தநல் மூமினானோர் குத்துபாக் கேட்க வந்தோர்
அறிந்திட வோதும் கத்தீ பவர்மொழி செவியு றாது
மறைந்திடி விருந்தோர் குத்து பாப்பலன் குறைவாம் என்ன
நிறைந்திடுங் கருணை யாதி நிகழ்த்தினன் குருணிற் குன்னே."

என்பது குத்துபாப் படலத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௯௮. பெரிய பிள்ளை

காவிரிநதியின் தென்கரையில் உள்ள சிவபுரம் என்னும் ஊரிலே சைவ வேளாளர் குலத்திலே தோன்றியவர். கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய இவர் துறவுபூண்டு திருவடிப் பேரின்பத்தை அடையவேண்டும் என்று எண்ணினார். அந்நாளிலே திருவாவடுதுறையிலே அம்பலவாண தேசிகர் மெய்யறிவுப் பெருமையினால் சிறப்புற்று விளங்கினார். அவரைக் குருவாகக் கொள்ள எண்ணிய இவர் ஆவடுதுறையை அடைந்து தமது நோக்கத்தை அப் பெரியாருக் குணர்த்தினார்.

அப் பெரியார் இவருக்கு மூவகைத் திக்கையையும் முறை யாகச் செய்து சைவசித்தாந்த நூல்களையும் அறிவுறுத்தி யருளினார். அதனால் இவரும் மெய்யறிவு கைவரப் பெற்றுச் சிறந்து திகழ்ந்தார். இவருடைய சீர்த்தியும் எல்லாவிடங் களினும் பரவியது. இவர் தம்முடைய ஆசிரியரைப் போற்றிப் புகழ்ந்து பல பாடல்கள் இயற்றினார்.

"அத்தனே ! தென்துறைசை அம்பலவா ணாஅமைந்த
சித்த முருவிரண்டுந் தீபமென்றாய்—சுத்தத்தில்
ஒன்று பதார்த்தமாம் ஒன்றுநின் னோடொன்றும்
ஒன்றுவ தெவ்வாறே உரை."

என்பது அவைகளில் ஒன்று.

## ௧௨௯௯. பெரியான் பிள்ளை

இவர் சோழவள நாட்டில் மாந்தை நகர் ஆக்காடு என்னும் ஊரில் வேளாள குலத்திற் பிறந்தவர். அரிச்சந்திரன் கதையை இசை செய்யுட்களாகப் பாடியுள்ளார். வீரகவிராயர் இயற்றிய அரிச்சந்திர புராணத்தினும் இது வேறானது.

"தருவடரும் பொன்னிநதித்
  தண்டலைசூழ் நன்னாட்டில்
அருணமணி மாந்தைநகர்
  ஆக்காட்டுக் கூற்றமுள்ளோரன்
பெருகுகங்கா குலதீபன்
  பெற்றபெரு மானருளால்
வருபெரியான் உரைத்தகதை
  வையகத்தோர் கேட்டருளீர்."

என்பது நூலின் தொடக்கம்.

## கௌ௱. பெருங்கருணை முத்தழகர்

இவர் சேதுநாட்டிற் பிறந்தவர். பெரிய அவதானியாக விளங்கியவர். அட்சராவதானஞ் செய்வதில் வல்லவர். ஆயிரம் அட்சரங்களை எவ்வாறு மாற்றினும் முறையாக அமைத்து வாசிக்கக் கூடியவர். பிறமொழிகளையுங் கேட்டவண்ணமே திரும்பச் சொல்லக்கூடிய ஆற்றல் அமையப்பெற்றவர். இவர் திருக்கோட்டியூர்க் கலம்பகம் என்னும் நூலைப் பாடியிருக்கிறார்.

## கௌ௱க. பெருமாளையங்கார்
(20 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டிலே சீவில்லி புத்தூர்ப் பிரிவைச் சேர்ந்த விழுப்ப நல்லூர் என்னுஞ் சிற்றூரில் வைணவப் பெருமாள் சுந்தரராச ஐயங்கார் என்பவருக்கு மகனாகத்தோன்றி இலக்கண இலக்கியங்கள் கற்றுப் புலமை பெற்றவர். திருமாவிடத்தே பெருமால்கொண்டு அப் பெருமாள்மீது விட்டுணு துவாதச நாமமாலை, இராம நித்திய மங்கள சரித்திரம், நவக்கிரக மாலை, ஆஞ்சநேயமாலை, சடகோபமாலை, திருக்குறுங்குடிப் பதிகம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். இவருடைய நூல்களைப் பாராட்டி, வரதராசதாசர், மதுரகவி சீநிவாச ஐயங்கார், கிருட்டிணசாமி ஐயங்கார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சானகி நாதன் வைகறை எழுந்து
  சாத்திரப் படிதுதி கூறி
ஆனந்த மாக அன்புடன் அநுமான்
  அத்தலை வந்தர மகிழ்ந்து

*ஞானமா மதிசேர் சுமந்திரன் இலங்கும்*
*நல்விளக் கேந்திடப் புனித*
*வானநே ரைந்தாங் கட்டிடம் ஆர்ந்து*
*வைகினன் ஓர்கண மதிலே.''*

என்பது இராமசித்திய மங்கள சரித்திரத்தில் ஒரு பாட்டு.

## க௬௦௨. பெருமாள் கவிராயர்
## (18 - நூ.)

இவர் இராயநல்லூர் என்னும் ஊரில் இராமச்சந்திர கவிராயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். இராயநல்லூர் என்னும் பெயரையுடைய ஊர்கள் தஞ்சைமாவட்டம் முதலிய இடங்களிற் சில இருக்கின்றன. இவர் எந்த இராயநல்லூரைச் சேர்ந்தவர் என்பது விளங்கவில்லை. இவருடைய தந்தையாராகிய இராமச்சந்திர கவிராயர் நாடக நூல்கள் சிலவற்றை இயற்றியிருக்கிறார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய செய்தி யொன்றுந் தெரியவில்லை. கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளை என்பவர் வெளியிட்ட "கொக்கோகம்'' என்னும் நூலுக்கு இவர்,

*"இசைபெற்ற வரதுங்க ராமபாண் டியனுர்*
*இயற்றுகொக் கோகமெனு நூ*
*லினைச்சென் னையில்தமிழ்ச் சங்கத் திருந்திரண்*
*டாம்புலமை யினைநடாத்தி*
*வசையற் றிலங்கிய சிவக்கொழுந் தெனும்வித்து*
*வான்முதல் பண்டிதர்களால்*
*வழுவிலா தாராய்ச்சி செய்ததன் பயனெவரும்*
*வாசிதின் உணர்ந்திடவுரை*
*நசையுற் றிடச்செய்த தன்றியும் அழுதநிலை*
*நாட்டியந் திரமொன்றனை*
*நவமா வரைந்தச் சினிற்பதிப் பித்தனன்*
*நவிலும்அச் சங்கத்தினில்*
*திசையெட்டி னுஞ்செலுத் திடுபுத்த கங்கள்பரி*
*பாலனஞ் செயும்விற்பனன்*
*திகழ்கொற்ற மங்கலப் பதிராம சாமியென்*
*றுரைசெயுந் திருநாமனே.''*

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௲௦௩. பெருமாள் பிள்ளை - ஆ
(20 - நூ.)

இவர் திரிசிரபுரம் என்னும் ஊரினர். ஆதிதிராவிடர் வரலாறு, அறிவானந்தன் முதலிய நூல்களை எழுதியுள்ளார். ஆதிதிராவிடர் வரலாறு ஆதிதிராவிடர்களின் வரலாற்றைக் கூறுவது. அறிவானந்தன் என்பது ஒரு புனைந்துரைக் கதை.

"குலம்போற்று மெளியவர்தங் குறுங்கருத்திற்
ககன்றுவெளி குவிந்த தேய
நிலம்போற்று முயிரனைத்தும் நிறுத்தியருள்
பொழிகின்ற நிமல பெம்மான்
வலம்போற்று நறுந்தமிழின் மலிந்தவாதி
திராவிடரின் வரலாறுய்ப்பாம்
நலம்போற்று மதம்பிளிற்றும் மழகளிற்றின்
தண்கழலை நயந்து நாளே."

என்பது ஆதிதிராவிடர் வரலாற்று நூலில் காப்புப் பாடலாகும்.

## ௧௲௦௪. பெர்சிவல் ஐயர்

இவர் ௧௮௲௬ ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்தார். ஆறுமுகநாவலரிடம் தமிழ்நூல்கள் பலவற்றைக் கற்றார். ௧௮௲ ஆம் ஆண்டில் யாழ்ப்பாணத்தில் கல்லூரி ஒன்றை நிறுவினர். கிறித்துவ சமயசம்பந்தமான சில சிறுநூல்களைத் தமிழில் எழுதி வெளியிட்டார். தமிழில் வழங்கும் பல பழமொழிகளைத் திரட்டி ஆங்கிலமொழி பெயர்ப்புடன் வெளியிட்டார். ஆங்கிலத் தமிழ் அகராதி ஒன்று எழுதினர். சென்னைமாநகரில் தங்கித் "தின வர்த்தமானி" என்னுங் கிழமைத்தாள் ஒன்றை வெளியிட்டார். செய்யுள் செய்யுந் திறமும் இவருக்கு அமைந்திருந்தது.

## ௧௲௦௫. பேரம்பல நாடார். வே. க

இவர் பாண்டிவள நாட்டில் சாலிச் சந்தை என்னும் ஊரினர். பரங்கிரி நாடார் என்பவருக்கு மாணவராகி இலக்கண இலக்கியங்களை நன்கு ஓதியுணர்ந்தார். செம்பாகமாகச் செய்யுள் செய்வதில் வல்லவர். இராமலிங்கக் கவிராயர் என்பவர் ௧௧௲௧ஆம்

ஆண்டில் மதுரைமாநகரில் அட்டாவதானஞ் செய்தார் அப்பொழுது அறிஞர்கள் பலர் கவிராயரைப் புகழ்ந்து பாடினர். இவரும் அப்போது ஆறு பாடல்கள் இயற்றினார். அவற்றுள் ஒரு பாடலை அடியிற் காண்க:

"சீர்வளர்ந் தோங்கும் பாண்டிநன் னாட்டின்
திலதமா விளங்கிடும் பேரை
ஊர்வளர்ந் தோங்கும் வைசியர் மரபில்
உதித்துநற் கலைபல தேர்ந்து
பார்வளர்ந் தோங்கும் முத்துக்கு மாரு
பாண்டிய துரைபுரி செங்கோல்
பேர்வளர்ந் தோங்கும் சமத்தான வித்வ
பீடமீ திருந்தொளிர் தீபம்."

## ௧௯௦௬. பொன்னம்பல அடிகள் (காஞ்சி) (1868)

இவர் காஞ்சிபுரம் ஞானப்பிரகாச தேசிகர் ஆதீனத்தில் அடியவராக இருந்து அருளுரை பெற்றவர். இலக்கண இலக்கியப் புலமையும் நன்கு பெற்றவர். பின்னளிற் சென்னைமாநகரில் தங்கிப் பலருக்கு ஆன்மபோதம் விளக்கியவர். இவரிடம் அருளுரை பெற்றுச் சிறப்படைந்தோர் பலர். இவர் இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவருக்கு எழுதிய ஆசிரியப்பாவாலியன்ற கடிதத்தின் ஒருபகுதி,

"சீர்வளர் பாண்டித் தென்னு டதனுள்
ஏர்வளர் இராம நாத புரமெனும்
பெரும்பெயர் புனைந்த பெற்றி யுடைத்தாய்
அரும்பொருள் விளக்கும் அகலிடம் படைத்து
நாட்டணி சிறப்பும் நகரணி சிறப்பும்
பாட்டளி துதைந்து பாடுஞ் சோலையும்
பங்கயச் செல்வியும் பழுதிலா வாணியும்
செங்கண்மால் பிரமனும் சென்று வணங்க
நாயகச் சிவனார் நண்புடன் உறையும்."

என்பதாகும்.

இவர் 'இருசமய விளக்கசோதி' என்னும் நூல் ஒன்றை இயற்றியுள்ளார்.

" விதிமுறை பாசபந்தம் வினையிரண் டகளை வேதம்
நிதிநிரோ தாயிமாயை நிறைந்தது மனமே மாலாம்
மதிகதிர் பகலிம் மூன்றுக் வருந்தவம் முற்றிப் பூத்த
பதியெனும் அறிவ தீதம் பரந்திடஞ் சிவம தாமால்."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கஙOஎ. பொன்னம்பலதாசர்

(19 - நூ.)

திருத்தில்லையில் பாதபூசை அம்பலத்தாடுஞ் சுவாமிகள் ஆதினத்தில் இருந்தவர். 'தில்லைச்சிவகாம செளந்தரி' திரு விரட்டை மணிமாலை' 'திருநாமாவளி' என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

" கொங்கார வண்டடஞ் சூழ்தில்லை வாழ்பைங் கொழுந்தெழுநற்
சிங்கார வல்லிவெற் போனருஞ் செல்வத் திருப்புதல்வி
எங்கார நின்றில குஞ்சிவ காமி இணைமணிப்பொன்
தங்கார மெல்லடிப் போதுளஞ் சாருந் தவஞ்சிவமே."

என்பது இரட்டைவணி மாலையில் ஒரு பாட்டு.

## கஙOஅ. பொன்னம்பல பிள்ளை - பூ

(20 - நூ.)

செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய இவர் ஈழவள நாட்டிலே தெல்லியம் பதியிலே பிறந்தவர். இவர் பூதப் பிள்ளை பொன்னம்பலம் பிள்ளை எனவும் கூறப்பெற்றார். இவர் சென்னை யில் ஆசிரியத் தொழிலை மேற்கொண்டிருந்தார். மணஞ்செய் யாமலே இருந்து நாற்பத்தைந்தாவது அகவையில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். மாவையந்தாதி என்னும் யமகவந்தாதி இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது.

" காவணங்காவணங் கார்கொடி மேழியர் கற்பகப்பூங்
காவணங்காவணங் காற்றன் மறையே கமலைநெருக்
காவணங்காவணங் காட்டிய மாவைக் கவிகுறையா
காவணங்காவணங் காந்தமறைத் துங்க தாரகமே."

என்பது அவ்வந்தாதியில் ஒரு பாட்டு. வேறு பல சித்திரகவி களையும் இவர் இயற்றியுள்ளார்.

## ௧௩௦௧. பொன்னம்பல முதலியார்
(1868)

இவர் சென்னைமாநகரில் புரசவாக்கத்தில் வாழ்ந்திருந்தார். சென்னை அரசினரின் பல்கலைக்கழகத்தில் புலவராகப் பணியாற்றியவர். இவர் பல நூல்களைப் பரிசோதித்து அச்சிட்டிருக்கிறார்: அவைகளுள் "செங்குந்தர் ஊசல்" என்பது ஒன்று.

"காலன்முறி படவெழுதி யோலைவிட்ட
காளைநவ வீரர்களே ஆடீரூசல்
சூலமழுப் பாணியரன் மைந்தர் என்ற
சொல்லுயர்ந்த நாயகரே ஆடீரூசல்
சீலமுடன் அஞ்செழுத்தைத் துதித்தெந் நாளும்
சிவபூசை புரந்தவரே யாடீரூசல்
ஆலகண்டன் பார்வதியம் பிகையைப் போல
அவரவர்தம் மனைவியரோ டாடீரூசல்."

என்பது செங்குந்தர் ஊசல் என்னும் நூலில் ஒரு பாட்டு. செங்குந்தர் ஊசலைத் தவிர வேறு நூல் செய்த விவரந் தெரியவில்லை சில நூல்களுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

## ௧௩௧௦. பொன்னம்மாள்
(20 - நூ.)

இவ்வம்மையார் இரங்கநாத அடிகள் என்னும் இயற்பெயருடைய சச்சிதானந்த அடிகளின் மாணவர்களில் ஒருவராக அருளுரை பெற்றுத் தவஞானத் திருவாட்டியாகத் திகழ்ந்தவர். இவர் "சிவானந்த சாரம்" எனப் பெயரிய நூலை இயற்றியிருக்கிறார். இந்நூல் பரமகாருண்யநிதி, மதிநாதபரமகுரு, சச்சிதானந்த குரு, சோமசுந்தரத் தெய்வம், நித்தியானந்தகுரு, ஆருமறியாத பொருள், சச்சிதானந்த சிவம், சம்போசற்குரு, ஓங்காரமணி விளக்கு, வரதன், சோமநாதகுரு, போற்றி விருத்தம், தஞ்சம், அடைக்கலம் போற்றி, பரம்பொருள், சோமசுந்தரகுரு, பரம சற்குரு, திருவருட்குரு, ஞானசற்குரு, உத்தமகுரு, அற்புத குரு, மாதவகுரு, நெல்லையப்ப மூர்த்தி, காந்திமதியம்மை, கைலாசநாதசிவம், நெஞ்சம், சுந்தரேசர், நெஞ்சே, மனமே முதலிய பல பிரிவாக அமைந்துள்ளன.

" கன்னலமு தேயுனைக் கண்ணீறன் காணுமொரு
காலம் எப்போதுவருமோ
காணாத பொருளைக் கருத்திலே வைத்துக்
கலங்கிய திரிதல்நன்றே
சொன்னபடி கேளாத பிள்ளையா னுநான்
துன்பத்தி லாழ்தல்முறையோ
சூதான வெளியைத் தொடர்ந்துநான் பெற்றுநற்
சுகமடைவ தெப்படியுரை
என்னகுறை நானுனக் கெனவேண்டு மென்றுமே
ஏகாந்த மோனஞானம்
எனக்குக் கொடுக்கவோ ரன்பான நினைவுநீ
கென்றுவரு மோவறிகிலேன்
அன்னைபோல் என்னை நீ ஆண்டுகொண் டருளுவாய்
அப்பனே உனையடுத்தேன்
அண்டபகி ரண்டமும் ஆனந்த மாய்நிறைந்
தாருமறி யாதபொருளே."

என்பது ஆருமறியாத பொருள் என்னும் பிரிவில் ஒரு பாட்டு. பாடல்கள் பெரும்பாலும் தாயுமானவர் பாடல்களை அடியொற்றியவைகளாக உள்ளன.

## கஈகக. பொன்னரங்கம் பிள்ளை. தி. அ.
## (20 - நூ.)

நடுநாட்டில் திருவெண்ணெய் நல்லூரில் இருந்தவர். தமிழ் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்த இவர் போர்டு எலிமெண்டரி பாடசாலை ஒன்றில் ஆசிரியராகப் பணிசெய்திருந்தார். இனிய செய்யுட்களை நன்கு பாடுந் திறமையமைந்த இவர் இராசப்ப நாவலர் என்பவர் இயற்றிய திருவெண்ணெய்க் கலம்பகம் என்னும் நூலுக்கு,

" தூயகவி லாயத்து நிருமித்த படிநாவல்
தொன்னகரில் வந்துதித்த
சுந்தரர் தனைத்தடுத் தாட்கொண்ட வெண்ணெய்த்
துலங்கருட் டுறையில்வாச
தேயமுறு மங்களாம் பிகையிடப் பாகத்து
நேசன்கிர் பாபுரீசன்
நீதமா மலரடியின் மீதிற் றெழும்புபுரி
நெடியவந் நகரி லோங்கும்

மேயசெங் குந்தமர பிற்நிலைக மாய்வந்த
வித்துவ சிரோமணி யணி
விண்ணவ ருந்தமிர்த மென்னநவ ரசவணி
விளங்கிய தமிழ்ப்பூ மலர்
ஆயது தொடுத்துக் கலம்பகப் பிரபந்த
மாலையை யற்க ணிந்தான்
அரும்பொருள் இலக்கிய இலக்கணக் கவிபிரா
சப்பநா வலர்க ளரசே.''

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கஙகஉ. பொன்னிகுடி கிழார்
## (19 - நூ.)

இவர் சோழவள நாட்டில் பொன்னிகுடி என்னும் ஊரில் இருந்தவர். அதனுல் இவருடைய பெயர் பொன்னிகுடி கிழார் என இடப்பெயராக மருவியது. இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. இவர் பாடிய உரைச் சிறப்புப்பாயிரம் ஒன்று திட்பநுட்பஞ் செறிந்து சிறந்து விளங்குகிறது.

'' மன்னிய உலகில் நன்மர புற்றோர்
தம்மொரு மரபிசை தாங்கிளந் துறுதல்
ஓம்புத லொழுக்கத் துறுதியென் றிசினோர்
வான்பொருள் வல்லுநர் ஆயினு மாக
முன்னூற் றிறனெலாம் பின்னுறு காலைப்
பற்றி கலழுக்கா லுற்றபல் கிளைஞர்.''

என்பது பாயிரத்தின் தொடக்கம்.

## கஙகங. பொன்னுச்சாமிக் கவிராயர்

மதுரைமாவட்டம் கரிசற்பட்டி சமீனைச் சார்ந்த புதுப்பட்டியிலே வேளாண்மரபில் தோன்றியவர். இலக்கிய நூல்களையும் இலக்கண நூல்களையும் நன்கு கற்றுச் சிறந்த புலமை படைத்து திகழ்ந்தவர். வாராப்பூர் பெருநிலக் கிழார்பேரில் "காதற்பிரபந்தம்'' என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றினர். இவர் இவ்வுலக வாழ்வைத் துறந்தது கஅஅக ஆம் ஆண்டில் என்பர்.

"பொட்டுக்கண் டொட்டுக்குட் கிட்டுக்கொப்
பாய்மயல் பூட்டுமிரு
வட்டுக்கொப் புற்றுக் கதித்துத்தன்
னாடு மதுக்குடம் போல்
பட்டுக்கச் சிட்டுப்பொற் கொட்டுப்பொற்
பாரப் பணைத்தமுலை
தொட்டுப்பத் தெட்டுப்பொன் னிட்டுக்கண்
டாளுஞ் சுகமெய்துமே."

என்பது இவர் பாடிய தனிப்பாடல்களில் ஒன்று.

## கஅகச. பொன்னுச்சாமிச் செட்டியார்
(20 - நூ.)

இவர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்த பெரியதம்பிச் செட்டியார் என்பவருக்கு அருமைத் திருமகனாகத் தோன்றிக் கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்திருந்தார். அக்காலில் அன்பர்கள் பலர் ஒன்றுசேர்ந்து திருப்போரூர்க்குக் கால்நடையாக முருகக்கடவுள் வழிபாட்டிற்குப் போவது வழக்கம். அவ்வாறு செல்லுங்கால் வழிநடைத் தொல்லை தோன்றாமல் இருப்பதற்கு அவரவர்கட்குத் தெரிந்த பாடல்களைப் பாடிக்கொண்டு போவர். அவ்வாறு போகுங்கால் பாடிக்கொண்டு போவதற்கு வழிநடைப்பாசுரம் பாடித்தரவேண்டுமென்று இராயபுரத்தில் இருந்த சிங்காரவேலுப் பிள்ளை என்பவர் வேண்டிக்கொண்டார். இவர் அதற்கிணங்கி திருப்போரூர் முருகர் 'வழிநடைப்பாசுரம்' என்னுஞ் சிறிய நூலைப் பாடினார்.

"பொன்னயிர் செழுஞ்சடைக் கடவுளக
மகிழநகு பூமண்ட லங்களெல்லாம்
வன்னமயில் ஊர்தியின் நொடிக்குள்ளே
விப்பவனி வந்தவெழில் முருகையனே
எந்நலமும் அறிகிலா ஏழையடி
யாளிவன் எனக்கருணை செய்தருளுவாய்
அன்னவயல் சூழ்திருப் போரூ
ரமர்ந்தவரு ளாருனனக் கடவுளே."

என்பது நூலில் ஒருபாட்டு. வேறு நூல்கள் இயற்றிய விவரந் தெரியவில்லை.

## கா௨கரு. பொன்னுச்சாமி நாயகர் - நா
(19 - நா.)

இவர் புதுச்சேரியில் இருந்தவர் இவருடைய தந்தையார் பெயர் நாகமுத்து நாயகர். பொன்னுச்சாமி நாயகர் மாணிக்க உபாத்தியாயர் என்பவரிடத்தில் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றார். 'சிசலிங்க சிக்கையர் சரிதம்' என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றுள்ளது. அந்நூல் நாடக காப்பிய மாகச் சிறந்து விளங்குகிறது. புதுவை தருமதானபுரம் கண்ணு ஐயர், பொன்னுப் பிள்ளை, பு. அ. பெரியசாமிப் பிள்ளை, புதுவை அண்ணாமலை முதலியார் என்போர் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் அளித்துள்ளனர்.

> "இறைய வானின் றிராத்திரி தன்னிலோர் திருடன்
> மறைவி லொண்டிறுன் குத்தினேன் மறுபடி வருங்கால்
> குறுகி யோர்மயில் குனிந்தனள் குற்றுயிர் இருந்து
> சிறுக மூக்கினைக் கடித்தவன் சிவனை விட்டான்."

என்பது நூலில் ஒருபாட்டு.

## கா௨கசு. பொன்னுச்சாமிப் பிள்ளை - தி
(20 - நா.)

இவர் மதுரையைச் சேர்ந்த உத்தங்குடி என்னுஞ் சிற்றூரில் இருந்தவர். வேடிக்கையான கதைகள், பாடல்கள் முதலி வன எழுதுவதில் வல்லவர். இவர் பூசாரி குறிசொல்லுகிற, "கோடாங்கி மாலை" என்னும் நூல்பாடியிருக்கிறார்.

> "பத்தியாய் மகரம்வந்து பாங்குடன் உதித்த தாலே
> எத்திசை யறியராகும் இயல்பதாய் உச்ச மேறத்
> தத்திய சோகந் தீருஞ் சகலநன் மையுமுண் டாகும்
> சித்தியாஞ் சகல முந்தான் சிறுமையும் அணுகி டாதே."

என்பது நூலில் ஒருபாட்டு. இப்பாட்டில் கைக்குறி முகக்குறி களை நோக்கிக் குறி கூறுவார் கூறும் முறைக்கேற்பக் குறி விகற் பங்களும் பயன்களும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. நூலில் அகவற்பா முதலிய பல பாக்களும் அடங்கியுள்ளன.

## கருகஎ. பொன்னுச்சாமிப் பிள்ளை
(19 - நா.)

தஞ்சைமாவட்டத்தில் முத்துப்பேட்டை என்னும் ஊரில் ஏறக்குறைய அறுபது ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர், இலக்கண இலக்கியங்களில் வல்லவர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. ஞானசாரம் என்னும் நூலுக்கு இவர்,

"கலைகடல்சூழ் அம்புவியில் சரிகைகிரி யாயோ
கங்கடந்த மெய்ஞ்ஞானக் காட்சியினால் உயர்ந்த
சனகன்முத லோர்வசிக்கும் பதத்திலமர்ந் திருப்போன்
சங்கரிதாட் கிலம்புதித்தோர் மரபுறுநா கப்பன்
வினைகளினாற் பவக்கடலாழ் பவரையருட் கரையின்
மீதேற்றி யிளைப்பாற்றும் ஒருசோங்கு போலும்
தனதுநிசா னந்தஅனு பவந்தனை யத்விதசிந்
தாமணியென் றிடுஞான சாரமுரைத் தனனால்."

என்னுஞ் செய்யுளால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கருகஅ. பொன்னுச்சாமிப் பிள்ளை - பு. அ
(1893)

இவர் புதுச்சேரியில் புதுப்பாளையம் என்னும் இடத்தில் இருந்தவர். சு. வேலாயுத உபாத்தியாயர் என்பவரிடங் கல்வி கற்றுத் தேறினார். புதுவை வேதபுரீசர் திருக்கோயிலில் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது இரட்டைமணிமாலை என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். அந்நூலைப் பாராட்டிப், புதுவை பொன்னு உபாத்தியாயர், திருப்பாதிரிப் புலியூர் க. ரா. சிவ சிதம்பர முதலியார், கும்பகோணம் சிவகுருநாத ஐயர், பு. அ. பெரியசாமிப் பிள்ளை, புதுவை. கு. இரத்தின உபாத்தியாயர், புதுவை. சு. மாணிக்க உபாத்தியாயர் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"பூமாதங் கத்துடையான் பூமனறி தற்கரிய
பூமாதங் கத்துடையான் புந்திமகிழ்—வாமானோம்
செவ்வாயி னோதியருள் சேந்தநினைச் சேவிக்கச்
செவ்வாயி னோதியருள் செய்."

என்பது இரட்டைமணி மாலையில் முதற்பாட்டு.

## ௧௩௧௯. பொன்னுச்சாமிப் பிள்ளை - ம

இவர் திரிசிரபுரத்தில் பிறந்தவர். இரங்கூன் பேப்பர் கரென்சி அலுவலகத்தில் பொருளாளராக இருந்தவர். இலக்கியப் புலமையும் நன்கு அமையப்பெற்ற இவர் கமலாட்சி, விசய சுந்தரம், ஞானசம்பந்தம், ஞானம்பிகை, அரிச்சந்திரன் முதலிய நாடக நூல்களை இயற்றியுள்ளார். நட்சத்திரத்தரகர்:

"அரிச்சந்திரா ! நீ முழுச்சந்திரன்
அந்தமுனிசெய்தது அடுக்காது
அறிந்து மிருக்கேன் தடுக்காது
அடவியில் நீங்களோ நடப்பது
அவசிய மல்லவா இதைத் தடுப்பது
புவனியில் அவரால்வந்த அபாயம்
போக்கக் கண்டேனொருபாயம்
நீ எந்தன் வார்த்தைகளை நம்பி
என் இட்டம்போல் நடந்தால் தப்பி
உன்னோடு முனிவரிடம் வருவேன்
உன் நாடு நகரம் மற்றதும் வாங்கித்தருவேன்."

நடையின் போக்கில் இஃதொரு பகுதி.

## ௧௩௨௦. பொன்னுத்துரை ஐயர்

ஈழவளநாட்டு வண்ணார் பண்ணையில் இருந்தவர். மறையவர் குலத்தினர். ஆறுமுகநாவலரிடத்திலும் பொன்னம்பலப் பிள்ளையிடத்திலும் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுணர்ந்தவர். 'நல்லை நிரோட்டக யமக அந்தாதி' என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது. இவர் ௧௯௨௬இல் மறைந்தார்.

## ௧௩௨௧. பொன்னுபாத்தியாயர் - சாமி

"மன்னும் புதுவை வளநகர் வாழ்வோன்
கற்க எனுங்குறட் கமைதியா யொழுகும்
நற்புல வருக்கும் தவில்செல் வருக்கும்
விழிமணி எனத்திகழ் மேன்மை மிகுந்த
அழகிய குணஞ்சேர் அற்புத நாவோன்
பூமிக் கமுதமாய்ப் பொலிநதி குலத்தோன்
சாமி நாதவேள் தவத்தினில் உதித்தோன்
பொன்னெனும் பெயர்பெறு புனித நாவலன்."

என்று அறிஞர்களாற் பாராட்டப் பெற்ற இவர் புதுச்சேரியிற் தோன்றிக் கல்விகற்றுச் சிறந்த புலவரானார். வைத்தீசுவரன் கோயில் தையல்நாயகி அந்தாதி முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். தையனாயகி அந்தாதியைப் பாராட்டிப் பெரியசாமிப் பிள்ளை, பாரதப்பிரசங்கி கண்ணுவையர், க. ரா. சிவசிதம்பர உபாத்தியாயர், சுப்பு-இராமசாமி முதலியார், பழநி சிவகுருநாத ஐயர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

வைகறையில் துயிலெழும்போது இவர் நாள்தோறும்,

"சென்ற இரவில் நித்திரையில்
செழிக்கத் தோன்றாத் துணையாக
நின்று காத்த செயல்போல
நிலவும் இற்றைப் பலநலமும்
ஒன்றிப் பொல்லாங் கில்லாமல்
உள்ளங் களிக்கச் செய்திடுவாய்
நன்றி மறவேன் தையலம்மா
நாளும் உன்றன் பரவுவனே."

என்று பாடி வேண்டுவார்.

## ௧௬௨௨. பொன்னுப்பெருமாள் செட்டியார் (20 - நூ.)

பாண்டிவள நாட்டிலே ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு அண்மையில் உள்ள அய்யபட்டி என்னும் ஊரில் பிறந்தவர். தந்தையார் பெயர் சிதம்பரஞ் செட்டியார். கல்விகற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்த இவர் சண்முகம் பிள்ளை என்பவர் பாடிய திருவிளையாடற் புராண சங்கிரகம் என்னும் நூலுக்கு ஏழு பாடல்களால் சிறப்புப் பாடல்கள் பாடியுள்ளார்.

"தருமங்கை உயர்ந்தோங்கக் கல்வியொடு
செல்வமிகத் தழைக்கப் பூமேல்
இருமங்கை யவரெனும்வெண் கமலையொடு
செங்கமலை இசைந்து வாழும்
திருமங்கை நகரெனவாய் பாளையங்கோட்
டைப்பதியில் தேனு வென்ன
வருமங்கைக் கொடைவள்ளல் அம்மையப்ப
செம்மல்பெற்ற வரிசைப் பாலன்."

"மாதுசங்கந் தரமணவு மணிமாட
அந்நகரில் வாழ்வோன் தூய
சாதுசங்கப் பழக்கமுதல் ஒழுக்கமுமெய்த்
தருமமுமே தனமென் றுன்னி
ஓதுசங்கத் துடன்கூடி ஆகமபு ராணமெலாம்
உணர்ந்து ஞானச்
சூதுசங்கத் தனமிடற்று மங்கையொரு
பங்கனையே துதிக்கு நேயன்."

..........................................................................

"இப்படியான் இசைப்பன்ன எழுந்துகுறு
முனிமலைவாய் ஏகி னன்பின்
செப்புறுநா வும்பிளந்து செவியிலனாய்
நிலவரைக்குட் சென்றான் சேடன்
ஒப்பமைசூ ரியன்தெரியா தவனாகக்
கற்றுவர ஓடி னன்பார்
மெய்ப்புலவீர் எப்படிநாம் இப்புலவர்க்
கொப்புவமை விளம்பல் தானே."

## ௧௫௨௫. பொன்னைய சுவாமிகள்
## (1875)

இவர் பாண்டிவள நாட்டில் சிவகங்கையில் இருந்தவர் முதலில் இல்லறவொழுக்கத்தை மேற்கொண்டிருந்து பிறகு துறவியானவர். இவருக்கு வாலையானந்தம் பிள்ளை, திருபுவனஞ் செல்லம் பிள்ளை என்னும் பெயருடைய புதல்வர்களும் இருந்தனர். புலமைத்திறம் அமையப் பெற்ற இவர் வீரமாகாளி அம்மன், குணங்குடிமஸ்தான், உலகநாத சுவாமி என்பவர்களின் திருவருளைப் பெற்றவர் என்று தம்மைக் கூறிக்கொண்டார். இவர் இயற்றிய நூல்களில் "சதானந்தசதகம்" என்பது ஒன்று அறியப்படுகிறது.

"ஆனையுரு வறியாத குருடர்சிலர் கூடியதின்
அவயவத் தொவ்வொன்றையே
அத்தியிது வாமெனத் தடவிநிச் சயமுற்ற
அறிவுபோல் அகிலமதனில்
வானைநீ என்பரும் வளியைநீ என்பரும்
வன்னிதனை நீஎன்பரும்
வனத்தைநீ என்பரும் மண்ணைநீ என்பரும்
மதிகதிரை நீஎன்பரும்

சேனைமழு வுழையணிச் சிவனை நீ என்பரும்
சிவனதை நீஎன்பரும்
செய்யவிடை பிங்கலையி னொளியான சுழுமுனைத்
தீபமதை நீயென்பரும்
தாவமின அளவில்பல பலவிதம் உரைப்பதோர்
சந்தைநான் என்றுதெளிவேன்
சமயநெறி பலவெலாம் அறிவாய் விளங்கிய
சதாநந்த சோதிமயமே.''

என்பது சதானந்த சதகத்தில் ஒரு பாட்டு

## கருஉச. பொன்னோதுவார் - சு
## (20 - நூ)

இவருடைய தந்தையார் பெயர் சுப்பிரமணிய ஓதுவார். இவர் திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்தவர் சே. ரா. சுப்பிரமணியக் கவிராயரிடம் கல்வி கற்றவர். ஒப்புயர்வற்ற பெரும் புலமையுடையவர். மாணவர் பலர்க்குக் கல்விகற்பித்தவர். சீர்காழி முதலிய இடங்களில் உயர்நிலைப் பள்ளிகளில் ஆசிரியராக இருந்ததன்றி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் இருந்து பணிபுரிந்தார். மு. ரா. கந்தசாமிக் கவிராயரால் இயற்றப் பெற்ற பவாநி வேதநாயகி பிள்ளைத் தமிழ் என்னும் நூலுக்கு,

''பொன்னுலகும் ஒவ்வாத பொற்புறுசெந்
தமிழ்நாடாப் புகல்கன்னிக்கு
மின்னமரு மூவலூர விளங்குதலின்
மூவலூர மிளிருகின்ற
தன்னகரிற் பலகுடிகள் நாள்தோறும்
மிகப்பொலிந்து நலங்கள் மேவித்
துன்னியுள வாலவற்றுள் ஓங்குமொரு
நோல்குடிதான் துலங்க மாதோ.''

''கல்லாரை இல்லாத அவ்வொருவே
ளாண்குடியிற் கவினுற்றோங்கும்
நல்லாளும் இராமசாமிக்கவிஞன்
தனயர்கடாம் நலம்பெற்றுள்ளார்
பல்லோரும் புகழுந்தத் தனயர்களிற்
பிற்பிறந்த பண்பன் இங்ஙன்
எல்லாரும் அதிசயிப்ப இமைக்குமுனம்
பலகவிசொல் எழில்வாய்ந்துள்ளோன்.''

" இத்தகைய கந்தசா மிக்கவிருன்
பவாநியென இயம்பா நின்ற
தத்தலைக்கா விரிசூழும் தலவேத
நாயகியாம் தாயின் தாளில்
இத்தலத்தில் இனிப்பிள்ளை எனச்சொலத்தான்
ஆகாத இயல்பை உன்னிப்
பத்தியுடன் ஒருபிள்ளைத் தமிழிசைத்தான்
அதனெழிலைப் பார்த்தன் புற்றே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். மற்றும் பல நூல்களுக்கு இவர் சிறப்புப்பாயிரம் முதலியன வழங்கியுள்ளார்.

## கஙஉ௫. போசராச பண்டிதர்

ஏறக்குறைய எழுநூறு யாண்டுகட்குமுன் இலங்கையில் தம்பைமா நகரத்தில் அரசு புரிந்திருந்த சூரியவமிசத்தரசனுகிய பராக்கிரமவாகு என்னும் அரசனுடைய அவையிலே இப் புலவர் சிறந்து விளங்கியிருந்தார். இலக்கண இலக்கியங்களினும் காலக்கணிதத்திலும் மிக வல்லவர். மறையவர் குலத்தில் தோன்றியவர்.

அவ்வரசனுடைய வேண்டுகோளின்படி 'சரசோதிமாலை' என்னும் காலக்கணித நூலைச்செய்து அரங்கேற்றினர். அந்நூல் க௦௧ செய்யுட்களைக் கொண்டது. சோடச கருமப் படலம் முதல் நட்சத்திர தெசைப் படலம் இறுதியாகப் பன்னிரண்டு படலங்களையுடையது முதல் ஒன்பது படலங்களாலும் சங்கிதாஸ் கந்தத்தையும் ஏனைமூன்று படலங்களாலும் சாதகஸ் கந்தத்தையும் தொகுத்தும் விரித்தும் விளங்கக் கூறுகின்றது. சைவர்கட்கும் வைணவர்கட்கும் மிகுந்த பயனுடையது. நூலாசிரியருடைய பெயர் முதலியன அந்நூலில்,

" உரைத்தசக வருடமா யிரத்தி ருநூற்
றெருதாலெட் டினிவிளங்கு வசந்தந் தன்னில்
தரித்திடுவை காசிபுதன் பணியி னுனில்
தம்பைவளர் பராக்கிரம வாகு பூபன்
இருத்தவையில் சரசோதி மாலை யீரா
றேய்படல ...த்தொன்பான் முப்பா னென்காம்
விருத்தமரங் கேற்றினனற் போச ராச
விஞ்சைமறை வேதியனும் புலவ ரேறே."

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேற்படி நூலில் தேவிவிரதத்தைப் பின்வருமாறு கூறியுள்ளார்:

' ஆடியிற் பூரநாளை அம்பிகை அவதாரஞ்செய்
பீடுறு தினமாம் அதில் பேசிய உண்டி நீத்தும்
ஆடையே முதலதான மறையவர் மாதரார்க்கு
நாடியே அளிப்பராயின் நற்பலன் உரைக்கொணாதே.''

## கா௨௬. போகர்

இவர் முனிவர்களில் ஒருவர். போகர் சத்தகாண்டம், வைத்தியம் எழுநூறு முதலிய மருத்துவநூல்களை இயற்றியுள்ளார். இவர் காலாங்கி நாதர் என்னும் முனிவருக்கு மாணவராகி அவரிடம் அருளுரை பெற்றவர். போகர் சத்தகாண்டம் என்பது ஏழு பிரிவுகளாக அமைந்துள்ளது. இதில் வைத்திய முறைகளும், புதுமைகளும், முனிவர்கள் வரலாற்றுச் செய்திகளும் கூறப்படுகின்றன. இவர் தாம் உலகம் முழுவதுஞ் சுற்றிவந்ததாகவும் மேருமலைக்கு இடப்பாகத்தில் கண்ணபிரான் கோபிகைகளோடு விளையாடல் புரிந்த மண்டபத்தையும் அங்குச் சித்தர்களையும் கண்டதாகவும் பாடுகிறார். மற்றும் போகர் திரிசங்கு, சத்திய அரிச்சந்திரன் ஆகியோரைக் கண்டதாகவும், அரிச்சந்திரனிடத்தில் அருளுரை பெற்றதாகவும் பாடுகிறார். மற்றும்போகர் உலகத்தில் உள்ள யாவற்றையுந் தாங்கண்டதாகப் பாடுகிறார். இறுதியில் தம்முடைய வரலாற்றைப் புலிப்பாணி முனிவருக்குக் கூறுமிடத்தில்,

'' பாடினேன் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன்
பாலகனே புலிப்பாணி பகரக் கேளாய்
நீடியதோர் காலாங்கி கிருபையாலே
நீதியுடன் நெடுங்காலம் இருந்தேன் அங்கே
தேடியே காலாங்கி நாதர் தாமும்
தேற்றமுடன் தத்தமக்கு உகந்த சீடன்
நாடியே வேண்டுமென்று நன்மையாலே
நானவர்க்கு நற்சீடன் ஆகினேனே.''

'' ஆகினேன் நெடுங்காலம் பணிகள் செய்து
அப்பனே சமாதிக்குப் பூசை செய்தேன்
பாலில்விழும் ஈயைப்போல் பாதவித்தேன்
பட்சமுடன் என்மீதில் மனது வந்து

சாகின்ற சடலமதுங் காயந் தந்து
சட்டமுடன் என்றனக்கு இதங்கள் கூறி
மேதிடவே ஞானோப தேசஞ் சொல்லி
மேன்மையுடன் என்னையாட் சீர்வதித்தார்."

என்பன ஆதியாகப் பாடுகிறார்.

## ௧௩௨௭. போற்றிமுத்துப் பிள்ளை

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியில் இருந்தவர் புதுமையாகச் செய்யுட்கள் பாடுவதில் வல்லவர். தனிப்பாடல்கள் பல இயற்றியிருக்கிறார் அவை ஒவ்வொன்றும் சொற்சுவை, பொருட்சுவையுடையவாக விளங்குகின்றன.

"கன்னன் உமக் கென்னசெய்தான் அதுபோ கட்டும்
கருணைமிகு குமணனுமக் கென்ன செய்தான்
தென்னன் உமக் கென்ன செய்தான் நளனென் செய்தான்
சிசுபாலன் என்னசெய்தான் யாதொன்றின்றே
அன்னவர்கள் பெற்றபுகழ்ப் பேயர் நாண
அடுத்தவர்கள் வலிகளை நீ கெடுத்தே போட்டாய்
பொன்னுசுவா மித்துரையே புதுவை வாழும்
புரந்தரநீ செய்ததும நீதி தானே."

என்பது பொன்னுச் சாமித் தேவர்மீது இயற்றப்பட்ட பாடல்களில் ஒன்று.

## ௧௩௨௮. மகாதேவ ஐயர்
## (1914)

பாண்டிவள நாட்டிலே திருச்செந்தூரிலே இருந்தவர். கல்வியிற் சிறந்து விளங்கிய இவர் அட்டாவதானம் புரிவதிலுந் தேர்ச்சிபெற்று விளங்கினார். பா. நாராயணசாமி நாயுடு என்பவர் இயற்றிய நெட்டூர்ப் புராணம் என்னும் நூலுக்கு இவர் சாற்றுக்கவி பாடியுள்ளார்.

"மிக்கபுகழ் மயனகரப் பானுநா
யுடுதவத்தால் விளங்க வந்தோன்
தக்கவர்கள் உரைநாரா யணசாமி
சிந்துபூந் துறையான் சந்த

அக்கவிஞர் பேரன்பன் பிறர்க்குறுதி
உதவிபுரி அகத்தன் செந்தூர்
புக்கருமை அறுமுகவன் கோபுரத்தின்
துதிபுகன்றோன் புலமை யாளன்.''

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பாட்டு.

## ௧௩௨௧. மகாதேவ முதலியார் - வா
## (1912)

சென்னைமாநகரில் இருந்தவர். இலக்கண இலக்கிய நூல்களையும் சைவசித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுத் தேறியவர். இவைகளையன்றி ஆங்கில மொழியினும் வல்லவர். இவர் கல்லூரிகளில் ஆசிரியராக மாணவர்கட்குக் கல்வி கற்பித்ததன்றித் தனிப்பட்ட முறையிலும் பலருக்குக் கல்வி போதித்தார். இவர் முருகக்கடவுளிடத்தே நீங்காத பேரன்புடையவர். அக்கடவுள் மீது, திருச்செந்தூர் முருகர் பதிகம், பழனியாண்டவர் பதிகம், பழனிநான்மணிமாலை, திருமயிலம் இரட்டைமணிமாலை, முதலியவைகளையும் பரமாசாரியர் பாமாலை, சொக்கலிங்க சுவாமிகள் வெண்பா, பன்னிருபாட்டு ஆகியவைகளையும் இயற்றியிருக்கிறார். இவர் ஒரு போலித் துறவியைப் பார்த்து,

''செந்நீர் தசையிரண்டும் சேர்ந்தான துன்றுடம்பும்
எந்நாளும் மும்முறைநீ என்னிலுண்பாய்—இந்நாளில்
எற்றோபெண் ணாசை இகந்தாய் இசைத்திடுநீ
வற்றாத் துறவொழுக்கு வாய்ந்து ''

என்று பாடினார். சென்னைமாநகரைக் குறித்து,

''வானாடும் வந்துபுகக் காதலிக்கும்
செவ்வியதாய் மலர்க்க ரத்து
மானாடும் சம்புமகிழ் திருப்பதிகள்
அகந்தழீஇ மாக்கண் மொய்த்துத்
தேனாடுங் குழல்நல்லார் பொற்பாலுங்
கற்பாலுந் திகழ்ந்து நின்றார்
கோனாடுங் கலவியினில் புலவியினில்
கலனெறியுங் குவளச் சென்னை.''

என்று பாடினார். மற்றும் இவர் பாடிய கவிகளை இவருடைய சிறுநூல் தொகையில் காண்க.

## ௧௫௫0. மகாலிங்கக் கவிராசர்

திருத்தில்லையில் சைவப்பிரகாச வித்தியாசாலையில் தலைமையாசிரியராக இருந்த ம. க. வேற்பிள்ளை என்பவரின் அருமைப் புதல்வராகத் தோன்றியவர். இலக்கண இலக்கியப் பயிற்சியில் வல்லுநர். செய்யுள் பாடுவதிற் சிறந்து விளங்கியமையின் கவிராசர் என்னுஞ் சிறப்புப் பெயரும் பெற்றார்.

" திருந்தருளெம் பரமகுமை யுடனுறைசா
    யாவனப்பேர் நகரூந் தெய்வப்
பெருந்தலமான் மியமதனைக் கவிராச
    நாயகப்பேர்ப் பெருமா னுய்வைத்
தருந்தமிழி னமிழ்தமெனச் சாற்றினனால்
    பெருந்தொட்ட த் தலைச்சார் சைவக்
குருந்துதுறை சாமியச்சிற் பதித்தெவரும்
    எளிதுணரக் கொடுத்திட் டானே "

இந்து இவருடைய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௧௫௫௧. மகுதூமுகம்மதுப் புலவர்
## (19 - நா )

இவர் காயற்பட்டணம் என்னும் ஊரில் கண்ணகுமது மகுதூம் பிள்ளையவர்கள் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தம்முடைய சமய நூல்களையும் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றுத்தெறிய இவர் சிறந்த தமிழறிஞராக விளங்கினார். செய்யிது இபுறாகிம் ஒலி என்பவர் தென்னாட்டிற் படையெடுத்துப் போர் செய்த செய்திகளை மதுரை பீசவண்ணக் களஞ்சியப் புலவர் தினெறி விளக்கம் என்னும் பெயரோடு செய்யுளாகப் பாடியிருக்கிறார். இவர் அந்நூலை உரை நடையில் எழுதியுள்ளார். 'தினெறி விளக்க வசனகாவியம்' என்பது நூலின் பெயர். இவரைப் பாராட்டி காசுர்தர்கா புலவரும், மக்காக்கோவை, பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களைப் பாடியவரும் ஆகிய செவத்தமரைக்காயர் என்பவர்,

" சீர்கெழு கலைகள் கசடறத் தேர்ந்தோன்
    சிறக்குமெற் பனைரதி சயிப்ப
நீர்கெழு பன்னூல் சொலும்பெருந் திறத்தோன்
    நிலைகெழு கடவினை யுணர்வோன்

பேர்கொழு மெய்க்கண் ணகுமது மகுதூம்
பிள்ளைநற் றவத்தினில் உதித்தோன்
பார்கொழு மகுதா முகம்மதுப் புலவன்
பயனுடன் நாளும்வா ழியவே ''

என்று பாராட்டிப் பாடியுள்ளார்.

'' பல்பல லோகம் யாவையும் நாட்டப்
படியமைத் தாகசெய் யரசே !
வல்லிய நீர்த்த செயிதிபு குலும்
மன்னவர் சரித்திர மான
எல்லைதே கரொளிருந் நீனெறி விளக்கம்
என்பதை வசனகா வியமாய்ச்
சொல்லவென் னுளில் உனதருள் பெரிதாய்ச்
சுரந்திடச் சொரிந்திடு வாயே ''

என்பது உரைநடைக்குக் காப்பாக இவர் இயற்றியது.

## ௧௯௯௨. மங்கைபாகக் கவிராயர்

பாண்டிவள நாட்டில் மிதிலைப்பட்டி என்னும் ஊரில் இருந்தவர். மான்விடுதூது பாடிய குழந்தைக் கவிராயர் என்பவர் இவருடைய மகனுவர். இவருடைய முன்னோர்கள் மகாபலி புரத்தில் இருந்து மிதிலைப்பட்டிக்கு வந்து குடியேறியவர்கள் என்பர். இவர் நத்தம் பெருநிலக் கிழாராகிய இம்முடிலிங்கைய நாயகர் குமாரர் சொக்கலிங்க நாயகர்மீது கி. பி 1712-13 ஆம் ஆண்டுகளில் 'வருக்கக்கோவை' என்னும் நூல் பாடிப் பூசாரிப் பட்டி என்னும் ஊரை நன்கொடையாகப் பெற்றுர். இச்செய்தி ஒரு தாமிரப்பட்டயத்தால் தெரிகிறது. இவர் இயற்றிய வருக்கக் கோவை மறைந்தொழிந்தது போலும்.

## ௧௯௯௩. மங்கைவாழ் கவி
(1800)

வீரபாண்டியக் கட்டபொம்மன் காலத்தில் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள பாளையங்கோட்டையில் வாழ்ந்திருந்தவர். போதிய இலக்கண இலக்கியப் பயிற்சி பெற்றவர். வீரபாண்டியக் கட்டபொம்மனுக்கும் கிழக்கிந்தியக் கம்பெனியார்க்கும் நிகழ்ந்த போர்களையெல்லாம் நேரிற்

பார்த்தவர். அப்போர் நிகழ்ச்சிகளையெல்லாம் கும்மிப் பாடல்களாகப் பாடத்தொடங்கினர். அப்பாடல்களைப் பொது மக்கள் கேட்டுத் தாங்களும் பாடத்தொடங்கினர். கட்டபொம்மனுக்கு விளம்பரம் அதிகமாவதைக் கண்ட கும்பினியார் அச்சங்கொண்டனர். கட்டபொம்மனைப் பற்றி யாரும் எத்தகைய பாடல்களையும் பாடக் கூடாதென்றும் பாடினால் சிறைத் தண்டனை தப்பாது என்றும் கண்டிப்பான கட்டளை பிறப்பித்தனர் மங்கை வாழ்கவியோ எதனையும் பொருட்படுத்தாமல் கும்மிப் பாடல்களைப் பாடிக்கொண்டேயிருந்தார். அப்பொழுது கலெக்டராக இருந்த ஆங்கிலேயன் இவரைப் பிடித்துச் சிறையில் அடைத்து விட்டான். உடலைச்சிறையில் அடைத்தாலும் உள்ளத்தைச் சிறையில் அடைக்கமுடியாதன்றோ? சில திங்கள்வரை சிறையில் அடைபட்டுக் கிடந்த இவர் உள்ளத்திற்குள்ளேயே பாஞ்சாலங் குறிச்சிப் போர் நிகழ்ச்சிகளைக் கும்மியாகப் பாடிவைத்திருந்தார். வெளியே வந்ததும் எழுதி ஒளித்து வைத்தார் அச்சுவடிவேறவிட்டாலும் ஆங்கிலேயர் கண்ணுக்குப் புலப்படாமல் இன்றுவரை உள்ளது.

"வாராண்டா வாராண்டா வெள்ளைக் காரன்—அவன்
வரட்டும் முரட்டுத் தொப்பிக்காரன்
தொப்பிக்காரன் குண்டு செல்லாது—அவன்
துப்புக்கெட்ட குணம் பொல்லாது
இனிவெள்ளைக்காரன் படை வெல்லாது—நாம்
எதிர்த்து விரட்டினால் நில்லாது"

"எத்தன் நாவினில் அநுதினம்—முந்குடி
இருக்க வேண்டும் சரஸ்வதியே
மங்கைவாழ்கவி சந்தங்கள் சொல்கிறேன்—மன
மகிழ்ச்சியாகவே கேளும் ஐயா."

## ௧௩௩௪. மச்சமுனி

சித்தர்களில் ஒருவர். மருத்துவ நூல்கள் பல செய்துள்ளார்.

"காயாதி கற்பங் கருவொன்று சொல்கிறேன்
மாயாதி மூலமும் வளருமுன் மூலமும்
ஓயாத சத்தி ஒளிகொண்ட மூலமும்
சாயாமல் மூன்றுந் தன்னுக்குள் பார்த்திடே."

என்பது இவர் இயற்றிய மச்சமுனி என்னூறு என்னும் மருத்துவநூலின் ஒரு பாட்டு. இவர் மீன்வடிவமுடையவ ரென்றும் தலைமட்டும் மனிதத்தலையாக இருந்ததென்றும் காலாங்கி மலையில் தவஞ்செய்துகொண் டிருந்தாரென்றும் போகமுனிவர் தம்முடைய மாணவராகிய புலிப்பாணி முனிவருக்கு,

"கூறான கோடிவகை அதிசயங்கள்
கொற்றவனே காலாங்கி மலையில் அப்பா
நீறான மகாமுனியார் தவசியப்பா
நெடுங்காலந் தானிருக்கும் கொடியசித்து
வாறான மச்சமென்ற தேகம் அப்பா
வளமான சிரமுகந்தான் மனித ரூபம்
சேறுதிப் கலைவேயாரம் மலையோ ரத்தில்
செம்மலுடன் தவமிருப்பார் ரிஷியார் தாமே"

என்று, "போகர் சத்தகாண்டம்" என்னும் நூலில் கூறியுள்ளார்.

## ௧௩௩௫ மச்சரேகைச் சித்தன்

இவர் முகமதிய சமயத்தினர். பாடல்கள் தெளிந்த கருத்துக்கள் பொதிந்தவைகளாய் மஸ்தான் பாடல்களைப்போல் உள்ளன. வேதாந்த சித்தாந்த சமரச நன்னெறியைப் பின்பற்றியவராகக் காணப்பெறுகிறார்.

"சுத்தசுயஞ் சோதியாய்ப் புத்தி விசாரணை
கருதியறு போத முத்தி
சுத்தசித் தாத்துமா வேதமுடி வானநெறி
சுகாநுபவ நிர்விகார
முத்தருள வாநந்த நித்திரை சதாநந்த
முத்தடை நசித்து நேதி
மூப்பாழ் கடந்தசுகந் தப்பா தகம்வெளி
மூத்தேக மற்றொழிந்த
வத்தநிலை சத்துரு சித்துரு நிராசையின்
அவகாச மமைதி சாந்தம்
அறிவகண் டாகார குறிகுண நீதமே
அந்நியமில் தன்ரூபமாஞ்
சித்தமசை யாதவெளி எத்தொழிலு மற்றதே
சின்மயம் பரம போகஞ்
சித்தனை பிரசாத்துரிய வத்தனையில் தானும்
சிவோகந் தலைத்தொழுகுவாம்."

என்பது சொரூபவணக்கப் பாடல்களில் ஒன்று. இத்தகைய பாடல்கள் ஆயிரத்திற்கு மேற்பட்டவைகள் ஒன்று திரட்டப் பெற்று, "மச்சரேகைச் சித்தன் திருப்பாடல்" என்னும் பெயரோடு வெளிபடுத்தப் பட்டுள்ளன.

## ௧௬௬௬ மஸ்தான் புலவர்

ஏறக்குறைய நூறாண்டுகட்கு முன்பு இராமநாதபுரத்தில் இருந்த முஸ்லீம் புலவர். இசைப் புலவராகவும் விளங்கிய இவர் இசைப்பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

பல்லவி

*சிந்தித்துவா மனமே—முகியித்தீன்*
*திவ்யபதந் தினமே*

என்பது இசைப்பாடலின் தொடக்கம்.

## ௧௬௬௭. மணக்குடவர்

திருக்குறளுக்கு உரையெழுதியவர்கள்: தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பரிதி, திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர் என்று பதின்மராவர் என்பது,

*"தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்*
*பரிதி பரிமே லழகர்—திருமலையர்*
*மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர் நூற்(கு)*
*எல்லையுரை செய்தார் இவர்."*

என்னுஞ் செய்யுளால் பெறப்படுகிறது. மணக்குடவர் பிறந்த ஊர் வாழ்ந்த இடம் முதலியவைகளைப் பற்றி யாதுந் தெரியவில்லை. மணக்குடி என்னும் ஊர் என்றும் மணக்குடியர் என்பது காலடைவில் மணக்குடவர் எனத் திரிந்து விட்டதென்றுஞ் சிலர் என்னுவர். திருக்குறள் உரையைத் தவிர வேறு நூல்களை இவர் இயற்றியதாகத் தெரியவில்லை இவருடைய உரை வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களால் வெளியிடப் பெற்றுள்ளது. இம் மணக்குடவரும், இளம்பூரணரும் ஒருவரே யென்றுஞ் சிலர் கருதுவர்.

## க௯௯௪ மணவாளதாசர்
## (1892)

இவர் கூடலூர்மாவட்டம் கள்ளக்குறிச்சிப் பிரிவைச் சேர்ந்த கடுவனூர் என்னும் ஊரில் இருந்தவர். வைணவ சமயத்தினராகிய இவர் அச்சமயப் பழக்கவழக்கங்களையே கருத்துடன் மேற்கொண்டிருந்தார். திருக்கோவலூர்த் திரிவிக்கிரமப் பெருமாள்மீது பதிற்றுப்பத்தந்தாதி என்னும் அந்தாதி ஒன்றை இவர் பாடியிருக்கிறார்.

*"நீயேஇவ் வுலகனைத்தும் நிறைந்து நிற்பாய்*
*நின்றுளிந்த உலகனைத்தும் நிறைந்து நிற்கும்*
*தாயாவாய் எவ்வுயிர்க்குந் தந்தை யாவாய்*
*சற்குருவா வாய்வணங்கும் சாமி யாவாய்*
*வேயான்நற் சுருதியிசை பாடி யாக்கன்*
*மெய்த்ததிரி விக்கிரமனே விழலை ஞகும்*
*நாயேன்செய் கொடியபவப் பிணியைப் போக்கி*
*நற்சுகத்தில் இருக்நும்வரம் நல்கு வாயே."*

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு. இந்நூலுக்குக் கள்ளக்குறிச்சி பராங்குசதாசர், நரசிம்ம நாயகர், சிதேவி கொளத்தூர் உபாத்தியாயர் நாராயணதாசர், அரிராகவ ராமானுசதாசர், குன்றத்தூர்-மதுரகவி மாணிக்க முதலியார், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், மாயூரம் முத்துச்சாமிப் பிள்ளை, திருமயிலை வி. சுந்தர முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

*"கொண்டல்தவழ் தண்டலைசூழ் கோவலூர் விக்கிரமற்குத்*
*தண்டமிழால் அந்தாதி சாற்றினன்—மண்டலமேல்*
*மாஇக் கடுவனகர் வந்த மணவாள*
*தாசனுனத் தன்பு தழைத்து"*

என்பது குன்றத்தூர் மதுரகவி மாணிக்க முதலியாருடைய பாட்டு.

## க௯௯௫. மணவைக் கூத்தன்

சிறந்த புலவர்களில் ஒருவராக விளங்கிய இவர் பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்திருந்தவர். இவருடைய பெயர் **"மணவை யூருடையான் பூமாலைக் கூத்தன் பாண்டிப்பெருமாள்"**

எனவுங் காணப்பெறுகிறது இவர் செய்தநூல் இன்னதென்று விளங்கவில்லை. செய்யுள் செய்தார் என்னுஞ் செய்தி,

"துளைபடுமாமர மோரேழு மெய்தவன் தூதுகவி
உளைபடு வாரிதி யொன்றோ கடந்த தொளிர்தரள
வளைபடு வாவி மணவைமன் கூத்தன் வருந்தகவி
தளைபடு காலுட னேகட லேழையுந் தாண்டியதே."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகிறது.

## ௧௩௪௦. மதனசிகாமணி

இவர் பரத்தையர் மாலை என்னும் மறைக்காட்டம்மான் மாலை என்று ஒரு நூல் பாடியிருக்கிறார். நூலின் பொருள் விலைமாதர் மையலில் சிக்காதே என்பது. நூறு பாடல்களைக் கொண்டது.

"பூமாலை மணிமாலை முத்து மாலை
பொன்மாலை மலர்மாலை புனித மாலை
பாமாலை சர்க்கரைகற் கண்டு சீனி
பதுமரா கம்பவளம் சாந்து மோகக்
காமேவுங் கத்தூரி எனும்பேர் கொண்டு
காமுகரைப் பணம்பறிக்கக் கற்ற மாய
மாமாய வேசையரை மறந்து நீங்கி
மறைக்காட்டில் அம்மானை வணங்குவீரே"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௩௪௧. மதாறு சாகிப்

இவர் ஐயன்பேட்டை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். ௨௩௪ பாடல்களைக் கொண்ட 'மிகுருசுநாமா' என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றது. இது ௧௮௮௮ ஆம் ஆண்டில் வெளிவந்தது.

## ௧௩௪௨. மதுரகவி கபாலமூர்த்திப்பிள்ளை - ந
(19 - நூ.)

"சீரேறும் ஐங்கரனுக் கினிய தொண்டன்
சீரியர்க ளும்புகழ வாய்ந்த யோக்யன்
வாரேறுந் த்ராவிடமிங் லீஷில் வல்லன்
வழுதிகுலந் தனில்விளங்கும் கருண வாக்யன்

தாரேறும் நயனப்ப வேள்குமாரன்
தன்னைப்போற் பிறரையுந்தே சிக்கு மித்ரன்
பேரேறும் மதூரகவி கபால மூர்த்திப்
பிள்ளையவன் வளம்பெருகி வாழிதானே.''

என்று இராமச்சந்திரப்புலவர் அவர்களால் பாராட்டப்பெற்ற இவர் ஆதிவன்னுவகுல திலகர். முருகக்கடவுளிடத்து அன்புடையவர். நயனப்ப பண்டிதர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். திருநெல்வேலிப் புலவர் சோசேப் நாடார் என்பவரிடங் கல்வி கற்றவர். காலக்கணிதத்திலும் தமிழ்ப் புலமையிலுஞ் சிறந்து விளங்கிய இவர் 'மச்ச சாத்திரம்' ''பஞ்சபட்சி சுருக்கம்'' என்னும் காலக்கணித நூல்களை இயற்றியுள்ளார். இராமச்சந்திரப் புலவர் என்பவர் புரூரவச்சக்கரவர்த்தி நாடகத்தை இயற்றியரங்கேற்றியபோது இவர் தம்மாலியன்ற உதவிகளை அவருக்குப் புரிந்தார். மற்றும் இவர் வள்ளியம்மை நாடகம், சிவசுப்பிரமணியக் கடவுள் திருமுகவுலா, சித்திரகவிப்புஞ்சம், கம்பை வழிநடைக்கும்மி என்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

## ௧௩௪௩. மதுரை இராமசாமிப் பிள்ளை

இவர் இராமநாதபுரத்தில் தோன்றியவர். பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடங்கேட்டவர். அப்பொழுது இவரோடு படித்தவர்கள் நமச்சிவாயத் தம்பிரான், தேவகோட்டை நாராயண செட்டியார் முதலியோர். பொன்னுச்சாமித் தேவருக்கு இவர் ஆருயிர்த் துணைவராக அமைந்திருந்தார். ஆறுமுக நாவலரிடத்தில் நல்ல பழக்கம் உடையவர். இவருடைய முயற்சியால்தான் ஆறுமுகநாவலர் பொன்னுச்சாமித் தேவரின் பொருளுதவி பெற்று நூல்கள் பலவற்றை அச்சிற் பதிப்பித்து வெளியிட்டார் இவரும் பல நூல்களை ஆராய்ந்து அச்சிற் பதிப்பித்து வெளியிட்டார். பாண்டித்துரைத்தேவருக்குத் தமிழாசிரியரும் இவர் தாம். பிற்காலத்தில் இவர் மதுரையை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்திருந்தார். கம்பரந்தாதி, முல்லையந்தாதி, திருவிளையாடற் புராண முதற் காண்டம் ஆகிய நூல்கட்கு உரை யெழுதினர். அட்டமிப் பிரதக்கிணம், பேரூர்ப் புராணம் முதலிய நூல்களை அச்சிற் பதிப்பித்து வெளியிட்டார். தீக்கைப் பெயர் திருஞானசம்பந்தப் பிள்ளைஎன்பது.

## ௧௩௪௪. மதுரைக் கந்தசாமிப் புலவர்

சென்னைக் கல்விச் சங்கத்தில் இருந்தவர் மிருதி சந்திரிகை முதலியவற்றைத் தமிழில் இயற்றியவர். அந்நூல் ௧௮௨௬ ஆம் ஆண்டில் அச்சிடப் பெற்றது.

## ௧௩௪௫. மதுரைநாயகம் பிள்ளை - சு (19 - நூ.)

தொண்டைமான் புதுக்கோட்டையில் சுப்பிரமணிய பிள்ளை என்பவருக்கு அருமைத்திருமகனாகத் தோன்றிய இவர் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். மிகு விரைவாகவும் எளிதாகவும் செய்யுளியற்றுந்திறம் இவரிடம் நன்கு அமைந்திருந்தது. பழனி வெண்பா என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரத்தின் ஒரு பகுதியை அடியிற் காண்க.

"திருவுலை றை மார்பத் திருமா தவன்றன்
பெருவுரு வதனிற் பிறங்கிய உரோமக்
கடைதொறுந் தூங்குங் காட்சிக் கடங்காத்
தொடுகடல் அண்டத் தொகுதிய தென்னப்
பற்பல வருக்கை நற்பல மிகுந்த
சொற்பெருங் கனியின் சுளைவாய் விண்டு
வார்தரு தேறல் ஏர்தரப் பெருகிச்
சீர்தரு வயலிற் செறிபளை யெடுக்கும்
கடைசியர் முன்னர்க் கயலினைக் கல்விக்
கொடியினந் தோன்றக் குலவிய அயில்வேற்
கண்ணெனத் தத்தங் கரங்கொடு பொத்தும்
பெண்ணவர் முகமாம் பெருமதி கண்டு
அழல்நிற ஆம்பல் அரும்புகள் மலரும்
கழனி வளஞ்சேர் பழனிமால் வரையில்
தெருளுறுஞ் சைவச் செழும்பயிர் தழைக்க
அருள்சூற் கொண்டாங் கமர்ந்திடு மேகம்

## ௧௩௪௬. மதுரைமுத்து உபாத்தியாயர்

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன் தஞ்சைமா நகரிலே மகாவித்துவான் என்று புகழ்பெற்று விளங்கியிருந்தார்.

முத்தாம்பாள்புரம் நாராயணசாமி உபாத்தியாயர் என்பவர் இவருக்கு நெருங்கிய நண்பர். அவர் பாடிய பரிதியப்பார் தல புராணம் என்னும் நூலுக்கு இவர் ஒன்பது செய்யுட்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"புவியிடைப் புலவர் புராணங்கள் அநேகம்
புகன்றுளார் அவையெலாம் நல்ல
கவிகளே அவை செவ்வரன் இணையைக்
காட்டிடா இஃதுகற் றுணர்ந்தோர்க்
கெவிதநீ வினைகள் இருப்பினும் அனலின்
இடுதுரும் பெனத்தகித் தான்மாச்
சனிபெற விளக்கும் இதற்கிதே இணையாய்ச்
சாற்றலாம் மயக்கற இலவே."

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பாட்டு.

## க௱சஎ. மயிலைநாதர்

இவர் செங்குந்தர் ஊசல் முதலிய நூல்கள் பாடியுள்ளார். இதில் செங்குந்த குலத்தவரைப் பெரும்பாலும் மன்னவராகக் கொண்டு பாடப்பட்ட செய்தி விளங்குகிறது. செங்குந்தர் உமாதேவியார் மக்கள் எனவும் சோழமண்டல முதலிகள் எனவுங் கூறப்படுகின்றனர்.

"சந்தனங்குங் குமம்புழுகு களபம் பன்னீர்
சவ்வாது கூட்டிவடடில் தன்னில் மொண்டு
கந்தமிகத் தோகையர்கள் நிறைந்துப் பூசக்
கனககந்தக் கார்க்குழலார் வசந்த மாட
இந்துநுதல் மடவார்கள் பூப்பந் தாவ்விட்
டெறிந்துகையால் மருக்கொழுந்து மலரும் வாரிச்
சிந்துமழை போற்பொழியக் களித்த வீரச்
செங்குந்த மன்னவரே யாடிரூசல்."

என்பது ஊசலில் ஒரு பாட்டு நன்னூலுக் குரையெழுதிய சைனராகிய மயிலை நாதர் அல்லர் இவர். இவர் செங்குந்த குலத்தினர்.

## க௱சஅ. மருதநாயகம் பிள்ளை

இவர் இலக்கண இலக்கிய நூல்களிலும் சைவசித்தாந்த நூல்களிலும் நல்ல பயிற்சியுடையவர். முதன் முதலாகச் சைவ சித்தாந்த நூல்களைப் பதிப்பித்தவர் இவரே என்பர்.

## கரு௪௧. மருதாசலக் கவுண்டர் வி. நா.

இவர் கொங்குவளநாட்டிலே கோயமுத்தூரின் வடகிழ்பால் ஏழுமைல் தொலைவில் உள்ள விளாங்குறிச்சி என்னும் ஊரில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் நாச்சிமுத்துக் கவுண்டர். இவருடைய குலம் கொங்கு வேளாளர் குலம்

கோயமுத்தூர்க் கல்லூரியில் தமிழும் ஆங்கிலமும் கற்றார். இவருக்குத் தமிழ்க் கல்வியைப் போதித்தவர் அ. கந்தசாமிப் பிள்ளை. தெய்வத் திருவருளால் பாடும் ஆற்றல் இவருக்கு இளமையிலேயே உண்டாகிவிட்டது. இருபதாவது அகவையில் பாடத் தொடங்கினார்.

இவர் பல பதிகங்களையும் மாலைகளையும் பாடியுள்ளார். மருதாசலப் பிள்ளைத்தமிழ், நாரணமாலை முதலியன செய்யுள் நூல்கள். சசிகாந்தன் என்பது புனைந்துரைக் கதை வேளாள புராண வசனம் என்பது செய்யுள் நூலை உரைநடையாக இயற்றியது. இவருடைய நூல்களை, அ. கந்தசாமிப் பிள்ளை, சி. கே. சுப்பிரமணிய முதலியார், சிரவணபுரம் கௌமாரமடம் கந்தசாமி சுவாமிகள், தி. மு. செந்தில்நாயகம் பிள்ளை முதலியோர் பாராட்டிப் பாடியுள்ளனர்.

இவர் கடவுளன்பு மிகுதியும் உடையவர். எதுவரினும் பொறுத்துக் கொள்ளும் பொறுமையுடையவர்; அறிஞர் மாட்டும் பெரியோர் மாட்டும் அன்பும் பணிவும் உடையவர்.

## கரு௫0. மருதுப் பிள்ளை

சிவகங்கைக் கடுத்த மானகுடியிலே வேளாண் மரபிலே பிறந்தவர். தென்மொழியினும் வடமொழியினும் வல்லவர். பலருக்குக் கல்வி கற்பித்துக் கொண்டும் பெருநிலக்கிழார்கள் மீது செய்யுள் பாடிப் பரிசில் பெற்றுக்கொண்டும் இருந்தவர். பொன்னுச்சாமித் தேவர் காலத்தினர். இவர் பொன்னுச்சாமித் தேவர்மீது பாடிய பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க.

"விண்ணுக் கழகு விரோசன னார்தல் விளைவுற்றுறை
பண்ணுக் கழகுபஞ் சாட்சரஞ் சேர்தல் பமரவிதிப்
பெண்ணுக் கழகு சுகுணசந் தோதயம் பேருலகில்
கண்ணுக் கழகுபொன் னுச்சாமி ராசனைக் காண்பதுவே."

என்பது திருக்குறிப்புத் தொண்டநாயனார் வரலாறு அடங்கிய பாட்டு. நூலைப் பாராட்டித் திருநெல்வேலி அழகிய சொக்கநாத பிள்ளை ஒன்பது பாடல்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"அலைக்கொழுந்து முடங்குகங்கை ஆற்றினொடுங் கீற்றுமதிக்
கலைக்கொழுந்து படருமுடிக் கழும்பர்திருக் கழலிணைக்கே
இலைக்கொழுந்து மலரின்வகை புலருமென எழிற்கச்சி
மலைக்கொழுந்து நாவலன்பா மாலைதொடுத் தணிந்தனனால்"

என்பது சிறப்புப்பாயிரத்தில் ஒரு பாட்டு.

## கஅ௫அ. மலைசாயப்பாடிய சங்குப்புலவர்
## (19 - நூ.)

பாண்டிவளநாட்டிலே நெல்லைமா வட்டத்தைச் சேர்ந்த கரிவலம் வந்த நல்லூருக்கு அண்மையில் உள்ள எட்டிசேரி என்னும் சிற்றூரில் வாழ்ந்திருந்தவர். வாக்குப் பலிதமுள்ளவர். இவர் காலத்தில் சேற்றூரில் இருந்த மன்னர் பெற்ற நாயகியம்மை கோவிலில் முன் மண்டபத் திருப்பணி செய்து கொண்டிருந்தார். திருப்பணியின் பொருட்டுக் கருங்கற்களை எளிதாகப் பெற விரும்பிய அம் மன்னர் மலை சாயுமாறு செய்யுள் இயற்றும்படி இப் புலவரை வேண்டிக் கொண்டார். இப் புலவர்,

"நிலைசாயொணுத தவசே புரிந்து நிறையழுத
கலைசார் தவம்பெற்ற தென்சேறை நாதனைக் கண்டவனே
உலைசா ருளிவைத்துக் கற்பணிசெய்ய உனதருளால்
மலைசாய வேண்டுந் தவம்பெற்ற நாயகி மாதங்கியே"

"சீக்கிர மேமலை சாயவும் வேண்டுந் திருப்பணிக்கே
ஆக்க முடன்வந்து சேரவும் வேண்டுநி னன்புறுமென்
வாக்கத னுல்தமிழ் சொன்னேன் தென்சேறை வரதனுக்குப்
பாக்கிய மேபெற்ற நாயகி யேசிவ பார்வதியே."

"புகழும் வேண்டும் உலகமெல் லாமுனைப் போற்றமலை
நகழவும் வேண்டுந் திருப்பணி வேலைக்கு நானுரைத்தேன்
இகழவொண் ணுமல் எனைக்காக்க வேண்டும் இமயமலை
மகளென வந்து தவம்பெற்ற நாயகி மாதங்கியே."

என்னுஞ் செய்யுட்களைப் பாடினுர். அவ்வளவில் மலையின் பகுதிகள் திருப்பணிக் கற்கள் எடுப்பதற்கேற்ற வகையில் இடிந்து சரிந்தன. பலரும் புலவருடைய வாக்கு வல்லமையைப் பாராட்

டிப் போற்றினர். அதுமுதல் இவருடைய பெயர் "மலைசாயப் பாடிய சங்குப் புலவர்" என்று வழங்கலாயிற்று. இவர் ஆறுமுகக் கவிராசர் என்பவரிடம் கல்வி கற்றவரென்பதும் மலை சாயப் பாடியவர் என்பதும்,

"பெற்றநா யகிபொற் கோவிற்
பெருந்திருப் பணியின் வேலை
முற்றவே வேண்டி யாறு
முகக்கவி ராசன் செம்பொற்
சிற்றடி மனத்துள் வைக்குந்
திறற்சங்குக் கவிஞன் சேறை
நற்றனி மலையைத் தன்னுல்
நகரவே பாடி னானே"

என்னும் சுப்பிரமணிய ஐயருடைய பாடலாலும் பெறப்படுகின்றன.

## கஅ௲ச. மறைஞான தேசிகர் (தில்லை)

இவர் சிதம்பரத்தில் வாழ்ந்திருந்தவர். அறுநூற்றுப்பதின் மூன்று செய்யுட்கள் அடங்கிய அருணகிரிப் புராணத்தை இவர் இயற்றியுள்ளார். நூல் இயற்றப்பெற்றகாலம் இடம் முதலியன பின்வருஞ் செய்யுட்களால் அறியப்பெறுகின்றன.

### நூல் செய்த காலம்

"ஆண்டுகலி யுகத்தினுக்கு நாலாயிற்று
முப்பத்தி ராயி ரத்துள்
ஈண்டுறுநா லாயிரமும் அறுநூறும்
ஐம்பத்து நான்கும் நீங்க
ஈண்டுபிர மாதீச ஆண்டின்மக
ரத்தெழுவா யோகா தேசி
நீண்டிரவி வாரத்தின் மான்மாகேந்
திரம்வணிகந் திகழும் போதில்

தருணமதிச் சடைமுடியார் அருணகிரிச்
சதாசிவன்சந் நிதிவா யத்தில்
புரவிகள்பூண் மண்டபத்தில் நால்வேதம்
ஆகமங்கள் புராணம் எல்லாம்
திரிவுமறத் தேர்ந்துணர்ந்த வைதிகரும்
சைவர்களும் திகழ்சங் கத்தில்
அருணகிரி வரந்தமிழால் அறைகவென
அவர்அருளப் பகர்வாம் அன்பால்."

## கஉடுடு. மறைஞான தேசிகர் - (சீகாழி) (16 - நூ.)

இவர் சீகாழிப்பதியில் இருந்தவர். அந்தண குலத்தினர். சிவஞான சித்தியார், பதிபசுபாசப்பனுவல் முதலிய நூல்களுக்கு உரையியற்றியவர். பரமத திமிரபானு முதலிய நூல்களைச் செய்தவர். தமிழ் இலக்கணம் இலக்கியம் முதலியவைகளிலும் வடமொழியிலும் மிக வல்லவர். இவர் சிவஞானசித்தியாருக்கு இயற்றிய உரை காண்டிகை உரை. தமது உரையில் ஆங்காங்குத் தர்க்க பரிபாஷையில் இருந்தும் அளவை நூலில் இருந்தும் பல மேற்கோள்களை எடுத்துக் காட்டுவர்.

## கஉடுசு. மனவாசகங்கடந்த நாயனர்

இவர் திருவதிகை என்னும் ஊரினர். மெய்கண்டதேவ நாயனருடைய மாணவர்களில் ஒருவர். பாயிரம் ஒன்றும் நூல் ஐம்பத்து மூன்றுமாக ஐம்பத்து நான்கு வெண்பாக்கள் அடங்கிய 'உண்மை விளக்கம்' என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது.

இந்நூல், தத்துவங்களாவன யாவை? ஆணவமலமாவது யாது? வினையாவது யாது? ஆன்ம சொரூபமாவது யாது? கடவுள் சொரூபமாவது யாது? திருநடமாவது யாது? ஐந்தெழுத் தின் உண்மையாவது யாது? என மாணவர் மாசறத் தெரிந்து மனங்கோடற் பொருட்டு வினவுதலும் அதற்கு ஆசிரியர் விடை யிறுத்தலும் போல அமையப் பெற்றுள்ளது.

ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம் என்பன வும் அடைவே கூறப்பட்டுள்ளன. ஐம்பெரும் பூதங்களின் வடிவம், நிறம், எழுத்து, குறி, அதிதெய்வம், தொழில், குணம், அறிவுப்பொறிகள், வினைப்பொறிகள், உட்கருவிகள் இவைகளும் கூறப்படுகின்றன.

> "தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
> சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
> ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
> நான்ற மலர்ப்பதத்தே நாடு."

என்பது முப்பத்தைந்தாவது செய்யுள். இதனில் ஐந்தொழில் திருக்கூத்துக் கூறப்பட்டுள்ளது. இந்நூலுக்குப் பழைய உரையும் உள்ளது.

## கஙடுஎ. மனுவேல்பிரான் சீஸ்குரோட்ரீகஸ் (19 - நூ.)

இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மணப்பாடு என்னும் ஊரில் சிறந்த புலவராக விளங்கியிருந்தவர். கிறித்துவ சமயத்தினர். தமிழிற் சிறந்த புலமை பெற்ற இவர் சமயத் தொண்டு செய்தற்கு இந்தியாவுக்கு வந்த ஆங்கிலேயர்கட்குத் தமிழ்மொழியைப் போதிக்கும் பணியிலும் ஈடுபட்டிருந்தார். செய்யுளியற்றுவதிலும் வல்லவர். 'பரதகுலபாண்டியர் பழமை' என்னும் நூலுக்கு அவர் பாடிய சிறப்புப் பாயிரம்

'சீர்கொண்ட நவகண்ட பூபதிகள் அடிதொழச்
சிம்மா சனத்தெழுந்து
சீர்த்தியில் உயர்ந்துமா குரிசிலெனு மனுநீதி
சிதையாது உலகாண்டவத்
திரவிது குலசிரேட்ட பரதசக் ரேசனது
திவ்யகுல திலகரான
தென்னுதமிழ் நாடராம் பரதபாண் டியர்பழமை
திடமுற அமைத்தினிதொடு
பேர்கொண்ட திருமந்த்ரப் பதியோடு மெழுதுறை
பிறங்குபெனா ரவரிறைவனின்
பெருமைதிகழ் மந்திரத் தமரவையி னறிஞர்முன்
பெட்புற அரங்கேற்றியும்
பேசரிய வளமைபெறு மணலைநகர் அதிபருறை
பிரபுத்வ மிகுசபைதனில்
பீடுறுபந் யாசம நியற்றியாங் கனைவராற்
பெருமிதப் பேறடைந்தும்
ஏர்கொண்ட புவனமுழு திலகுசெழி யர்க்கெலாம்
இன்புறச் செய்தவின்னுன்
எவனெனில் தென்மணலை வாசனதி சீர்த்திசெறி
இன்பகவி மன்பௌத்திரன்
ஏற்றரிய ஆயுள்வே தக்கரை கடந்தவேன்
எழிலன்பர் பூபண்டிதர்
சன்றவர புத்திரசி ரோரத்ன கவிவலான்
இனியமறை சாஸ்த்ரவல்லான்

நேர்கொண்ட சூசைமலை யோபரதன் அருளினால்
நீணிலத் திதனை அச்சில்
நிலைபெற இயற்றினான் நம்பிக்கை மரிறோச்ச
நியமனிக் டோர்யபூமன்
நேர்தவத் துற்றசற் புத்ரன்மந் திரநகர
நீதமுனி சிபலதிபன்
நேயசோ சேமரிய றோச்சனிக் டோர்ய இவர்
நீடூழி வாழ்கமன் றே."

## ௧௱௫௮. மன்னர் பெருமாள் புலவர்

இவர் பிறந்த நாடு, ஊர், குலம் முதலியவை நன்கு தோன்றவில்லை. 'திருமலை தொண்டி நாடகம்' என்னும் நூலை இயற்றியிருக்கிறார் என்பதும் இவர் வாழ்ந்திருந்த காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியென்பதும் விளக்கமாகத் தோன்றுகின்றன.

## ௧௱௫௯. மாங்காளி பண்டிதர் - வே

இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெருங்களத்தூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் வேலாயுதம் பிள்ளை. இவர் பல நூல்களைக் கற்றுச் சிறந்த அறிஞராகத் திகழ்ந்தார். ஆகவே இவருக்குப் பண்டிதர் என்னுஞ் சிறப்புப்பெயர் உண்டாகியது. சாங்குசித்த சிவலிங்க நாயனார் என்பவர் இயற்றிய பூரணாநந்தோதயம் என்னும் நூலுக்கு இவர்,

"வள்ளலே சற்குரு வடிவதாய் எழுந்த
வள்ளலைப் பிள்ளையார் வடிவை
உள்ளமே கண்டு உணர்விழி ஞான
உயிர்பூரணா நந்த உதயம்
விள்ளவே வெண்டமிழ்ச் செய்யுளாற் பாடி
விளங்கச்செய் சிவலிங்க மெனுமான்
தெள்ளறத் தெளிந்தோர் வள்ளலின் அருளைச்
சேர்வது திண்ணமென் றுரைப்பாம்."

என்னுஞ் செய்யுளோடு மற்றொரு செய்யுளையுஞ் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௧௩௪௦. மாசிலாமணிப் பிள்ளை - மா

(19 - நூ.)

சோழவளநாட்டில் திரிசிரபுரத்தில் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கியவர். இவர் நூல்கள் பலவற்றிற்குப் பாடியுள்ள சிறப்புப்பாயிரப் பாடல்களைத் தவிர நூலியற்றியதாகத் தெரிய வில்லை. மாதருபூதம் பிள்ளை யென்பவர் இவருடைய உறவினர். அவர் இயற்றிய சிற்சுகவாரிதிச் சதகத்திற்கு இவர்,

"மாதருபூ மரைவனமார் சிராபலேயின் கொழுந்தாகி மன்னுஞ்செல்வ
மாதருபூ நிசனடி மறவாத பேரின்பம் மனத்திற்கொண்ட
மாதருபூ தன்தந்த சுகவாரி வாய்மடுக்கின் மலரும் பூவின்
மாதருபூ தனமருந்த வரும்பிறவிக் கடலென்று மருவாரன்றே"

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௧௩௪௧ மாசிலாமணி முதலியார் - பா

(19 - நூ)

இவர் பாரிவாக்கம் என்னும் ஊரில் இருந்தவர். திருமழிசைச் சிவப்பிரகாசையர் என்பவரிடங் கல்வி கற்றுப் புலமையாளரானார். அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், திருத்தணிகை சுப்பராய பண்டாரம் முதலியோர் இவர் காலத்தினர். வித்துவான் நெல்வேலி முருகேச முதலியார் என்பவர் இயற்றிய சிவதலமான்மியச் சுருக்கம் என்னும் நூலுக்கு இவர்,

'சீர்கொண்ட பாலிநதி சூழ்தொண்டை நாட்டிலுந்
திணைவளஞ் செறிநெல்வேலித்
திருநகர னற்றணிகை அறுமுகக் கடவுளடி
நினைந்துநிசெய் குவளைமார்பன்
பேர்கொண் டிலங்குகல் விச்சாலை டிப்டியின்ஸ்
பெக்டருத் யோகமேவிப்
பெரும்புகழ் அமைந்தமுரு கேசமா லோங்குசிவ
பெருமானும் நெடியமாலும்
பார்கொண்ட திவ்வியத் தலமான் மியங்களைப்
பரிந்தவை யனைத்தும்நாடிப்
பைந்தமிழில் வசனமாய்ச் செய்தெழிற் கொன்றையம்
பதிமருவு மாணிக்கவேள்

ஏர்கொண்ட அச்சியந் திரசாலை தனிலதை
இலங்கப் பதிந்துதவினன்
இனையபெரு நன்றிக் கியான்செய்கைம் மாறென்னை
என்றும்அவன் வாழ்கமாதோ.''

''சங்கத் திருக்கரன்றாள் சார்ந்து மான்மியத்தைச்
சங்கையிலா வாசகமாய்ச் சாற்றினன்—மங்களதெல்
வேலிமுரு கேசவேள் மேதினியோர் கற்றுணர்ந்து
சாலியற்று நித்தந் தொழ.''

என்னுஞ் செய்யுட்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் இயற்றிய நூல்கள் பார்வைக்கு அகப்படவில்லை.

## கௌகூ௨ மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகர் மாணவர்

இவருடைய இயற்பெயர் இன்னது என்று தெரியவில்லை. தருமபுர ஆதினத்தையடுத்து மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகரிடம் சைவசித்தாந்த நூல்களை நன்கு கற்றுத் தேறிய இவர் திருவுத்தரகோசமங்கைத் தலபுராணம் பாடியுள்ளார் அந் நூலினும் "மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகர் மாணவர்'' என்றே குறிப்பிட்டுள்ளார். அப் புராணம்: வேதமித்திரன் சுவர்க்கமடைந்த அத்தியாயம், கந்தருவகன்னியர் பிரமசாபந் தீர்ந்த அத்தியாயம், தீர்த்தச் சிறப்பு, அரித்துவசன் சாபந்தீர்ந்த அத்தியாயம், களச்சக்கிரவர்த்தி கலிவிமோசன அத்தியாயம், பலசரிதையுரைத்த அத்தியாயம், பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயம், மணம்புரிந்த அத்தியாயம், பிருகுசாபந்தீர்ந்த அத்தியாயம், வலைவீசும் அத்தியாயம் என்னும் பிரிவுடன் நானூற்று நாற்பத்தைந்து செய்யுட்களையுங் கொண்டு விளங்குகின்றது.

''பெட்பினோ ரணுவும் பெரிதெனச் சிறியோய்
பெரியதுஞ் சிறிதெனப் பெரியோய்
கட்புலங் கவரும் கயிலைமால் வரையோய்
கருணையின் னமிழ்துபெய் புயலே
விட்புலத் தொழுகுங் கலைகதிர்ப் பரிதி
வெண்மதி அழலெழ விழிப்போய்
கொட்புறு புரவி இரவியோர் கோடி
குழீஇயென விளங்குவோய் சரணம்.''

என்பது அரித்துவசன் சாபந்தீர்ந்த அத்தியாயத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௬௨. மாடச்சாமிப் பண்டாரம்
(20 - நூ.)

பாண்டிவளநாட்டிலே திருக்குற்றாலத்திற்கு அணித்தாக விளங்கும் தென்காசி என்னும் ஊரினர். திருமலைச் சுப்பிரமணியக் கடவுள் மீது இவர் திருக்கழற் பதிகம் என்னும் பதிகமும் வேறு சில செய்யுட்களும் இயற்றியுள்ளார்.

*"குரவனே குமரா கொற்றவா அசுரர்*
*குலங்களைந் தமரர்தங் குடிக்கோர்*
*புரவலன் வாழ்வு தந்தவேற் கரனும்*
*பொற்படர் சேவகா புரக்கும்*
*கருமுகின் மருகா தஞ்சமென் றுனது*
*காலலர் பத்தியாய்ப் பிடித்தேன்*
*பரமனே முருகா வரபதித் தலைவா*
*பண்பொடென் முன்புவந் தருளே."*

என்பது அப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௨௬௪. மாணிக்கசாமி முதலியார் - கூ. அ

*"ஆரியமே தாவியர்கள் அனுபவத்தில்*
*அதிநுட்ப மாயுரைத்த*
*அளவில்சோ திடசாத்தி ரத்துண்மை*
*யினைத்தேர்ந்து மாரூடத்து*
*தேசியநற் கணிதஞ்சோ திடத்துமதிப்*
*புலமையினை நிறையப் பெற்று*
*நீடுயர்செந் தமிழ்த் தேயத் துறும்யாரும்*
*மிகவெளிதின் நினைவாக் கற்கத்*
*தேரியல்சோ திடமாணிக் கப்பேர்வாய்ந்*
*திடுபனுவல் செம்மை யாகத்*
*தெள்ளியபன் மொழிசேர்யும் உயர்நடையில்*
*கத்தியமாச் செவ்வே சொற்றான்*
*சீரியனந் தோணியப்பக் கோமான்செய்*
*தவத்துதித்த செல்வ னாகித்*
*திகழ்சூரி யன்மாணிக் கப்பாவ*
*லோனெனுநற் றிறமை யோனே."*

என்று அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் அவர்களால் பாராட்டப்பெற்ற இவர் சென்னைமாநகரில் இராயபுரத்

நல் சூரியன் அந்தோனியப்ப முதலியார் என்பவருக்குப் புதல்வ ராகத் தோன்றினா காலக்கணிதத்திலும் இலக்கண இலக்கியப் புலமையிலும் வல்லவராகிய இவர் புகைவண்டி யலுவலகத்தில் வேலை செய்தார். காலக்கணித நூல் ஒன்றைத் தம்முடைய பெயரால் இயற்றினார். அந்நூல் "சோதிடமாணிக்கம்" என்னும் பெயரையுடையது. நூலை, பாராட்டி இவருடைய உடன்பிறந் தாராகிய செகராவு முதலியார், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், கிளாப்பாக்கம் வீராச்சாமி முதலியார், அமரம்பேடு கந்தசாமி முதலியார், ச. சின்னப்பாவு முதலியார், தி. கண்ணுச்சாமி முதலியார், வண்ணாரப்பேட்டை அருணகிரிப் பண்டிதர், வி. முருகேச நாயகர், ச. கி. தோமாஸ் பிள்ளை, அன்னம்பேடு இராமகிருட்டிண முதலியார், கலியாணபுரம் வே. கி நாராயணசாமிப் பிள்ளை, மாசிலாமணி முதலியார், அ. இராயப்ப பத்தர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கருகூரு. மாணிக்கஞ் செட்டியார்

வடாற்காடு மாவட்டம் ஆம்பூரினர். வா சி. சுப்பிரமணியஞ் செட்டியார் என்பவரிடம் இலக்கண இலக்கியங்கள் கற்றுப் புலமை பெற்றார். வாணியம்பாடி முகமதியக் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். இவர் இயற்றிய நாடகங்கள் பல இவர் தம்முடைய ஆசிரியரின் சங்கர சதகம் என்னும் நூலுக்கு,

' பார்த்திடிலோ தற்காலப் போக்குடனே
மேனாட்டுப் பலநி றத்த
சீர்த்தியுள விரரவர் சரிதைகளும்
நாவிருத்தம் செப்பு கின்ற
கீர்த்தியுள கதைகளொடு பற்பலநூல்
திகழ்ந்திலங்கக் கிருபை செய்து
நேர்த்தியுள சார்க்கூர்ச்சங் கரசதகம்
என உலகில் நிறுத்தினனே ''

'' நிறுத்தினவன் யாரெனிலோ எமதுதமிழ்
ஆசிரியன் நிமலன் தானே
வெறுத்தவர்தம் மடமையெலாம் தகர்த்தெறிந்தே
அறவுரைகள் விளக்கும் மேலோன்

வேறுக்கைபடை யத்தனத்தான் கவிச்சுப்ர
மண்யனெனும் விவேக முள்ளான்
பொறுத்தவர்தம் அடித்துகளுக் கடிமையெனும்
நிலையுளத்தான் புவியில் தானே ''

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கநுசசு. மாணிக்க முதலியார் - கு
## (1882)

இவர் சென்னைக்கு அண்மையில் உள்ள குன்றத்தூரில் பிறந்தவர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலவராகிப் பல நூல்கள் இயற்றியுள்ளார். திருவொற்றியூர் மாணிக்கத் தியாகேசர் அட்டகம், திரிபுரசுந்தரி பஞ்சரத்தினம், சுப்பிரமணியர் பஞ்சரத்தினம் என்பன சில.

'' சீரோங்கும் அம்பிகையாள் மகிழுஞ் செல்வச்
செம்மலே பிரசபிந்தங்க டப்பம்
தாரோங்கு மார்பகனே அன்பர் உள்ளத்
தாமரையே கோயிலெனச் சததம் வைகும்
ஏரோங்கு மேனியனே எல்லாம் வல்ல
எந்தையே அருண்முகிலே என்னை ஆள்வாய்
ஊரோங்கு பல்வளனும் ஒருங்கே பெற்ற
ஒற்றிநகர்ச் சண்முகனே உம்பர் கோனே.''

என்பது சுப்பிரமணியர் பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு இவருடைய நூல்களை இவருடைய நண்பர் சிறுமணலூர் முனிசாமி முதலியார் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்.

## கநுசுஎ. மாணிக்க முதலியார் - சு
## (20 - நூ.)

இவர் சேலம் சுகவன முதலியார் என்பவருக்கு அருமைத் திருமகனாகத் தோன்றிப் பி.ஏ, பி.எல். படித்து வழக்கறிஞராகத் தொழிலாற்றியதுடன் முத்தமிழில் ஒன்றாகிய இசைத் தமிழையும் நன்கு கற்று இசைத் தமிழ்ப்புலமை யெய்தினார். இசைத் தமிழ் இலக்கணங்களைத் தெள்ளிதில் வகுத்து "சங்கீத சந்தி

கை" என்னும் பெயரோடு நூல் ஒன்று இயற்றினர். மேற்படி நூலைப் பாராட்டி, உ. வே சாமிநாதையர், வி கோ. சூரிய நாராயண சாத்திரியார். தி. வேங்கடராம ஐயங்கார், மன்னார்குடி கிருட்டிணமாச்சாரியார், ந. பலராம ஐயர், கா. கதிரைவேற் பிள்ளை, திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை, புதுவை அ. பெரியசாமிப் பிள்ளை, மு. ரா கந்தசாமிக் கவிராயர், நாகூர் குலாம்காதிறு நாவலர், சென்னை பே பால சுப்பிரமணிய முதலியார், சேலம் சரவணப் பிள்ளை, காங்கயம் அட்டாவதானம் சேடாசல நாயுடு, காஞ்சிபுரம் கா. இராமசாமி நாயுடு, ஈக்காடு இரத்தினவேலு முதலியார், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், க. வ. திருவேங்கட நாயுடு, திரிசிரபுரம் ஆ. கா. பிச்சையிபுருகிம் புலவர், சே. கு விசாகப் பெருமாள் முதலியார், சேலம் பா. அங்கமுத்து முதலியார், திருச் செங்கோடு விவேகதிவாகரன் முத்துச்சாமிக் கோனார், கொட் டாம்பட்டி கருப்பையாப் பாவலர், பழனி கிருட்டிணசாமி முதலியார், சென்னை பு. வே சபாபதி முதலியார், மாரியப்ப முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

' பெருநாரை பெருங்குருகு முதலியதம்
பெயர்க் கேற்பப் பிறக்க மாறி
இருநாலு மாதிரத்தும் இரிந்துபறந்
திடச் சேலத் தெழில்பெற் றோங்கும்
தருநாணு கரனிசை நூல் நரலையெனும்
மாணிக்கத் தனிப்பே ரோன்செய்
குருநாறு சங்கீத சந்திரிகை
தோன்மையெவர் குணிக்கற் பாலார் "

" ஆணிக்க நகவில்லாற் கடிமைபூண்
டொழுகியநல் அருந்த வத்தால்
நாணிக்க மதனுறுநஞ் சுகவனத்தே
தோன்றியென்று நனிஇ லங்கும்
மாணிக்க மொன்றுவெயில் தருதல்தவிர்ந்
திம்மகியோர் மகிழு மாறு
பேணிக்க வின்செயுஞ்சங் கீதசந்தி
ரிகைதந்த பெட்பு நன்றே "

இப் பாடல்கள் காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு அவர்கள் பாடியவை.

## ௧௯௯௮. மாணிக்கம் பிள்ளை - வே
(19 - நா.)

நக்கன்பாடு என்னும் ஊரில் வேங்கடாசல பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் இராமானுசபுரம் சிவலிங்கம் பிள்ளை என்பவரிடத்தில் கல்வி கற்றார். தம்முடைய ஆசிரியராகிய சிவலிங்கம் பிள்ளை வெளியிட்ட திருவைகாவூர்ப் புராணத்திற்கு இவர் நீண்ட நிலைமண்டிலவாசிரியப்பாவாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"சீர்வளர் மறைத் தேர்வளர் பொருட்டின்
விறல்பெறுந் துயிர்களைத் தோற்றல்செய் வேதனும்
சக்கரப் படையினைத் தரிக்குங் கரத்தொட்
டக்கரத் தமைந்த அச்சுதப் பிரானும்
அடைவோர் விருப்பும் அரும்பொருள் அதனைத்
தடையிலா தளிக்கும் தன்னிகர் கற்பகக்
காவுக் கிறையுங் கடிமலர்த் தாருடைத்
தேவர்கள் முப்பான் மூன்று கோடித்
திரத்தரு முனிவ ரெத்திறத் தாரும்
இருக்கு முதலாம் பொருட்கிளர் மறையும்."

என்பது பாயிரத்தின் தொடக்கப் பகுதி.

## ௧௯௯௯. மாணிக்கவாசகம் பிள்ளை - தா
(20 - நா.)

நாஞ்சில் நாட்டிலே பறக்கை யென்னும் ஊரிலே வேளாளர் குலத்தில் இவர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் தாணுமாலயன் பிள்ளை புலமைக் கல்வியை நன்கு கற்றுத்தேற விரும்பிய இவர் கோட்டாறு என்னும் ஊரில் அப்பொழுதிருந்தவரும், நூறு அவதானங்கள் செய்து சதாவதானி என்று புகழ் பெற்றவரும், சொற்பொழிவு செய்வதில் தந்நேரில்லாப் புகழ் பெற்று விளங்கியவரும் ஆகிய செய்குத்தம்பிப் பாவலர் என்பவரிடத்தில் முறையாகத் தமிழ்க் கல்வியை நன்குகற்றுத் தேறினார் தம் ஆசிரியராகிய செய்குத்தம்பிப் பாவலரிடம் இவர் கடவுளிடத்துக் கொள்ளும் அன்பைப்போல் பேரன்பு கொண்டிருந்தார் என்பது இவரால் இயற்றப்பெற்ற திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதியில் உள்ளன.

"சீராரு மாறு திறளார வோதுசெயலிந்து சென்னை செறிந்தெய்
ஆராரு நோக்க வவதான மோர்நூ றிலையா துருற்றி யுரவோர்
ஆராரு மெச்ச வணிவாகைசூடி அருளோடு நின்ற அருமைப்
பேராரு ஞான குருநாத னிணைபிறழா து கொள்வல் பெரிதே."

என்னும் குருவணக்கப் பாடலாற் பெறப்படுகின்றது. இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி, கந்தர்கலிநீங்கு வெண்பா முதலியன. இந்நூல்களைப் பாராட்டி ஆசிரியராகிய செய்குத்தம்பிப் பாவலர், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, இசைத் தமிழ்ச் செல்வர் தி. இலக்குமணப் பிள்ளை, திருச்செந்தூர் முத்தையா பிள்ளை, ஜெகவீரபாண்டிய கவிராச பண்டிதர், திருவனந்தபுரம் முத்தையா முதலியார், கோட்டாறு தசாவதானி ஆறுமுகம் பிள்ளை, நாகர்கோவில் ஆறுமுகம் பிள்ளை, சிவசுப்பிரமணிய பிள்ளை, கோட்டாறு மாடசுவாமி, தாழக்குடி பத்மநாப பிள்ளை, குலசேகரபுரம் சிவராமலிங்கம் பிள்ளை, பூதப் பாண்டி-சுடலைமுத்துப் பிள்ளை, கோட்டாறு கிருட்டிணசாமிப் பிள்ளை, தாமரைக்குளம் சிவதாணுக் கவிராயர், பறக்கை-தாணு செட்டியார், கோட்டாறு சாமிநாத ஆச்சாரி, சுந்தரம் ஆச்சாரி, கோட்டாறு முகமது கண்ணு சாகிபு, உடையார் பிள்ளை, இரவி புதூர் சதாசிவன் பிள்ளை, தெங்கம்புதூர் - பூதலிங்க உபாத்தி யாயர், பறக்கை குமாரசாமிப் பிள்ளை, பறக்கை இராமசாமி, தெங்கம்புதூர்-சாத்தாங்குட்டிப் பிள்ளை, கள்ளியங்காடு இராமச் சந்திர பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பத்திக்கு வாய்த்த பதிற்றுப்பத் தந்தாதி
தித்திக்கச் செந்தமிழால் செய்தமைத்து—வித்தகஞ்சேர்
மாணிக்க வாசகனெம் மாமுருகன் தாளிணைக்குக்
காணிக்கை வைத்தான் கனிந்து."

என்பது கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை பாடல்

"வடிவாகி ஞான வனமாகி அன்பர்
மனமாகி மௌன மறைதேர்
முடிவாகி யின்ப முளையாகி யாண்டு
முறைகொண்ட செந்தின் முதலைப்
படிவாகி மிஞ்சு பதராகி யெஞ்சு
படிஞுகி விஞ்சு பழியுண்
மடிவாகி மூழ்கு மடமோட்டி வாழ்த்த
வருவாய் மகிழ்ந்து மனமே."

என்பது பதிற்றுப்பத்தந்தாதி.

"ஆவின் றுடியிருக்கும் அன்றுல் அடியேன்தன்
நாவிற் றுடியிருக்க நாடுகின்றேன்—பூவின்
மணம்போலும் உன்னத்தே வைநகலி நீத்தென்
எணம்போலுங் காப்பாய் இசைந்து."

என்பது கந்தர் கலிநீங்கு வெண்பா.

## கூஎ. மாணிக்கவேலு முதலியார் - நா (19 - நா)

தொண்டைவள நாட்டில் காஞ்சிபுரத்தில் இருந்த புலவர் சபாபதி முதலியாருடைய புதல்வராகிய நாகலிங்க முதலியார் என்பவருக்கு இம் மாணிக்க முதலியார் இளைய புதல்வராகத் தோன்றினர். பாட்டனரிடமும் பிறரிடமும் இலக்கண இலக்கியங் கற்றுத் தேறினர். இவர் இயற்றிய நூல்களில் திருவேற்காட்டு இரட்டை மணிமாலை என்பது ஒன்றுமட்டும் இப்பொழுது அறியப்படுகிறது.

"ஆரென நின்னை அறியா மனமே அங்கரித்துச்
சீரென வேற்கா துறையும் பிரானைச் சிரம்வணங்காய்
பாரென வேநமன் வந்திடும் வேளையிற் பாரகத்தே
காரெனத் தாங்கத் துணையே துனக்குக் கழறுவையே."

என்பது இரட்டை மணிமாலையில் ஒரு பாட்டு.

## கூஅ. மாதவச் சின்னம்மாள்

பாண்டிவள நாட்டில் பெரியகுளந் தாலுகாவைச் சேர்ந்த தேவாரம் என்னுஞ்சிற்றூரில் அந்தணர்குலத்திலே இந்த அம்மையார் தோன்றினர். எழுதப்படிக்கத் தெரியாதிருந்தும் கேள்வியொன்றினலேயே சிறந்த தமிழ்ப்புலமை பெற்றுச் செய்யுள் பாடுந் திறம்பெற்று விளங்கினர். இவர் பாடிய பாடல்கள் பல. அவற்றுள் திருவரங்கப் பயணத்தில் பாடிய பாட்டு ஒன்றை அடியிற் காண்க:

"கஞ்சத் திருந்தங் கணவன் அரங்கன் கழலிணையை
நெஞ்சத் திருத்தடி யாரடி தன்னை நினைதிசண்டன்
அஞ்சத் திருத்தண்டஞ் சென்னியி டானமு கார்ந்தகதிர்
செஞ்சத் திருத்தழி யாக்கதி சேர்தல் திறனெ னெஞ்சே."

இப் பாட்டு இதழகலாகும். அம்மையார் பாடுவதை மற்றோர் எழுதி வந்தனர். தனிப்பாடல்களாகப் பல பாடியதன்றி இவ் வம்மையார் நூல்களாகவும் பாடியிருப்பதாகத் தெரிகிறது.

## கூஎஉ. மாதுருபூதம் பிள்ளை - அ
(19 - நூ.)

கொங்குவள நாட்டில் ஈரோட்டில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் அழகப்ப பிள்ளை. இவர் 'சிற்சுகவாரிதிச் சதகம்' என்னும் நூலைக் கலித்துறைப் பாடலால் இயற்றி யுள்ளார்.

"காணு தடிமுடி தேடயன் மான்மெய்க் கதிர்கொளங்கம்
பூணு வணியும் துணைப்பாத மன்பன் புகழ்ந்த சொல்லாக்
பாணு விரவிற் பரவைமுன் பாற்சென்ற நாதனென்றன்
வாணுள்வீ ணுளின்றித் தாணுக்கொள் சிற்சுக வாரிதியே."

என்பது சதகத்தின் ஐம்பத்திரண்டாவது பாடல்.

## கூஎ௩. மாத்ரு பூதமையர்

இவர் தொண்டைவள நாட்டிலே காஞ்சிமா நகரிலே அந்தணர் குலத்தில் தோன்றியவர். இவர் காலம் ஏறக்குறைய இருநூற்றைம்பதாண்டுகட்கு முன்னராம். இவர் நந்தமண்டல சதகம் என்னூல் நூலை இயற்றினர். இந்நூல் அக்காலத்தில் திருமயிலையில் வாழ்ந்திருந்த வேங்கடாசலப் பிள்ளை என்பவ ருடைய வேண்டுகோளின்படி இயற்றி அரங்கேற்றஞ் செய்யப் பட்டது.

"துதிகோ குலம்பிருந் தாவன நல்லர்ச் சுனநிலையப்
பதிசூர சேனமி ரேவதி வெற்புப் பயில்யமுனு
நதிகோபி காபுரம் கோவர்த் தனம்புட்ப நாமகிரி
மதுரா புரியினு மால்வாழ் வதுநந்த மண்டலமே."

என்பது சதகத்தில் ஒரு பாட்டு.

## கூஎ௪ மாப்பாண முதலியார்

ஈழவள நாட்டிலே எழுதுமட்டுவாள் என்னுஞ் சிற்றூரில் ஏறக்குறைய நூற்றெண்பது ஆண்டுகட்கு முன்னே தோன்றி

யவர். தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் சைவ சித்தாந்த நூல்களிலும் வல்லவர். வடமொழியுங் கற்றுணர்ந்தவர். ஆங்கிலப் பயிற்சியும் பெற்றிருந்தார். இவர் இயற்றிய நூல்கள் சோமகேசரி நாடகம், பரிமளகாச நாடகம், விரதநிச்சயம், ஆசௌசவிதி, திருச்செந்தூர்ப் புராண உரை என்பன. இவர் ஐம்பதாவது அகவையில் கஅஉஎ ஆம் ஆண்டிற் காலமானார்.

## கஅ௬. மாரிமுத்து நாயகர் - ப
## (19 - நூ.)

தஞ்சைமாநகரில் இருந்த ஐயாச்சாமிப் பிள்ளை என்பவரிடம் கல்விகற்றுப் புலமையடைந்து பள்ளியில் தமிழாசிரியராகத் தொழில் நடத்திக்கொண்டிருந்தவர். தம்முடைய ஆசிரியர் இயற்றிய தில்லையமகவந்தாதி உரைக்கு இவர்,

" பூமேவு புலவர்புகழ் மீனாட்சி
சுந்தரப்பேர் புனைந்து நின்ற
நாமேவு குலதிலகன் நவிற்றியசீர்
நற்றில்லை அந்தாதிக்கு
மாமேவும் உரையியற்றி எவருளமும்
மகிழ்வெய்தும் மாண்போ டந்தான்
காமேவு தஞ்சைநகர் வாழுமையாச்
சாமியெனும் கவிவல் லோனே."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கஅஎ. மாரியப்ப முதலியார் - சே. சு
## (1873)

சேலம் நகரில் சுகவன முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் சிறந்த புலவராகத் திகழ்ந்திருந்தார். பழனி மாம்பழக் கவிச்சிங்க நாவலர் இயற்றிய 'சிங்கார ரசமஞ்சரி' என்னும் நூலுக்கு இவர் உரையெழுதியிருக்கிறார். உரையைப் பாராட்டிப் பழனி இரத்தினகிரிக் கவிராயர், சேலம் இராமலிங்க செட்டியார், சேலம் ப. அங்கமுத்து முதலியார் ஆகியோர் உரைச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

' திருமருவு நாயகிகள் நாயகர்கள்
இயல்பலவுந் தெரிவித் தற்கு
வருமொருசிங் காரரச மஞ்சரி நூல்
வடகலையுள் வழங்கு மாற்றால்
அருமையுள தெவருமுணர் வதற்காத
லாலதனை அவனி மீது
விருதுபுனை தமிழாற்செய் தருள்கென நன்
னேயர்சிலர் வேண்ட மாதோ.''

'' அருமைவிருந் தங்களினும் இலக்கணமும்
கவித்துறையால் அவைகட் கேற்ற
பெருமையிலக் கியமுமமைந் திடவடநூல்
முறைசிறிதும் பிறழா வண்ணம்
பொருவருசிங் காரரச மஞ்சரியைத்
தொடுத்து முற்றும் புவிகொண் டாட
மருவினிய சேலைநகர்ச் சுகவனர்தாள்
மிசைச் சூட்டி வளம்பெற் றேனே.''

இவை உரையாசிரியர் இயற்றிய நூற் சிறப்புப்பாயிரம்.

## க௲௭௭. மார்க்க சகாயதேவர்

தொண்டைவள நாட்டில் விரிஞ்சிபுரம் என்னும் ஊரில் தோன்றிச் சிறந்து விளங்கியவர். முருகன் திருவருளாற் செய்யுள் பாடுந் திறனடைந்தவராகலின் வரகவி என்பர். தம் ஊரில் எழுந்தருளிய முருகக்கடவுள் மீது இவர் பிள்ளைத்தமிழ் என்னும் நூலைப் பாடியுள்ளார். அதனைத் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் என்பர். காப்புப் பருவத்தில் பிற ஆசிரியர்கள் பாடாத புதுமுறையில், திருவருள், திருநீறு, மார்க்கசகாயர், மரகதவல்லி, கங்கை, கணபதி, வைரவன், திருவேல், மயில், திருமுருகாற்றுப் படை, திருப்புகழ், பலதேவர்கள் என அமைத்துக் கடவுள் வணக்கம் பாடியிருப்பது போற்றற்குரியதாம். திருவருளையும் திருநீற்றையும் போற்றியிருக்கும் முறைமை இவருடைய ஆழ்ந்த சமயப்பற்றையும் அழுத்தமான தமிழ் உணர்ச்சியையும் விளக்குவனவாம். பாடல்கள் சந்தச்சுவை ததும்பி விந்தைப்பொருள் அமைந்து சிந்தைகவரும் சிறப்புடையன. இவர் இலக்கண இலக்கியங்களை வருந்திக் கல்லாது அருட்பெருக்கால் பாடியவர்.

என்பதுந் தூக்கின் போக்கை நோக்குவார்க்குத் தெள்ளிதின் புலனாம். இவரைப்பற்றிய பிறசெய்திகள் எதுவும் புலனாக வில்லை. வருகைப் பருவம் நான்காவது பாடலை அடியிற் காண்க:

"கண்ணா னது திருவடியைக்
கண்டா தரவு பெருகியிரு
கையால் தொழுதுன் திருக்கோயில்
காலால் வலஞ்செய் துனதுபுகழ்
பண்ணால் உருகிப் புகழ்ந்து கண்ணீர்
பாயா எனையுந் தாயாகப்
பரிந்து வளர்க்கும் பெருங் கருணை
படைத்து விரிஞ்சைப் பதிவாழும்
அண்ணால் வருக உலகமுழு
தாண்டாய் வருக கதிதரும்எம்
ஐயா வருக ஆறுமுக
அப்பா வருக விளங்குகதிர்
வண்ணா வருக மயிலேறு
மன்னா வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வசிகா
மணியே வருக வருகவே."

## கரு௭அ. மார்க்கண்ட நாவலர்
(1887)

இவர் தொழூர் வேங்கடாசலப்பிள்ளை என்பவருடைய அருமைப் புதல்வராகத் தோன்றியவர். கருணீகர் குலத்தினர். இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழினும் வல்லவர். இவர் கண்ணப்ப நாயனாருடைய வரலாற்றைக், "குறவஞ்சிப்பண் கீர்த்தனம்" என்னும் இசைப்பாடலாகப் பாடியுள்ளார். மற்றும் சிவவாக்கியர் சரித்திரக் கீர்த்தனம், திருத்தில்லை நடேசர் கீர்த்தனம், சண்மத வினக்க வினு விடை, திருவொற்றியூர் ஆதிபுரீசர் முறையீடு என்னும் நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். தனிப் பாடல்களும் பல பாடி யிருக்கின்றனர்.

"சீர்மேவுஞ் சீராப்தி கடலிற் சென்று
திருத்தமொடு மந்தரநற் கிரியை நாட்டிப்
பார்தடுக்க வாசுகியைக் கயிறாய்ப் பூட்டிப்
பண்ணவரோ டசுரர்களும் கடைந்த அந்நாள்

பேர்பெறவே அதிஞதித்துப் பிரமன் நாதை
பிராணுதி நாதனுர மருவுஞ் செல்வி
சீரடிச்செந் தாமரைஎன் சிரமேற் கொண்டு
சிந்தித்தேன் கைதொழுது வந்தித் தேனே.''

என்பது நூலில் திருமகள் வணக்கச் செய்யுள்.

## கஙஎகூ. மார்க்கண்ட முனிசாமிப் பிள்ளை (1868)

இவர் தொழுவூரில் தோன்றியவர். இயலிசை நாடகம் என்னும் முத்தமிழிலும் புலமை பெற்று விளங்கிய இவர், "வீர குமார நாடகம்'' என்னும் நாடக நூலை இயற்றியிருக்கிறுர். பாஞ்சால முனிவரைப் பார்த்து வீரகுமாரன் சொல்வது,

"நாட்டிக முனியே கேளாய் தனித்துநான் கானிற் சென்று
வேட்டைக ளாடும் போது வேங்கையைக் கண்டு நாணி
பூட்டியென் அம்பை ஏவிப் புகழுடன் கொன்றேன் அப்பா
காட்டினில் இவன்போர் செய்தான் கட்டிக்கொண் டேகின் றேனே.''

இந் நாடக நூலைத் தவிர வேறு இவர் செய்த நூலைப்பற்றிய விவரந் தெரியவில்லை.

## கஙஅ௦. மாலிக்சாப் புலவர்

இவர் மதுரையம்பதியில் இருந்த ஜமாலுத்தீன் சாகிப் என்பவருடைய மகன். கஅஉ கண்ணிகள் அடங்கிய 'தொழுகைநாமா' என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது. இது கஅஅஅ ஆம் ஆண்டில் பதிப்பித்து வெளியிடப்பட்டது.

## கஙஅக. மாவிலிங்கப் பிள்ளை (1876)

இவர் திருமலைபுரி என்னும் ஊரில் சீர்கருணீகர் குலத்தில் இராமசாமிப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். கல்வி கற்று நல்ல புலமையை அடைந்த இவர் "தசரதராம சதகம்'' என்னும் பெயருடைய நூலைப் பாடியிருக்கிறுர். நூல் நூற்றொரு பாடல்களையுடையதாய் விளங்குகிறது.

"சோலைமலர் வாவிநிரு மேவுமழ கானவயல்
சூழ்மிதிலை மாந கரிபோய்த்
தூயசன கன்சிலையி னைக்கண்டு கைக்கொண்டு
தூக்கியிரு துண்டாக் கியே
சேலைநிகர் விழிமாது சீதையை மணந்துதிறல்
சேர்துணைவ ரைக்கே கயத்
தேயமதில் உய்த்துநகர் மேவுகையில் எதிர்வந்த
செய்யபர சாளி வலுவுங்
கோளிவரு கைச்சிலையை யுங்கவர்ந் தாண்மையொடு
கோலமொ டயோத்தி சார்ந்து
கோமுடி தரித்துலகை ஆளென மனுக்கொண்டு
கூறியபி தாமொழிக்குச்
சாலவு மகிழ்ந்திலையும் ஆதியே சோதியே
சச்சிதா நந்த வாமா
சானகிம ணாளமா தவமாய கோபால
தசரதகு மார ராமா."

என்பது நூலில் ஒரு பாட்டு இவருக்குச் செஞ்சு பிள்ளை என்னும் பெயருடைய மகன் ஒருவர் இருந்தார். அவர் தம்முடைய தந்தையாரின் நூலை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்.

## ௧௫௮௨. மிக்கேல்சாமி செட்டியார் - பு. அ (19 - நூ.)

இவர் புதுச்சேரியில் தோன்றியவர். கிறித்துவ சமயத்தினர். இவருடைய தந்தையார் பெயர் மிக்கேல் செட்டி ஐயல். இவர் பின்னாளில் சென்னையை அடைந்து தங்கினார். "இராசதூதன்" என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது. அந்நூலுக்கு இராயபுரம் வே. கி. நாராயணசாமிப் பிள்ளை என்பவர்,

"அட்டதிசை அரசர்முடி மணிமகரந்
தப்பொடிக ளாரும் வாயல்
கட்டழகன் பிரின்சாப்வேல் உலகமெங்கும்
பவனிவந்த காரணத்தைத்
திட்டமுடன் தமிழ்நடையில் இயற்றியச்சிட்
டான்புதுவை சென்னை மிக்கேல்
செட்டிஐய னெனும்புனிதன் தவப்பேறாய்
விளங்குகுணச் செல்வன் மாதோ."

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கரு௲ரு மீரான்கனி அண்ணாவி

இவர் தஞ்சைமாவட்டம் பொறையாறு என்னும் ஊரினர். இவர் குறவஞ்சி நூல் ஒன்று பாடினார். இது குற்றாலக் குறவஞ்சியை முதல் நூலாக உடையது. இதில் பலவகைப் பாக்கள் அமைந்துள்ளன.

> "வல்லமையில் வல்லமைதான்
> வறுமைஇளம் போதில்வந்தால்
> நல்லசபு ரேடுமனம்
> நழுவா திருக்குதலே."

என்பது இந்நூலின் கண்ணிகளில் ஒன்று. இந்நூல் கண்ணகு மருதாமுகம்மது என்னும் புலவரால் பரிசோதிக்கப்பெற்று ௧அ௯௬ ஆம் ஆண்டில் அச்சாகி வெளிவந்துள்ளது.

## கரு௲௪. மீராசாகிப் புலவர்

குலசேகரன் பட்டினத்தில் இருந்த முகமதியப் புலவர். இசைப்பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

## கரு௲௫. மீனாட்சிசுந்தரக் கவிராயர் - க
(கி. பி. 20 – நூ.)

இவர் எட்டையபுரம் சமத்தான வித்துவானாக இருந்தவர். அம்மன்னர்மீது நாணிக்கண் புதைத்தல் என்னும் ஒரு துறைக் கோவை நூல் பாடியிருக்கிறார். அன்றியும் யமகம்திரிபு முதலிய கவிகளும் இயற்றியுள்ளார். ஆண்டியப்ப பிள்ளை பிள்ளைத்தமிழ், உதார சோதனை மஞ்சரி, தனிப்பாடல் பல இவர் இயற்றினர் எனத் தெரிகிறது. மதுரை நா. சுந்தரேச ஐயர், மு. இராகவ ஐயங்கார், மு. ரா. கந்தசாமிக் கவிராயர் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

> "புதிதா விருந்து சமைத்துவையன்
> பொடுவந் தழைக்கப் போவமென்று
> புந்தி நினைந்தோம் அதற்குமுனம்
> போந்தாய் வலிய மிகமகிழ்ந்தோம்

அதுநீ உணரா தெஞ்சிறுவி
டழிக்க முயன்று யழிக்கினுநின்
அருமைக் கருணை மாதாநீ
ராட்டிச் சதங்கை சிலம்பு தண்டை
பதுமக் கரத்தால் வளைந்திடுநின்
பதத்திற் படிந்த புழுதியினைப்
பணிந்து விழுநீர் உகுத்தாட்டிப்
பரிந்து கழுவுவோ மலது
கதுவச் சினந்து யாதுசெயக்
கடவோம் சிற்றில் சிதையேலே
காண்ட பனுநேர் ஆண்டியப்ப
கனியே சிற்றில் சிதையேலே.''

என்பது அப் பிள்ளைத்தமிழ்ச் சிற்றிற் பருவத்தில் ஒரு பாட்டு.

## கா௲அ௬. மீனாட்சிசுந்தர சுவாமிகள்

'' திருவளர் பதியாம் திரிசிர புரத்தில்
அருணிறை சுத்த சைதன்ய மான
அம்பல வாணப்பேர் அருட்குரு பதத்தைத்
தம்முடி யதனில் தாங்கிமெய் யறிவால்
முற்றுணர் மீனாட்சி சுந்தரன் எனப்பேர்
பெற்றமெய்ஞ் ஞானப் பேரின்ப முடையோன்.''

என்று அறிஞர்களால் பாராட்டப்பெற்ற இவர் திரிசிரபுரத்தில் இருந்தவர். அம்பலவாண சுவாமிகள் என்னும் பெரியாரிடத்தில் அருளுரை பெற்றவர். இவர், ''தத்துவஞானானுபவ விளக்கம்'' ''சிவானந்தசாரம்''''பரசிவதோத்திரம்'' ''பூரணமாலைக்கண்ணி'' என்னும் நூல்களை இயற்றியுள்ளார். நூலைப்பாராட்டி விசேட சுவாமிகள், கோவிந்தசாமிப் பிள்ளை என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' திருவருண் ஞானச் செல்வர்கள் தமக்கும்
சித்தசு யோகிகள் தமக்கும்
மருவிய ரசசு தமசுகள் அகன்ற
மாதவ நிலையுடை யவர்க்கும்
இருவினைச் சார்பை ஒழித்தவர் தமக்கும்
இகபரத் திச்சையற் றவர்க்கும்
அறிவிலேன் தாழ்ந்தே அவர்களின் தூய
அடிமலர் அனுதினம் தொழுவாம்.''

என்பது அடியார் வணக்கப் பாடல்களில் ஒன்று.

## கரு அஎ. மீனாட்சிசுந்தரதாசர் - மதுரை
(19 - நூ.)

பாண்டிவளநாட்டில் மதுரைமா நகரில் வாழ்ந்திருந்தவர். இசைப்பயிற்சியும் சொற்பொழிவு செய்யுந் திறனும் தமிழ்ப் புலமையும் ஒருங்கே அமையப் பெற்றவர். இனிமை மிக்க செய்யுட்களை இவர் பாடியமையின் 'மதுரகவி' என்னுஞ் சிறப்புப் பெயரும் பெற்றார். இராமநாதபுரம் சரவணப் பெருமாட் கவிராயர் முதலியோர் இவர் காலத்தில் இருந்தவர். இவர் இராமசாமிக் கவிராயர் என்பவர் இயற்றிய தெய்வசிகாமணி மாலை, கண்மணிமாலை ஆகிய நூல்களுக்கு,

"கம்பனூர் குலதிலகன் இராமசாமிக் கவிஞன்
கமலப் பொன்மா
னம்பனூர் வேணியன்மேல் தெய்வசிகா மணிமாலை
அறையக் கேட்ட
கும்பனு கங்குறுகி மலைவாயுற் றானதன் சீர்
கூறவேண்டி
வெம்பனு கத்தரசி ராயிரநா வினம்வேண்டும்
எனச் சொன்னனே."

என்பது முதலிய இரண்டு பாக்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கரு அஅ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை - ரா
(20 - நூ.)

இவர் திரிசிரபுரத்தில் இராமலிங்கம் பிள்ளை என்பவருடைய அருமைப் புதல்வராகத் தோன்றியவர். செயிண்ட்சோசப் கல்லூரியில் தமிழாசிரியராக அமர்ந்து பணியாற்றினர். மருங்காபுரி சமத்தானப் புலவராகவும் திரிசிரபுரம் தமிழ்ச்சங்கத்தின் உதவித் தலைவராகவும் இருந்தார். அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை இயற்றிய பொன்விடுதூது என்னும் நூலுக்கு இவர் மூன்று செய்யுட்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"ஓங்குபெருங் கடலனைய ஒண்டமிழ்க்கு
நாயகமாய் உலகம் ஈன்ற
தேங்குபுகழ் படைத்திடுசீர் அமிர்தகவி
அமிர்தவெந்தை அன்பாய் ஈன்ற

பாங்குபெறு கவிவலவன் எஸ்பீசி
 காலேசிற் பரந்த சீர்த்தி
விங்கிடுமைந் தமிழ்ப்புலவன் விளங்கியசீ
 லத்துயர்ந்தோன் விரும்பு மெய்யன்.''

என்பது அப்பாடல்களில் ஒன்று.

இவர் ஆண்டிப்பட்டி பெத்தாச்சி செட்டியார் மீது "நங்கை விடுதூது'' என்னும் நூல் பாடினர். நூலைப் பாராட்டி அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை, சீரங்கம் குரு சுப்பிரமணிய ஐயர், திருக் காட்டுப்பள்ளி உலகநாத ஆச்சாரி, திண்டுக்கல் வீராச்சாமிப் பிள்ளை, வரகனேரி பொன்னுச்சாமிப் பிள்ளை, திருச்சி சுப்பிர மணிய பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' குஞ்சரத்தின் கோடும் குளிர்ந்த இளநீரும்
விஞ்சுபுகழ் ஒப்பாய் விளம்பிடினும்—மிஞ்சியே
ஒப்புச் சிறந்தின்றி ஓங்கித் தனக்கென்றும்
இப்புவியில் தானே இணையென்னக்-கப்பியசீர்.''

என்பது நூலிற் சில அடிகள்.

## கரு௨௯. மீனாட்சி சுப்பராய முதலியார்

இவருடைய பெயருக்கு முன், "இந்தியா ஆரியாவர்த்த ஜயமேறிக் கொடி மடாலயம் ஆதொண்ட மண்டலம் தரும ஸம்ரக்ஷணி ஓம் ஸ்ரீமத் வேதகிரி அஷ்டலக்ஷ்மிபீடம் வைதிக முதலாரியர் அமிர்தசங்கம் சோதிஷ புருஷார்த்த குருகவி ஆரியர்' என்னும் அடைமொழி காணப்பெறுகிறது. இவர் அறிவற் யாமை யாதார விளக்கம் என்னும் நூலுக்குப் பாடிய சிறப்புப் பாயிரத்தின் தொடக்கம்,

'' சுந்தரி மனோன்மணி சுவரூபப் ரஹ்மம்
சகல நிட்கள சச்சிதா நந்த
மாமணி மருவு மன்கட லுடுத்த
சீர்நிலை வளம்பெறுஞ் சென்னைச் செங்கோல்
ஆங்கிலேயர் ஜூபிலி அருள்விக் டோரியா
இந்தியா வெம்பிர ஸெழிலே யாயிரம்
கவிகர வாண்டு கந்நிர வி யதனில்.''

என்பது.

## கரு௬௦. முகமது அப்துல்காதர் புலவர்
(19 - நூ.)

இவர் பாலைக்காடு மேட்டுப்பாளையம் கானுத் தம்பிப் புலவர் ஈன்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவருடைய பெயர் ம்பிப் புலவர் எனவும் வழங்கியது. இவர் பல நூல்களும் பாடல்களும் இயற்றியுள்ளார். இவருடைய பாடல் ஒன்றை நடியிற் காண்க:

" அவனிதனில் உண்டான இகலாமெ லாம்பெருகி
ஆக்கம் பெருகவேணும்
அறதேசி பரதேசி பசியாற எந்நாளும்
அன்னம் பருகவேணும்
கவனமொன் றில்லாத தம்பிரான் தன்னையே
கருத்தில் துதிக்கவேணும்
காவலது அணுகியே வயது நூ றிருக்கவே
காத்துரட் சிக்கவேணும்
பவமொன்றும் அணுகாமல் அஞ்சுநே ரமுந்தொழுது
பலகலைகள் அறியவேணும்
பற்றருச் செல்வமும் நித்தகல் யாணமும்
பண்பாய்ப் பெருகவேணும்
நவநிதிய மேல்விளங் கும்பெருமை மக்கமா
நகரினுக் கரசதாகி
நாலுமன்று சமயமும் தானென்ற தாய்நின்ற
நபிநாய கக்குரிசிலே "

## கரு௬க. முகமது இபுருகிம்சாகிபு புலவர்

சிறந்த செந்தமிழ்ப் புலவராகவும் பெருஞ் செல்வராகவும் கொடையாளியாகவும் விளங்கிய இவர் தொண்டி என்னும் ஊரில் முகமதிய சமயத்தில் தோன்றினர். தமிழ்மொழியை நன்கு கற்றுச் சிறந்த பாவாணரானர். தாம் பலபேர் மீதுஞ் செய்யுட்கள் பாடினர். பிறரும் இவர் மீது செய்யுள்கள் பாடிச் சிறந்த பரிசுகள் பெற்றனர். இவருக்கு வருகிற கடிதங்கள் அவற்றின் முகவரி ஆகியவைகள் கூடச் செய்யுளாக இருக்கும். இவர் வாக்குப் பலிதமுள்ளவர். தெரிந்தோ தெரியாமலோ வாக்கினுல் எதனைக் கூறினும் அது பலித்தே திரும். இவர் சிலர் மீது இசைப்பாடல்கள் பாட அவைகளில் இவருக்குத் தெரியாமல்

அறம் விழுந்து வசைப்பாடல்களாகிப் பாடல்களைப் பெற்றவர்கள் தொலைக்கு உள்ளாயினர். இவர் அவ்வக் காலங்களில் தனிப் பாடல்கள் பல பாடியிருப்பதைத் தவிரத் தனி நூல்கள் செய்த தாகத் தெரியவில்லை. இவருடைய வழிமுறையினருஞ் சிறந்த புலவர்களாயினர். இவர் ஒருவர் மீது,

"சொல்லரிச் சந்திரன் படிப்புக் ககத்தியன்
சுகமதுக் கோமன் மதன்
துணிவுக் கருச்சுனன் மனநட்பிற் றருமன்
சுலோசகங்க ளுக்கோதிலோ
வெல்லரிய வான்மீகி நகையிற் கர்ணன்
விளங்குங் கணக்கில் நிபுணன்
வெற்றிக்கு வேலனும் புத்திக்கு வீடணன்
விவேகந் தனில்வசிட்டன்
வல்லரில் கிருட்ணன் வசிக்கும்நக ரோசெல்வம்
மஞ்சுமேற் படியார்புரம்
வதியுஞ்சௌ பாக்யசம் பன்னயோ காதிபன்
வருணா நுலோசத்துங்கனும்
நல்லறிவு தங்கும்நம் தொண்டியூர் சிகஸ்டம்ஸ்
நலமான கலெக்டர்துரை
நம்புவேங் கடசாமி நாயக்கர் எமர்கட்கு
நன்றியுறு விசுவாசனே."

என்னுஞ் செய்யுளைப் பாட இப் பாட்டில் இவரை யறியாமலே மறம் விழ (எமர்கட்கு நன்றியுறு விசுவாசனே) அதனால் பாடல் பெற்றவர் சின்னாட்களில் இறந்தாராம். பெரும் புகழோடு விளங்கியிருந்த இவர் தம்முடைய எழுபத்தைந்தாவது ஆண்டில் கஅகச மேத் திங்களில் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## கஙகூஉ. முகமது உசேன்

இவர் "அந்திர யவனிப் படைவெட்டு" என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இந்நூல் இஸ்லாமிய மதத்தில் தோன்றி மக்கா நகரை யாண்டு மாற்றரசர்களை வென்று விளங்கிய இறசூல் அல்லது நபியல்லாவெனப்படும் அரசனுடைய வாழ்க்கைப் பெருமையை விரிவாக எடுத்துக் கூறுகிறது. இவ்வரசனுக்குத் தலை வணங்காது, 'றாமு' என்னும் நகரை அவனியந்திரன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் ஆண்டுவந்தான். அதனைப்

பொருத இவ்வரசன், 'அலிநபி' என்னுந் தன்னுடைய மருமகனை உதுமான் என்னும் படைத் தலைவனோடும், பெரும்படையோடுஞ் சென்று அவ்வரசனோடு போர்புரியச் சொன்னான். இதனை அறிந்து அவனும் போர்புரியப் படையை அனுப்பினான். அவனி பந்திரனுடைய படையை இவர்கள் போரில் வெட்டி வீழ்த்தி அவனுடைய நாட்டையுங் கைப்பற்றிக் கொண்டார்கள். இச் செய்தியும் இந்நூலில் வந்திருப்பதால் நூலுக்கு 'அந்திர யவனிப் படைவெட்டு' என்று பெயர் வந்தது.

"கார்வளர் வானம் பூமி கதிர்மதி உருவி னோடும்
ஏர்வளர் மனுவுஞ் சின்னும் பலபல உயிர்கட் கெல்லாம்
மார்வளர் இரண மீந்து எவ்வுயிர்க் குயிராய் நின்ற
பேர்வளர் இறையோனுதி பெரியவன் காப்புத் தானே."

என்பது நூலின் காப்புப் பாடல்.

## கரு௬ரு. முகமது இமாம்கஸ்ஸாலி மரைக்காயர் - மு. க.

இவர் நாகூர் 'மீரான் சாகிபு காரண சரித்திரம்' என்னும் நூல் ஒன்று எழுதினார். துளசி மகாராசாவிடம் மானியங்கள் பெற்றார். தூரி என்னும் கொடிகூடு விழாவைச் சிறப்பாக நடத்தி மணங்கமழும் சந்தனத்தை எல்லோருக்கும் கொடுத்தார்.

## கரு௬௪. முகமதுஹம்சா லெப்பை - ப. மு. (19 - நூ.)

காயற்பட்டினத்திற்கடுத்த குருவித்துறை என்னும் ஊரில் பட்டாணி முகமது லெப்பை என்பவருக்குப் புதல்வராகத்தோன்றியவர். இவர் "மெய்ஞ்ஞானரத்தின அலங்கார கீர்த்தனம்" என்னும் இசைப்பாடல் நூலை இயற்றியுள்ளார். முச்சுடரின் துதியாக இவர் இயற்றியுள்ள பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

"முச்சுடர்ப் பிரகாச மச்சுமா ளிகையா
சனத்திலுறு மோனமுதலே
அச்சுட ரெனுங்கடல் அடங்கிடா வான்பொருளே
அகத்துறநிலை யானபொருளே

மெய்ச்சுடர்ப் பொருளையோர் தச்சுமா ளிகைக்குளே
விளங்கவந் துற்றபொருளை
பச்சைமுந் தொடுவென்னை யானநற் பொருளையா
பகலிரவ தானபொருளை
உச்சியின் மேனின் றிலங்குபொரு ளைச்சொலும்
உலகெலாம் நிறைந்தபொருளை
இச்சைகொண் டென்னுயிர்க்குயிராகி வந்தபொருள்
இறையொருவனைப்பணிகுவாம்
அச்சமதை யோட்டியருள் மழையாரி சொரியுமெம்
மருமதருள் முன்னிற்கவே
அபூருப மானகுண மென்னுமூ ராளுகண்
மணியே முகியித்தீனே.''

## ௧௬௫. முகமதுக்கண்ணு சாகிபு

இவர் கோட்டாறு என்னும் ஊரினர். தமிழ்க் கல்வியை நன்கு கற்று மூசுலீம் பள்ளியொன்றில் ஆசிரியராக இருந்தார். மாணிக்கவாசகம் பிள்ளை யென்பவர் இயற்றிய திருச்செந்தில் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலுக்கு இவர்,

'' போதம் பொலியப் புகழ்பொலியப் போந்தநறு
நீதம் பொலிய நிகழ்த்தினன் காண்—ஏதமிலா
அந்தாதி செந்தில்நகர் அண்ணல் இணையடிக்கே
நந்தா திலங்க நயந்து ''

'' கண்ணின் மணியாக் ககனிற் சுடராயிம்
மண்ணில் வயங்குதிரு மங்கைநகர்—நண்ணி
மதிபூத்த மாணிக்க வாசகனு மென்றுந்
துதிபூத்த நாம துரை.''

என்னும் வெண்பாப் பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

## ௧௬௬. முகமதுசெய்கு முகியித்தீன். செ. செ
(20 - நூ.)

இவர் வேதாளையூர் என்னும் ஊரில் இருந்தவர். இலக்கண நூல்களைத் திருவாங்கூர் இயற்றமிழ் வித்துவான் சுல்தான் முகியித்தின் அவர்களிடம் நன்கு கற்றுணர்ந்தார். இலக்கணத் தில் வல்லவராக இருந்தபடியால் இவர் இயற்றமிழ் வித்துவான்

என்று பாராட்டப்பெற்றுர். மெய்ஞ்ஞான விருவிடை என்னும் ...வர்,

"கடலாடை நெடும்புவிவெண் கதிர்மதிசெந் தினகரன்வான்
உடுவினமும் பிறவகையும் ஒருங்குறுந்தும் பரம்பொருளைச்
சடமெடுத்த மனுக்குலத்தார் தமையறிந்தால் அறிவரென்று
மடமகற்று மதுரிபத்து வழிதுலக்கக் கருதியன்றே."

என்பது முதலிய பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கஙகஎ. முகமதுசைன் புலவர்

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலியைச் சேர்ந்த மேலப் பாளையத்தில் வாழ்ந்திருந்தவர். முகமதிய சமயத்தினர். இவருடைய மகனுகிய செய்யிதுமுகியித்தீன் கவிராசர், பேராகிய மீருன் சாகிபு புலவர், கொள்ளுப் பேரராகிய சாகுல் அமீதுப் புலவர் ஆகியோருஞ் சிறந்த புலவர்கள். இவர்கள் நூல்கள் பல இயற்றியுள்ளனர். முகமதுசைன் புலவர் பெண்புத்தி மாலை என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"அல்லா ஒருவனை அஞ்சி வணங்கிக்கோ மயிலே
எல்லா மவனென் றிருதயத் தெண்ணிக்கோ குயிலே
மூமினோர் முத்துமுகமதைப் போற்றிக்கோ மயிலே
ஆமினோர் பெற்ற அருமதென் றெண்ணிக்கோ குயிலே."

இவை பெண்புத்தி மாலையிற் சில கண்ணிகள்,

## கஙகஅ முகம்மது நாகூர்முத்துப் புலவர்

இவர் கோயமுத்தூர் மாவட்டம் உடுமலைப்பேட்டை சோழமா தேவி நகரம் செய்யிது முகமதுப் புலவர் மகனுகத் தோன்றியவர். இவர் பாத்திமா தேவியின் பேரன் முகியதின் வரலாற்றைச் சதக மாகவும் ஆனந்தக்களிப்பாகவும் பதங்களாகவும் பாடியுள்ளார்.

## கஙகசு. முகம்மது பதியுதீன் சாகேப்

கொங்குவள நாட்டில் எண்டிசையும் புகழ் தண்டபாணிக் கடவுள் அண்டரும் போற்றத் திருக்கோயில் கொண்ட அரும் பெரும் பதியாம் பழநிமலையில் பத்தொன்பதாம் நூற்றுண்டின்

பிற்பகுதியில் வாழ்ந்திருந்த இவருடைய பெயர் வெள்ளைச் சாகேப் என்றும் வழங்கியது. சிறந்த தமிழ்ப்புலமை அமையப் பெற்றவர். இவர் முத்தையன் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் பாடிய மனோரஞ்சித நாடக நூலின் சிறப்பும் அதனை இயற்றிய அப்புலவரின் புகழும் நயம்படக் கூறியுள்ளமை அறிந்து மகிழ்தற்குரியன. அப்பாடலை அடியிற் காண்க.

"விண்மதியி னொடுகதிர்த் தேர்தவழ வோங்கியுயர்
வீறுதிரு மதில்கள்கோட்டை
மேடைமா ளிகைகூட கோபுரம் விமானம்
விளங்குதென் பழநிவாழும்
விற்பனகு மாரதண் டாயுதக் கடவுளிரு
மெல்லடி வணங்குநேமன்
வித்வனிஸ் வப்பிரம குலதிலகம் எண்டிசையும்
மெய்புகழ் படைத்தகுணன்
கண்ணெனும் இலக்கண இலக்கியச் சூத்திரக்
கடல்மடை திறந்தவெள்ளம்
கலைவலோ ரவரும்ச பாசெனும் படியமிர்த
கவிமாரி பொழியும்மேகம்
காவியபு ராணசட் சாத்திர மனைத்தின்
கருத்தையறி கின்றபூஷி
கலைவாணி நடனமிட் டனவரத காலம்
களித்திருக் கின்றபீடம்
தண்டரள மணிமாலி காபரண புயவீர
நாட்டிக கோலாகலன்
சந்ததங் காயத்ரி மந்த்ரசந்த் யாவந்தன
சன்மார்க்க புனிதசீலன்
தனமாது செறிமாந்தை யம்பதி தழைக்கவரு
தானகர் ஜுவதாரன்
சம்பத்கு பேரசந் தனவேள் கவிகார
தனயபாஞ் சாலைதகன்
செண்டினை நிகர்த்ததன மங்கையர்கள் மடலெழுது
திவ்யமன் மதவசீரன்
செந்தமிழ்வ லன்முத்தை யன்சொல்லு மனோரஞ்
சிதத்தினது நாடகத்தைச்
செல்வமோங் கும்பெரம் பூரில்வள ராஜமுக
செம்மல்மகிழ் கூர்ந்துசென்னைச்
சித்ரவா ணிவிலாச அச்சிலெட் டெங்குநற்
சீர்த்திதிகை நாட்டினனரோ."

## கசoo. முகமதுப் புலவர் – மதுரை
(1876)

இவர் மதுரைமா நகரில் வாழ்ந்திருந்தார். இவருக்கு நாளெட்டில் வென்றுனென்றும், பீர்கானென்றும் வேறு பெயர்களும் வழங்கியதாகத் தெரிகிறது. இவர் சரீதுமாலை என்னும் நூல் பாடியிருக்கிறார்.

"அடவிதொறு மிருகினிகள் குயில்கள்கனி
மொழியவியல் அழகுமயி லாடவியல்சேர்
புடவியுல கினின்வளமை பெருகுமொரு
பெரியநதி பொலிமிசிறு நாடுதனிலே
அடலரசர் கெவுடர்கவு டியர்துளுவர்
கருநடியர் உடனுநிலை வாழுநெறி யோன்
தடமகுட கனகநவ மணிமுடியி
னிலகுபுகழ் தழுவியச ரீதரசனே."

என்பது சரீதுமாலையில் ஒரு பாட்டு.

## கசoக. முகமதுப் புலவர் - க
(19 - நூ.)

பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்திருந்த முகமதியப் புலவர்களில் இவர் ஒருவர். இவர் மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்து அவர்களைச் சிறந்த புலவர்களாக்கியிருக்கிறார். இவரிடம் தமிழ் பயின்றவர்களில் வெ. நாராயணசாமி நாயகர் என்பவர் நூல்கள் பல இயற்றிப் புகழுடன் விளங்கியிருந்தார். அவருடைய நூலுக்கு இவர்,

"பூமலி தடஞ்சூழ் புகழ்சிங்கை நகர்வாழ்
மாமலி மாளிகை மலியும் புயத்தினன்
ஐவகை இலக்கண ஆர்கலி உண்டே
பெய்யும் பிரபந்தப் பெருங்கார் மேகம்
இயலிசை நாடகம் எனுமுத் தமிழின்
பயிலியல் சித்திரக் கவிபல பகர்வோன்
பூராயம் உடைய புத்தியன் சித்தியன்
நாராயண சாமி நாயக நாவலன்
மிகுவரம் உடைய மேதகு வாணி
தகவுறு சரிதையைச் சாற்றினன் பதிகமே."

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

கேசாதி பாதமாலை என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். கேசாதி பாதமாலை என்பது உச்சியிலிருந்து உள்ளங்கால்வரையுள்ள உறுப்புக்கள் ஒவ்வொன்றையும் சிறப்பித்துக் கூறும் நூலாம். இது தலையின் சிறப்புக் கூறுகின்றது.

"நிலைமைக ளணங்கு வதனமா யுதித்த
நிருபர்கள் புகழும் மக்காவில்
தலைபெறுங் குறைசிக் குலத்தினில் உதித்த
நரபதி அப்துல்லா மகவே
கலைபல அணிந்த காபிர் ளுயிரைக்
ககனிடை செலுத்தித் தினவர்க்குப்
பலன்தருங் கபீபு முகமது நபிபொற்
பதம்பணி சிரங்களே சிரங்கள்."

என்பது அம் மாலையின் முதற்பாட்டு.

## கசO௨ முகமதுலெப்பை ஆலிம்சாகிபு
## (1874)

இவர் காயற்பட்டணம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். முகமதிய சமயத்தினர். இவர் "அருமைக்காரண மாலை" என்னும் நூலை இயற்றியுள்ளார். அந்நூலில் மெய்ஞ்ஞானம் கும்மிப் பாடல்கள் முதலியவை அடங்கியிருக்கின்றன,

"உத்தாரஞ் செய்து முகம்மதென்றே
உறுதிகொ ளறிவுக் கடலினுள் வாழும்
உண்மையாம் செய்கு உமறொலியுல்லா
உள்ளமையாகிய ஒல்தா துடனே
உடையோனே ஜெங்கனைக் குடிகூட்டல்லாஹ்."

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## கசOௌ. முகுந்த நாயகர் – ரா
## (19 - நூ.)

தொண்டைவள நாட்டில் திருநீர்மலை என்னும் ஊரில் இராமசாமி நாயகர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றுத் திகழ்ந்தார். இவர் இயற்றிய நூல்களில் "சிரங்கநாதர் பஞ்சரத்தினம்" என்னும் சிறு நூல் இன்று உணரப்படுகிறது.

"தனிமையாய் மூவுல களந்தநின் பங்கயத்
தாளிணை துதிக்கிலாது
தனமாத ராசைமண் ணாசைபொன் னாசையில்
தளராது திரியும்என்னை
இனியேனு முனதுகழ லிணைபரவ அருள்செய்வாய்
இகபரா நந்தமூர்த்தி
ஈனமாய் இவ்வுலகில் இவ்வுடல் எடுத்தென்றும்
இன்பமறி யாதவுடன்
அனையினும் இரங்கிடும் தண்ணருட் கடலேயென்
அகமிசைக் குடிகொண்டருள்
அச்சுதா நந்தகோ விந்தாமு குந்தா
அராமிசைத் துயில்செய்நாதா
நினைவதற் கரியபல் வளமோங்கு செய்யதிரு
நீர்மலையில் வாழும்நிதியே
நினதுபய பதுமமலர் எனதிதய மிசையிலக
நின்றருள் அரங்கேசனே."

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## ௧௪௦௪. முக்களாலிங்க முனிவர்

இவர் பாண்டிவள நாட்டில் பாவநாசப்பதியில் தோன்றியவர். சிவஞான முனிவருடைய முன்னோராக இருக்கலாம் என்று மு. ரா. அருணசலக் கவிராயர் எண்ணுகிறார். இவர் பாவநாசத் தலபுராணம் என்னும் நூலை ௧௦௩௪ பாடல்களாகப் பாடியிருக்கிறார். நூல் அரங்கேற்றிய இடத்தையும் பாடுமாறு கேட்டுக்கொண்டவரைப்பற்றியும் பின்வரும் பாட்டுக் குறிப்பிடுகிறது.

"அம்பொன் மாளிகை ஆறைவாழ் மயிலப்பன்
அருள் குமாரசு வாமி
தம்பி யாமுகில் புகழ்ச்சிவ சயிலநா
தனுக்கு முன்னவ னானோன்
கம்ப மாகரி காத்தருள் அழகப்பன்
கனிந்த அன்பொடுங் கேட்ப
உம்பர் நாயகர் சந்நிதா னத்தினில்
உரைத்த திக்கதை யாமால்."

இப் புராணம் உரைநடை முதலியவைகளோடு அச்சிற் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது.

## ௧௪௦௫. முத்தமிழ்க் கவிராயர்
(1895)

"அழகிய முத்தமிழ் ஆர்கவிப் புருந்து
முழுதி யாடுறா ஈடு முதிர்ந்த புலமை
ஒத்தவின் யாரும் உயரிறும் பூதாய்
முத்தமிழ்க் கவிஞன் முத்தமிழ்க் கவிஞன்
என்றிட அப்பெயர் இயற்பெய ராக
நன்றெனை வாய்ந்த நாவலர் பெருமான்."

என்று அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் அவர்களால் வியந்தோதப் பெற்ற இவர் 'சுசீந்திரத் தலபுராணம்' பாடியுள்ளார். அப் புராணம் இருபது படலங்களையும் ௭௯௩ பாடல்களையுங் கொண்டது.

"ஓங்கு கரமும் உரமுந் திருநாவும்
தேங்கமல மான்சேரச் சேருவீர் கண்வளரீர்
தாங்கு முடிக்கணியும் தன்னிறமும் நற்றவிசும்
ஆங்கமல மென்னவினி தாக்குவீர் கண்வளரீர்."

"எந்நாளும் உம்ப ரியம்பரிதாம் அம்புயத்தில்
பொன்னூர் அணியே பொருந்தல்செய்வீர் கண்வளரீர்
மின்னூ ரணியும் விரிகுடையும் இல்விடமும்
நன்றாக மென்ன நலம்பெறுவீர் கண்வளரீர்."

இவை அநசூயை கற்புமகிமைப் படலத்தில் இரண்டு பாடல்கள் நூலினைப் பாராட்டிச் சென்னை அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், காஞ்சிபுரம் பெரும்புலவர் சபாபதி முதலியார் மகன் பாலசுப்பிரமணிய முதலியார், திருமயிலைப் புலவர் சண்முகம் பிள்ளை, தி. செ. சித்திரபுத்திர பிள்ளை, அரன்வாயில் தங்கவேலுப் பிள்ளை, சென்னை நகர்ப் பண்டிதை மனோன்மணி யம்மாள் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௧௪௦௬. முத்தம்மாள் - வீ
(19 - நா.)

பாண்டிவள நாட்டில் விசயநாராயணம் என்னும் ஊரில் இவ்வம்மையார் தோன்றினார். திருச்செந்தில் முருகக்கடவுள் மீது "திருச்செந்தின் மாலை" என்னும் நூலைப் பாடிய இவ்வம்மை

யாரின் தந்தையார் பெயர் சிவந்திமன்னமார்த்தாண்டம்பிள்ளை. கணவர் பெயர் வீரபாகு பிள்ளை. திருச்செந்தின் மாலை நூலை ஆழ்வார் திருநகரி பெரியதிருவடிக் கவிராசர் பார்வையிட்டுச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

"அருமறைப் பொருளே ஆரண முடிவே
அறுமுகா சடாட்சர முதலே
திருவினர் இருவர் அருகினில் அமரச்
செந்திலம் பதியில்வீற் றிருக்கும்
முருகனே முதலே மழுமணிக் குன்றே
முடிவிலா மயூரவா கனனே
கருணையோர் உருவே கருதிய சிறியேன்
கவலையை நீக்கிநன் கருளே."

என்பது மாலையில் மூன்ருவது பாட்டு.

## கசூ0எ. முத்தனுசாரியார் - வே

(19 - நூ.)

கொங்குவள நாட்டில் பழனியம்பதியில் சந்தனம் ஆசாரியார் என்பவருக்கு வளர்ப்புப் பிள்ளையாக அமைந்த இவர் மௌன குரு ருத்திரமூர்த்தி ஆசாரி என்பவருக்கு உடன்பிறந்தார் ஆவர். இவர் "மனோரஞ்சித நாடகம்" என்னும் கற்பனை நாடகம் ஒன்றை எழுதி யச்சிட்டு வெளிப்படுத்தினர். மற்றும் இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பல. அவற்றுட் குறிப்பாகத் தோன்றும் நூல்கள் அடியில் வருவன.

க. பழனிக் குறவஞ்சி நாடகம்.
உ. புட்ப லீலாவதி நாடகம்.
ங. மோகன சௌந்தர நாடகம்.
ச. தமிழறியும் பெருமாள் நாடகம்.
ரு. கீதரச சாவளித்திரட்டு.
சூ. பழனியாண்டவர் பவனிக்கொம்மி.
எ. விக்டோரியாராணி ஒயிற் கொம்மி.
அ. வள்ளியம்மன் கோலாட்டப் பாட்டு.
கூ. பிரபஞ்ச பூர்வோத்தர சாரசங்கிரகம்.
க0. பழனியாண்டவர் விறலிவிடுதூது.

அச்சிட்ட நூலுக்கு அவிநாசி சிவஞான தேசிகர், பழனி முகம் மது பதியூதின் சாகேப் ஆகியவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள் ளார்கள். நூலின் காப்புச் செய்யுளை அடியிற் காண்க:

"சந்திரனை நிகர்த்தமுக மாதுமனோ ரஞ்சிதத்தின்
சரிதை தன்னைச்
சுந்தரஞ்சேர் செந்தமிழி னின்மதுர நாடகமாய்ச்
சொல்லு தற்குப்
பந்தவினை தனைத்தவிர்த்துச் சாயுச்ய பதமருளும்
பரமன் ஈன்ற
கந்தமிகுந் தந்திமுகத் தெந்தையிரு பொற்சரணங்
காப்ப தாமே"

## ௧௪௦௫. முத்தாநந்த சுவாமிகள்
(19 - நூ.)

இப் பெரியார் பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்திருந் தவர். வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலையில் நிலைத்து நின்றவர். இவர் 'ஞானமதியுள்ளான்' என்னும் நூலை இயற்றி யுள்ளார். அந்நூல் ௧௩௬ பாடல்களைக் கொண்டது.

"போனவன் துயில்கள் கொண்டான்
பொற்சபை தன்னி லுள்ளே
ஏனடா இங்கு வந்தாய்
இவ்விடத் திருக்க வேண்டாம்
தானடா படுத்தா யிந்தத்
தலத்தைவிட் டெழுந்து போபோ
ஏனடா போடா வாடா
என்றவன் எழுப்பி விட்டான்."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௪௦௬. முத்தானந்தர்

இவர் ஆற்றூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். அவ்வூரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய சிவபெருமான் மீது இவர் 'குறவஞ்சி' என்னும் நூல் பாடியுள்ளார். அக் குறவஞ்சி 'முத்தானந்தர் குறவஞ்சி' என்னும் பெயரோடு வழங்குகின்றது. இவர் பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இருந் தவர் என்று தெரிகிறது.

"வாழுவென் றுலகோ ரெல்லாம் வாழ்த்துதல் தன்னைக் கேட்டு
நீளவெங் குறத்தி தன்னை நிட்டையாஞ் சித்தர் மெச்சிக்
காளவண் மேகம் போலக் கனவெகு மதிக ளீயச்
சூழவே குறவனோடு சுகமதா நந்த முத்தே."

என்பது குறவஞ்சியின் இறுதிப் பாட்டு.

## ௧௪௪௦. முத்திச்சிதம்பரம் பிள்ளை
(1898)

இவர் திரிசிரபுரத்தில் செயிண்ட் சோசப் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்தவர். இவர் மாணவர்கட்குப் பயன் படத்தக்க யாப்பிலக்கணச் சுருக்கம் முதலிய சிறு நூல்களை இயற்றி வெளிப்படுத்தினர். இவருடைய யாப்பிலக்கணச் சுருக்க நூலைப் பார்வையிட்ட உ. வே. சாமிநாதையர், "மகாஸ்ரீஸ்ரீ முத்திச் சிதம்பரம் பிள்ளையவர்கள் எழுதிய யாப் பிலக்கணச் சுருக்கத்தை முற்றும் பார்த்தேன். அது யாப்பருங் கலக்காரிகையின் கருத்தைத் தழுவி ஒழுங்காகவும் மிகத் தெளி வாகவும் வேண்டிய பல விடயங்களை அடக்கியும் நன்றாக எழுதப் பட்டிருத்தலால், வித்தியாசாலைகளிற் படிக்கும் மாணாக்கர்கள் யாப்பிலக்கணத்தை எளிதிற் றெரிந்து கொள்ளுதற்குச் சிறந்த கருவியாகவுள்ளதென்று அறிஞர்கள் பலரும் அங்கீகரிப்பார்க ளென்று நம்புகிறேன்" என்று 29-9-1898 ஆம் ஆண்டில் எழுதி யுள்ளார்.

## ௧௪௪௧. முத்திராமக் கவிராயர் – கோ
(20 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் வேலூரில் இருந்தவர். இவருக்கும் சுப்பராய முதலியார் என்பவருக்கும், கொ. அருணாசல முதலியார், கொ. சிங்காரவேலு முதலியார் என்னுஞ் செல்வர்கள் இருவர் மிகுந்த பொருளுதவி செய்து பாரதத்தை நாடகமாகப் பாடும்படியாக வேண்டிக்கொண்டனர். இவர்களும் அவர் களுடைய விருப்பப்படியே பாரதத்தை நாடகமாகப் பாடி முடித் தனர். அந் நூலில் வெண்பா, கலித்துறை, கொச்சகம், கட்டளைக் கலிப்பா, விருத்தம், தருக்கள், திபதைகள் முதலிய பலவும் அடங்கியுள்ளன.

"குந்திபுகித் திடுமெனவே யுரைத்த பின்பு
கோதைதிரௌ பதிதனைப்பார்த் துளம்வே றுஞன்
அந்தவருக் கத்தையுதிட் டிரனெ ழித்தான்
ஐவரிடத் திற்பலரா மனுமா யோனும்
வந்தகன்ருர் துருபதன்தன் மகளின் க்ஷேமம்
மறைந்தறிந்து வரத்திட்டத்துய் மனைவி டுத்தான்
அந்தவகை தெரிந்துவந்தே துருப தன்முன்
அடங்குவான் சேதிசொல்லத் தொடங்கு வானே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௪௧௨. முத்திருளப்ப பண்டிதர் (சோதிடர்) (1868)

இவர் சென்னைமா நகரில் இருந்தவர். காலக் கணிதத்திலும் வல்லவர். இதனுல் இவருடைய பெயர் சோதிட முத்திருளப்ப பண்டிதர் என்று வழங்கியது. இவர் சேதுபுராணம் அனுப்பு மாறு பொன்னுச்சாமித் தேவருக்கு அனுப்பிய நான்கு செய்யுட் களில் ஒன்று,

"ஆரத் தொளிவிடு மொப்பற்ற மாணிக்கச் சோதிமுத்தம்
ஆரத் தினையணி மார்பா விமலை யமர்புயனே
காரொத்த கைத்தல னேபொன்னுச் சாமிக் கலாநிதியே
சீரொத்த சேது புராணத்தைத் தந்து சிறந்தருளே."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## ௧௪௧௩. முத்திருளப்ப பிள்ளை

இவர் சேதுபதிக்கு அமைச்சராக விளங்கியவர். சிறந்த புலமையும் நன்கு அமையப் பெற்றவர். இவர் மீது புலவர்கள் பலர் செய்யுட்கள் பாடியுள்ளனர். பெரிய சரவணக் கவிராயர் 'காதல்' என்னும் நூலும் இவர்மீது இயற்றியுள்ளனர்.

"கண்ட கனவிவிம்மிக் காசளவே னுங்களவின்
உண்டு செனுத்திடநான் ஒட்டுவனோ—மண்டும்
திருமுத்து ராமலிங்க சேதுபதி மந்த்ரி
தருமுத் திருளப்பன் தான்."

என்பது இவர் இயற்றிய பாடல்களில் ஒன்று.

## கசகச. முத்து ஐயர். பீ. ஏ.

இவர் இவ்விருபதாம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் சென்னைமா நகரில் இருந்தவர். பீ. ஏ. வரை ஆங்கிலக் கல்வி கற்றிருந்ததோடு தமிழிலும் நல்ல புலமை பெற்றிருந்தார். அந் நாளில் சென்னைமா நகரில் நடைபெற்ற விவேக சிந்தாமணி என்னும் திங்கள் இதழில் இவர் பல கட்டுரைகளும் உரைநடை நூல்களும் பாடல்களும் எழுதியுள்ளார். அந்நாளில் கப்பல் ஒன்று பாறையில் மோதிக் கவிழ்ந்து நூற்றுக்கணக்கான பேர் மாண்டனர். அதைக் குறித்து இவர் முப்பத்தெட்டுப் பாடல்கள் இரங்கிப் பாடினூர். அவற்றுள் இரண்டை அடியிற் காண்க:

*"கோல மார்கலன் குன்றொடு குன்றுறத் தாக்கல்*
*போல வாரியிற் புதைந்துறு பொருப்பினில் மோதிக்*
*காலன் ஊர்புகக் காட்டிய வழியெனத் திறக்க*
*வேலை நீர்புகுந் தியாவையும் விழுங்கிய தன்றே."*

### வேறு

*"மாக்கலன் உடைதலும் வணிதை மார்களும்*
*நீக்கரும் புதல்வரும் நெடிய மைந்தரும்*
*ஏக்கமுற் றினைந்தனர் இரங்கி வாடினர்*
*ஆக்கையும் தளர்ந்தனர் அறிவும் சோர்ந்தனர்."*

## கசகரு. முத்து ஐயர் – (சா)
### (20 - நூ.)

இவர் திரிசிரபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த திருநயம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் சாமி ஐயர். முத்து ஐயர் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத்தேறிப் பலருக்குந் தமிழ் நூல் பயிற்றும் தமிழாசிரியராக விளங்கினூர். இவர் பகவத் கீதையை வெண்பாவாகப் பாடியிருக்கிறூர். அந்நூல் ௧க0எ ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டு வெளியாகியுள்ளது.

*"கண்ணீர் விழிநிரம்பக் காருணியம் உன்நிரம்ப*
*எண்ணீர்மை இல்லா திடருறுமத்—தண்ணீரன்*
*தன்முகத்தை நோக்கியிது சாற்றினுன் தண்கருணை*
*நன்முகத்திற் பூத்தருள்வான் நன்கு."*

"செவ்வேலை ஒப்பாய்நீ நிற்கின்மேலிவு தெவ்வரெதிர்
இவ்வேலை எவ்விடைநின் றெய்தியதிங்—கொவ்வாது
பேதையர்கைக் கொள்வதுநீ பிடிவசை யைத்தருவ
தோதுநீக் கூறுவ தோர்."

இவை இரண்டாவது சாங்கியயோகத் தொடக்கத்தன. நூல் முழுவதும் இவ்வாறே செவ்விய முறையில் அமைந்துள்ளது. நூலைப் பாராட்டித் தஞ்சைமாவட்டம் விஷ்ணம்பேட்டை சேதுராமய்யர் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கிறார்.

## கசகசு. முத்துக்கறுப்பன் செட்டியார்

சோழவள நாட்டில் பட்டுக்கோட்டையில் ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருந்தவர். இவர் அவதானங்களைக் கணக்கில்லாமற் செய்தபடியால் இவருக்குக் 'கணக்கிலவதானி' என்று பெயருண்டாகியது. இவரைப்பற்றிய வரலாறு மறைந்தொழிந்தது. மனுச்சோழச் சக்கரவர்த்தி வாசகப்பா என்னும் நூலுக்கு அடியில்வரும் பாட்டைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்:

"மாதரார் வாண்முகங்கட் குடைந்துதா
மரையொற்றைக் காலி னின்றும்
ஏதமிலாத் தவமியற்றல் ஒக்குமியற்
புதுவைவள ரேந்தல் கௌரி
மாதவனான் குலஞ்செய்தவ மெனுஞ்சீநி
வாசனென வந்த செம்மல்
சோதரனும் எழின்நாரா யணசாமி
சோழகதை சொல்லி னானே."

## கசகஎ. முத்துக்கிருட்டிண உபாத்தியாயர்

(19 - நூ.)

இவர் மாறுகுடி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். அரிச்சந்திர புராணத்தை இவர் நாடகமாக, "அரிச்சந்திர நாடகம்" என்னும் பெயரோடு இயற்றியுள்ளார். நாடகம் மிக எளிய நடையிலும் நகைச்சுவையுடனும் அமைந்துள்ளது. நகைச்சுவை பொருந்தியுள்ள ஒரு பகுதியை அடியிற் காண்க:

"தஞ்சாவூருச் சந்தைக்குப்போனேன் சந்தமாமா-அங்கே
சாகிற கிழவியைக் குத்திப்போட்டேன் சந்தமாமா
கும்பகோணஞ் சந்தைக்குப் போனேன் சந்தமாமா-அங்கே
குமரியைக்கண்டு ஓடிப்போனேன் சந்தமாமா
இருட்டு வீட்டிலே சட்டியிருந்தது சந்தமாமா-நான்
எடுக்கப்போனேன் கடிக்கவந்தது சந்தமாமா
எட்டுநாள்முன் செத்தபாம்பைச் சந்தமாமா-நான்
எட்டிநின்று குத்திப்போட்டேன் சந்தமாமா
இரண்டாட்டுக்கு எட்டுக்காலு சந்தமாமா-என்
பெண்டாட்டியைக் கேட்டுப்பாரு சந்தமாமா
என்னைப்போல வீரனில்லை சந்தமாமா-இதோ
உன்னைப்போலே கோழையில்லை சந்தமாமா."

## ௧௪௧௰. முத்துக்கிருட்டிண ஐயர்
(20 - நூ.)

இவர் கல்லிடைக் குறிச்சியில் இருந்தவர். கிரேட்டமாலிகா, கல்லிடைக் கும்மி, இந்து சாத்திராபிமானி, ஆரியசனபோதினி முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

## ௧௪௧௧ முத்துக்கிருட்டிண நாயுடு - சே
(20 - நூ.)

சென்னை திருவல்லிக்கேணியில் வாழ்ந்திருந்தவர். வைணவ சமயத்தினர். வைணவ நூல்களில் மிகுந்த தேர்ச்சியுடைய இவர் கிழையூர்ச் சடகோபதாசர் என்பவர் இயற்றிய அரிசமய தீபம் என்னும் நூலுக்குப் பொழிப்புரை இயற்றியுள்ளார்.

"செங்கமலைத் திருமார்பிற் சிறந்து வாழ்க
தேவர்பிரான் அடியேன்றன் சிந்தைவாழ்க
துங்கமுறு வாய்மையாழ் வார்க ளோடு
தூயவா ரியகுருவென் துணைக்கண் வாழ்க
பங்கமற மெய்ம்மைநெறி பரவ வன்றோர்
பகர்பனுவல் எனதுநாப் படிந்து வாழ்க
மங்கலமா ரவரடியார் மலர்த்தாட்டுணைஎன்
மனத்தகத்தே எந்நாளும் வாழ்க மாதோ."

என்பது இவர் நூலின் உரை முடிவிற் பாடிய வாழ்த்துப்பா.

## ௧௪௨௦. முத்துக்குமர செட்டியார் - அ

சோழவள நாட்டில் தஞ்சைமாவட்டத்தில் அம்மாப் பேட்டை என்னும் ஊரில் அரிகரபுத்திர செட்டியார் என்ப வருக்கு அருமைப் புதல்வராகப் பிறந்த இவர், இளம்பருவத் திலேயே நன்கு கல்வி கற்றுச் சிறந்த புலவரானார். வேங்கடராம சாத்திரியார் இயற்றிய தஞ்சைப் புராணத்திற்கு இவர்,

"புலங்கிளர்ந்தநான் மறையிறை டாகமம் பொலியும்
குலங்கிளர்ந்தசெஞ் சடைமதிப் பரனையுட் கொள்ளாப்
பலங்கிளர்ந்தபண் ணிசையொடும் புணர்வுறப் பாடும்
நலங்கிளர்ந்தவோர் வேங்கட ராமநா வலவன்."

என்னும் பாடலையும் பிற பாடல்களையும் இயற்றியுள்ளார்.

## ௧௪௨௧. முத்துக்குமரப்ப கவி

இவர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்தார். சிறந்த தமிழ்ப் புலவராகத் திகழ்ந்த இவர் புதுவையில் உள்ள திரிபுரசுந்தரி அம்மன் மீது பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார்.

"அமுதினு மதிர்சுவை தருமொழி மங்கலை
ஆடிக பொன்னூசல்
அடியவர் இடர்கெட வரமுத வும்பரை
ஆடிக பொன்னூசல்
அமுதர்கள் பரவிய பதமலர் அம்பிகை
ஆடிக பொன்னூசல்
அபயவரதகர தலமுறு சங்கரி
ஆடிக பொன்னூசல்
அமலைவி மலைசிவை கவுரிய லங்கரி
ஆடிக பொன்னூசல்
அருள்செய்தெ னதுதுதி மகிழுநி ரந்தரி
ஆடிக பொன்னூசல்
அமலைசெறு டுனிடையி னிலகுசு ரந்தரி
ஆடிக பொன்னூசல்
அரகர சிவசிவ திரிபுர சுந்தரி
ஆடிக பொன்னூசல்."

என்பது ஊசற் பருவத்தில் ஒரு பாட்டு.

இந் நூலைப் பாராட்டித் தாண்டவராயக் கவிராசர், இரா மச்சந்திரக் கவிராயர், நயினியப்பக் கவிராயர், வீராச்சாமி முதல்

யார், வேங்கடாசல முதலியார், சாம்பசிவக் கவிராயர், கூனி போகு இராமசாமி, அருணாசல உபாத்தியாயர், இராமானுசக் கவிராயர், வாலேதாசன் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கசஉஉ. முத்துக்குமாரசாமிப் பாண்டியர்

பாண்டிவளநாட்டில் கல்போது என்னும் ஊரில் பெருநிலக்கிழாராக விளங்கிய இவர் சிறந்த புலமைத்திறம் பெற்றும் விளங்கினர். இவருக்குக் கடன் தொல்லை அதிகமாயிற்று. எட்டையபுரம், பேரையூர் என்னும் இரண்டு ஊர்க்குறுநில மன்னர்களிடஞ் சென்று தமது கடனைத் தீர்த்தற்குக் கடனாகப் பொருளுதவி செய்யவேண்டுமென்று கேட்டார். அவர்கள் "இல்லைபோம்" என்று கூறிவிட்டார்கள். பிறகு இவர் ஆற்றங்கரை என்னும் ஊரில் இருந்த குறுநிலமன்னரிடஞ் சென்று,

"எட்டையா பேரையா என்றுரையே என்றுரைத்தேன்
எட்டையா பேரையா என்றுரைத்தார்—கட்டக்
குரைகடற்குள் ஈர்த்துக் கொடுபோகா தாற்றங்
கரையதனிற் சேர்த்தெனை நீ கா."

என்னும் செய்யுளைப் பாடினர். இச் செய்யுளில் இருந்து இவருடைய அறிவுத்திறனை நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

## கசஉரு. முத்துக்குமாரசாமிப் பிள்ளை - சொ (19 - நூ.)

இவர் தென்னார்க்காடு மாவட்டத்தில் சிதம்பரம் பிரிவில் உள்ள உடையார்குடி என்னும் ஊரில் தோன்றியவர். தக்க அறிஞர்களிடம் கல்வி கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்த இவர் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரந் தெரியவில்லை. 'சுப்பிரமணிய சுவாமி கீர்த்தனை' என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

"பூந்தருடன் மணியெறியும் புதிர்திரைக்கா
விரிவடகால் வடகால் மோதக்
கைந்துளி சேர் கடப்பூர்வாழ் கந்தனுக்கே
கீர்த்தனமாங் கலைப் போர்த்தான்
சித்திதரு நன்றூரின் குடதிசைசேர்
வேள் பூண்டி சிவையின் பாதம்
பத்தியுளான் பரமனடி பகர்பெரிய
சாமியெனும் பாவலோனே."

## ௧௪௨௪. முத்துக்குமாரசாமியா பிள்ளை - பி
## (20 - நூ.)

தென்பாண்டித் திருநாட்டில் திக்கெலாம் புகழ்பெற்று விளங்கும் திருநெல்வேலியில் கார்காத்தார் குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் பிரமநாயகம் பிள்ளை. கல்வி கற்றுப் புலமை பெற்ற முத்துச்சாமியா பிள்ளை, காந்திமதியம்மை பதிகம் இன்னிசைப்பாமாலை, திருச்செந்தூர்ச் சுப்பிரமணியக் கடவுள் தோத்திரப் பாடல்கள், திருக்குற்றாலநாதர் பதிகம், குறுக்குத் துறைப்பதிகம் முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

"ஆறுறு மென்கொடுமை அநியாயம் அநியாயம்
ஆர்தான் சகிப்பரந்தோ
ஆளையிட் டேனிந்த அம்புவியி லேபடும்
அவத்தையோ மெத்தமெத்த
நரனைழு யேனிதற் கென்செய்வ னுன்னையே
நம்பினேன் ஆதலாலே
நன்மைதரு இன்றநாள் எந்தநாள் அந்தநாள்
நவிலுவாய் தமியனுக்கே
ஏனொசொ லேழைக் கிரங்காத காலமோ
ஏதுமறி கின்றிலேனே
என்னபிழை பிள்ளைகள் இயற்றினும் பெற்றவள்
இரக்கம்வைத் தாள்வ திலேயோ
வாளுடர் வந்துதொழு மயிலே! எனக்குநல
வரமருள வேண்டும்இன்றே
வளமான நெல்லைநாதர் உடன்மேவி யினிதாடு
மகிழ்வான காந்திமதியே."

என்பது காந்திமதியம்மை பதிகத்தில் ஒருபாட்டு. திருச்செந்தூர் அரிகரசுப்பிரமணிய ஐயர், வீ. மகாதேவ ஐயர், சங்கரசுப்பா

சாத்திரிகள், ஊற்றுமலை தி. கந்தசாமிப் புலவர், திருநெல்வேலி ஆதிமூர்த்தியா பிள்ளை, காந்திமதிநாத பிள்ளை ஆகியோர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கசஉரு. முத்துக்குமாரசாமிக் கவிராசர்

இவர் ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்கு முன் திருநெல்வேலியில் இருந்தவர். அம்பலவாணக் கவிராசர் என்பவருடைய புதல்வர். இவரிடம் பல மாணவர்கள் கல்வி கற்றுச் சிறப்புற்றனர். இவர் திருப்புடை மருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, நாயன்மார் திருநட்சத்திர அந்தாதிக் கலித்துறை முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார். இவருக்கு அம்பலவாணக் கவிராசர், கவிராச நெல்லையப்ப பிள்ளை என்னும் இரண்டு புதல்வர்கள் இருந்தனர். சிராமலைக் கோவை யாசிரியர் இவரிடங் கல்வி கற்றுத் தேறியவர்.

## கசஉசு. முத்துக்குமாரசாமி முதலியார் (1902)

இவர் தொண்டைவளநாட்டில் விச்சூரில் தோன்றியவர். சங்க நூல்களையும் இலக்கண இலக்கியங்களையுங் கற்றுப் புலவராகத் திகழ்ந்ததோடு ஆங்கிலத்திலும் பி ஏ. வரை கற்றிருந்தார். அத்வைதக் கலையில் தேர்ச்சி பெற்றவராகலின், "அத்வைத சண்டமாருதம்" என்னுஞ் சிறப்புப் பெயரும் இவரை அணைந்து நின்றது. இவர் 'இரத்தின மாலிகை' என்னும் உரைநடை நூல் முதலியவைகளை எழுதியுள்ளார். இவர் செய்யுள் நூல் எதுவுஞ் செய்ததாகக் காணப்படவில்லை.

## கசஉஎ. முத்துக்குமார தேசிகர் (நாகை)

இவர் 'செங்குந்தர் கலித்துறை மாலை' என்னும் நூலைப் பாடியிருக்கிறார். நூல் அழகிய நடையில் அமைந்துள்ளது. செங்குந்த மரபினர் சிறப்புக்களும் பேராண்மைகளும் சொல்லப்படுகின்றன. ஈட்டி யெழுபது முதலிய நூல்களை இம் மரபினர் பெற்ற வரலாறுகளுங் கூறப்படுகின்றன.

"சூறு பரணர் நவவீரர் தங்குல நாகரிகர்
மாறு பரணர் மதிக்குந் தயாளர் மகேந்திரத்தில்
தாறு பதிகழற் றேதுது சென்றவர் சண்முகன்றன்
சேறு பதிகளுஞ் சேனையு மானவர் செங்குந்தரே."

என்பது மாலையில் இருபத்தேழாவது பாடல்.

## கசஉஅ. முத்துக்குமாரத் தேவர்
### (19 - நூ.)

இவர் சிவகங்கை நாட்டில் புலிக்குளம் பெருநிலக் கிழாராக இருந்தவர். கல்வியை நன்கு கற்று உயரிய புலமையடைந்து திகழ்ந்தார். திரிபு, யமகம் முதலிய பாக்களைப் பாடுவதில் வல்லவர். ஆயினும் பாடிய பாடல்களை யெல்லாம் தனிப் பாக்களாகப் பாடினாரே யன்றி நூலாக ஏதுஞ் செய்திலர். இவர் கஅகூ ஆம் ஆண்டிற் காலஞ் சென்றார்.

இவர் எட்டையபுரம் இளவரசர்மீது பாடிய பாடல்களில் ஒன்று,

"வடவனலைப் பிழிந்துரசம் வடித்ததனுல்
செய்ததெனும் மதியம் வானில்
கடவனலைப் பயோததியும் தொனிகாட்டத்
துடிதுடிக்கும் துயர நீக்கக்
கடவனலை யாதபடி கனிக்கரசே
கற்பகதருவினுஞ் சேர்த்தி
தடவனலை என்றமரர் சாற்றுவெங்க
டேசரெட்ட சரச மாலே."

என்பது. இவர் ஊற்றுமலை இருதயாலய மருதப்பத் தேவர் மீதும் பல அரிய செய்யுட்கள் பாடியுள்ளார். அப் பாடல்கள் ஊற்றுமலைத் தனிப்பாடல் திரட்டிற் சேர்க்கப்பட்டுள்ளன.

## கசஉகூ. முத்துக்குமார பிள்ளை - தி
### (20 - நூ.)

சோழவளநாட்டில் திருக்குடந்தையில் இருந்தவர். பாடசாலை ஒன்றில் ஆசிரியராக அமர்ந்திருந்த இவர் சிறந்த புலமையும் பெற்று, 'அறஞ் செய விரும்பு' "ஆறுவது சினம்" முதலிய

ஔவையின் அறிவுரைகளை அமைத்து 'ஆத்திசூடி அந்தாதி' என்னும் நூலைப் பாடினர். புதுக்கோட்டை, வசிட்டேச பாரதி, குடந்தை நாகலிங்க தேசிகர், நடராச பிள்ளை, மாயூரம் அட்டாவதானம் சந்திரசேகர உபாத்தியாயர், பாளையங்கோட்டை சங்கர நாராயணபாரதி ஆகியோர் நூலுக்குச் சிறப்புப் பாடல் வழங்கியுள்ளனர்.

"அறம்வளர்க் குஞ்சிதக் காதிமுன் னுளில் அவனிமிசை
இரவலர் தங்களுக் கீந்து மகிழ்ந்து மிகத்தைவிட்டுப்
பரமதைச் சேர்ந்துஞ் சமாதியில் நின்றும் பரிசளித்தான்
விரைவினில் மெய்த்துணை யாகறஞ்செய்ய விரும்பிடுமே."

என்பது நூலில் முதற் பாட்டு.

## கசுரு௦. முத்துக்குமாரப் புலவர் (க)

இவர் ஈழவள நாட்டிலே வட்டுக்கோட்டையைச் சேர்ந்த அராலியிற் பிறந்தவர். மிகு விரைவாகச் செய்யுள் பாடுந்திறம் அமையப் பெற்றவர். ஒருவர் ஒரு செய்யுள் இயற்ற வேண்டுமென்று கேட்ட அளவில் பழம் பாடலைப் பாடுவதைப் போல் விரைவாகப் பாடக்கூடிய ஆற்றல் அமையப் பெற்றவர்.

இவர் பள்ளிக்கூடம் ஒன்று ஏற்படுத்தி மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், நயினுத்தீவு நாகம்மாள் பதிகம், அளவெட்டிவு ஐயனர் குறவஞ்சி, தேவசகாய நாடகம், சீமந்தனி நாடகம், பதுமாபதி நாடகம் என்பன. இவைகளையன்றித் தனிப் பாக்களும் பல பாடியிருக்கிறார். இவர் ஒரு சமயம் உறுப்புக்களைக் குறித்து வருணனையாகப் பாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது இவருடைய மனைவி தன் கழுத்திலே உட்கட்டு என்னும் அணிகலன் பூண்டவளாய் இவருக்கு எதிரே வந்தாள். அப்பொழுது இவர் "கழுத்துட்கட்டு" என்று பாடினர். அதனுல் அவளுக்குக் கழுத்திலே கட்டி யொன்று கட்டிற்று. அவளுக்கு அதுவே நோயாக அவள் மாண்டுபோனுள். இதனுல் இவருடைய வாக்குப் பலிதவாக்கு என்பதும் அறியப்படும். இவர் நயினுத்தீவு நாகம்மாள் பேரில் பாடிய பதிகத்தில் ஒருபாடலை அடிற் காண்க.

" ஆரணத் துபநிடத அக்கரத் தொனியாகி
ஆகாச வட்ட மாகி
அறுகோண முக்கோணம் இருகோணம் நாற்கோணம்
ஆகிநிறம் ஐந்து மாகிக்
காரணத் துருவாகி யருவாகி யாவுமாய்க்
காக்குமுன் பெருமை எளிதோ
கருணைப்பிர வாகமாம் ஆநந்த வெள்ளங்
கசிந்தூறு பேரா ழியே
ஏரணத் திடமருத வேலிசூழ் நயினைநகர்
எனும்பதி சிறந்து மேவும்
யாமள சௌந்தரி சாமள சொரூபியே
ராசபர மேசு வரியே
நாரணற் கொருசகோ தரியென்ன வந்தருளும்
நாக பூரணி நாரணி
நாகமணி யும்பரமர் பாகமுறும் ஏகசிவ
நாகேசு வரி யம்மையே."

இவர் ௧௮௨௭ ஆம் ஆண்டில் அராலியில் காலமானர்.

## ௧௪௩௧. முத்துக்குமாரப் புலவர் (௨)
## (19 - நூ.)

இவர் ஈழவள நாட்டிலே உடுவிற் கோயிற்பற்றைச் சேர்ந்த சுன்னகக் குறிச்சியில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் அம்பலவாணர். இவர் கிறித்து சமயத்தைக் கண்டிப்ப தான ஞானக்கும்மி, சிதம்பரப் பதிகம், சகத்திரானிக நாடகம் முதலிய நூல்களை இயற்றியதோடு தனிப்பாடல்கள் பலவற்றை யும் பாடினர். பாடல்கள் யாவும் செம்பாகமாக அமைந்தவை. இவருடைய தனிப்பாடல்கள் வேடிக்கையுடையவைகளாகவும் சிலேடைப் பொருள்கள் அமைந்தவைகளாகவும் விளங்கும்.

" பன்னி ரண்டு கரகந் தனைஎட்டுப்
பானை யைத்துண் டதரக் குயவனை
முன்னி ரண்டு குடங்கையி லேந்திமை
முட்டி முட்டிமக் லைய்மாவைச் சாடியைப்
பொன்னி ரண்டு பெறும்பெருஞ் செட்டியைப்
போற்று வீர்புல வீர்சக ரந்தனை
முன்னர் வைத்த கலைசம்பத் தும்பெற
லாகு மிப்பெருந் தாரணி தன்னிலே."

என்பது இவருடைய தனிப்பாடல்களிலே ஒன்று.

## ௧௪௩௨. முத்துக்குமாரர்

ஈழவளநாட்டில் வட்டுக்கோட்டையில் வேளாண் குலத்திற் பிறந்தவர். இவர் காலம் ஏறக்குறைய நூற்றெழுபது ஆண்டுகட்கு முன்னர் என்ப. சேனாதிராய முதலியார் என்பவருக்குச் சில நூல்களைப் பாடஞ் சொன்னவர். இவர் இயற்றிய நூல்கள் கஞ்சன் காவியம், வலைவீசு புராணம் என்பன.

"வெயிலே றிரத்ந மகுடம் புனைந்து
வியன் மிக்க சென்னியிலகை
மயிலேறி யன்பர் இதயத் துலாவி
வருபத்ம பாதமறவேன்
குயிலேறு போகி தருமாதி னோடு
குறமாது தோயும்புயத்
தயிலேறு செங்கை முருகா முகுந்தன்
மருகா அரன்புதல்வனே."

என்பது கஞ்சன் காவியத்தில் ஒரு பாட்டு.

## ௧௪௩௩. முத்துக்குமாரர் சிதம்பரப்பிள்ளை (1850)

இவர் ஈழவள நாட்டில் வட்டுக்கோட்டையில் வேளாள மரபில் தோன்றியவர். வட்டுக்கோட்டைச் சாத்திர சாலையில் ஆசிரியராக இருந்தவர். தமிழினும் ஆங்கிலத்தினும் உள்ள நியாய நெறிகளின் அரிய விதிகளை விளக்குவதாய "நியாய இலக்கணம்" என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். "சபை வந்தனம்" என்னுந் தலைப்பின் கீழ்ப் பின்வருஞ் செய்யுள் காணப்படுகின்றது.

"உலகினிடை சாதிமணி யொடுபோலி மணிபுரையும்
உலவுவை தர்ப்பநடையி
னொடுகவுட நடைசிவணு முரைவாச்சி யத்தொடுவி
யங்கிய முறழ்ந்துமருவும்
இலகியசு யஞ்சமய மோடிதர சமயங்க
ளிகல்செயு மிலக்கணமுடன்
இலக்கணை பயின்றெழுகு மெல்லினுட னல்லுவை
மிவையெய்க னும்வழக்கே

அலகிறா லக்கரப தார்த்தங்கள் துறைகண்
டலங்கார சந்தரசமே
அனைத்துந் தெளிந்துணரு மறிஞர்நா லொடுவறிய
நூன்விரவி னன்யமன்றே
விலகிச் சொலிக்குநவ ரத்னநிகர் வித்வசனர்
மெய்மகிழ் வொடுந்தழுவவே
வெற்றுரை யெந் நூலவாய் விட்டனனி வாயெச்சில்
தேனென்று மெச்சுமுலகே.''

இந்நூல் ௧௮௯௦ ஆம் ஆண்டில் அச்சியற்றப் பெற்றுள்ளது.

## ௧௪௱௨௪. முத்துச்சாமி ஐயர். சி. எஸ்
(20 - நூ.)

சோழவள நாட்டில் நாகபட்டினத்தில் வெஸ்லியன் மிஷன் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர். அரித்துவார மங்கலம் வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார் என்பவர் மகளுடைய திருமணத்தின்போது வாழ்த்துக்கவி முதலியன இயற்றியதன்றி நாகைப்பதிகம் முதலிய சிறுநூல்களும் பாடியுள்ளார். திருமணவாழ்த்துச் செய்யுள்களுள் ஒன்றை அடியிற் காண்க:

'' இந்திரனும் புலோமசையும் எழின்மாலும்
இலக்குமியும் ஏற்றம் மிக்க
சந்திரனும் உரோகணியும் தாமென்னச்
சந்ததமும் சகத்தில் இந்தச்
சுந்தரனும் சுந்தரியும் சுகக்கடலின்
திளைத்தென்றும் சுகுண மான
மைந்தர்களைப் பெற்றெடுத்து மலர்மணம்போல்
நீடூழி வாழ்க மாதோ.''

## ௧௪௱௨௫. முத்துச்சாமி ஐயர் (சு)
(1889)

சோழவள நாட்டில் கும்பகோணம் என வழங்கும் திருக்குடந்தையில் சுப்பிரமணிய ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். திருமுல்லைவாயிலில் பள்ளிக்கூட ஆசிரியராக விளங்கினர். இவர் ''திருமுல்லைவாயில் நான்மணி மாலை''

என்னும் நூலைப் பாடியிருக்கிறார். நூலைப் பாராட்டித் தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், வையை இராமசாமி ஐயர், சொன்னநாதபுரம் சதாவதானம் இராமநாதச் செட்டியார், தஞ்சை ந. வீரபத்திர பிள்ளை, மாயூரம் அட்டாவதானம் சந்திர சேகரக் கவிராயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" மணிமா தவன்மலரோன் வாழ்த்துமொரு பங்கில்
அணிமா தவன்முல்லை அண்டிப்—பணிமாண்பன்
பாமடியார்க் குள்ளன் பமைப்போ ரினியொருமா
தாமடியிற் சேற்றமுறு நார்."

என்பது நூலிற் பதினேழாவது பாட்டு.

## ௧௪௩௬. முத்துச்சாமிக் கவிராயர்
(20 - நூ.)

இவர் உடுமலைப்பேட்டை என்னும் ஊரினர். இராமாயணம் ஏழுகாண்டங்களையும் நாடகமாக இயற்றியிருக்கிறார்.

கைகேசிக்குத் தசரத மன்னன் வரங்கொடுத்ததைக் குறித்துப் பாடியது:

" இத்தனை அலங்கோ லங்கள் இதற்குத்தா னேகை கேசி
சித்திர மயிலே உன்றன் சித்தம்போல் வரம்இ ரண்டும்
புத்திரன் இராமன் ஆணை புகழ்பெற ஈவேன் ஈவேன்
சத்தியம் தவற மாட்டேன் தடையின்றிப் பெற்றுக் கொள்ளே."

## ௧௪௩௭. முத்துச்சாமிச் செட்டியார்
(19 - நூ.)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் உடுமலைப் பேட்டையில் இருந்தவர். கல்வியறிவிற் சிறந்து கவிபாடும் நிலைமை பெற்றிருந்தவர். அந்நாளில் உடுமலைப்பேட்டையில் மாவட்ட முன்சிபு கோர்ட்டு வழக்கறிஞராக இருந்த வி. முனி யப்ப பிள்ளை என்பவர் பேரில் இவர் பல செய்யுட்கள் இயற்றி யுள்ளார்.

" வருபக்கு வமகட்கு நினதிட்ட சுகமற்ற
வருமத்தில் மததுட்டன்மா
மலரைத்த துசிவிட்டு முலைவட்ட மிசைதைக்க
வசனித்தொர் குறிவைக்கவே

வீரகக்க வலைமுற்றி உடலிற்ப சலைபெற்று
விசனித்து மெலிவுற்றுமேன்
விதுவெப்ப மெனவுட்டு டிதுடித்து மதுரத்தை
விழையச்சொல் குயிலைப்பொருன்
தருணப்பெண் இவளைக்கண் மலர்மெத்தை தனில்வைத்து
தரமெட்டி முகமொற்றியே
தழுவிக்கொ டெழில்மூத்த மிணிதிட்டு ளொருமித்த
சரசத்தொ ழினடத்துவாய்
முருகுற்ற குவளைத்த ளணியற்கொள் புயசத்ய
முகதுத்ய சிவபக்தனே
முமதத்த கயமுற்ற பிரபுத்வ பிரசித்த
முனியப்ப நிடசித்தனே.”

இது முனியப்ப பிள்ளை மீது இயற்றிய பாடல்களில் ஒன்று.

## ௧௱௫௰௮. முத்துச்சாமிப் பிள்ளை (புதுவை)

இவர் பாண்டிச்சேரியில் வேளாளர் மரபிற் பிறந்தார். மிகு இளம் பருவத்திலேயே ஊக்கத்துடன் கல்வி கற்றார். தமிழில் செய்யுள் இயற்றத்தக்க புலமையடைந்தார். வடமொழி, வடுகு, இலத்தின், ஆங்கிலம் என்னும் பல மொழிகளையும் நன்கு பயின்றார். சென்னைக் கோட்டையில் ஓர் அலுவலில் அமர்ந்தார். இவருடைய பன்மொழிப் புலமையை உணர்ந்த அரசினர் தமிழாசிரியராகவும் மொழிபெயர்ப்பாளராகவும் இவரை ஏற்படுத்தினர். ௧௮௧௧ ஆம் ஆண்டில் தமிழ்நாட்டைச் சுற்றிப் பார்த்து நல்ல தமிழ் நூல்கள் பலவற்றைத் தொகுத்தார். வீரமாமுனிவருடைய வரலாற்றை ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதி வெளிப்படுத்தச் செய்தார். இவர் வேளாளரேனும் கிறித்தவ சமயத்தைச் சேர்ந்தவர். அக்காலத்தில் சென்னையில் புரசபாக்கத்தில் இருந்த பொன்னம்பலக் கவிராயர் என்னும் சந்தக் கவிஞர் எழுதிய கிறித்துமதக் கண்டன நூல் ஒன்றுக்கு மறுப்பாகத் திக்காரம் என்னும் பெயரோடு உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக நூல் ஒன்று இயற்றினார். இதன் பொருட்டுப் பாதிரிமார்கள் பொன்னுடை போர்த்தி இவருக்குச் சிறப்புக்கள் பல செய்தனர். மேற்கூறிய இருநூல்களையன்றி வேறு பல நூல்களையும் இவர் இயற்றினார். ௧௮௪௦ ஆம் ஆண்டு புரட்டாசித் திங்கள் ௨௯ ஆம் நாள் இவர் காலமானார்.

## கசாடீக. முத்துச்சாமிப் பிள்ளை - மாயூரம் (1893)

இவர் பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்வி பயின்றவர். இவருடைய பெயர் மாயூரம் முத்துச்சாமிப் பிள்ளை என்று வழங்குகிறபடியால் இவருடைய ஊர் மாயூரம் என்பது பெறப்படும். இவர் "திருப்பனந்தாட் சிலேடை வெண்பா" என்னும் நூலைப் பாடியுள்ளார். மேற்படி நூலுக்குத் தருமபுர ஆதீனம் ஆறுமுக அடிகள், சண்முக அடிகள், திருப்பனந்தாள் காசிமடம் புலவர் சாமிமலை கனகசபைக் கவிராயர், கும்பகோணம் ஓகை-சண்முகம் பிள்ளை, திருக்கொள்ளம்பூதூர் சொக்கலிங்க தேசிகர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"மன்னுரஞ் சார்பொழிலும் மாதவத்தோர் வைகிடமும்
பன்னு சனஞ்சேர் பனைசையே—மென்னுன்கு
பாதமுனி வாழ்த்தநல பாதமருள் வான்சாமி
நாதமுனி வர்பிரான் நாடு."

என்பது சிலேடை வெண்பாவில் ஒரு பாட்டு.

தருமைச் சொக்கநாதர் மாலை முதலிய நூல்களும் இயற்றியுள்ளார். தருமைச் சொக்கநாதர் மாலையைப் பாராட்டித் தருமபுரம் ஆறுமுக சுவாமிகள், சண்முக சுவாமிகள், சாமிமலை கனகசபைக் கவிராயர், திருக்கொள்ளம்பூதூர் சொக்கலிங்க தேசிகர், கும்பகோணம் ஓகை சண்முகம் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"இரவினிற் குமர குருபரன் யோகில்
இருந்திடு போதடைந் தவனைத்
தரமொடு மழைத்துச் சென்றுகே தாரத்
தலத்தினில் விடுத்தனை அதனுன்
மரமுதல் நீக்கிக் குறிதனைக் கண்டு
மகிழ்ந்துமோர் தனிதினக் கென்றுஞ்
சுரமலி நகரில் நிறுவினன் தருமைச்
சொக்கநா தப்பர சிவமே."

என்பது தருமைச் சொக்கநாதர் மாலையில் ஒரு பாட்டு.

## கசசO. முத்துச்சாமிப் பிள்ளை
(18 - நூ.)

இவர் வடமொழியையுந் தென்மொழியையும் நன்கு கற்றுத் தேறியவர். நாநார்த்த தீபிகை என்னும் பெயருடைய நிகண்டு நூல் ஒன்றை இவர் பாடியிருக்கிறார். நூல் ஆயிரத்து நூற்றிரண்டு பாடல்களையும் ஐயாயிரத்து நானூற்றைம்பத்து இரண்டு சொற்களையுங் கொண்டது. இந்நூலுக்கு இவருடைய மருகரான சாமிநாத பிள்ளை என்பவர் சிறப்புப்பாயிரம் கூறியுள்ளார். சென்னைப் பல்கலைக் கழகத்தினர் இந் நூலை அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றனர்.

## கசசக. முத்துச்சாமிப் பிள்ளை
(19 - நூ )

இவருடைய பெயர் தி. தி. அப்பாவுப் பிள்ளை எனவும் வழங்கியது. இவர் கும்பகோணம் சரவணமூர்த்தி சுவாமிகள் என்பவரை ஆசிரியராகக்கொண்டு கல்வி கற்றார். சோழவளநாட்டினராகிய இவர் பிறகு சென்னை, மைசூர் முதலிய இடங்களில் வாழ்ந்திருந்தார் என்று தெரிகிறது. "நூதனபவழேந்திரி சபா' என்னும் நாடக நூல் ஒன்றை இயற்றியிருக்கிறார்.

"வேசையர்க்குப் பணந்தானே குலமுங் கோலம்
வேந்தரையும் வெறுத்திடுவர் விருப்பம் இன்றி
வேசையர்க்குப் பணந்தானே புருட னாகும்
வேண்டாரே வலியவரில் மதனைக் கூட
வேசையர்க்குப் பணந்தானே குருவுந் தெய்வம்
வேதியரும் ஈசனுமோர் பொருள தாமோ
வேசையர்க்குப் பணந்தானே தாயுந் தந்தை
விருப்பமுண்டோ மற்றவர்மேல் யாவ ரேனும்."

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## கசசஉ. முத்துச்சாமிப் புலவர் (பாண்டிநாடு)
(19 - நூ.)

பாண்டிவளநாட்டில் மலையடிக் குறிச்சி என்னும் ஊரில் இருந்தவர். பின்னாளில் இவர் திருநெல்வேலியில் வாழ்ந்திரு

தார் என்று தெரிகிறது. இவர் ஊற்றுமலை இருதயாலய மருதப்ப தேவர்மீது பல பாடல்கள் பாடி நன்கொடை பெற்றுள்ளார். இவர் அவர் மீது பாடிய பாடல்களில் ஒன்று,

"பொருப்பவள வாயமுலை புடைப்ப நின்மேல்
மாலானுள் புனிதக் கஞ்சத்
திருப்பவள வாயவெழி லிவள் போற்கண்
டறியேனி இணங்கிச் சேர்மா
தருப்பவள வாயமுத கவித்திறத்தோர்
மனமகிழத் தருப்போ னக்கும்
விருப்பவள வாயமகந் திரிபுதெனி
மருதப்ப விவேக மாலே."

என்பதாகும்.

## கசசரு. முத்துச்சாமிப் புலவர் (தொண்டைநாடு) (1892)

தொண்டைவளநாட்டில் இராயவேலூரில் சேனை வேளாளர் குலத்திலே தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் ஐயாச்சாமி முதலியார். முத்துச்சாமிப் புலவர் 'வீரட்டேசுரர் பாமாலை' என்னும் நூலைப் பாடியிருக்கிறார். அம் மாலை நூற்று நான்கு செய்யுட்களை உடையது.

"கல்வியில் கொடிய கசடனேன் நின்னைக்
கர்த்தனே என்றனு தினமும்
சொல்லியே துதித்துத் தொண்டனு வதற்குச்
சோதியே வரம்அருள் புரிவாய்
இல்லையே யானால் இணைமலர்ப் பதத்தை
என்இதயத்தினிற் பிணிப்பேன்
தில்லையில் நடனஞ் செய்திடும் ஈசா
சிவசிவா வீரட்டே சுரனே."

என்பது மாலையில் ஒரு பாட்டு. நூலைப் பாராட்டிச் சென்னை இராயபுரம் வீரபத்திர முதலியார், பொய்கைப் பாக்கம் கரிவரதப் பிள்ளை, அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், சங்கீத மங்கலம் சோமலிங்கையர், இராயவேலூர் ப. திருவேங் கடப் பிள்ளை, வேலூர் வே. அருணாசல முதலியார், பொன்னேரி துரைசாமி முதலியார், திருவண்ணாமலை வாகீசவர தேசிகர்,

வேலூர் சென்ன பசுவையர், வேலூர் பாச்சா முதலியார், பொய்கைப் பாக்கம் இரங்கசாமிப் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"அந்துவா நிதத்தன் ஆகியநம் பசுபதியாம்
அவனருளால் அவன்றன் போற்றி
முத்துசா மிப்புலவன் தற்போதம் முழுதொழித்து
முதுசாலி நீடு வயலில்
நத்துலாந் திருவதிகை வீரட்டே சுரர்மாலை
நல்விருந்தப் பாவாற் சொற்றன்
வித்துவான் பத்திமான் யாவருமே கண்ணுற்று
வியந்திட்டார் நயந்திட் டாரால்."

என்பது பூவை கலியாணசுந்தர முதலியாருடைய பாட்டு.

## கசசச. முத்துச்சாமிப் புலவர் - சி
(19 - நூ.)

பாண்டிவளநாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்திலே இராய கிரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவரும் சிவகிரிச் சமத் தானப் புலவராக விளங்கியிருந்தவருமாகிய அருணாசலப் புலவர் என்பவருக்கு இவர் மகனாராகத் தோன்றியவர். தம் தந்தையா ரிடத்திலேயே கல்வியை நன்கு கற்றுத் தேறிய இவர் பல பெரு நிலக்கிழார்கள் மீது செய்யுட்கள் இயற்றிச் சென்று பரிசுகள் பெற்று இல்லற வாழ்க்கையை இனிது நடத்திக்கொண்டிருந்தார். அப் பரமேசர் தலபுராணம் என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரச் செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

"பொருத்திவரை பலபிரதிக் கிணங்க நல்லோர்
அருள் புனைந்து பொருளுஞ் சொல்லும்
திருத்திவரை யறைதெரிந்தச் சியற்றினன்தென்
சேறைநகர்ச் சிறந்த நூலுட்
கருத்திவரை வகையியலும் இலக்கியமுங்
கற்றறிந்தோன் கருணை ஞான
விருத்திவரை வேலவரைப் பணிந்தேத்தும்
கணபதிப்பா வேந்தர் வேந்தே."

இவர் செய்யுள் நடை உரைநடைகளில் தனி நூல் எதுவுஞ் செய்ததாகத் தெரியவில்லை.

## கசசரு. முத்துச்சாமி முதலியார் - பெ
## (1882)

தொண்டைவள நாட்டிலே சென்னைமா நகரில் உள்ள ஆலந்தூர் பெரியதம்பி முதலியார் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். இவர், "கணபதிச்சந்த விருத்தம்," "ஆதிபுரீசர் பதிகம்," "திருவொற்றியூர்த் தியாகேசர் பதிகம்," "திருவொற்றியூர் வடிவுடையம்மன் பதிகம்," "வடிவம்மை பதிகம்," "திருவொற்றியூர்த் திரிபுரசுந்தரி மாலை" என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார். இந் நூல்கள் சேற்றூர் அருணாசலக் கவிராயர் அவர்களால் பார்வையிடப்பட்டு வெளி வந்துள்ளன.

"சம்போசங் கரகங்கா தரவெழிலார் ஒற்றித்
தலத்திலகுந் தனிமுதலே தற்பரகற் பகமே
நம்பாபொன் னம்பலத்தே ஞானநடம் புரியும்
நாயகநின் றிருப்புகழை நாயடியே னவின்றுன்
அம்போ ருகத்தடியை யகம்நெகவேத் திடுவேன்
ஆண்டவனே யருள்புரிவாய் ஆதிபரஞ் சோதி
எம்பெருமா னேஒருநாள் இருடிகளுக் கருளும்
என்குருவே என்னிறையே யெந்தைபெரு வாழ்வே."

என்பது ஆதிபுரீசர் பதிகத்தில் ஒரு பாட்டு.

## கசசகூ. முத்துச்சாமி முதலியார் – எ. நா
## (19 - நூ.)

இவருடைய ஊர் திருவண்ணாமலை சென்னையை அடைந்து அங்குத் தங்கியிருந்தார். இசைத்தமிழ் நூல்களிலும் இசைப் பயிற்சியிலும் வல்லவர். சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் சைவ பசனைச் சபை யொன்றில் இசையாசிரியராக அமர்ந்திருந் தார். திருஞானசம்பந்தருடைய வரலாற்றை இசைப்பாடல்க ளாக இயற்றியுள்ளார்.

"திருவாய் மலரத் திருமணம் தரிசித்தோர்
செனன சாகரந்தனைக் கடந்தார்—யாரும்
திருஞான சம்பந்தர் தம்மில்லாள் கைப்பற்றிச்
சிவசா யுச்சிய பதமடைந்தார்."

என்பது பாடலில் ஒரு பகுதி.

## கசசஎ. முத்துச்சாமி முனிவர்
(19 - நூ.)

இவர் திரிசிரபுரத்தில் ஏறக்குறைய நூறு யாண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தார். இவருடைய தந்தையார் பெயர் வீரபத்திர பிள்ளை. இவர் விஞ்ஞான தீபம், ஆனந்தக் கொம்மி என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார். நூலினைப் பாராட்டி, மதுரை நற்கம்பர், சென்னை, பு. முருகேச முதலியார், செய்யப்ப முதலியார், ப. அப்பாத்துரைச் செட்டியார் முதலியோர் சார்த்துப் பாடல்கள் பாடியுள்ளனர். நூல் வேதாந்தக் கொள்கை அமைந்தது.

நூலின் பாடலில் ஒன்று

"கண்டாயோ இறந்தபின்பு பலனுண் டென்று
கருத்துண்டே டல் விரித்ததனைக் காட்டு வாய்நீ
பண்டான ஆதிபரம் பொருளீ தென்று
பகுத்தறியுங் கருத்திருந்தால் பலவா றேது
உண்டான திதுவென்றே அறிந்து கொண்டே
உலகத்தோ டொத்திருந்திட் டுறவு கூடிக்
கொண்டாடித் திரிந்தாலும் உனக்கி டுண்டோ
குறிப்பறிந்து குண்டலியைக் கூடி வாழே."

## கசசஅ. முத்துச்சுப்பபாரதி-பு. வ
(1915)

அரிகேச நல்லூர் என்னும் ஊரில் இருந்தவர். கந்தசட்டிக் காலோற்சவ விலாசம், அரிகைச் சண்முகன் பதிகம் முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

"பொன்பதி வுறுங்கதிர்கொள் நவரத்ன மௌலிகள்
பொலிவுறுமொ ராறுமுகமும்
பொழிகின்ற கருணை நிறை பனிரண்டு விழிகளும்
புன்சிரிப் புடையவாயும்
மன்பெரிய முந்நான்கு திண்புயங் களும்அபய
வரமேவு கர மிராறும்
வாழ்த்தும்அடி யார்களின் அரிகடமை மாய்த்தி
வலந்தாங்கி வளர்வைவேலும்

இன்பமுற் றெழின்மேவு தேவியர்கள் மனமகிழ்ந்
திருபா லிலங்குமழகும்
ஏர்கொண்ட இனிதருட் பார்வையும் பிரசன்னம்
ஏற்றசை தன்யம்ஓங்க
அன்புநிறை யும்புகழ் பொருந்தரிகை யம்பதியில்
அணிபெறு மடாலயத்தில்
அற்புதப் பொற்படத் தமர்வரத சண்முகத்
தையனே அருள்செய்வையே.''

என்பது அரிகைச் சண்முகன் பதிகம் என்னும் நூலில் ஒரு பாட்டு.

## கசசக. முத்துச் சுப்பையர்

திருநெல்வேலி மாவட்டத்திலே புனல் வேலி என்னும் ஊரிலே இவர் வாழ்ந்திருந்து கஅஅ௲ ஆம் ஆண்டில் காலமானார். வேதாந்த நாடகம் என்னும் அரிய நூல் ஒன்று இவராற் செய்யப் பட்டது. இவருடைய பாடல்களில் உண்மைக் கருத்து நிறைந்து விளங்கும். பலவாறு பசப்பிக் கடன் வாங்கிக் கொண்டு பிறகு தில்லுமல்லுச் செய்யுங் கிழ்மக்களைக் குறித்து இவர்,

''வில்லாய் வளைந்து நிசங்காட்டி வாங்குவர் மீளவந்தே
அல்லும் பகலும் கடன்கொடுத் தோர்கள் அலைந்திடினும்
வல்லங்கம் பேசுவர் இல்லையென் றேதுவர் வாளுருவிக்
கொல்லவும் பார்ப்பர் கலிகாலத் தேகடன் கொள்ளிகளே.''

என்றும், மற்றும் கலிகால இயல்பைக் குறித்து,

''அள்ளித் திரவியம் ஈந்தாலும் பொய்யுரை யாதவரைக்
கள்ள ரென்றேதுங் கலியுகத் தேகடைந் தேயெடுத்துத்
தெள்ளமு தொக்க தொடிக்கா யிரப்பொய் செலுத்துமதி
உள்ளவ ரேபெரி யோர்புவி யோர்கட்கு உவந்தவரே.''

''அண்டின பேரைக் கெடுப்போரும் ஒன்றுபத் தாமுடித்து
குண்டுணி சொல்லுங் குடோரிக ளுங்கொலை யேநிதஞ்செய்
வண்டரைச் சேர்த்தின்ப சல்லாபம் பேசு மறையவரும்
சண்டிப் பயல்களு மேகலி காலத்தில் தாட்டிகரே.''

''மேட்டைத் தணித்துக் கடுந்தாவை விண்வரை மேவவைத்துக்
காட்டைப் புறஞ்செய்து காடாக்கி யூரைக் கருதிமர
மூட்டைப் பிடுங்கித் தலைகிழா நட்டு முளைக்கவைக்கும்
சேட்டைக்கென் றேகலி யேயுனை வேதன் சிருட்டித்ததே.''

என்றும் பாடியுள்ளார். இப் பாடல்களின் உண்மைக் கருத்து எல்லோராலும் நன்கு பாராட்டக் கூடியது.

## ௧௪௫௦. முத்துத்தம்பிப் பிள்ளை - ஆ
(1883)

இவர் ஈழவளநாட்டில் யாழ்ப்பாணத்து மானிப்பாய் ஊரினர். பூ. முருகேச பிள்ளை என்பவரிடம் கல்வி கற்றுப் புலமை பெற்றார். "அபிதானகோசம்" என்னும் அகரவரிசை நூல் முதலியவைகளை இவர் எழுதியுள்ளார். முருகேச பிள்ளை என்பவர் இயற்றிய குடந்தை வெண்பா என்னும் நூலுக்கு இவர் பாடிய சார்த்துக்கவி,

"தக்கபுக ழேந்தி தனக்குப் புகழேந்தி
மிக்கவெண்பா மிக்கபுகழ் மேவுமோ—அக்கால்
குடந்தைவெண்பாச் சுன்னைநகர்க் கோமுரு கேச
மடங்கல் உரைத்திருந்தால் வந்து."

என்பது.

## ௧௪௫௧. முத்துநயினுத்தை முதலியார்
(19 - நா.)

இவர் கொங்குவளநாட்டிலே கோயம்புத்தூருக்குத் தெற்கே பத்துக்கல் தொலைவில் உள்ள ஓராட்டுக்குப்பைச்செட்டிப் பாளையம் என்னும் ஊரில் ஏறக்குறைய நூற்று முப்பது யாண்டு கட்கு முன்பிருந்தவர். இவர் பேரூர்க்கோவை என்னும் நூலைப் பாடியுள்ளார். மேற்படி கோவை முந்நூற்றறுபது செய்யுட்களை யுடையது. பேரையூரில் திருக்கோயில் கொண்டுள்ள பட்டீசப் பெருமானைப்பற்றியது. இச் செய்தி,

"அகப்பொருட் கோவைத் துறையொரு நானூற்
றவற்றுடனத்தத்தி னிடையே
அருளினுற் செறித்த துறையுமெண் பதினென்
பானவை அகத்தினில் உணர்ந்து
புகப்பெரு மறிஞர் நெறிபெறு முறையே
புந்தியைச் செலுத்தியன் பதனுல்
புவிகொளப் பேரைப் பதியர்பட் டீசர்
பொலியருட் கமலத்தா ளிணைமேல்

"இகத்தினிற் புனைந்த தொடையல்நா னூறோ
டெண்பதி னென்பது மேலும்
ஒருதுறைக் கிரண்டாம் செய்யுள்பன் னொன்றாய்
இசைந்தவைந் நூறெனும் கவியைச்
செகத்தினோ ரசைமுந் நூறொரு பானுன்
காய்திரை நாற்றெண்பத் தாறாய்ச்
செப்பினன் முத்து நயினுத்தை வேளான்
செந்தமிழ் மாலையா திபனே."

என்னுஞ் செய்யுளாற் பெறப்படுகிறது.

"திருத்தங் கியதலம் வாழோர்தொழுந்தலந் தேவியுடன்
நிருத்த மிடுந்தலம் பேரைப்பட் டீசர் நெடுங்கிரியில்
தருத்தங் கியபொழில் சூழ்சுனை யாடித் தகைத்த தன்றோ
வருத்த மெனதுடற் கானதை யோர்ந்திலை வாணுதலே."

என்பது கோவையில் எழுபத்திரண்டாவது செய்யுள். இக் கோவையிற் பல செய்யுட்கள் மறைந்து விட்டனபோலும். மற்றும் இவரால் பச்சைநாயகியம்மன் பிள்ளைத்தமிழ் என்னும் நூலும் இயற்றப்பட்டிருக்கிறது.

## கசரு௨. முத்துநாயகப் புலவர்

இவர் நாட்டரசன் கோட்டையில் எழுந்தருளியுள்ள கண்ணுடையம்மை மீது, 'கண்ணுடையம்மை பள்ளு' என்னும் நூல் இயற்றியுள்ளார்.

"வாச மானதென்பாண்டிநன் னாடு
மதுரை நாட்டில் வளருமிந் நாடு
காசி னிக்குட் கதிர்க்கின்ற நாடு
கம்பர் வந்து துதிக்கின்ற நாடு
பூசு ரர்க்கன்ன தானஞ்செய் நாடு
புலவர் மேல்அபி மானஞ்செய் நாடு
ராச லட்சுமி கண்ணுடை யாளருள்
நல்கு நாட்டர சன்கோட்டை நாடே."

என்பது அந்நூலில் ஒரு பாட்டு.

## கசருஈ. முத்துநாயுடு - வே
## (19 - நூ.)

கோயமுத்தூரைச் சார்ந்த பூளைமேட்டில் வேலப்ப நாயுடு என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். வைணவசமயத்

தினர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றவர். மகா பாகவதம் முதலிய நூல்களைப் பரிசோதித்து வெளியிட்டிருக்கிறார். செய்யுளியற்றுவதில் வல்லவராகிய இவர் பாகவத புராணப் படலங்களின் பெயரைச் செய்யுளாகப் பாடியுள்ளார்.

"பாண்டவர்கள் குருவரபு தக்கன் வேள்வி
பற்குனனு மனைகைசித்து பதிகம் பங்கம்
பாண்டவர்க ளக்யாத முத்தி யோகம்
பாரதமும் பலராமன் யாத்திரை போரின்
மாண்டகூயோ தனன்பரிச் சித்து சென்மம்
ம்திமிகுரு சேலன்மீது கேயும்லை தீகம்
வேண்டுபதே சம்மைகுண் டம்மார்க் கண்டன்
விருககூரன் பிருகுபரிச் சித்து மோட்சம்."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## கசருச. முத்துப் பிள்ளை - மு
(20 – நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் பரிமணங்குடி என்னும் ஊரில் இருந்தவர். முருகக் கடவுளிடத்து மெய்யன்பு பூண்டு ஒழுகியவர். இவர் சண்முகநாதர் பதிகம், பாலசுப்பிரமணியர் பதிகம், தெண்டாயுதபாணி பதிகம் முதலிய நூல்கள் இயற்றியுள்ளார்.

"கஞ்சமலை ராதனன் கண்ணன்முதல் விண்ணோர்கள்
கனைகளு யுற்றதுணையே
கறைமிடற் றிறையிதய குகபரப் பிரமமே
கருணை நிதிக்கடவுளே
வெஞ்சுரம கன்றிடச் சைவவான் பயிரோங்கி
விளையவருள் மழைபெய்முகிலே
விறல்வாகு விற்குநிறை தற்பரவ கண்டித
விபத்துவம் உணர்த்துகுருவே
சஞ்சலம றத்தனை நினைப்பவர் மனத்திருள்
தனைத்துமித் திடுமிரவியே
சகலபுவ னுதார சத்தியாச் சண்முகத்
தாங்குசிற் சத்திசேயே
அஞ்சலென வந்தெனது சிந்தாகுலத்திமிரம்
அறநீக்கி யாட்கொள் ளுவாய்
அருணகிரி துதிசெய்பரி மணநகரில் உறைகௌரி
அருள்பரம குருநாதனே."

என்பது இவர் இயற்றிய பரமகுருநாதன் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௪௫௫ முத்துப் பிள்ளை

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்குமுன் திரிசிரபுரத்தில் வாழ்ந்திருந்தவர். ஆங்கிலக் கல்வி கற்றுச் சேலம் அஞ்சலகத்தில் அலுவல் பார்த்ததன்றி இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். இவர் இயற்றியனவாக உயிர்வருக்க மாலை, பதிகம் என்னும் இரண்டு நூல்கள் வெளிவந்துள்ளன. உயிர்வருக்க மாலை பதிகம் இரண்டும் நீலகிரி மலையில் வில்லிங்டன் என்னுமிடத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய சுப்பிரமணியக் கடவுள் மேலன. உயிர்வருக்க மாலை உயிரெழுத்துக்கள் பன்னிரண்டையும் முன்னாகக் கொண்டு பாடப்பெற்றது.

" ஏலவார் கூந்தல் ஏழையர் மயக்கில்
இடர்ப்படும் ஏழையேன் தன்னைக்
காலனார் கொடுபோய்க் கொடியதீ நரகின்
கனற்றூறு முனமெனைக் கண்பார்
பாலன்றீ பால லோசனற் கெனினும்
பரிவுறுந் தந்தையெற் கன்றே
சாலவே துதித்தேன் பராமுகந் தவிர்ப்பாய்
சண்முகா சரவண பவனே."

என்பது உயிர்வருக்க மாலையில் ஒரு பாட்டு.

## ௧௪௫௬. முத்துமாணிக்கக் கவிராயர்
### (20 - நூ.)

இவர் சேதுவளநாட்டினர். இராமநாதபுரம் சமத்தானப் புலவராக இருந்த துவாத்ரிம் தசாவதானி சரவணப்பெருமாட் கவிராயருக்கு மகன். இவரும் கல்வி கற்றுச் சிறப்படைந்து மதுரகவி என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்று இராமநாதபுரச் சமத்தானப் புலவராக விளங்கியிருந்தார். சேதுபதி அரசர்மீதும் வேறு சிலர் மீதுந் தனிப் பாடல்கள் பாடியுள்ளார்

" சோணாட்டுங் கவிவிதும துரநாட்டும்
பொருள்காட்டுந் தூய பாண்டித்
தென்னாட்டும் பிறநாட்டுஞ் செவிநாட்டும்
படிநாட்டிச் செல்வ மோங்கும்

பொன்னாட்டுக் கிளையெனச்சொல் சயிப்பிநகர்ச்
சண்முகனம் புயந்தாள் மீது
கன்னாட்டச் சரமெனமுத் தயப்பாவ
லன்புநிகங் கழற் றானே."

என்பது இவர் முத்தைய பாவலர் என்பவருக்குக் கொடுத்த சாற்றுக் கவிகளிற் ஒன்று.

## கசடுஎ. முத்துமுகமதுப் புலவர்
### (19 - நூ.)

இவர் கட்டுமாவடி என்னும் ஊரில் இருந்தவர். "காட்டு பாவா சாகிபு அவர்கள் அம்மானை" என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றியிருக்கிறார். அந்நூல் ௪௭௫ கண்ணிகளையுடையது.

"கற்பாறை தன்னிலோர்நாள் கடுகி நடக்கையிலே
சொற்பெரிய மன்னவரைத் தொடர்ந்துவந்தார் கள்ளருந்தாம்
வேடர்மக்கள் எல்லோரும் பரட்டிவந்து பாறையின்மேல்
ஓடிவந்து பாறையின்மேல் உயர்ந்துநின்று கல்லெறிந்தார்
பாறையிலே வந்துநின்று பார்புகழு மன்னவர்மேல்
கோறல்செய்ய வேண்டுமென்று கூடியே கல்லெறிந்தார்."

இவை சகச, சகடு, சடுக ஆவது கண்ணிகள்.

## கசடு௮. முத்துராக்குச் சேர்வைகாரர்
### (20 - நூ.)

இவர் பாண்டிவளநாட்டில் இராமநாதபுரம் பிரிவில் கணக்கராக இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் முத்துக் கருப்பன் சேர்வைகாரர். முத்துராக்குச் சேர்வை கணக்கு வேலையை மேற்கொண்டிருந்தும் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலவராகவும் பாவாணராகவும் விளங்கியிருந்தார். முத்துச்சாமிப் பிள்ளை என்பவர் பாடிய நூலுக்கு இவர்,

"கந்தன் குமரன் கருவையான் தூய்பிரமா
னந்தன் பதிகமொடு நனகுணர்ந்து—சிந்திப்போர்க்
குற்றப ராபரமா லைப்பாக் கருமுரைத்தான்
கற்றமுத்துச் சாமிகவி ஞன்."

என்னும் வெண்பாவாலும் மற்றுமொரு விருத்தப்பாவாலும் சாற்றுக்கவி வழங்கியுள்ளார்.

## ௧௪௫௯. முத்துராச கவிராசர்

இவர் சோழவளநாட்டில் உறையூரில் செந்தியப்பர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். பின்னாளில் இவர் ஈழவளநாட்டில் குடியேறி வாழ்ந்திருந்தார். 'கைலாயமாலை' என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது. இம்மாலை கலிவெண்பாவால் இயன்று முந்நூற்றுப்பத்துக் கண்ணிகளை உடையதாக விளங்குகிறது.

> ''கற்றோர் புகழுக் கயிலாய மாலைதன்னை
> நற்றமிழி னல்தொடுத்து நாட்டினான்—கற்றுறையூர்ச்
> செந்தியப்பன் தந்தசிறு வன்முத்து ராசனென
> வந்தகவி ராசமகு டம்.''

என்பது நூலின் இறுதியிற் காணப்பெறும் ஒரு வெண்பா.

## ௧௪௬௦. முத்துராம முதலியார்
### (19 - நூ.)

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்குமுன் சென்னையில் வாழ்ந்திருந்தவர். 'மகாபாரதக் கீர்த்தனம்' என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது. இவர் காலத்தில் சென்னையில் இருந்த முருகப்ப முதலியார் என்பவர் விருந்தொன்று நடத்தினார். உணவுவகைகள் நன்கு சமைக்கப் படவும் பரிமாறப் படவும் இல்லை. அதனால் மிகுந்த சினமடைந்த இவர்,

> ''அட்டைக்கேன் மணிமந்த்ரம் அறுகினுக்கேன்
> கூர்வாள்கால் அலம்பி டும்பீக்
> குட்டைக்கேன் பொற்படிகள் குருடனுக்கேன்
> கண்ணாடி கொல்லுங் கள்ளிப்
> பட்டைக்கேன் சம்பாரம் படுபாவி
> முருகனெனும் பழந்து டைப்பக்
> கட்டைக்கேன் ஊர்விருந்து புலவீர்காள்!
> நீங்களிது கழறு வீரே.''

என்று ஒரு செய்யுள் பாடினார். இதனைக் கேட்டு விருந்து நடத்தியவர் உள்ளம் வெதும்பினார். ஆயினும் புலவரிடம் யாதும் பேசமுடியவில்லை. பேசினால் வசைபாடி விடுவாரோ என்று அஞ்சினார். அதுமுதல் எக்காரியத்தினும் விழிப்புடன் நடந்து கொள்ளலானார்.

## ௧௪௬௧. முத்துராமலிங்க அடிகள் (தில்லை)
(20 - நா.)

" நடத்தலைக் கனமன்றிச் சொருபலக்
கணமறிந்த தலைமை சான்றோன்
படித்தலத்தெவ் வுயிரையுந்தன் உயிரென்னக்
கருதிநிற்கும் பான்மை யாளன் தன்
அடித்தொண்டு பரம்பரற்கே புரிசிந்தை
யானாளே படிவ மாதோன்
எடுத்தெவரும் புகழ்முத்து ராமலிங்க
தேசிகனும் ஏந்தல் மாதோ."

என்று திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையால் புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர் திருத்தில்லையில் மௌன தேசிகர் மடத்தில் இருந்தார். இலக்கண இலக்கியப் பயிற்சியிற் சிறந்து விளங்கிய இவர் தோத்திரத்திரட்டு, எங்நாட்கண்ணி, விநாயகர் தோத்திர அட்டகம், சுப்பிரமணியர் தோத்திர அட்டகம், சிவபெருமான் தோத்திரம், திருமயிலைப்பதிகம், சோமநாதேசுவரர் நவமணிமாலை, சுப்பிரமணியர் நாமாவளி, சீவகாருணிய விளக்கம், பஞ்சரசமஞ்சரி, சதுர்வித புருடார்த்த சங்கிரகம், அட்டாதச புராண சாரசங்கிரகம், சரியையாதி சோடச விளக்கம் முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார். நூல்களைப் பாராட்டித் திருமயிலை அறிஞர் சண்முகம் பிள்ளை, தி. சு. வேலுச்சாமிப் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" தீவினையெலாமுலகில் தேய்ந்தொழிய வேண்டும்
தெளிவுடையார் தங்களொடுஞ் சேர்ந்தொழுக வேண்டும்
பாவிகள்தம் மோடுறவு பண்ணுமை வேண்டும்
பாவமதற் கஞ்சிமனம் பதைத்திடவே வேண்டும்
கோவினது செங்கோல்தான் கோணுமை வேண்டும்
கொலைபுலைசெய் யாதுமனங் குவிந்திருக்க வேண்டும்
ஆவிகளுய் யப்பொதுவில் ஆடுகின்ற அரசே
அன்னைநான் வேண்டுதல்கேட் டாருள்செய்வாயே."

என்பது வேண்டுகோள் என்னும் பகுதியில் ஒரு பாட்டு.

## ௧௪௬௨. முத்துராமலிங்கம் - மு

இவர் சென்ற நூற்றாண்டின் இறுதியிற் சென்னைமா நகரில் வசித்திருந்தவர். பீ. ஏ. வரையிலும் ஆங்கிலக் கல்வி கற்றிருந்த

இவர் தமிழ்மொழியிலும் மிகுந்த பயிற்சியுடையவராய்ச் செய்யுள் இயற்றுந் திறம்பெற்றிருந்தார். இவர் கிருபாமாலை என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நூல் நூற்று முப்பத்தெட்டுச் செய்யுட்களையுடையது.

"திருந்துங் கடல்சூழ் புவித்தலத்தில்
சிறக்கும் புகழ்பூ ராஎய்துமோர்
மருந்தி னனையார் பொன்றிடிலே
வழங்குமென்னு மொழிக் கேற்பப்
பொருந்தும் புகழின் இருக்கையினைப்
புனைந்த தாவிச் சிறுகாலம்
இருந்து மறைந்த தாங்கொலோ
இயம்பித் தேற்றல் இயல்பன்றே?"

என்பது அம்மாலையில் ஒரு பாட்டு.

## கசகூங. முத்துராமையா

பாண்டிவள நாட்டில் கண்டனூரில் தனவைசிய மரபில் தோன்றியவர். கல்விகேள்விகளில் வல்லவராய் விளங்கியிருந்த இவர் சற்குரு விளக்கம், பொன்னம்பல சுவாமிகள் வரலாறு (அகவல்) முதலிய நூல்கள் இயற்றியிருக்கிறார். கோவிலூர் மடாலயத்தில் வேதாந்த நூல்களையுங் கற்றுணர்ந்தவர்.

"தவமுள்ளோர்கள் புகழுஞ் சிதம்பரத்
தலத்தின் மேவுபொன் னம்பல சுவாமிகள்
நவம தான சரித்திரந் தன்னையும்
ஞானம் பெற்றருள் குஞ்சித பாதரால்
நிவர்த லாக வசன நடையினில்
நிகழ்த்த லானதை நேரிசைப் பாவினும்
கவர்வு றும்படி செய்திட லானுல
கோர்க ளங்கி கரித்திட வேண்டுமால்"

என்பது அவையடக்கப் பாட்டு.

## கசகூச. முத்துராயக் கவுண்டர்

கொங்குவள நாட்டில் முள்ளூர் என்னும் ஊரில் இருந்தவர். இவர் பள்ளிக்கூடத்திற் படித்துக்கொண்டிருக்கும்போது இவருடைய ஆசிரியர், "பள்ளிக்கூடத்து விநாயகன் பாதம் பணி

குவனே" என்று சுற்றுக்கொடுத்துப் பாடச் சொன்னுர். இவர் உடனே,

"வள்ளிக்கு நண்பனைப் பெற்றவ ளம்பிகை வல்லவன்சேர்
வெள்ளிப் பொருப்பில் அரன்பதி மேவிய வேதன்தலை
கிள்ளித் திரங்கொண்ட பித்தன்தன் பாதத்தைக் கிட்டுமொரு
பள்ளிக் கூடத்துவி நாயகன் பாதம் பணிகுவனே."

என்று பாடினுர். இவர் பழனிக்குச் சென்றிருந்தபோது அவ்விடத்துப் புலவர்கள் சிலர் இவருடைய கல்வித்திறத்தைக் கேள்விப்பட்டுச் சமுத்தி பாடும்படி நான்குபேர் நான்கு எழுத்துச் சொல்ல நான்கையும் நான்கடியில் பாடினுர். இவரை வேறொரு புலவர் ஒரு திருமணத்திற்குப்போய்ப் பரிசுபெறுவதற்குச் செய்யுள் ஒன்று பாடித்தரும்படி கேட்டார். அப்பொழுது இவர்,

"காமா கரியவா காகுத்தா பாண்டியா
சோமா விசயா கூழுகனே—வீமா
வடமேரு வொக்குமதயானை கட்கும்
திடநீவியப்பா செயம்"

என்று பாடிக்கொடுத்தனுப்பினுர்.

## கசகூரு. முத்துலிங்க பிள்ளை

இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகட்குமுன் பிராயங்குப்பம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவர் "கலியாணக்கொத்து" என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நூலில்: ஊசல், கொம்பிச் சந்த ஊசல், எச்சரிக்கை, லாலிபஞ்சகம், மங்களாட்டகம் என்னும் பகுதிகள் அடங்கியுள்ளன. நூல் கஅஅச ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் வெளியிடப்பட்டுள்ளது.

"சீரிலகும் இரத்தினத்தால் கால்கள் நாட்டித்
திகழ்வயிரம் அதனுலுத் திரங்கள் பூட்டி
ஏரிலகும் ஒளிர்துவர்தற் கொடுங்கை சூட்டி
எழில்உலவும் ஆடகச்சங் கிலிகள் மாட்டி
நீரிலகு மதிகாந்தப் பலகை கூட்டி
நேசமட வார்தம்விசு வாசங் காட்டி
வாரிலகு மணிதருநல் வடந்தொட் டாட்ட
வாழ்த்துசம்பு கோத்திரரே ஆடீர்ஊசல்."

என்பது ஊசற்பகுதியில் ஒரு பாட்டு.

## கசகூகூ. முத்துவீர உபாத்தியாயர்
(1889)

சோழவள நாட்டிலே திரிசிரபுரத்திற்கு அண்மையில் உள்ள உறையூரில் தோன்றியவர். இவருடைய குலம் கம்மாளர் குலம் என்ப. இவர் இலக்கண இலக்கியத்தில் பெரும்புலமை பெற்றுத் திகழ்ந்தார். இவரிடம் பலபேர் கல்விகற்றுப் புலவர்களாயினர். திரிசிரபுரம் அமிர்தம் சுந்தரநாதப் பிள்ளை முதலியோர் இவருடைய மாணவர்களே. இவருடைய மகனுஞ் சிறந்த புலமை பெற்றுத் திகழ்ந்தார். இவர் எழுதிய இலக்கணநூல் இவருடைய பெயரால் முத்துவீரியம் என வழங்கப்பெறுகிறது. இந்நூலுக்குத் திருநெல்வேலி திருப்பாற்கடல் நாதன் கவிராயர் என்பவர் உரையெழுதியிருக்கிறார். நூல் மூலமும் உரையுமாக கஅஅக ஆம் ஆண்டில் வெளியாகியிருக்கிறது.

> "இரண்டொழித் தேனைய விருநான் கெண்களும்
> பத்தின் முன்வருங் காலை யான
> குற்றிய லுகர மூற்றக் கெடுமே
> யொன்பா னொழியவின் னொடுவரு மென்ப."

என்பது நூலின் உகிக ஆவது சூத்திரம்.

## கசகூஎ. முத்துவீரக் கவிராயர்
(19 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் புளியங்குடி என்னும் ஊரில் தோன்றியவர். சிறந்த புலவராக விளங்கியிருந்த இவர் சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணத்தின் மூன்று சருக்கங்களைப் பாடியிருக்கிறார்.

புராணத்தைப் பாராட்டிச் சேற்றூர்ச் சிதம்பரக் குருக்களையா, சேற்றூர் இராமசாமிக் கவிராயர், சேற்றூர் இராமசாமிக் கரையாளர், கல்போது புன்னைவனக் கவிராயர், சின்னிகுளம் சுந்தர சுவாமிகள், சின்னிகுளம் அண்ணாமலைக் கவிராயர், சொக்கம்பட்டி பெரியசாமித் தேவர், செவ்வற்குளம் கந்தசாமிப் புலவர், சங்கர நாராயணசாமி கோயில் சாமிநாதக் கவிராயர், பூசைப் பிள்ளை, திருமலைவேலு உபாத்தியாயர், அருணாசலம்

பிள்ளை, வீரகேரளம் புதூர் திருமலை ஐயங்கார், திரவியம் பிள்ளை, இடைசெவல் இராமானுசக் கவிராயர், வாசுதேவ நல்லூர் பழனியாண்டிப் புலவர், கந்தசாமிப் புலவர், புளியங்குடி ஆண்டியா பிள்ளை, முகவூர் கந்தசாமிக் கவிராயர் என்பவர்கள் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இவர் ஊற்றுமலை சமஸ்தானப் புலவராக விளங்கியிருந்தார்.

"நீர்கொண்ட செழுஞ்சடைமேல் நிலவுமிழ்வெண்
    பிறைவயங்க நெடுவான் பூத்த
ஏர்கொண்ட தாரகையின் இடையிடையே
    தவளமுகை ஈன்று தோன்றும்
கார்கொண்ட புன்னைவனங் காமுற்று
    வாழ்கருணைக் கடலை மல்லல்
சீர்கொண்ட சீராசைத் திருநகர்வாழ்
    சிவக்கொழுந்தைச் சிந்தை செய்வாம்."

என்பது புராணத்தில் சங்கரலிங்கர் வணக்கம். சங்கர நாராயணர் கோயிலில் எழுந்தருளிய அம்பிகையின் பெயர் கோமதியம்பிகை. அவ்வம்பிகையின்மீது பிள்ளைத் தமிழ் ஒன்றும் இவரால் பாடப் பெற்றிருக்கிறது. கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ் குறிப்புரை விளக்கவுரைகளுடன் கழக வெளியீடாக 1959இல் அச்சாகியுளது.

"நன்னிலை மகட்குமுகம் அன்னசெந் தாமரை
        அலர்ந்தபணை யூடெழுந்த
    நறியசெஞ் சாலிகள் விளைந்தகதி ரூடுமே
        நிந்திரன் நடந்து முக்கித்
துன்னுகதிர் மேய்ந்துகன் னற்படப் பையினில்
        தொடக்குவே லியைமுழ் த்துச்
    சூழறுட் சென்றுகடை வாய்குதட் டியபோது
        சுடர்முத் துதிர்ந்து மலிய
மன்னுமக் கனைமுறிந் தருந் திச்சிலைவன்
        மேதிகள் வயற்குளேகி
    வண்முத்தம் வாயினில் உதிர்த்திடக் கண்டிடம்
        மாறிவரு முத்த நோக்கிப்
பொன்னுலவு மன்னர்கள் வியக்கும்வர ராசையுமை
        பொன்னூச லாடி யருளே
    பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
        பொன்னூசல் ஆடி அருளே."

என்பது பிள்ளைத்தமிழின் ஊசற்பருவத்தில் ஒரு பாட்டு.

## ௧௪௩௮. முத்துவீரப்பக் கவிராயர்

இவர் பாண்டி நாட்டில் உள்ள நகரம் என்னும் ஊரினர். நகரம் முத்துச்சாமிக் கவிராயருடைய தம்பியின் மகள் வயிற்றுப் பேரர். இவர் கருப்பத்தில் இருக்கும் பொழுதே தந்தையை இழந்தார். பாட்டனார் வீட்டிற் பிறந்து வளர்ந்தார். செவ்வற்குளம் கந்தசாமிப் புலவருக்கு மருகர். உறவினர்கள் எல்லோரும் புலவர்களாக இருந்தமையின் இலக்கண இலக்கியங்கள் நன்கு கற்றுணர்ந்தார். இசைப் பாடல்களையும் பிற பாடல்களையும் தெளிவாக இயற்றுவதில் வல்லமை பெற்றவரானார். இசைப் பாடல்கள் பலவற்றை இயற்றினார். பாரதம், இராமாயணம், திருவிளையாடல், கந்தபுராணம் முதலிய நூல்களை இனிய இசையோடு படித்துப் புராணச் சொற்பொழிவு செய்தலை மேற்கொண்டிருந்தார். இதுவே இவருடைய வாழ்க்கைக்குப் பற்றுக்கோடாக இருந்தது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாருடைய விருப்பத்திற்கு இணங்கி அங்குச் சிலகாலந் தங்கியிருந்தார். நகரம் முத்துச்சாமிக் கவிராயருடைய இசைப் பாடல்களையும் பதங்களையும், செவ்வற்குளம் கந்தசாமிப் புலவர் பாடல்களையும் பழைய இசையமைப்பின்படி பாடிக் காட்டினார். ௧௯௪௨ ஆம் ஆண்டில் தமது ஐம்பத்திரண்டாவது அகவையில் இறைவன் திருவடி நீழலை யடைந்தார்.

பல்லவி

சீரலை வாயுறை சிவசாமி
திகழ்கருணாகர வேலாயுதனே திருச் — சீரலைவாய்

அனுபல்லவி

நீரகம் பீரசிங் காரவை வேல்நிகழ்
திருவுரு வேஅருள் புரிதரு வேதிருச் — சீரலைவாய்

சரணங்கள்

இமையவர் முனிவரர் பரவும்பொற் பாதா
எனதிடர் பொடிபடுத் திடுங்குரு நாதா
தணிநிக ராந்திருத் தணித்தமிழ்ப் போதா
சரவண பவவுமை தருசுத னேதிருச் — சீரலைவாய்

விகசித மிருக்கும்பண னிருபுய வாகா
வேட்டுவர் தலைக்கொடி விரும்புறு மோகா
இகபர சுகந்தனை இனிதருள் தியாகா
எழில்பெறு காஅரி திருமரு காதிருச் சீரலைவாய்

புகழ்முத்து விருதுபுனை குமரேசா
போசனைச் சிறைபுரந் திடபுகழ் வாசா
அகமகிழ் வுடன்அடி யார்க்கருள் நேசா
ஆறுமு காமயி லேறுங் காதிருச் சீரலைவாய்

என்பது இவ ருடைய இசைப்பாடல்களில் ஒன்று.

## கசசுக முத்துவேங்கட சுப்பையர்
### (19 - நூ.)

பாண்டிவள நாட்டில் வேம்பத்தூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். செந்தமிழ்ப் புலமையில் வேம்பத்தூரார்கள் சிறந்து விளங்கியதைப் போலவே இவருஞ் சிறந்து விளங்கினர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந்தெரியவில்லை. புதுக்கோட்டை நாராயண பிள்ளை என்பவர் இயற்றிய, 'பழனி வெண்பா' என்னும் நூலுக்கு இவர்,

"அந்தரத்தோர் எந்த அரம்பை அடிவருட
இந்திரச்செல் வப்பெற் றிருப்பரே—சுந்தரஞ்சேர்
நாரா யணமான் நவில்பழநி வெண்பாவைப்
பாரா யணஞ்செய் பவர்."

என்னும் வெண்பாவைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கசஎ௦. முத்துவைத்தியநாத தேசிகர்
### (20 - நூ.)

சோழவள நாட்டில் மாயூரத்தில் இருந்தவர். தென்மொழியிலும் வடமொழியிலும் வல்லவராகையால் இவருடைய பெயர், "உபயபாஷா வித்துவசிரேட்டர்" என வழங்கியது. மாயூரம் கிருட்டிண ஐயர் இயற்றிய 'மயிலைச் சிலேடை வெண்பா' என்னும் நூலுக்கு இவர், கீழ்வரும் வெண்பாவினைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார் இவர் பாடியனவாக வேறு செய்யுட்களோ நூல்களோ ஒன்றும் அகப்பட்டில.

"செல்வச் செழுமயிலைச் செஞ்சொற் சிலேடை வெண்பா
நல்வைப்புப் பொன்னூறு நல்கினுன்—கல்விப்
பெரியனவன் பேர்கிருட்டி ணனந்த யோகி
உரியனுமை மாமயிலா மூர்."

## ௧௪௭௧. முத்துவைத்தியநாத பண்டாரம்

இவர் திருவாய்மழை என்னும் ஊரில் பத்தொன்பதாம் நூற்ருண்டில் வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சுப்பிரமணிய பண்டாரம்.

இவர் தெய்வத்திருவருளுங் கைவரப் பெற்றவர். ஊதுடக்கந் மகண்ணி, திருவாய்மழைப்பதிகம், திருவாய்மழைச் சந்தப் பதிகம், கல்லாலே கரும்புதின்ற நாடகம், சிவகாமி சதகம், கந்தர் சதகம் என்னும் நூல்களியற்றியிருக்கிருர். இவைகள் ௧௮௪௮ ஆம் ஆண்டில், சென்னை ஊ. புட்பரதச் செட்டியா ருடைய கலாரத்நுகர அச்சகத்தில் பதிக்கப்பெற்று வெளி வந்துள்ளன.

'பெண்டிருடன் சுதன்சுற்றம் பெருவாழ் வெய்தப்
பிரியமுடன் நாள்தோறும் அருள்வான் தன்னை
எண்டிசையும் அடியவனென் றிறைஞ்சி யேத்த
இதயவருண் மிகவளிக்கும் ஈசன் தன்னைப்
பண்டுமுள வினைகளவில் இட்ட பஞ்சாய்ப்
பறியவே பிரியமுடன் பரிப்பான் தனை
அண்டர்புக ழாய்மழைவா ழீசன் பாதம்
அடையவே வேண்டுமென அலையெ னெஞ்சே."

என்பது திருவாய்மழைப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௪௭௨. முத்தைய உபாத்தியாயர்

சிவகங்கையிலே அகம்படியர் மரபில் தோன்றிய இவர் இள மையிலேயே நல்லாசிரியரை அடுத்துக் கல்வியைக் கசடறக் கற்றுத் தேறிப் பள்ளி ஒன்றை அமைத்து அதில் ஆசிரியராக அமர்ந்து மாணவர் பலர்க்குக் கல்விபோதித்தார். சித்திரகவிகள் முதலிய பாடல்கள் பாடுதலினும் வல்லவர். ௧௮௪௮ ஆம் ஆண்டிலே இறைவன் திருவடிநீழலை அடைந்தார். இவர்

பெரியசாமித் தேவர் என்பவர்மீது பாடிய செய்யுட்களில் ஒன்று:

"திரவிலே யெகாயத் திடரக் குடலிலனம்
சாரவிலே யெபெரிய சாமியே—சேரவினை
அல்வருமுன் னெய்யாதுக் கங்கசனு வேவிடுமாம்
பன்வரவான் வந்தசந்தா பம்."

## ௧௪௭௩. முத்தைய உபாத்தியாயர்

இவரைப் பற்றிய குறிப்புக்கள் எவையுங் கிடைக்கவில்லை. இவருடைய தனிப்பாடல் ஒன்று தனிப்பாடல் திரட்டில் காணப்படுகின்றது. நாணிக்கண் புதைத்தல் துறையில் சிவஞான தேவர்மீது இவர் இயற்றியது அச் செய்யுளைக்கொண்டு இவருடைய புலமைத்திறத்தை நன்கு உணர்ந்து கொள்ளலாம்:

"தேன்படியுந் திருநல்லையந் தாரணி தின்புயப்பூ
மான்படி காக்குஞ் சிவஞான சாமி மணிவரைமேல்
மீன்பிடி மையலை விசிக் கனிந்தினை ட்டுக்கெண்டை
தான்பிடிக் கும்படி நாணபிடிப் பேயடி நார்குழலே."

## ௧௪௭௪. முத்தைய சுவாமிகள்

(கி. பி. 19 - நூ.)

இவர் விருத்தாசலம் என்னும் பழமலையில் இருந்தவர். குமாரதேவர் ஆதினத்தைச் சேர்ந்தவர். இவர், ககச-செய்யுட்கள் அடங்கிய சின்மய தீபிகை என்னும் நூலை இயற்றியிருக்கிறார். இதற்குக் காஞ்சிபுரம் இராமானந்தயோகி உரையெழுதியுள்ளார்.

"நதிதனிலே பிறைந்துவரு நீருடனம்
மணமுறுவாய் நம்பி நாளும்
அதிகவுற வெளதினைந்த தொக்குடம்
வாசையிக அன்ப நாமோ
நதிகடந்த வெண்ணெய்நகோ அம்மோரின்
கனந்துபிடிற் சார்கிலைபோல்
சதியிசைந்த நெஞ்சேநல் தந்தையுமக்
கருபகைந்துஞ் சார்கிலாரே."

என்பது நூலின் ஐம்பத்தோராவது பாட்டு.

## கசஎடு. முத்தையாப் பாவலர் - (சோ)
## (19 - நா.)

பாண்டிவளநாட்டில் சிவகங்கைக் கன்மையிற் உள்ள வேப்பங்குளம் என்னும் ஊரில் சோணைமுத்து அம்பலகாரர் என்பவருடைய அருமைத் திருமகனாக இவர் தோன்றினர். இவருடைய பாட்டனாராகிய சின்னையா அம்பலகாரர் என்பவரும் புலமையிற் சிறந்தவராய்ப் பெருமை பெற்று நூல்கள் இயற்றிச் சின்மய தேசிகர் என்னும் பெயருடன் விளங்கியிருந்தார். இலக்கண இலக்கியங்களை நன்குகற்ற முத்தையா இனிமையான கவிகளைப் பாடலானார். இதனால் இவருடைய பெயர்க்குமுன் "மதுரகவி" என்னும் சிறப்புச் சொல்லும் அமைந்துநின்றது. இவர் சயிப்பி நகரில் எழுந்தருளிய தண்டாயுத பாணிமீது பல புகழ்ச்சிப் பாடல்கள் இயற்றினர். அவை 'தோத்திரப் பிரபந்தம்' என்னும் நூலாக விளங்குகின்றன.

"பூமேவு நான்முகப் புத்தேள் தரும்பெரும்
புவியினுக் கணியென்ன நற்
பொன்னகரும் இந்நகர்க் கிடிலையெனத்தமிழ்ப்
புலவர்களு மேத்தெடுப்பக்
கோமேவு பலவணிப் பொலிவின்றி ரட்சிதரு
கொண்டலது மாதமூன்று
குளிர்மழையை ஓவாது வருடிக்க நவமணி
கொழித்துறுந லையிராவதி
தேமேவு கங்கைபோ லாடினோர் வினையைச்
செகுத்திரு மருங்குசூழச்
செறிதரக் கனகநிதி யீட்டிவளர் தனவணிகர்
செய்தபொற் கோயில்தன்னின்
மாமேவிரத்னசிங் காதனத் தனிலாரும்
வள்ளலே யென்னையாள்வாய்
வளமார் சயிப்பிநகர் தனிலேர் சிறக்கவளர்
மயில்வா கனக்கடவுளே."

என்பது பாடல்களில் ஒன்று. பாடல்களைப் பாராட்டிப் புதுவயல் சண்முகஞ் செட்டியார், முத்துமாணிக்கக் கவிராயர், பார்த்திபனூர் சேதுநாவலர் என்பவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். இவர் பூங்குடி இராமநாதன் செட்டியார் என்பவர் மீது நெஞ்சுவிடுதூது என்னும் நூலும் பாடியுள்ளார். அத்தூது தொளாயிரத்து முப்பத்தொரு கண்ணிகளையுடையது.

## ௧௪௭௬. முத்தைய பிள்ளை
(20 - நூ.)

இவர் பாண்டிநாட்டிலே திருநெல்வேலி மாவட்டத்திலே அம்பாசமுத்திரப் பிரிவில் சேர்ந்த கடையம் என்னும் ஊரில் மாணிக்க வாசகம் பிள்ளை என்பவருடைய மகனாகத் தோன்றியவர். புலமைக் கல்வி கற்றுத் தேறியபின் மதுரையில் உள்ள சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றினார். இவர் அம்பாசமுத்திரம் தாலுகாவில் ஆழ்வார் குறிச்சிக்கு மேற்குப் பக்கத்தில் உள்ள சிவசயிலம் என்னும் சிவப் பதியில் திருக்கோயில்கொண்டுள்ள சிவபெருமான்மீது 'சிவ சயிலேச விண்ணப்ப மாலை' என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அம்மாலை நூற்று முப்பத்தொரு பாடல்களையுடையது. இந் நூலைத் தவிர வேறு உரை நடை செய்யுள் நடை நூல்கள் இவர் செய்தனவாகத் தெரிந்தில.

"குலநெடிய கரதலானைச் சுடர்தருமெய்
வடிவானைச் சுருக்கமேவும்
நீலமணி மிடற்றானை நெற்றியனல்
விழியானை நினைவுக்கெய்தாப்
பாலனைவெண் ணீற்றானைப் பரமயோக
இளைய முனிவன் பரிந்துவேண்டக்
காலனையும் உதைத்தானைச் சயிலமருகு
ளுறைதயனைக் கருத்துள் வைப்பாம்."

என்பது அம்மாலையில் ஒரு பாட்டு.

## ௧௪௭௭. முத்தையா முதலியார்
(1909)

இவர் பாண்டிவளநாட்டிலே சங்கர நயினார் கோவிலில் செங்குந்தர் மரபில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் முத்தையா முதலியார். இவர் "சங்கர நயினார் கோயில் அலங்காரச் சிந்து" என்னும் இசைநூல் பாடியிருக்கிறார். மேற்படி இசைநூலின் இராகதாள அமைப்புக்கள் அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்துப் பாடல்களை அடியொற்றியுள்ளன. அந் நூலின் இரண்டு கண்ணிகளைக் கீழே காண்க.

மேலரத விதிவிசேடம்

'நான்முகன் நாவில் வசிக்கும்' என்ற மெட்டு

கண்ணிகள்

"இந்தவிதி பார்க்கப் பார்க்க விந்தையாகத் தோணுமே
விந்தையாகத் தோணுமே வந்துவந்து காணுமே. (இந்)
அந்திமாலை காலைபாடும் அன்னங்குயில் பேடைகள்
அன்னங்குயில் பேடைகள் என்னமலர் வாடைகள்." (இந்)

ஒருவர் எவ்வளவுதான் முயன்று மற்றவரைப் போல நடப்பினும் அஃது எளிதில் இயையாதென்பதை யாவரும் உணர்ந்ததே. இந்நூலினைப் பாராட்டிப் புளியங்குடி முத்துவீரப்பக் கவிராயர் மாணவர்களில் ஒருவராகிய திருக்காளத்தியப்ப முதலியார், ஐவாய்ப்புலிப்பட்டி ஐயம்பெருமாள் பிள்ளை, மு. அருணகிரிநாத முதலியார் மாணவர் சங்கரலிங்க முதலியார், குமாரசாமியா பிள்ளை, தென்காசி மாடச்சாமிப் பண்டாரம், சங்கர நாராயணர் கோவில் முத்தையா முதலியார், சிவனு முதலியார், மா. பேச்சியப்ப பிள்ளை, போத்தி லிங்கம் பிள்ளை ஈவ்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்

## ௧௪௭ முத்தைய முதலியார்
(20 - நூ.)

இவர் செய்யூர் என்னும் ஊரில் தோன்றியவர். ஆங்கிலமும் தமிழும் கற்றுத்தேறியவர். ஆங்கிலத்தில் பி. ஏ; எம், எல், சி. முதலிய பட்டங்களைப் பெற்றவர். இராமாயணசாரம் முதலிய நூல்களை இவர் எழுதிவெளியிட்டுள்ளார். இவர் தாம் இயற்றிய நூலைச் சுப்பிரமணிய ஐயர் என்பவருக்கு உரிமைப் படுத்திப் பாடியுள்ள பாடலை அடியிற் காண்க.

"நாடெலாம் நிறைந்த சென்னைமா நகரில்
நடுவுயர் நீதிமா மன்றில்
நாளில மாந்தர் வழக்கெலாந் தீர்க்கும்
நற்குணக் குன்றெனப் பொலிவோய்!
உலகெலா தெவர்க்கும் உண்மையாம் ஒளியை
உற்றுநாள் தொறுநனி வீசி
ஒளிர்சுப்ர மணியன் எனும்பெயர் வள்ளால்!
ஒப்பிலா மணியெனப் போந்தோய்!

அலகிலா இறைவன் அருளினி தடைந்த
அண்ணலே! அந்தணர் விளக்கே!
அயோத்தியின் அரசன் அருங்குண ராமன்
அறநெறி கடைப்பிடித் தவனே!
உலகெலாந் தொழுமவ் வுத்தமன் சரிதை
உளமுவந் துரைத்திடென் அருளை
உன்றனக் குரிமை செலுத்தினேன் பெறுதி
ஒழுக்க நான் முறைக்கதிர் மதியே!"

## கசஎக முருகப்ப உபாத்தியாயர்

தொண்டைவள நாட்டில் முதலம்பேடு என்னும் ஊரில் இருந்தவர். பதினெட்டாம் நூற்றாண்டினர். இவர் நல்லாப் பிள்ளைக்கு நண்பர். இவரும் நல்லாப் பிள்ளையுமாகச் சேர்ந்து வில்லிபுத்தூரார் பாரதத்தின் இடையிடையே பாடல்களை இயற்றிச் சேர்த்துப் பாரதத்தை விரிவுபடுத்தினர். இவர் பாடிய பாடல்களைவிட நல்லாப் பிள்ளை பாடிய பாடல்களே மிகுதியாக இருந்தமையால் பாரதம் 'நல்லாப் பிள்ளை பாரதம்' என்று நல்லாப் பிள்ளையின் பெயரையே பெற்றுவிட்டது. இப்பாரதம் காஞ்சிபுரம் வரதராசர் திருமுன்பு அரங்கேற்றஞ் செய்யப் பட்டது.

## கசஅ0. முருகப்ப உபாத்தியாயர் (1879)

சென்னைமாநகரில் புரசவாக்கத்தில் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துக்கொண்டு இளம்பிள்ளைகளுக்குப் பாடப் புத்தகங்களைக் கற்பித்துக்கொண்டிருந்ததோடு விரும்பிய முதியவர்களுக்குப் புராணங்கள் இதிகாசங்கள் முதலியவைகளையும் போதித்துக்கொண்டிருந்தார். இதனால் இவருக்கு உபாத்தியாயர் என்று பெயர் உண்டாகியது இவர் காலத்தில் சென்னைமாநகரில் அட்டாவதானம் சபாபதி முதலியார், செ. சின்னச்சாமிப் பிள்ளை முதலியவர் சிறந்த புலவர்களாகத் திகழ்ந்திருந்தார்கள். ~~முருகப்ப உபாத்தியாயர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரங் கிடைக்கவில்லை.~~ அமர்நீதி நாயனார் சரித்திரக் கீர்த்தனைக்குப்பின் வரும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்:

"நீரார்ச டாமகுட நிமலர்திரு அருளினுல்
நிறைதுலாக் கோலினில்நன்
நிதியாதி யொருபிரம சாரிகோ வணநேர்
நிறுத்துநேர் நிற்காததால்
ஏரார்வி மானமாத் தட்டின்மனை மக்கள்தாம்
ஏறிநிகராக் கயிலைசென்
றின்பமுறும் அமர்நீதி நாயனூர் சரிதவமு
திசைகீர்த்த னைத்தமிழினுல்
வாரார்ச கோடயாழ் வைத்துநா ரதர்செவியில்
வாய்க்கிரதம் ஊற்றெடுப்ப
மலமற்ற சிவபக்தர் உருகவிசை வாணர்மன
மகிழஉறை யூர்உறைதரும்
சீரார்முத் தமிழ்வல்ல முத்துவீ ரப்புலவர்
செய்தவத் தவதரித்த
திகழ்விசுவ குலவயித் தியலிங்க நாவலனை
செய்தனன் உளந்தெளிந்தே.

இவர் "சிறு வஞ்சூர்த் தோத்திர மாலை" என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூலில், 'விநாயகர் திருவவதார துவாதச வெண்பா' 'பாலசுப்பிரமணியர் பஞ்சரத்தினம்' 'திருவாலீஸ்வரர் பதிகம்' 'திரிபுரசுந்தரி அம்மன் பதிகம்' ஆகிய நூல்கள் அடங்கியுள்ளன.

"திருமாது கேள்வனும் கலைமாது தலைவனும்
தேடரிய நீறுபூத்துச்
சேணளவு பெருநெருப் பெனவோங்கி நிமிர்தரும்
சிவபிரான் முன்னளித்த
இருநாழி நெற்கொண்டு முப்பத்தி ரண்டறம்
இயற்றியெண் பத்துநான்காம்
இலக்கவுயிர் பேதமும் அலைக்கணுற் றழியாமல்
இன்னமுங் காத்துவருநின்
பெருமான் மியத்தினுக் கொப்புலகில் உள்ளதோ
பிரணவத் தைந்தெழுத்தாம்
பேரின்ப அமுதமே யாரியரு மைந்தரைப்
பெற்றநீ அருளாவிடில்
தெருவீதி தொறுமாட கூடமெங் கணுநிறை
செய்யசிறு வஞ்சூரில்வாழ்
சிவையுமையத் தரிமுன்னை வினையறவந் தருளென்னை
திரிபுர சுந்தரியன்னையே."

என்பது திரிபுர சுந்தரி அம்மன் பதிகத்தில் ஒரு பாட்டு.

## கசஉக. முருகப்ப நாவலர்

இவர் வடார்க்காடு மாவட்டத்தில் வாணியம்பாடியில் வைசியர் குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் சங்கர செட்டியார். இலக்கண இலக்கியங்களை நன்குகற்றுப் பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்தவர் இவரை,

"ஓங்குசிவன் அடியவரை அவனெனக்கண்
டுபசரிக்கும் உண்மை வாய்ந்த
பாங்குடையன் பரம்பொருள்பஞ் சாக்கரமே
எனப்பணிவான் பல நூல் எல்லை
சாங்கமதா யுணர்ந்தபுல வோர்க்கோர் நகற்
பகமனையான் தமிழ்க்கோர் சாமி
ஆங்கடிகை ஒன்றினிற்பல் லற்புதக்கற்
பனைப்பாக்கள் அமைக்கவல்லான"

"சீர்பரவும் எந்நாளும் பிரசங்கஞ்
செயுந்திறலான் திசைகள் தோறும்
பேர்பரவப் புவியிருக்கும் புலவர்களுக்
கொருசீயம் பெருமைக் குன்றம
ஏர்பரவும் அதிகாரம் பெற்றவரும
பாவலரும் இடத்திருக்க
ஆர்வமுடன் புகழ்ந்துவியந் தாசரிக்கு
முருகப்ப அறிஞன் மாதோ."

என்று வேறொரு புலவர் பாராட்டியுள்ளார். இவர் கேதார விரதப் பெருமையைக் கேதாரீசுர புராணம் என்னும் பெயரோடு அறுநூற்று நாற்பத்து நான்கு செய்யுட்களாகப் பாடியிருக்கிறார். நூலைப் பாராட்டித், திருவொற்றியூர் அப்பாசாமி செட்டியார், தி. கந்தசாமி உபாத்தியாயர், காங்கயம் அட்டாவதானம் சேஷாசல நாயுடு, அங்கப்ப பிள்ளை, தி. மா. அப்பாவுப் பிள்ளை, தாராபுரம் முத்துசாமி செட்டியார், திரிசிரபுரம் ஆ. கா பிச்சையிபுராகிம், திரிசிரபுரம். கு. சோமசுந்தரம் பிள்ளை, வீராச்சி மங்கலம் கந்தசாமிக் கவிராயர், வாணியம்பாடி மு. குமாரசாமிக் கவிராயர், திருப்பத்தூர் முருகேச பண்டிதர், திருப்பூர். சி. புலிக்குட்டிப் புலவர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். வேறு சிறு நூல்கள் சிலவற்றையும் இவர் இயற்றியுள்ளார். இவரியற்றிய கேதாரீசுர புராணத்தில் ஒரு செய்யுள் கீழ் வருவது.

"விரிதிரைக் கடல்சூழ் ஞாலம் விரவியசமயந் தன்னில்
பெரியது மேலாஞ் சைவம் பேசிடுந்தெய்வந் தம்மில்
அரியதோர் சிவமே நூலில் அருமறை தவத்தர் தம்மில்
உரியவன் பிருங்கி யென்போன் உயர்ந்தவன் என்றுசொல்வார்"

## கசஅ௨. முருகப்ப முதலியார் - வே (20 - நூ.)

இவர் பொன்விளைந்த களத்தூர் என்னும் ஊரில் வேலாயுத முதலியார் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றி நூல்கள் பலவற்றை ஓதியுணர்ந்து சிறந்த புலவரானார். நடராசச் செட்டியார் என்பவர் இயற்றிய ஆறுமுகக் கடவுள் பதிகங்களுக்கு இவர்,

"சொல்லரிய வல்லமறை யோடுநான் முகவனும்
துளவணிந் திடுமாயனும்
தோத்திரஞ் செய்துநின் றேத்தித் துதித்திடத்
துணைந்தாளி லொளருதுாக்கி
எல்லையறுமம்பலத் தானந்த நடனமிடும்
ஈசர்வாழ் தில்லைநகரில்
எழில்சேனைத் தலைவர்குல இராமசா மிசெய்த
இனியதவப் புதல்வனானோன்
தொல்லுலகில் முத்தமிழ்க் கவிவாணர் மெச்சத்
துலங்குமெய்த் தலைமைவாய்ந்தோன்
தோகைமயி லேறுமோ ராறுமுக நாதன்மேல்
தூயதன் பாவினமெனும்
நல்லதமிழ் மாலையை வணைந்தனன் யாவரும்
நவின்றருள் பெறுவரென்றே
நானிலந் தன்னில்நட ராசநா வலனென்னும்
நாமதே கடையன் மன்னே"

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இவர் இயற்றினவாக உரை நடை. செய்யுள் நடைநூல்கள் ஒன்றும் காணப்படவில்லை.

## கசஅ௩ முருகேச நாயகர் – த. பு. (கி. பி. 20 – நூ.)

இவர் சென்னைமாநகரில் இருந்தவர். புலவர் என்று பலராலும் போற்றப்பெற்றவர். இவர் 'தணிகைப் புராணவசனம் என்னும் நூலை எழுதியிருக்கிறார்.

"பத்திவளர்த் தருள்வளர்ந்தாட் கொள்வான் இந்தப்
பாரேழும் பிறவனைத்தும் ஆகியோங்கும்
சித்தேநான் மறைமுடிவுந் தீண்டாச் சோதி
சித்தாந்தத் துறைமிதந்த தேனே வானோர்
முத்தரெலாந் தொழுஞான முனியே யாறு
முகத்தேவே அருட்கடலே தணிகைக் குன்றின்
வைத்தோங்கு மாணிக்க வடிவே சுப்ர
மணியேநின் அடிமறவா தருளு வாயே."

என்பது இவர் பாடிய விண்ணப்பப் பாடல்.

## ௧௪௮௪. முருகேச பண்டிதர்

இவர் அணவை என்னும் ஊரில் இருந்தவர். இவர் 'தத்துவக் குறவஞ்சி' முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். ஏறக்குறைய எண்பதாண்டுகட்கு முன்பு இருந்தவர்.

"அலைசிந்தை கொள்ளாமல் அநுதினமும் நாடி
ஆனந்தத் திருநடனம் ஆடுவமே கூடி
நிலைகண்டு கொள்வதற்கே நினைந்துருகி வாடி
நிர்மலமா யையன்பதந் தினந்தினமு நாடி."

இது குறவஞ்சியில் இரண்டு கண்ணிகள்.

## ௧௪௮௫. முருகேச பிள்ளை - தா
(20 - நா.)

ஈழவளநாட்டில் யாழ்ப்பாணத்தில் இருந்தவர். சின்னத் தம்பி உபாத்தியாயர் என்பவரிடங் கல்விகற்றவர். யாழ்ப் பாணத்து வடமராட்சி துன்னையம்பதியில் கோயில் கொண் டெழுந்தருளிய வல்லிபுரமாயன்மீது பதிகம்' போற்றி விருத்தம், ஊஞ்சல் முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

"சங்கரன் தனதோர் பாகம்
சார்ந்தமா தவனே போற்றி
துங்கவெண் பணில நேமி
துலங்குபா ணியனே போற்றி
தங்குபாற் கடலிற் சேட
சயனத்தில் துயில்வாய் போற்றி
இங்கெனை யாளும் வல்லி
புரத்துறை இறையே போற்றி."

என்பது போற்றி விருத்தத்தில் ஒரு பாட்டு.

## ௧௪௮௬. முருகேச பிள்ளை - பூ
(1882)

இவர் ஈழவளநாட்டில் யாழ்ப்பாணம் சுன்னாகத்தில் தோன்றியவர். யாழ்ப்பாணத்து உடுப்பிட்டி அ. சிவசம்புப் புலவர் அவர்களிடம் கல்விகற்றுப் புலமை நிரம்பப் பெற்றார் கும்பகோணம் நகர உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரிந்தார். இவரிடங் கற்றுப் புலவரானவர்கள் பலர். இவர் "குடந்தை வெண்பா" முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். அந் நூலைப் பாராட்டிக் குடந்தை வைத்தியநாத தேசிகர், சுன்னாகம் அ. குமாரசாமிப் பிள்ளை, யாழ்ப்பாணத்து மானிப்பாய் ஆ. முத்துத்தம்பி பிள்ளை, கும்பகோணம் சபாபதி செட்டியார், சிக்கில் நாய்க்கன் பேட்டை இராகவ ஐயங்கார், அ. சிவசம்புப் புலவர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பூவும் பணியும் புனையும் மகளிரெதிர்
கூவு மெயில்சூழ் குடந்தையே—தாவுமொரு
செச்சையா னத்தன் திகழும் பகன்புனையும்
செச்சையா னத்தன் செனிப்பு.

என்பது குடந்தை வெண்பாவில் ஒரு பாட்டு.

## ௧௪௮௭. முருகேச முதலியார் – க
(1883)

இவர் தொண்டைவள நாட்டில் ஆரணி என்னும் ஊரில் கணபதி முதலியார் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். இச் செய்தி, "துன்னுபுகழ்ப் பெரிய வாரணி வாழ்வோன் துகளறுசீர்ப் புலமை மிக்கோர், மன்னுமுளங்களிகூரும் பெருங்கொடையோன் கணபதிமால் வரத்தில் வந்த, கன்னயஞ்சேர் குணமுடையோன் பூதிசாதன மறவா நன்மையாளன்" என்னுஞ் செய்யுட் பகுதியாற் பெறப்படுகிறது. இவர் வேணுப் பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமையடைந்தார். கொங்குவள நாட்டில் தருமபுரியில் எழுந்தருளிய தருமபுரீசுவரர்மீது இசைப் பாடல்கள் பல இயற்றியுள்ளார். அப் பாடல்கள் "தருமபுரீசுவரர் கீர்த்தனங்கள்"

என்னும் பெயரோடு புத்தகமாக அச்சாகியுள்ளது. பாடல்களைப் பாராட்டிப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், தி. க. சுப்பராயச் செட்டியார், மயிலைச்சண்முகம் பிள்ளை, கோ. இராச கோபால பிள்ளை, கா. இராமசாமி நாயுடு, சின்னச் சாமிப் பிள்ளை, பேறை தசாவதானம் செகநாதப் பிள்ளை, சு. வேலுச் சாமிப் பிள்ளை, ஷெ. கோவிந்த கவிராசர், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், மலையம்பாக்கம் செங்கல்வ ராய பிள்ளை, பரங்கிமலை, தி. சுப்பராயச் செட்டியார், செங்கற் பட்டு அரங்கசாமி நாயகர், இராயபுரம் சின்னப்பாவு முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"தண்பொழில்சூழ் தர்மபுரிச் சங்கரன்மேல் அன்பினொடு
பண்ணிசையார் கீர்த்தனங்கள் பாடுதற்கு—நண்ணிக்
கரிவுரியைப் போர்த்த கறைமிடற்றோன் ஈன்ற
கரிமுகவன் பொற்கழலே காப்பு"

என்பது நூலின் காப்புப் பாடல்.

## கசஅஅ. முருகேச முதலியார் - நெ.
(19 - நூ.)

அயிலி ஆடியபாத முதலியார் என்பவரால்,

"அறுமுகன் அடியிணை அனுதினம் பரவுவான்
பொறிபுலன் அவித்த புண்ணியர் நண்பன்
அறிஞர் உவக்கும் அருந்தமிழ் உணர்ந்தவன்
எங்கும் புகழ்க்கொடி ஏற்றி வாழ்ந்தவன்
சங்கை யில்லாச் சற்குணம் உள்ளவன்
வேளாள மரபின் விளக்கொளி போல்பவன்
தாளாண் மையிலே தளர்விலான் செந்நெல்
வயல்வள மிக்கு வளரும்நெல் வேலி
வாழ்முரு கேச வள்ளல் மாதோ."

என்று பாராட்டப் பெற்றவராகிய இவர் நெல்வேலி என்னும் ஊரில் தோன்றினர். முருகக்கடவுளிடத்திலே பேரன்புகொண்ட இவர் ஆங்கிலம் தமிழ் முதலிய மொழிகளை நன்கு கற்றுணர்ந் தார். பள்ளிக்கூடங்களின் திறனாய்பவராகப் பணிபுரிந்தார். சொற்பொழிவுகள் இயற்றுவதில் மிகத்திறமையுடையவர். காலக்

கணிதம், வேதாந்தம் மருத்துவம் முதலியவைகளிலும் பயிற்சியுடையவர். "சிவதலமான்மியச் சுருக்கம்" என்னும் நூல் ஒன்று இவர் இயற்றியதாக அறியப்படுகிறது. நூலைப் பாராட்டித் திருமழிசைச் சிவப்பிரகாசையர், அத்திப்பேடு தாயுமான முதலியார், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், ஆற்றூர் அம்பலவாண அடிகள், திருத்தணிகைச் சுப்பராய பண்டாரம், அயிலி ஆடியபாத முதலியார், சிவப்பிரகாசையர் மாணுக்கர் பாரிவாக்கம் மாசிலாமணி முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆசிபொழி வடகுரங் காடுதுறை பழனம்
ஐயாறு நெய்த்தானம் ஆனபெரும் புலியூர்
பூசனைசெய் மழபாடி திருப்பழனூர் கானூர்
புகழ்பெற்ற அன்பிலா லந்துறைமாந் துறையே
பாசவினை ஒழித்திடும்பாற் றுறைநிருவா னைக்கா
பைஞ்ஞீலி திருப்பாச்சி லாச்சிரா மம்மே
மாசகற்றி விடருளீங் கோய்மலையி னோடு
வடகரையி லேதலங்கள் அறுபானீமூன் றுமே."

என்பது இவரியற்றிய பாடல்களில் ஒன்று. சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க.

"பற்பலபா டைகளுணர்ந்த விற்பனரும்
பிரசங்கப் பான்மை கண்ட
தற்புதமற் புதமென்றே வியக்குறுமே
ராற்றலுளா னுயுள் வேதத்
திற்பெறுநல் லுணர்ச்சியுஞ்சோ திடத்திறனும்
வேதாந்தத் திறனும் வாய்ந்தோன்
அற்பினெனக் குடுக்கையிழந் தவன்கைபோல்
பலவுதவி யாற்றுந் தூயோன்."

## கச௩௯. முருகேச முதலியார் - வி
## (20 - நூ.)

இவர் இலக்கண இலக்கியங்களில் மட்டுமன்றி வேதாந்த நூற்பயிற்சியிலும் வல்லவர். இவரிடம் பலர் வேதாந்தங் கற்று வேதாந்திகளாயினர். இவர் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். சென்னையில் இருந்த வேதாந்த அன்பர்கள் ஒன்றுகூடிச் சாது இரத்தின சற்குருவின் பெயரால், "சாது இரத்தினவேதாந்த

ம்சாரனைச் சபை'' என்னும் பெயரோடு சபையொன்றை அமைத்தனர். இவர் அச்சபையில் உறுப்பினராக இருந்ததோடு வேதாந்த போதகாசிரியராகவும் இருந்தார்.

> '' தூய்மையுந் தேண்மையுந் தோலாக் கருணையும்
> வாய்மையும் வாஞ்சையும் வற்றாக் கல்வியும்
> நிறைந்த கேள்வியும் நிட்டானு பூதியும்
> மறைந்த பொருளையும் மனநிடைக் கொண்டு
> சுதோத்திய பிர்ம சுவானு பவமுற்ற
> விரோத மில்லா விபுலை யளிக்கும் ''

என்பது இவர் வேதாந்தப்பிரதீபம் என்னும் நூலுக்கு அளித்த சிறப்புப்பாயிரத்தில் ஒரு பகுதி. புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரின் நண்பர்களில் இவரும் ஒருவர்; இவர் கைலாசநாதர் பதிகம் என்னும் நூல் இயற்றியுள்ளார்.

> '' இருங்கடல்சூழ் உலகில்உள பொருள்கள் யாவும்
> எழிற்சிவமாக் கண்டுகளித் திடுமன்பர்க்குள்
> ஒருங்கியஆ தாரந்நின் உணை வகுத்த லாதி
> உவக்குமா பணிசெய்தாங் கொழுகு மின்கள்
> பெருங்கதிர்மா மதிக்குடையோன் காளந் தம்மைப்
> பேருறையிற் செறிப்பதெனப் பொழிற்கண் மாலைக்
> கருங்குயில்சேர் தென்மயிலை வாழும் எங்கள்
> கைலாச நாதனையே காண லாமே.''

என்பது அப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௧௪௯௦. முருகேச முதலியார் - க. சி
## (20 - நூ.)

நடுநாட்டிலே விழுப்புரம் என்னும் ஊரில் இருந்தவர். இவர் முதுகுன்று இரட்டைமணிமாலை, திருநெல்வேலி அனவரததான நாதர், "ஆனிவிழாவணிமாலை" முதலிய நூல்கள் இயற்றியிருக்கிறார். மேற்படி மாலை முப்பத்திரண்டு பாடல்களையுடையது,

> '' தும்பிமுக ராகுவின்மீ தெதிரே செல்லத்
> தூயவிரு தேவியொடு மஞ்ஞை யூர்ந்து
> தம்பியெனுங் கந்தவேள் சார்ந்து மேவத்
> தமிழ்வேத சம்பந்த ராதிமூவர்

கும்பமுனி முதலானோர்க் கருளுதந்தி
　　குருசண்டி கேசர் முதல்விமானஞ் சூழச்
சம்புமையா ளோடுமுதல் நிசியில் செய்த
　　தகுதிபெறும் ஊர்வலநீர் தரிசிப் பீரே.''

என்பது நூலில் எட்டாவது பாட்டு. இவ்வாறே நூல்முழுவதும் திருவிழாச் சிறப்பைக் கூறிச் செல்கிறது.

## கசகூக. முருகேச முதலியார் - ம
## (20 - நூ)

இவர் சொர்க்கபுர ஆதீனம் சுப்பிரமணியத் தம்பிரானிடம் இலக்கண இலக்கியங்களையும் சைவசித்தாந்த நூல்களையுங் கற்றவர். தம்மாசிரியராகிய தம்பிரான்மீது இவர் பதிகமொன்று பாடியுள்ளார். அப்பதிகம் சுப்பிரமணியத் தம்பிரான் பதிக மெனப் பெறும்.

''சிந்தா மணியே கற்பகமே
　　தெளிசெந் தேனே தெள்ளமிர்தே
நந்தா ஞான மணிவிளக்கே
　　நண்ணி னோர்க்கெய்ப் பினில்வைப்பே
எந்தாய் சுப்பிர மணியதே
　　சிகனே யென்றென் றுனையேத்திச்
சிந்தா குலமற் றினிதிருக்கச்
　　சிறியேற் கெய்தி யதுவியப்பே ''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## கசகூஉ. முருகேச முதலியார் - மு

புதுச்சேரியில் சிறந்த புலவராக விளங்கிப் பலருக்குத் தமிழ்க் கல்வியைப் போதித்துக்கொண்டிருந்த முத்தைய உபாத்தியாயர் என்பவருக்கு இவர் மகனாகத் தோன்றினார். தந்தையிடமே பல நூல்களையுங் கற்றுச் சிறந்த தமிழறிஞரானார். பொருட்பாதுகாப்பு நிலையம் ஒன்றில் அலுவலில் இருந்த இவர் நூல்கள் பலவற்றிற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். மனுச் சோழச் சக்கரவர்த்தி சரித்திரப்பா என்னும் நூலுக்குப் பாடிய பாடலை அடியிற் காண்க.

" சீராரும் புதுவைமா நகரில் வாழும்
தேசாதி காருட்சிறந்த திறலோ னான
பேராரும் பெரியநம்பி வள்ளல் செய்த
பெருந்தவத்தில் வருஞ்சீநி வாசநல்லோர்(கு)
ஏராரும் இளவலெனை உதித்த நல்லோன்
எழில்நாரா யணசாமி இனிது தேர்ந்தே
பாரசருஞ் சோழனருஞ் சரித்தி ரப்பாப்
பாடினான் நெடிதுபுகழ் கூடி னானே."

## ௧௪௯௩. முருகேசையர்

ஈழவள நாட்டுக் காரைத்தீவிலே மறையவர் குலத்திலே நூற்றெழுபத்தைந்து ஆண்டுகட்குமுன் பிறந்தார். தந்தையார் பெயர் கார்த்திகேசையர். தமிழிலும் வடமொழியிலும் வல்லவர். இவர் இயற்றிய நூல்கள் தன்னை யமகவந்தாதி, தன்னை நாயகர் ஊஞ்சல், குருச்சேத்திர நாடகம் முதலியன. இவர் கி. பி. ௧௮௯௦ ஆம் ஆண்டிற் காலமானார்.

## ௧௪௯௪. முள்ளியார்

பழங்காலப் புலவர்களில் ஒருவர். இவர் 'கவித்தொகை' என்னும் பெயருடைய இலக்கண நூல் ஒன்று இயற்றினார். முன்னாளிற் சிறந்து விளங்கிய இந்நூல் பிற ஆசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டது.

" மங்கை முதலா மற்றவரும்
ஆடை யுடுத்தலும் ஆடகம் புனையலும்
அம்மனை கழங்கே ஊசல் பந்தொடு
சூது பொருதலும் காவிற் பிரிதலும்
பல்லோ ராயத்தி னுமக்களுள வாக
அனையவை பிறவுமவர்க் குரிய வென்ப."

என்பது நூலின் சூத்திரங்களில் ஒன்று. முழுநூல் மறைந்துபோக மேற்கோளாகச் சென்ற சிலசெய்யுட்களே எஞ்சியுள்ளன.

## ௧௪௯௫. முனிசாமிப் பிள்ளை - ஏ

(20 - நூ.)

இவர் சென்னைமாநகரில் ஏகாம்பரம் பிள்ளை என்பவருடைய மகனாகத் தோன்றியவர். கா. நமசிவாய முதலியாரிடம் இலக்

கண இலக்கியங்களைக் கற்றுத் தேறியவர். இருநூற்றெழுபது அடிகளைக்கொண்ட திருப்போரூர் ஆற்றுப்படை என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிறார். இவ்வாற்றுப் படையைப் பாராட்டிக், கா. நமசிவாய முதலியார், கோ. வடிவேலுச் செட்டியார், செம்பூர் வித்துவான் ஆறுமுகஞ் சேர்வை, கா. ர. கோவிந்தராச முதலியார், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், பாண்டிய மங்கலம் நெயினுமுகமதுப் பாவலர், மணிமங்கலம் திருநாவுக்கரசு முதலியார், மதுரை கந்தசாமிப் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"கடல்புடை யுடுஇய வளிகுலாங் கறங்கும்
விளம்பழம் புரையில் வளம்பொலி ஞாலத்
துலையாப் பெரும்பத மோவற வளிப்போன்
வேறுவே றண்டமும் விளம்பரு முயிரும்
பேதற வின்றிப் பெரிதுவந் தமைத்தோ
ரிமையம் பூத்த வுமையுடன் றோன்று
மாண்டகை படைப்பின் மாண்டகு மன்பதைத்
தலைமைத் தாமெனத் தகவுறு மறைபனு
மெத்திறத் தாலெனி னியம்புதுங் கேண்மின்."

என்பது நூலின் தொடக்கம்.

## ௧௪௬௬. முனிசாமிப் பிள்ளை - வ
(20 - நூ.)

இவர் கொங்குவளநாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்தில் அண்மைக் காலம் வரையில் வாழ்ந்திருந்தவர். தமிழ்மொழியிலும் தெலுங்குமொழியிலும் நல்ல புலமை பெற்றிருந்தவர். மிகுபுகழோடு விளங்கியிருந்த இவர் "முப்பத்தைந்து தாளதர்ப்பணம்" என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூல் இராக தாளங்கள் கற்ற சங்கீதலய ஞான விற்பனர்கட்கும் சங்கீத மாணவர்கட்கும் பெரும்பயனை அளிக்கக் கூடியது.

## ௧௪௬௭. முனிசாமிப் பிள்ளை - கோ
(20 - நூ.)

இவர் சென்னை பெத்துநாயக்கன் பேட்டையில் கோபாலுப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். விநாயகக்

கடவுள்மீது "ஏகமணிமாலை, துவிதமணிமாலை" என்னும் நூல்களைப் பாடியுள்ளார். ஏகமணிமாலை ஒரே பாட்டாக அமைந்திருக்கிறது. துவிதமணிமாலை இரண்டு பாட்டாக அமைந்திருக்கிறது. ஏகமணிமாலையின் முதல் அரைக்காற் பாடலை அடியிற் காண்க:

"மதிபுகழும் திருமுகனை சகமுடையாரது மாதுமையும்
மடியாதுவளர் கடவுளை மெண்ணிவரு நாதனை
மறைமுடிமேலேயானிர்ப்பரனைவதனல் குபமுடன்
மணித்தர் நல் தேரவரு ளம்மடியி னுசியாய்
மறுவிலொரு கோடிநகன் ஜொடுமநாமமெபாழியும்
மறுமனியி னுளைமூமன்னமரைம் பாணியாய்
மதியிலக ளொறுமவர் ஜூவுமந மாவிணையும்
மடியவனி சேரவழி யும்மலவி பேரசனு
மலரிணை மறு தெனதனை நுகருதலி லீதிகர
மகனிரது போசமதை என்றுமெமை யாள்பவர
வளைகவளைகக ளாயுலகர் அந்புரிய மாசில்பல
வடிவமுட னுளவரு மன்னுகரு னைகரா
மனுமெய்யுமெய்ய் போகவதன வலியமுறிய மாசில்பல
வளர்படையு மாபதனி மெய்ன்னுமனை யீபவர
"தமிழைசய தீதருட னுலைந்துறைவர் பாடவவர்
வலியதுறை யோடவருள் பண்ணியகணேசனே!"

## ௧௪௯௨ முனிசாமி முதலியார் - தி
## (1876)

இவர் "குதர்க்கவாத விபஞ்சனி" என்னும் உரைநடை நூல் ஒன்றை எழுதியுள்ளார். இஃது ஒரு மறுப்புரை நூலாகும். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

## ௧௪௯௧ முனிசாமி முதலியார் - பு

தொண்டைவள நாட்டில் புங்கத்தூரில் பொன்னம்பல முதலியார் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரிடங் கல்விகற்றுப் புலமை பெற்றார். இவருடைய தந்தையாருஞ் சிறந்த புலவரே.

"சீர்வளர்ந் தோங்கும் நீர்வளம் நிறைந்த
தண்டமிழ்ச் சோழ மண்டல மதனில்

விழைவே பெருகும் பழையா றையெனும்
பதிதனில் உலவும் இதமுறு வணிகர்
குலத்துதித் தன்பர் நலத்தை விரும்பி.''

என்பது இவருடைய சிறப்புப்பாயிரப் பாடல் ஒன்றின் தொடக்கம்

## க௫௦௦. முனிசாமி முதலியார் - செ
## (19 - நூ.)

தொண்டைவள நாட்டில் வேலூரில் செங்கல்வராய முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். அறுவைக் கடை வைத்து வணிகஞ் செய்துகொண்டிருந்தவர் என்பது "ஜவுளி, கஹர்'' என்னும் அடைச்சொற்கள் இவருடைய பெயருக்கு முன்னால் அமைந்திருப்பதைக்கொண்டு அறியப்படுகிறது. துணிக்கடை வாணிகத்தோடு நின்றுவிடாமல் நூல்களைப் படித்துத் தாமும் நூல் எழுதும் ஆற்றல் பெற்றவராய், 'துக்காராம் சுவாமிகளுடைய வரலாறு' ஹரிநாம தோத்திரப்பா முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

''ஞானம் படிமிசையோர் நன்னுருக்கொ டார்ந்தொளிரும்
கோனவனுந் துக்காராம் கொற்றவனை—நானிலத்தில்
வாழ்வார்க் குணவா வழங்கற் கருட்கண்வைப்பாய்
தாழ்மையிலா அங்குசத் தாய்.''

என்பது நூலின் காப்புப்பாட்டு.

## க௫௦க. முனிதாச சுவாமிகள்
## (1862)

துறவியாக விளங்கிய இவர் பெங்களூரில் இருந்தார். இவர் மெய்ஞ்ஞானத்திரட்டென வழங்கும் அருட்பாமாலையைப் பாடியுள்ளார். அந்நூல் அகத்திச குருவணக்கம், பரிபூரணானந்த சிவம், ஆனந்த மௌனகுருவணக்கம், அருள் சச்சிதானந்த விளக்கம், சோதி வாழ்த்து, வள்ளல், பூரணவாட்சிப்பத்து, எந்நாட் பத்து, ஏற்றைப்பதிகம், நமச்சிவாயப் பதிகம், சிவானுபூதி, ஆதிமாலை, நெஞ்சுறுத்தல், திருவெண்பா, நெஞ்சப்பத்து, விண்ணப்பப்பத்து, பரசிவக் கண்ணி, பூரணக் கண்ணி, எந்நாட் கண்ணி,

ஆனந்தக்களிப்பு முதலிய பகுதிகளையுடையதாய் நானூற் றெண்பத்தாறு பாடல்களுடன் விளங்குகிறது.

நூலைப் பாராட்டித் திமிரி செந்தமிழ்ப் புலமை முத்துச்சாமி முதலியார், சிந்தாமணி இராமலிங்க முதலியார், வேலூர் கிருட் டிணசாமி நாயகர், தொ. சபாபதி முதலியார், ஆறைமாநகர் திருவேங்கடப் பிள்ளை, பெங்களூர் ஐயாச்சாமி முதலியார், செங் காடு சேடாத்திரி ஐயங்கார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளனர்.

"இட்டமுட னென்னடி துதிக்குமெற் குன்னெஞ்
சிரங்கா திருப்பதேனோ
இலகுநீ ரினிலெழுத் தாகும் மலபாண்ட
இருவினைக் கூட்டினுள்ளாய்த்
துட்டவைம் புலவேடர் பொட்டென வடர்க்கத்
தொடர்ந்தகங் காரவசமாய்த்
துடிதுடித் துக்காம வெறிபிடித் துள்ளம்
துவக்குற்று மிகமெலிந்தேன்
திட்டையை இயற்றிடச் சுத்தசை தன்யமிசை
நிலைகூடி நிற்கவெளினும்
நீணிலத் தாசையொன் றுய்ததிரண் டேழைமுன்
நேர்படற் கென்செய்குவேன்
அட்டதிசை முட்டிவளர் வெட்டவெளி யேவிரைவில்
அசிபதந் தந்தாளுவாய்
ஆத்மபர மாத்மகுரு ஆனந்த மௌனகுரு
ஆமகத் தீச குருவே."

என்பது அகத்திசகுரு வணக்கத்தில் ஒரு பாட்டு.

## ௧௫௦௨. முனியப்ப பிள்ளை - வி
(1890)

இவர் உடுமலைப் பேட்டையில் இருந்தவர். பி. ஏ. பி. எல் வரை ஆங்கிலக் கல்வி கற்றிருந்ததோடு தமிழ்க் கல்வியையும் நன்கு கற்றிருந்தார். முன்சிபுக் கோர்ட்டில் வழக்கறிஞராக இருந்த இவர் உலோப நாடகம் என்னும் பெயரோடு நாடக நூல் ஒன்று இயற்றினர். அந் நூல் உலோப குணத்தைக் கண்டித்து நல்லியல்போடு வாழவேண்டுமென்று நாடக முறையில் அமைந்தது.

## ௧௫௦௩. முனியப்பா சாரி
(1875)

இவர் சென்னை கோமளேசுரன் பேட்டையில் வாழ்ந்திருந்தவர். மநுலேத்தநகர் என்னும் ஊரினர்.

௧. அண்டபுவன விளக்கம்
௨. ஆதிசங்கராசாரியார் வரலாறு
௩. ஆதிப்ரசமய கோளரிநாதர் வரலாறு
௪. போத்தலூர் விரப்பிரம வரலாறு
௫. சேலஞ்சில்லாத் தீர்ப்பு
௬. புராணவிதி கண்டனம்
௭. விப்பிரவிகாதம்
௮. பூசுரர் பூர்வோத்திரம்
௯. சங்கராச்சாரி சம்வாதம்
௧௦. விசுவப்பிரம விநவிடை
௧௧. விசுவவித்தியா வித்தியாபரணம்
௧௨. ரதாரூடம்
௧௩. கோத்திரகாண்டம்
௧௪. திரிகால சந்தியாவந்தனம்
௧௫. கோமளீசுர புராணம்
௧௬. கோமளீசுரர் இசைப்பாடல்
௧௭. கோமளீசுரர் ஆட்கொண்ட முறைமை
௧௮. கோமளீசுரர் மீனாட்சி முறைபாடு
௧௯. சிவகுருநாதர் அலங்காரம்
௨௦. கோமளயோகி விலாசம்
௨௧. விசுவப்பிரம விளக்கம்
௨௨. கோமள விநாயகர் தோத்திரம்
௨௩. மதுரை வீரன் வாசகப்பா

என்பன இவரால் இயற்றப்பெற்ற நூல்கள்.

## ௧௫௦௪ முனியப்ப முதலியார் - பா
(19 - நூ.)

இவர் பாரிப்பாக்கம் என்னும் ஊரில் இருந்தவர். பிறை அருணசல அடிகளாரிடத்தில் வேதாந்த நூல்கள் பலவற்றை

ஓதியுணர்ந்ததன்றி இலக்கண இலக்கியங்களிலும் சிறந்த பயிற்சி யுடையவராக இருந்தார். இவரிடம் பலர் நூல்களைக் கற்றுணர்ந் தனர். இவர் காலத்தில், வளவனூர்க் கிருட்டிணப்ப செட்டி யார், விக்கிரபாண்டி காளத்தி ரெட்டியார், புதுவை பொன்னி யார், பொய்கைப்பாக்கம் அப்பாச்சாமி உபாத்தியாயர் முதலி யோர் சிறந்த அறிஞர்களாக விளங்கியிருந்தனர். தம்முடைய ஆசிரியராகிய அருணாசல அடிகளாரின் வேதாந்த சூளாமணி உரைக்கு இவர் நீண்ட ஆசிரியப்பாவாற் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளார்.

"மணிவளர் உததிசூழ் மாநிலம் அதனில்
அணிபெற விளங்குநல் ஆன்மகோ டிகள்தம்
உறுவினை மறந்தறி யாமையோர் உருவாய்
மருளினிற் சுழன்று வருந்திடு காலையில்
தன்னை மறவாத் தன்மையால் மாயையின்
மன்னியோன் அருளால் மகிழ்வுடன் நோக்கி."

என்பன சிறப்புப்பாயிர ஆசிரியப்பாவின் தொடக்கம்.

## ௧௫௦௫. முனியாண்டியா பிள்ளை - க. மு (19 - நூ.)

சேதுவளநாட்டில் பாம்பன் என்னும் பதியில் பத்தொன்ப தாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியங்கற்றுத் தமிழ்ப் புலமை பெற்று விளங்கிய இவர் பாடசாலை யொன்று அமைத்துக் கணக்காயராகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். பாம்பன் சுவாமிகள் என்று புகழ்பெற்று விளங்கியவரும் ஆறாயிரத்து அறுநூற்று அறுபத்தாறு பாடல் களைப் பாடியவரும் பல உரைநடை நூல்களை இயற்றியவரும் ஆகிய குமரகுருதாச சுவாமிகள் என்னும் பெரியார் தமது இளமைப்பருவத்தில் இந்த முனியாண்டியா பிள்ளையிடந்தான் கல்வி கற்றார். அடிகளார் இயற்றிய சிவஞான தீபம் என்னும் நூலுக்கு இவர்,

"ஆழிசூழ் உலகத்தில் ஆயகலை வழுவின்றி
ஆயும்நல் அறிவுவிஞ்சி
அகிலம்நனி சந்ததம் தெளிவுபெற் றுய்யவும்
அரனடிக் காளாகியுன்

பாழிலா தின்னன்பர் பத்திவழி முற்றவும்
பண்ணவர்கள் சொற்றவாறே
பகருமுறை யாலினிய கனிகண்டு சினியின்
பண்பெலா மொன்றமுதமாய்த்
தாழிதனில் இடுமத்தி னுடையும்வெண் தயிரெனச்
சஞ்சலவி காரம் எவையும்
தள்ளவளர் சிவஞான தீபமெனும் ஒண்பெயர்
தனைப்பெற் றிலங்கு நூலை
வாழினிய சற்சனன் மாவிரத விற்பனன்
மதிகொளப் பாவு நிபுணன்
வசனரு பத்தினில் வருத்தனன் குமரகுரு
மாவருட் டகைமை கொண்டே.''

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார். அப்பாவுப் பிள்ளையென்பது குமரகுருதாச அடிகளாருக்குப் பெற்றோர்கள் இட்ட பிள்ளைப் பெயர். இவர் ஏதேனும் நூல்கள் இயற்றியுள்ளாரா என்னுஞ் செய்தி தெரியவில்லை.

## கருகூ. மூக்கப்பன்

வடமொழியிலுள்ள நீதிசாரம் என்னும் நூலினை இவர் தமிழில் மொழிபெயர்த்து விருத்தப் பாக்களாகப் பாடியுள்ளார்.

'' சீர்பெறு தருமஞ் செய்கை
தெரிந்ததின் வழியே சென்று
பேர்பெறப் புத்தி பண்ணித்
தனக்கது பலித்தி டாது
ஏர்பெறு கரும மெல்லாம்
யாவர்க்கும் ஆகா தென்று
தேர்வுற விடுத்த றத்தை
ஒல்லையிற் செய்வர் தாமே.''

என்பது நூலில் ஒரு பாட்டு. இம் மூக்கப்பனைப் பற்றிய பிற விவரங்கள் தெரியவில்லை.

## கருஎ. மெய்ப்பாத புராணிகர்

இவர் திருப்பைஞ்ஞீலிப் புராணம் என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந் நூல் வடமொழியில் இருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. அகத்தியர் கும்பகோணம் அடைந்தது,

விமலாரணிய மகிமை, சுவேதகிரி மகிமை, துர்க்கைபூசையின் மகிமை, சக்கிரத்தியாக மகிமை, கபாலமோசன மகிமை, இரத்தினசபையின் மகிமை, தேவேந்திரன் பூசைசெய்த மகிமை, காமதேனு பூசைசெய்த மகிமை, ஆரணியவிடங்கர் மகிமை, அதிகாரவல்லவர் மகிமை, அக்கினிபூசை மகிமை, வாயுபூசை மகிமை, தாற்பியர்பூசையின் மகிமை, இராமர்பூசையின் மகிமை, நரசிங்கபூசையின் மகிமை, கவியுகராம பாண்டியன் பூசையின் மகிமை, முசுகுந்தசோழன் பூசையின் மகிமை, வியாக்கிரசூரன் பூசையின் மகிமை, அர்ச்சுனன் பூசையின் மகிமை, சிவமித்திரன் யாக மகிமை, பதுமகர்ப்பன் உபதேச மகிமை, சுதர்மன் பதவி யடைந்த மகிமை, அங்கமித்திரன் சாபவிமோசனம் பெற்ற மகிமை, அப்பருக்குக் கட்டமுது அளித்த மகிமை என்னும் இருபத்தைந்து பிரிவுகளை உடையது.

இந் நூலாசிரியருக்கு வீரபத்திரன் என்னும் பெயரும் இருந்திருக்கவேண்டு மென்பதும் மதுரைப்பதியில் இருந்தவர் என்பதும் விசுவகுலத்தினர் என்பதும் காராளகுலத்தில் தோன்றிய தேவராயபூபாலர் என்பவர் கேட்டுக்கொண்டதற் கிணங்கிப் பாடினுரென்பதும் பின்வரும் பாடல்களாற் பெறப் படுகின்றன.

"பேரான பைஞ்ஞீலிப் புராணமதை
உரைசெய்யப் பிரிய மாகக்
காரான குலதேவ ராயபூ
பாலனிதம் கருத்தாய்க் கூற
சீரான விசுவகுல வீரபத்ர
மகிபாலன் சிந்தை வைத்துத்
தாரான மாவெழுதி இருவர்களும்
புகழ்பெற்ருர் தரணி மீதே."

"தரணிபுகழ் மதுரைசிவப் பிரகாசர்
சந்ததியின் முதல்வ னுய
அரவணிந்தா ராகமசாத் திரங்கள்வல்லோன்
ஆவுடையன் அவனி யெங்கும்
பரவுதிருப் பைஞ்ஞீலிப் புராணமதைப்
பார்த்தறிந்தாங் குரையேசெய்தான்
குரவர்கள்தம் புதல்வர்சொலைக் கொண்டாடி
மகிழ்வதெனக் குறிக்கத் தானே."

## கரு௦அ. மெய்யப்ப செட்டியார் - வி. மெ (1899)

காரைக்குடியில் நாட்டுக்கோட்டைத் தனவணிக மரபில் தோன்றியவர். இவருடைய பெயர் விட்டுணுதாசர் எனவும் வழங்கியது. இவருடைய தந்தையார் பெயரும் மெய்யப்ப செட்டியார் என்பதே. இவர் திருவருட் சதகம் என்னும் நூலைப் பாடியுள்ளார். அந் நூலுக்குத் தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், காரைக்குடி பாலசுப்பிரமணிய ஐயர் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

*"ஒப்பிலா மணியே இந்த*
*உலகெலாம் ஆண்டோய் நாயேன்*
*எப்பிழை செய்த போதும்*
*இன்பமா யுகந்து காப்பாய்*
*தப்பிதங் கல்லாற் செய்த*
*சாக்கிய நாய னார்க்கும்*
*அப்பதம் உதவிப் பின்னும்*
*அன்பரைக் காத்த வாலே."*

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கரு௦கூ. மெய்யப்ப செட்டியார் - கு மெ

பாண்டிவள நாட்டில் காரைக்குடியில் இருந்தவர். இவருடையதந்தையார் பெயரும் மெய்யப்ப செட்டியார் என்பதே. இவர் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் கல்வி பயின்ற வன்றொண்டச் செட்டியாரிடம் கல்வி பயின்றவர். புலமையிற் சிறந்து விளங்கிய இவர் செவ்வலூர் மதுரைநாயகியம்மைமீது பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலைப் பாடியுள்ளார்.

*"விருப்பமொரு கணமேனும் உன்னடிக்கண் நிறுவேன்*
*வெற்றுடலே பொருளாக விழைந்துமனங் களிப்பேன்*
*கருப்பனுகைத் திடவருபுங் கவத்தினுன மருண்டே*
*கடைப்பட்ட மடந்தையரே கதியென்று திரிவேன்*
*செருப்பயின்ற மகிடனுயிர் அழித்தமரர்ப் புரந்த*
*திரிபுரையென் றுனைப்பாடிச் செவ்வலூ ரடைந்தேன்*
*பொருப்பனையர் சிகரசின கரம்புகுந்து பாவேன்*
*பொறியிலியென் கடைநாட்கும் புகலுண்டோ புகலே."*

என்பது அந்தாதியில் ஐம்பத்தைந்தாவது பாடல்.

## ௩௫௰. மௌனகுரு அடிகள்

மதுரை மாவட்டம், பெரியகுளம் என்னும் ஊரில் பல ஆண்டுகளாக இருந்தவர். இவர், "மாமௌனமணிக் கோவை"—என்றும், "மெய்ஞ்ஞான அனுபூதிரசம்" என்றும் பெயரமைந்த அறிவு நூலை இயற்றியிருக்கிறார். நூல் மூவாயிரத்து இருநூற்றெண்பத்திரண்டு பாடல்களைக் கொண்டது.

"பேசாப் பெருமை பிடித்தவூர் எங்களூர்
பேராண்மை பூண்ட பெரியவூர் எங்களூர்
வாசாங் கிரியைக் கடங்காவூர் எங்களூர்
வாசாம கோசரம் ஆனவூர் எங்களூர்
போத மயமாய்ப் பொருந்தும்வூர் எங்களூர்
புருடார்த்த புனிதமாய்ப் புணரும்வூர் எங்களூர்
பேதங் கறந்து பெருக்கும்வூர் எங்களூர்
பேரின்பம் பொங்கித் ததும்பும்வூர் எங்களூர்."

என்பன பாடலின் சில பகுதிகள்.

## ௩௫௧. மௌனகுரு ருத்திர மூர்த்தி - வே (1883)

இவர் பழனியம்பதியில் வேலாச்சாரி என்பவருடைய மகனாகத் தோன்றியவர். இவர் பழனியாண்டவர் மீது இசைப் பாடல்கள் பல இயற்றியிருக்கிறார்.

இராகம்-கமாஸ்-இந்துஸ்தானி-ஆதிதாளம்.

பல்லவி

சிவகந்தர குமர-வேலோனே — ஞான சிவ

அனுபல்லவி

மோனந்தந் தருள்வாயே — (ஓ-ஞான சிவ)

சரணங்கள்

மாருகனே மாகுகனே
மோனந்தந்தருள் வாயே — (ஓ-ஞானசிவ)
சேவலனே காவலனே
மோனந் தந்தருள்வாயே — (ஓ-ஞானசிவ)
மௌனகுரு ருத்ரமூர்த்தி
வாழ்த்துஞ் சண்முக தேவா — (ஓ-ஞானசிவ)

என்பது அவ்விசைப் பாடல்களில் ஒன்று. சின்னையா தேசிகர், அவிநாசி — கு. சுப்பராய ஓதுவார், சிவஞானமாச்சாரியார், வெ. கிருட்டிணசாமி நாயகர் என்போர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"சிவகிரியின் முடிமிசைவாழ் சரவணேற்
பவகுமர தேவன் மீது
அவனிமிசைத் திருத்தொண்டர் முதலெவரும்
நாள்தோறும் அன்பாய்ப் போற்றச்
சுவையமுத சாவளியைச் செந்தமிழால்
செய்துமனோ சுகத்தைப் பெற்றான்
நவநிதியந் திகழ்மவுன குருகுத்ர
மூர்த்தியெனு நளின மாலை."

என்பது, வெ. கிருட்டிணசாமி நாயகர் என்பவருடைய பாடல்

## கருகஉ. மௌன சாமிகள்

இவர் திருப்பேரூர் என்னும் மேலைச் சிதம்பரத்தில் இருந்தவர். இவர், திருவருட்பா, கொலை மறுத்தல் முதலிய நூல்கள் இயற்றியிருக்கிறார். அவை மிகவும் இனிமையுடையவை.

"சித்த னேசிவ லோகனே சிட்டர்
போற்று கின்ற செழுஞ்சுடர்
முத்தனே மூவர் முதல்வனே எங்கள்
முழுமுதற் பெருஞ் சோதியே
நத்தி நாயினுங் கடைய னாகிய
நாயி னேனையும் பொருளதாய்க்
கத்த னாகிய கடவு ளேவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே."

என்பது திருக்கழுக்குன்றம் குரு தரிசனப் பாடல்.

"புத்தியில் லாத மாந்தர் புலையர்கள் பலபேர் கூடிக்
கத்தியே திரிவா ரந்தக் குருட்டுக்கண் கழுதை மாந்தர்
அத்தனைத் தன்னுட் காணார் அவரவர் மதங்கள் பேசி
நத்தியே நமனுக் காளாய் நரகெலாம் உழல்கின் றாரே."

"ஊத்தையாம் உடலைப் பேணி உயிர்களைக் கொன்று தின்னும்
கூத்திமார் மக்கள் அந்தக் குருட்டுக்கண் கூகை மாந்தர்
ஆத்திமா மலர்கள் சூடும் அப்பனைத் தம்முட் காணார்
நாத்திகம் பலவும் பேசி நரகெலாம் உழல்கின் றாரே."

என்பன கொலை மறுத்தலில் இரண்டு பாடல்கள்.

## ௧௫௪௩. யாகோபு

இவர் யாகோபு வைத்திய சிந்தாமணி, யாகோபு சுண்ணம் மூந்நூறு, யாகோபு வைத்திய சிந்தாமணி எழுநூறு, யாகோபு சுண்ணக் காண்டம் அறுநூறு முதலிய நூல்களை இயற்றியிருக்கிறார்.

"காலைரவே ராதண்டை வேரும் நேராய்க்
கண்டித்து இருதூக்குக் கசாயமிட்டு
நீரதனை வடித்துப்பின் குழம்ப தாக்கி
நிறுத்துமே கிராம்புரெண்டு பலமும்இட்டு
ஊரியபின் குளம்புடனே அரைத்து குண்டை
உருட்டியுண்ண வருகுன்மம் சுவாச காசம்
தீருமென்று யாகோபுப் பெயரோன் இத்தைச்
செகத்திலென் றன் பேர்விளங்கச் செப்பினேனே."

என்பது இவர் சுவாசகாசத்துக்கு மருந்து கூறும் பாட்டு.

## ௧௫௪௪. யூகிமுனி

இவர் சித்தர்களில் ஒருவர். மருத்துவ நூல்கள் பல செய்திருக்கிறார்.

"ஓதகம்போல் ஒளிமிகுந்த சுவாச காசம்
ஒடுதற்குச் சிந்தூரம் உரைக்கக் கேளும்
பாதகத்தைத் தினம்பொடித்து வயச்சட்டி யிட்டுப்
பாருநீ சுகதுக்கப் பச்சிலைச்சா றாற்றி
சாதகமா யுலையிட்டு நீர்சுருங்கத் தேய்க்கச்
சாமிகுகன் அருள்தன்னாற் றளதனென உருகும்
நிதகலப் பலகைதனில் இட்டுநன் றாய்ப் பொடித்துத்
தீங்குள்ள காசமெலாம் தீருநா ளியே."

என்பது இவர் தாளகசிந்தூரஞ் செய்தற்குப் பூரணம் நூறு என்னும் நூலில் கூறியதாகும்.

மற்றும் இவரால் செய்யப்பட்ட நூல்கள் வாதாங்க திட்சை விதி—௩௦௦, வாத வைத்திய விளக்கம் ௨௦௦, மதி வெண்பா, கும்மி ஆயிரத்திற்குத் திறவுகோல் ௧௦௦, வாத உலா ௧௦௦௦, கரிசலை முதலியன.

## கருகரு. வகுளாபரணதாசர்
(19 - நூ.)

இவர் சோளங்கிபுரம் என்னும் ஊரில் இருந்தவர். வைணவ சமயத்தினர். 'பராங்குசதாச வைபவ சங்கிரகம்' முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

"சார்மேவு நெஞ்சமே தாசர் பராங்குசனார்
சீர்மேவு வைபவத்தைச் செப்புதற்குப்—பேர்மேவு
மாகவதர் காட்டி மயக்கப் பிறப்பறுக்கும்
பாகவதர் தாட்டுணையே பற்று."

என்பது நூலின் காப்புப் பாடல். நூல் நாற்பத்திரண்டு பாடல்களைக் கொண்டு விளங்குகின்றது.

## கருகசு. வசவலிங்கபௌராணிகர் – ப
(1896)

இவர் துறையூர் சிவப்பிரகாச சுவாமிகள் ஆதீனம் சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதியவர்களிடம் மாணவராகிக் கல்விகற்றுச் சிறப்படைந்து அவ்வாதீனப் புலவராகவும் புராணச் சொற்பொழிவு செய்பவராகவும் விளங்கினார். "புகழ் அந்தாதி" என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரத்தை அடியிற் காண்க:

"சாமிவிண் ணோர் போற்றுசிவ சம்புமிசை யிம்பர்கந்த
சாமிமகி பாலனுளந் தான்கனிந்து—பூமிபுகழ்
அந்தா தியையிதழி அந்தொடையல் நேர்தேன
வந்தா தியை வனைந்தா னும்."

## கருகஎ. வடக்கனூர் சோதிடர்
(19 - நூ.)

இவர் ஏறக்குறைய நூறு யாண்டுகட்கு முன்பு கொங்கு நாட்டில் இருந்தவர். பள்ளிக்குச் சென்று சிறிது கல்வி கற்றார். பிறகு காலக்கணிதம் பயின்றார். இளம் பருவத்திலேயே பெற்றோர்கள் இறந்தபடியால் ஏழ்மை நிலையை அடைந்தார். தெய்வ பக்தி இவருக்கு மிகுதியாக அமைந்திருந்தது. தும்பை மலரையும்

வேறு மலர்களையும் கோயிலில் அர்ச்சித்து வழிபட்டார். உலகந் துன்பமயம் என்னும் எண்ணம் இவருக்கு இளம் பருவத்திலேயே உண்டாகியது. எப்பொழுதும் தெய்வ சிந்தனையாகவே இருந்தார்.

ஒருநாள் இவர் உறங்கிக் கொண்டிருக்கையில் ஒரு துறவி வந்து நகைத்துக்கொண்டே ஏதோ ஒன்றைத் தம் நாவில் எழுதியதாகக் கனாக்கண்டார். அது முதல் இவருக்கு மனத் தன்பும் மகிழ்ச்சியும் உண்டாயின. அடிக்கடி செய்யுளும் பாடலானார். பொருளில் விருப்பங் கொண்டு பிறருக்குத் தீமை செய்யுந் தன்மை இவரிடம் சிறிதும் இல்லை. எப்பொழுதும் அமைதியாகவே பேசுவார். அறம்பாடும் ஆற்றலும் இவருக்கு அமைந்திருந்தது.

ஒருநாள் வேறூர் ஊருக்குப் போய்விட்டுத் திரும்புகையில் தம் பகைவனாக இருந்த ஒரு பூசாரியின் நாய் இவரைக் கடிப்பதற்கு ஓடி வந்தது. உடனே இவர்,

> "ஆசாரி நின்ற அறங்காத்தான் எங்களின்
> பூசாரி நாய்புழுத்துச் சாகாதா."

என்று பாதிபாடுகையிலேயே அந்நாய் விழுந்து இறந்தது. அந்தப் பாட்டை இவர் முடிக்கவும் இல்லை. வெகுநாள் மக்களுடைய மதிப்பைப் பெற்று வாழ்ந்திருந்தார்.

## கருகஅ. வடிவழகிய நம்பிதாசர்

இவர், தொண்டரடிப் பொடியாழ்வார் பிரபந்தம் குலசேகரப் பெருமாள் ஆழ்வார் பிரபந்தம், திருப்பாணாழ்வார் பிரபந்தம் முதலியவைகளை இயற்றியுள்ளார்.

> "எண்ணுந் திங்கள் ஈராறில்
> ஈசன் உருவாம் மார்கழியில்
> நண்ணுங் கேட்டை தனிற்சிறந்த
> நாற்பாற் குலத்தின் மேற்பாலாய்
> மண்ணும் விண்ணும் தொழுதேத்த
> மண்டங் குடியாம் மாநகரில்
> அண்ணல் தொண்டர் அடிப்பொடியார்
> பிறந்தார் அறந்தான் சிறந்தோங்க."

என்பது தொண்டரடிப் பொடியாழ்வார் பிரபந்தத்தில் ஒரு பாட்டு.

## ௩௫௧௧. வடிவேலுப் பிள்ளை - வீ
(1871)

இவர் பாண்டிவள நாட்டில் பிறந்தவர். தந்தையார் பெயர் வீரபாகுப் பிள்ளை. இவர் ஈழவளநாட்டிற் சென்று தங்கியிருந்தனர். அந்நாளில் சேரவள நாட்டில் திருவிதாங்கோட்டு மன்னர் பேரவையில் அவைக்களப் புலவராக விளங்கியிருந்த குட்டிக் கவிராசர் என்பவர் வீரவாகுப் பிள்ளைக்கு உடன் பிறந்தாராவர். கொழும்பில் அந்நாளில் இருந்த நமசிவாய முதலியார் என்பவர் கேட்டுக்கொண்டதற்கிணங்கி வடிவேலுப் பிள்ளை திருவானைக் கோட்டை என்னுமிடத்தில் எழுந்தருளிய சுப்பிரமணியக் கடவுள் மீது கோவை ஒன்று பாடியுள்ளார். மேற்படி கோவை ௪௨௫ செய்யுளானமைந்தது.

"தானஞ் சிறந்த திருவானைக் கோட்டைநற் சாமிவெற்பில்
கானஞ் சிறந்த குழன்மயி லேயுன்றன் கண்ணிணைக்கு
மானஞ்சிக் காட்டிலு நஞ்சஞ்சிக் கட் செவிவாய் தனிலும்
தேனஞ்சிப் பூவினுஞ் சேலஞ்சி நீரினுஞ் சென்றனவே."

என்பது கோவையில் தலைமகன் தலைமகளைப் புகழுந் துறையமைந்த பாட்டு. இக் கோவையைப் புகழ்ந்து, வண்ணச் சரபம் தண்டபாணி யடிகள், திருநெல்வேலி சாலிவாடீசுர ஓதுவா மூர்த்தி, அம்பலவாணன் கவிராசர், புதூர் வள்ளிநாயகம் பிள்ளை, விசயநாராயணம் வடிவழகிய நம்பி மார்த்தாண்டப் பிள்ளை, ஆழ்வார் திருநகரி இராமானுசன் கவிராசர் ஆகியோர் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். இக் கோவை ௧௮௭௧ ஆம் ஆண்டில் திருநெல்வேலி முத்தமிழாகர அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

## ௩௫௨௦. வடிவேலு முதலியார் - திருமழிசை

இவர், சொர்க்கபுரம் இராமலிங்கத் தம்பிரானிடங் கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து திகழ்ந்தார். முருகக் கடவுள் மீது திருப்படைவீட்டு வண்ணப்பா, குமரேச அட்டகம், முருகன்

நேரிசை வெண்பா, முருகர் தோத்திரப்பா முதலிய செய்யுள் நூல்கள் பாடியுள்ளார்.

" வன்ன மாமயில் ஊரும்வைபோகனே
வளரு மோர்கரு ணைப்பிர வாகனே
சொன்ன மாமெனச் சொல்லுறு நேகனே
தூலநுக்குமம் அற்றவி தேகனே
மின்ன மாரும் விழாக்கொ ளானோ திகனே
தேசம் எத்துறும் ஏகஅ நேகனே
பின்னம் ஏதும்இ லாதநன் வாய்பெறும்
பேறெ றுந்தலம் வாழ்கும ரேசனே."

என்பது இவருடைய குமரேச அட்டகத்தில் ஒரு பாட்டு. மேலும் இவர் திருநல்லூர்க் கலம்பகம் என்னும் நூலுக்கு,

" உரன்வாயில் எனவறியும் உண்மையுணர்ச்
சியில்தலைமை உற்றோன் என்னும்
அரசவாயில் நகரினவ் வெண் பாப்புலிவேங்
கடசுப்பெ னறிஞ ரேறும்
பரன்வாயில் உலகுயிர்கட் காவுதித்த
ஆரணங்கள் பணிநல் லூர்ச்
சுரன்வாயி சைக்கநூலு லக்கலம்ப
கந்தமிழில் சொற்றான் மன்னோ."

என்று சாத்துக் கவி பாடியுள்ளார்.

## கருஉக. வடிவேலு முதலியார் - தி
## (20 - நூ.)

நடு நாட்டில் திருவெண்ணெய் நல்லூரில் இருந்தவர். தி. ந. சுப்பிரமணிய முதலியார் என்பவரிடத்தில் கல்வி கற்றுப் புலமையடைந்து பொதுநலச் செயல்களிலே ஈடுபட்டு விளங்கினர். செய்யுள் பாடுந்திறம் பெற்றுத் திகழ்ந்த இவர் தம்முடைய ஆசிரியரின் ஆசிரியராகிய இராசப்ப நாவலர் என்பவர் இயற்றிய திருவெண்ணெய் நல்லூர்க் கலம்பகம் என்னும் நூலுக்கு,

" திருமாதுறு வெண்ணெய் வளம்பதியே
திகழ்மாதொரு பாகம் அமைத்தபிரான்
ஒருகான்மணை மாலை தவிர்த்திடுவான்
உளமேமகிழ் வெய்து கலம்பகமாய்த்

தருநாவல ராச னெனும்பெயரே
 தருமேதினி மீதணி மாதிடவான்
உரைவாசக மோதிய போதகர்தாம்
 உறுவார் கணன்மேலுறு போகமதே."

என்னுஞ் செய்யுளைச் சாற்றுக் கவியாகப் பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் விளக்கமாகவில்லை.

## கரு௨௨. வடுகநாத தேசிகர் (க)

இவர் திருவாரூர் வைத்தியநாத நாவலருடைய நான்காம் புதல்வராகத் தோன்றியவர். இவர் பிற்காலத்தில் சீகாழியில் வசித்திருந்தபடியால் சீகாழி வடுகநாத தேசிகர் என்று கூறப் பெற்றார். திருமுல்லை வாயிற் புராணம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது.

"ஐந்து பூதமும் ஐந்து புலன்களும்
ஐந்து மூர்த்தமும் ஐந்து பிரமமும்
ஐந்து நற்நெறி லாகி நிறைந்ததும்
ஐந்தெ ழுத்தினை அல்லதொன் றில்லைகாண்."

என்பது பார்ப்பதியார் பஞ்சாக்கர சித்தி பெற்ற சருக்கத்தில் ஒரு பாட்டு. இந்நூல் நானூற்றுப்பதினைந்து பாடல்களையுடையது.

இவர் கச்சியப்ப முனிவர் காலத்தினரெனவும் கச்சியப்ப முனிவர் சென்னையில் விநாயக புராணம் அரங்கேற்றியபோது அவ்வவைக்குத் தலைவராக அமர்ந்திருந்தாரென்றும் கூறப்படு கிறது.

## கரு௨௩. வடுகநாத தேசிகர் (௨)

இவர் இக்காலத்தில் வைத்தீசுவரன் கோயில் என வழங்கும் புள்ளிருக்கு வேளூர்ப் புராணத்தை அட்சயலிங்கத் தம்பிரான் என்பவருடைய வேண்டுகோளின்படி ககஙரு பாடல்களாற் பாடியுள்ளார்.

" திகழ்சிவ ஞான தேசிகன் அருளால்
 தெளிந்துளஞ் சகலசாத் திரமும்
புகழ்பெற உணர்ந்தோன் அட்சய லிங்கப்
 புண்ணிய முனிவரன் புகல

*அகழ்கடல் உலகில் வடமொழி வேளூர்ப்*
*புராணந்தென் மொழியினில் அருளி*
*மகிழ்பெற அரங்கேற் றினன்எழில் வடுக*
*நாதன்வாழ் வள்ளிநா யகன்முன்."*

என்பது சிறப்புப்பாயிரம்.

*"வரமகத் துவஞ்சேர் வயித்திய நாத*
*மாநகர் பெயர்சொலக் கேட்போர்*
*பிரமகத் தியுந்தாம் பிறந்தநாள் முதலாய்ப்*
*பிழைபடச் செய்தபா தகமும்*
*உரமற உதறி எறிந்துதம் உடலில்*
*உற்றநோய் முழுவதுந் தீர்ந்து*
*பரமபுண ணியஞ்செய் உத்தமர் பெறும்பே*
*றனைத்துமே பலித்திடப் பெறுவார்.*

என்பது தலச் சருக்கத்தில் ஒரு பாட்டு. முன்னவரும் இவரும் ஒருவரா வேறா என்பது விளங்கவில்லை.

## கருஉச வண்டப் புலவர்

இவர் மதுரைமா நகரிலே பிறந்தார். செய்யுள் பாடுந்திறம் இயற்கையாகவே அமைந்திருந்தது. தெய்வத் திருவருளால் வாக்குப் பலிதமும் உண்டாகியது. முப்பதாவது அகவையில் மதுரையைவிட்டுப் புறப்பட்டு நாடு சுற்றிக்கொண்டு திரிந்தார். சேலத்தைச் சேர்ந்த நாமகிரிப்பேட்டை இவருடைய மனதிற்குப் பிடித்த இடமாக இருந்தது. அவ்விடமே நிலையாகத் தங்கி விட்டார். தமது வாழ்க்கையை நடத்துதற் பொருட்டுச் செல்வர்கள் மீது செய்யுள் பாடிக்கொண்டு போய்ப் பரிசில் பெற்றார். வரகரசி, கேழ்வரகு மா, அரிசி முதலிய எப்பொருளையும் அன்போடு பெற்றுக் கொள்ளுவார். சமயத்திற்குத் தக்கவாறு நடப்பார். உணவைத் தாமே சமைத்து உண்பார்.

தம்மை யாரேனும் எள்ளி நகையாடி விடின் அவர்கள் மீது வசைபாடி விடுவார். இவருடைய வசைப் பாடல்களில் இழி மக்கள் வாயில் வழங்கும் புன்மொழிகள் மிகுதியாகக் காணப் பெறும். அதனால் இவருக்கு வண்டப் புலவர் என்று பெயர் உண்டாகியது. இவருடைய இடுகுறிப் பெயர் இன்னதென்று தெரியவில்லை. ஒருநாள் தீயவன் ஒருவன் இவருக்கு யாதோ

தவறு செய்துவிட்டான். அதனால் மிகுந்த சினங்கொண்ட இவர்,

"திருட்டையே கைக்கொண் டிந்தத் திருமனூர் தன்னில் வாழும்
புரட்டனே உனது வாழ்வு போகுமே எனது சொல்லால்
அரட்டைகள் புரட்டுப் பேச்சால் அணையுமோ அணைந்தி டாது
விரட்டியே சுடும்பார் சொன்னேன் விடாதடா திண்ணந் தானே."

என்று பாடினார். இவர் இவ்வாறு அடிக்கடி பாடிய தனிப் பாடல்கள் பல. தொண்ணூறு ஆண்டுகள் வரை வாழ்ந்திருந்து இற்றைக்கு முப்பது ஆண்டுகளுக்கு முன்னர்க் காலமானார்.

## கருஉரு. வண்ணக்களஞ்சியப் புலவர்

இராமநாதபுரம் மாவட்டத்தில் முதுகுளத்தூர்ப் பிரிவில் உள்ள மீசல் என்னும் சிற்றூரில் இவர் பிறந்தார். இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் ஹமீத் இபுறுகிம் என்பது. இளமைப் பருவத்திலேயே தமிழ் கற்க எண்ணிய இவர் மதுரையை அடைந்து தம்பிரான் ஒருவரிடம் வடமொழி தமிழ் ஆகிய இரண்டு மொழிகளையும் நன்கு கற்றுத் தேறினார். மலையாள மொழியையுங் கற்றுக்கொண்டார்.

வண்ணப்பாக்களை எண்ணியவாறே பாடும் ஆற்றல் இவருக்கு நன்கு அமைந்தது. பல வண்ணப் பாடல்களைப் பாடினார். இவருடைய வண்ணப் பாடல் திறமையைக் கண்டு மகிழ்ந்த நாகூர் அறிஞர்கள் 'வண்ணக் களஞ்சியம்' என்று சிறப்புப் பெயர் வழங்கினர். இதன் பிறகு இவருடைய இடு குறிப் பெயர் மறைந்து வண்ணக் களஞ்சியம் என்னும் பெயரே வழங்கலாயிற்று.

இவர் இராசநாயகம், தீன் விளக்கம், குத்பு நாயகம், அலி பாதுஷா நாடகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இராச நாயகம் என்னும் நூல் நாற்பத்தாறு படலங்களையும் இரண்டாயிரத்து இருநூற்று நாற்பது செய்யுட்களையுங் கொண்டது.

"விதனித்த வறுமை யேனும்
வெளிப்படா மறைச்சொல் லேனும்
சதமுற்ற உயிரைப் போனும்
தகுதித்தோ முமையர் பாலும்

இதயத்தில் களங்கம் நீங்கி
ஏழமை பகரல் வேண்டாம்
அதனிற்கண் குறையக் காணில்
அமைதிப் பெண்ணு வாரே.''

என்பது இராசநாயகத்தில் ஒரு பாட்டு.

இவர் அருட்கவியாக விளங்கியவர். பூட்டப்பெற்ற கதவைப் பாட்டியற்றித் திறந்து தம் அருட் புலமையைப் புலப்படுத்திய வர். இவருடைய பெருமையை நன்குணர்ந்த தஞ்சையரசர் இவருக்குப் பல்லக்கு முதலிய வரிசைகள் வழங்கிச் சிறப்புச் செய்தாராம். யாண்டு செல்லினும் இவர் அச்சிவிகையில் அமர்ந்தே செல்வது வழக்கமாம். இவர் எண்பத்தொன்பது ஆண்டுகள் வரை வாழ்ந்திருந்து இராமநாதபுரம் மாவட்டத்தில் தும்படைக் காக்கோட்டை என்னும் ஊரில் அடக்கமானார்.

## கடுஉகூ. வண்ணப்பரிமளப் புலவர்

பாண்டிவள நாட்டில் மதுரை சிலைமாநகர் புளியங்குளம் என்னும் ஊரில் ஒல்லாமியா சயதுமுகமதுப் புலவர் என்னும் முகமதியப் புலவருடைய மகனாகத் தோன்றினார். புலமைத்திறம் அமையப் பெற்ற இவர் "முகமதியர் காவியம்" என்னும் நூலை இயற்றியுள்ளார்.

"இயலிறசூல் திருவடிசாய்ந் தாண்டு தொள்ளா
யிரத்துடனே கூட்டியவோ ரெண்ப தாண்டில்
முயல்பிர மோதூத வருடந் தையில்
முழங்குபுளி யங்குளத்து ளொல்லா மிய்யா
சயதுமத லைவயது முப்பத் தொன்பான்
தனிலிந்நா னுரைத்தனன்மூத் தமிழாற் போற்றிப்
பயிலுமைமே யெழுனும்பாலப் பிராயந் தன்னிற்
பரிந்துவண்ணப் பரிமளப்பேர் சேர்ந்த நாளே.''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## கடுஉஎ. வயித்திய லிங்கர் - ச

இவர் ஈழவள நாட்டில் வல்வை என்னும் ஊரில் இருந்தவர். பள்ளிகளில் போதகாசிரியராக இருந்ததன்றித் தனிப்பட்டவர் களுக்கும் கல்வி கற்பித்தார். நானூறு பாடல்கள் அடங்கிய

சிந்தாமணி நிகண்டு என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது.

"மகவானே குலிசவேந்தன் மகாநேமி சாகப்புன்னே
அகலிய மரப்பொது துப்பேர் அகழ்தலென்பதுவே தோண்டல்
நகுலமே காத்திரிக்காம் நகுடமே ஆக்கிராணம்
சகளமே மாயா ரூபஞ் சகிதமொற் றுமையின் பேரே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கடுஉஅ. வரதபண்டிதர்

ஈழவள நாட்டிலே சுன்னுகம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். மறையவர் குலத்தினர். இவருடைய தந்தையார் பெயர் அரங்கநாத ஐயர். ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர். தமிழ் இலக்கண இலக்கிய நூல்களையும் காலக் கணிதம், மருத்துவம், வேதாந்தம், சித்தாந்தம் முதலிய நூல்களையும் கற்றுத் தேறியவர். செய்யுள் பாடுதலில் திறமை மிகவுடையவர். ஒருவன் வாழவுந்தாழவுஞ் செய்யுள் மூலஞ் செய்யத் தக்க திறமுடையவர். இவர் பாடல்கள் யாவும் சொற்சுவை பொருட்சுவை வாய்ந்தன.

இவர், சிவராத்திரிப் புராணம், ஏகாதசிப் புராணம், கிள்ளை விடுதூது, அமுதாகரம், பிள்ளையார் கதை முதலிய நூல்கள் இயற்றியிருக்கிறார்.

"காவராக மலரயன்மால் கடவுளர்க்காச்
சென்றமர்செய் காம னுடைம்
பூவராக படவிழித்துப் புனலேவங்கை
அத்தியதள் புனைந்து போர்த்த
தேவராக மனமகிழத் திருப்பதிகம்
இசைத்தமிழில சிறக்கப் பாடும்
நாவராக பதம்பராக நமக்குயர் பொன்
னுட்டராக நல்கு மன்றே."

என்பது சிவராத்திரிப் புராணத்துள் ஒரு பாட்டு. இந் நூலுக்கு யாழ்ப்பாணம் மயில்வாகனப் புலவர், சின்னத்தம்பிப் புலவர், சி. வை. தாமோதரம் பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"பரத ராசனுயர் அசல ராசன் மகள்
பங்க னண்புதரு பண்புசேர்
விரத ராசசிவ நிசியி னின்சரிதை
மிகவிளங்கிட விளம்பினுன்
கரதரா சனைய மொழியரங்கனருள்
கருணை மாரிநிகர் பருணிதன்
வரத ராசன்மறை வாண ராசன்மிகு
மதுர வாசகவி ராசனே"

என்பது மயில்வாகனப் புலவர் இயற்றியது.

## கரு௨கூ. வரதராச அடிகள் - தில்லை

இவர் திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளின் நெறியைப் பின்பற்றி வடலூரில் வாழ்ந்திருந்தவர். மரண மில்லாத வாழ்வு முதலிய நூல்கள் இவரால் இயற்றப் பெற் றுள்ளன.

"ஆண்டவன் தனக்கு நாமங்கள் அநந்தம்
அவைகளில் ஆத்மனென் றொருபேர்
ஆதலா லாண்ட வனையறி குதலே
ஆத்மனை அறிதலு மாகும்
ஈண்டொரம் புலனைக் கரணத்தைப் பொறியை
இகழுறு பிராணவா யுவினை
இன்பமாய்க் காண லாமெனில் ஆன்மா
என்றபேர் ஒன்றுள தெதற்கோ"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கருஙூ௦. வரதராச ஐயர்

(20 - நூ.)

இவர் திருமாகறல் என்னும் ஊரில் இருந்தவர். திருமலைச் சுவாமி பேரில் "காரணசார கதா தோத்திரப்பா" முதலிய நூல் களை இவர் இயற்றியுள்ளார்.

"திருமுதலாய்க் காரணமா யடியார்க் கன்பு
செய்யவவ தரித்ததிங்கள் மூன்றிற் செங்வேட்
குருவளரும் சிவகிரிசேர்ந் தருளாற் பூசைக்
குருக்களின்கை யதனுற்கர்ப் பால யத்துள்

அருவலம்வந் துபசார பூசை நிபா
ராதனைமுன் நினக்கியற்றிப் பின்வேட் கியத்
திருவனையோ டஞ்சுநம்பி யென்னு மில்லை
செயலேதோ வென்றிடச்செய் திருமலேசா.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கரு௱க. வரதராச பாரதிகள்
## (19 - நூ.)

புனல் வேலி என்னும் ஊரில் இருந்தவர். ஊற்றுமலை இருதயாலய மருதப்பத் தேவர் காலத்தினர். மேற்படி தேவர் மீது இவர் பல சமயங்களிற் பரிசு பெறுமாறு பாடிய பாடல்கள் பல. அப் பாடல்களைக் கொண்டு நாம் இவருடைய புலமையை ஒருவாறு மதிப்பிடலாம். அப் பாடல்களில் ஒன்று;

''வேலைக் கந்தர ளம்தகை யாமங்கை
வேண்ம லர்க்கனை யேவிட உன்றனை
யேலக் கந்தர மெண்ணிறைந் தேகொடி
யிடையி னமபரஞ் சோர்ந்துளம் வாடியே
பாலக் கந்தர ராரமு தென்றனள்
பண்பி னுடனை வாயனை வாய்தரு
நீலக் கந்தர நேர்கொடை வள்ளலே
நேசனேயித யாலய சாமியே ''

என்பதாகும். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை.

## கரு௱உ. வரதராசதாசர்
## (20 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் சிவில்லிபுத்தூரில் இருந்தவர். வீரவைணவர். இவருடைய பெயருக்கு முன்னால் 'பெருமாள் கோயில் உத்தம' என்னுஞ் சிறப்புச் சொல்லுஞ் சேர்த்து வழங்கியது. நாலாயிர திவ்யபிரபந்தம் முதலிய நூல்களிலே சிறந்த பயிற்சியுடையவர். ஒரு வைணவப் பெரியார் நூலுக்கு இவர்;

''சிந்திக்கச் சொல்லச் செவிகேட்கத் தித்திக்கும்
சந்திக்கும் கோரியநற் சம்பத்து—வந்திக்கச்
சித்திக்கு மாலருட்பூண் சேர்வேங் கடதாசன்
பத்திக்கு ளானதமிழ்ப் பா.''

என்று சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

## ௧௫௩௩. வரதராச முதலியார் - தொல்காப்பியம்

ஏறக்குறைய நூறு ஆண்டுகட்கு முன்பு சென்னைமா நகரில் இருந்தவர். தொல்காப்பியம் முழுமையும் மனப்பாடஞ் செய்திருந்ததன்றிப் பலருக்குத் தொல்காப்பியப் பாடஞ் சொல்லிக் கொண்டிருந்தபடியால் இவருடைய பெயர் தொல்காப்பியம் வரதராச முதலியார் என்று வழங்கியது. திருவருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளின் முதன் மாணவராகத் திகழ்ந்தவரும் பல செய்யுள் நூல்களும் உரைநடை நூல்களும் இயற்றியவரும் ஆகிய தொழூவூர் வேலாயுத முதலியார் தொடக்கத்தில் இவரிடந்தான் இலக்கண இலக்கியங் கற்றனர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய செய்தி யொன்றுந் தெரியவில்லை.

## ௧௫௩௪. வரதராசுலு நாயுடு

இவர் கொங்குவள நாட்டிற் சிறந்து விளங்கிய புலவர்களில் ஒருவர். தாரமங்கலத்திற் செல்வராக விளங்கிய கந்தப்ப முதலியார் என்பவரிடஞ் சென்று,

> " தாரமங்கை யூரா தயவுள்ள கெம்பீர
> மாரன் நிகரான மன்னுநீ—பாருலகில்
> சீராய்நற் கீர்த்திபெறு செங்குந்த ரிற்சிறந்த
> வீராகந் தப்பா செயம்."

என்று பாடினர். முதலியார் இவரைப் பார்த்து, " நீர் யார் எவ்வூர்? எதற்காக வந்தீர்?" என்று உசாவினர். அதற்கு இவர்,

> " நீயார் யார் என்றுரைத்த நித்தியனே சத்தியனே
> கூயாயர் போற்றும் குறிச்சித் தலமதில்வாழ்
> மாயா வரதையன் வந்தேன் யானிங்கு
> வாயாநல் பரிசுகளை வழங்கி மிகவருளே."

என்று பாடினர். முதலியார் தக்கவாறு பரிசு வழங்கினர்.

பிறகு சேந்தமங்கலத்திற்குப் போய் அவ்வூரிற் செல்வராக விளங்கிய கோமுட்டி வேங்கடராம செட்டியாரைக் கண்டார். பாடல்கள் பாடி நன்கொடை கேட்டார். அவர் பெரிய கடைத் தெருவுக்குப் போகச் சொன்னர். அங்குப் போக அங்கே

செட்டியார் வீட்டிற்குப் போகச் சொன்னார்கள். இவ்வாறு பல முறை அலைக்கழித்தார்கள். பிறகு செட்டியார் இவருக்கு யாதுங் கொடாமல் விரட்டி விட்டார். வருந்திச் சென்ற புலவர்,

> "கோமுட்டி ராமா குலாமகுல நாசனே
> நீமுட்டி தூக்காயா நீகெட்டுப்—போய்முட்டி
> ஆக்குவித்துப் பாக்குவிற்றே அங்காடி விற்றுமிகப்
> பூக்குவித்து நீகெட்டுப் போ."

என்று பாடிவிட்டுச் சென்றார். சில நாட்களில் கள்ளர்கள் செட்டியார் வீட்டிற் கொள்ளையடித்துக் கொண்டு போய் விட்டார்கள். செட்டியார் மிக ஏழையானார். பிறகு புலவரைத் தேடிப்பிடித்துப் போற்றிப் பரிசு கொடுத்தபின் முன்னிருந்த நிலையை அடைந்தார்.

## ௫௭௫ வரதராயன்

இவர் வீரபாண்டியக் கட்டபொம்மன் காலத்தில் இருந்தவர். வீரபாண்டியக் கட்டபொம்மனுடைய அவைக்களப் புலவராக விளங்கிப் பின்னாளில் வீரபாண்டியப் புலவர் என்று பெயர் பெற்றவரும் பாணர்குலத்தினரும் ஆகிய சங்கரமூர்த்திப் பிள்ளை என்பவரும், இவரும் ஒரு காலத்தில் இருந்தவர்கள். இவருடைய குலம் இடையர் குலம் என்பர். ஒருநாள் வீரபாண்டியக் கட்டபொம்மனுடைய அவைக்களத்தில் கூத்து ஒன்று நிகழ்ந்தது. கூத்தினை ஆடியவள் வாசவதி என்னும் பெயருடைய மங்கை; அழகிலும் ஆடல் பாடல்களிலும் சிறந்தவள் அவள்.

கூத்தாட்டவைக்களத்தில் பொதுமக்களும் சங்கரமூர்த்திப் பிள்ளையும் வரதராயப் புலவரும் பிறரும் குழுமியிருந்தனர். வரதராயப் புலவராகிய இவர் இருபொருள் படுமாறு குறும்புத் தனமாகப் பேசுவதில் வல்லவர். சங்கரமூர்த்திப் பிள்ளையும் இவரும் ஓரிடத்தில் அமர்ந்து கூத்தினைப் பார்த்துக் கொண்டிருந்தனர். இவர் துடுக்காக உரையாடத் தொடங்கினார். சங்கரமூர்த்திப் பிள்ளையைப் பார்த்துத், "தையல் நல்ல தையல்" என்று கூறினார். சங்கரமூர்த்திப் பிள்ளை தையல் தொழில் செய்யும் பாணர் மரபினராகையால் இவர் தம் குலத்தைச் சுட்டி எள்ளி நகையாடற் பொருட்டே இவ்வாறு கூறினார் என வெகுண்

டார். "ஆம் ஆம் ; ஆட்டுக்கு நல்ல தையல்" என்று சொன்னார். ஆட்டுக்கு என்பது ஆடல் தொழிலுக்கு எனவும், ஆடுமேய்த்தல் தொழிலுக்கு எனவும் இருவகையாகப் பொருள்படும். இவ்வாறு வீரபாண்டியப் புலவர் பேச நேர்ந்தது தம்முடைய வாய்த் துடுக்காலேயே என்று எண்ணிப்பார்க்காத இவர் அவர் மீது வெகுண்டார். இருவருக்கும் பிணக்குகள் நேர்ந்தன. பகை மிகுதிப்பட்டு வளரலாகியது. செய்தியை உணர்ந்த வீரபாண்டியக் கட்டபொம்மன் இருவரையும் அழைத்து இன்னுரைகள் இயம்பி நட்பாக்கி வைத்தான். இவர் இயற்றிய செய்யுட்களோ அல்லது இவரைப்பற்றிய பிற செய்திகளோ புலனாகவில்லை. சங்கர மூர்த்திப் பிள்ளையினுடைய வரலாறு வீரபாண்டியப் புலவர் என்னும் பெயரோடு புலவர் புராணம் முதலிய நூல்களில் இடம் பெற்றுள்ளது.

## கடுகூ௬. வரதாச்சாரியார் – உ. வே.

(19 - நூ.)

தொண்டைவள நாட்டில் களக்காட்டூரில் இருந்தவர். வடமொழியினுந் தென்மொழியினும் வல்லவர். வடமொழியில் இருந்த "பராசரஸ்மிருதியை" இவர் தமிழில் மொழி பெயர்த்தார். தமிழினும் வல்லவராகிய இவர் 'பிருகந்நாரதிய புராணம்' என்னும் நூலுக்குப்பின் வரும் பாடலைச் சிறப்புப் பாயிரமாக அளித்துள்ளார் :

"பொன்னுடை யாம்பன்முனம் போயருள்செய் செம்மல்
பொற்சரிதம் விரிக்குநா ரதியமெனும் புராணம்
என்னோர்க ளும்மெளிதில் உணர்ந்திடுவான் தமிழில்
எழிலமையக் கத்தியமாய் இசைத்திட்டான் இயங்கப்
பின்னோடு முன்னறியா மதங்களல மந்து
பெயர்ந்திடவந் தருள் தேசிகன்மரபில் வந்தோன்
தென்னாடு விளங்குகளக் காட்டூரின் மேய
சீனிவாச ராகவனெ னுந்தெள்ளி யோனே."

## கடுகூ௭. வலங்கை மீகாமனார்

இவர் கஉ௬ பாடல்கள் அடங்கிய "அறிவானந்த சித்தியார்" என்னும் வேதாந்த நூலை இயற்றியிருக்கிறார். இந்நூல் ககூ0க

ஆம் ஆண்டில், கோ. வடிவேலுச் செட்டியாரவர்களாலும், மங்கலம் சண்முக முதலியாரவர்களாலும் அச்சியற்றி வெளியிடப் பட்டிருக்கிறது.

**சந்நியாசம்**

*"சேர்ந்த சிகை நூல் ஒழித்தின்று*
*செந்துகில் தெண்டெடுத்துப்*
*போந்த கலைகளை யோதிமுப்*
*போதும் புனன்முழுகி*
*ஆர்ந்தநன் னிட்டைகள் செய்துபீர்ம்*
*மார்ப்பணம் ஆக்கிப்பிச்சை*
*சார்ந்தசந் யாசத் திவையொன்*
*ஞெழியில் தருநரகே."*

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கருரு௩. வள்ளிநாயகம் பிள்ளை (1894)

பாண்டிவள நாட்டில் அருப்புக்கோட்டையைச் சார்ந்த புளியம்பட்டி என்னும் ஊரில் இருந்தவர். பழைய நாள் முறைப் படி இலக்கிய நூல்களையும் இலக்கண நூல்களையுங் கற்றுப் புலமை பெற்றார். ஊரிற் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துக் கொண்டு கணக்காயராகவிருந்து மாணவர் பலர்க்குக் கல்வி கற்பித்தார். சிறிது நாள் காசிக்குச் சென்று அங்குத் தங்கியிருந்த படியால் "காசிவாசி" என்னுஞ் சிறப்புச் சொல்லும் இவருடைய பெயருக்கு முன்னால் இயைவதாயிற்று. இவர் தில்லைப் பதிற் றுப்பத் தந்தாதி, தில்லைமாலை, திருப்பரங்கிரி மாலை, பழமுதிர் சோலைப் பதிகம், திருவாவினன் குடிப்பதிகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். நூலினைப் புகழ்ந்து, சிதம்பரம் வசவலிங்க புராணிகர், அருப்புக்கோட்டை நாகப்ப செட்டியார், கொண் டய்யர், அரன்வாயல் வேங்கடசுப்புப் பிள்ளை, சிறுக்குளம் தாமோதரம் பிள்ளை, இராமலிங்கச் செட்டியார், சி சோமசுந்தரஞ் செட்டியார், அருப்புக்கோட்டை வேங்கடாசலம் பிள்ளை, நூலாசிரியரின் பெயரர் சண்முகசுந்தரம் பிள்ளை, சண்முகவேலா யுதம் பிள்ளை, குழந்தைவேலுப் பிள்ளை, அருணகிரிச் செட்டியார், வீரகுமாருச் செட்டியார், கலிசிவலிங்கஞ் செட்டியார், வீரபத்

திரன் செட்டியார், சின்னப் புளியம்பட்டி சொக்கலிங்க செட்டியார், சொக்கலிங்க பண்டாரம் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சிலைமதன் கணையால் வருந்தினள் தெரிவை
தெரியல்நீ அளித்நவெண் கோட்டு
மலைமிசை வரும்வா சவனெனப் புகழ்ந்து
மாண்டுநித் துழல்பவ ரிடைப்போய்
புலைவயி றெம்பித் திரிதரு புலவீர்
புந்தியுள் ளினவெலா மளிக்கும்
கலைமதி வேணித் தில்லையெம் பெருமான்
கழற்குறுங் கவிபுனைந் திடுமே."

என்பது தில்லைப் பதிற்றுப்பத் தந்தாதியில் ஒருபாட்டு.

## கடுஙக. வள்ளிநாயகம் பிள்ளை – புதூர்

திருநெல்வேலியில் ஏறக்குறைய எண்பதாண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் இராமசாமியா பிள்ளை. திருநெல்வேலியில் அந்நாளிற் புகழ் பெற்று விளங்கிய சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகள் என்னும் பெரும் புலவரிடம் கல்வி கற்றுச் சிறந்த புலமையடைந்து விளங்கினார். திருநெல்வேலியில் முத்தமிழாகர அச்சுக்கூடம் என்னும் பெயரோடு அச்சுக்கூடம் ஒன்று அமைத்துத் தமிழ்நூல்களை அச்சிடும் அருந் தமிழ்த் தொண்டு புரிந்தார். நெல்லையப்ப பிள்ளை என்பவர் இயற்றிய திருநெல்வேலித் தலபுராணம் கஅ௬௯ ஆம் ஆண்டில் இவருடைய அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியாகியது. இவர் அப்புராணத்திற்கு நாற்பத்துமூன்று செய்யுட்களால் புராண வடிவில் சிறப்புப்பாயிரம் இயற்றியுள்ளார்.

"சீர்திகழ் மனைகள் தோறும் திருமகள் இனிது வாழும்
நீர்திகழ் பணைகள் தோறும் நெருங்கிய பயிர்கள் வாழும்
கார்திகழ் பொழில்கள் தோறும் களிமயிற் குலங்கள் வாழும்
பார்திகழ் பாண்டி நாடு பல்வளம் பல்கி வாழும்."

"வேதனும் நெடிய மாலும் விளம்புதற் கரிய தான
நாதனும் உலகம் ஈன்ற நங்கையும் நயந்து மேவுஞ்
தீதவம் ஒழித்து மேலாஞ் சீர்கெழு மனுவிற் காக்க
மாதவம் இயற்று நாடு வண்டமிழ்க் கன்னி நாடு."

என்பன அச் சிறப்புப்பாயிரத்தில் முதலிரண்டு பாடல்களாகும். அச்சகம் வைத்து இயக்குவோர் புலவர்களாக இருப்பின் தமது அச்சகத்தில் அச்சடிக்கப் பெறுபவை பிழையில்லாமல் சுத்தமாக வெளிப்படச் செய்து நாட்டிலே தமிழ்க் கொலை மிகுதிப்படாமல் அரும்பணி புரியலாம். பண்டைக்காலப் புலவர்கள் பலர் இவ்வாறு தொண்டு செய்திருப்பது மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. இந்நாளிலோ அறிஞர்கள் அச்சகம் நடத்துதலைச் சிறுமையாக எண்ணுகின்றனர்.

## கருசஂ. வன்னியப்பப் பாவலர்
## (1888)

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள குரன்குடி என்னும் ஊரில் இருந்தவர். இவர் திருவனந்தைச் சுப்பிரமணியர் பிள்ளைத் தமிழ் என்னும் நூலை இயற்றியிருக்கிறார்.

"முருகே வருக மூவமுழு
முதலே வருக அடி நடுவாம்
முடிவே வருக அடியர்தவம்
முடிந்த முடிவிற் பெறுஞானத்
திருவே வருக வருதிருவின்
செருக்கே வருக பரநாதத்
தெருவே யிருந்து விளையாடும்
சேயே வருக வேதாந்தக்
குருவே வருக குணங்கடந்த
குணமே வருக மணமலிபூங்
கொத்தே வருக நான்மறையின்
கொழுந்தே வருக கொழுந்தெழுந்த
மருவே வருக திருவனந்தை
வாழ்வே வருக வருகவே
வரதா முருகா வாலசுப்ர
மணியா வருக வருகவே."

என்பது வருகைப் பருவத்தில் ஒரு பாட்டு.

## கருசக. வன்னியப்ப பிள்ளை — பா. கி
## (20 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் பாட்டை என்னும் ஊரில் வேளாளர் குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் கிருட்டிண

பிள்ளை. இவர் இளமையிலேயே கல்வியை நன்கு கற்றுச் செய்யுள் பாடத் தொடங்கினர். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் 'மகப்பேற்றுப் பதிகம், திருமலைத் திருக்குவளை மாலை, உலகாம்பிகை அடைக்கல மாலை, சமயமதி, திருமலைக் குமரன் அலங்காரம்' முதலியன. இவருடைய நூலுக்குத் தென்காசி நாறும்பூநாத தேசிகர், தென்காசி மதுரைநாயகம் பிள்ளை, முத்தைய பிள்ளை, குலசேகரபுரம் சிவராமலிங்கம் பிள்ளை, புளியங்குடி முத்துவீருக் கவிராயர், தென்காசி கைலாசம் பிள்ளை நகரம் சங்கரபாண்டியம் பிள்ளை, வடகரை கீழ்ப்பிடாகை முத்து. சாமியா பிள்ளை முதலியோர் சாற்றுக்கவி பாடியுள்ளனர்.

"தரைபுகழும் மறைபுகழுந் தஞ்ஞா போற்றி
தற்பரனே தயாகுணனே தாதா போற்றி
பரைபுகழுந் திருமகனே பாலா போற்றி
பவந்தனையே தீர்த்தருளும் பண்பே போற்றி
மரைமாலும் இணைப்பாதம் மறவேன் போற்றி
மலர்ச்சிவிஞல் திருக்குவளைப் பொய்கை யாடி
வரைபுகழுந் திருமலைவாழ் வள்ளால் என்றே
மனமகிழ நினைப்பார்க்கு மன்னே போற்றி."

என்பது திருமலைத் திருக்குவளை மாலையில் ஒரு பாட்டு.

## ௧௫௪௨. வாகீசமுனிவர்

சந்தான குரவர்களில் இவர் ஒருவர். இவருக்கு ஆசிரியர் பரமானந்த முனிவர் என்பர். வாகீச முனிவர் தம்முடைய ஆசிரியரை,

"இருணெறி மாற்றித்தன் தாள்நிழல் இன்பம் எனக்களித்தோன்
அருண்மொழித் தேவனற் கோடலம் பாகை அதிபனெங்கோன்
திருநெறி காவலன் சைவசி காமணி சில்சமய
மருள்நெறி மாற்ற வரும்பர மானந்த மாமுனியே."

என்று பாடியுள்ளார். கோடலம்பாகை என்னும் ஊர் திருமறைக் காட்டிற்கு அண்மையிலிருந்த தென்றும் அதில் பரமானந்த முனிவர் தங்கியிருந்தார் என்றுங் கூறுப. பரமானந்த முனிவ ருடைய அருளைப் பெற்ற வாகீசர் ஞானமிர்தம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். ஞானமிர்தம் அறுபத்தெட்டு அகவற் பாக் களைக் கொண்ட ஓர் அரிய நூல்.

"வெண்டிரைக் கருங்கடல் ஏழும் விண்டொட
வீங்கிய சென்னிச் சிமயமும் ஓங்கிய
எழிரும் பொழிலும் எண்ணிங் குயிரும்
அளவில் அண்டமும் முளையின்றி விளைத்த
மலரோன் தாதையை வருத்துந் தளரா
முன்னோ ரில்லா முன்னோன், பின்னும்
இளமையும் அஃதா இயைந்தோன் வளமலி
தோற்றம் ஈறுமன் றில்லோன், கூற்றுக்
இனியே முற்ற ஒளிமா டிருநகை
அருளி னங்குழை பரப்பி இருள்நீர்
கருணை மாநனை உயிர்ஞிமி றருந்த
மலர்ந்த மாதர் மரகத வல்லி
அந்தி வானத் தணிநிறங் கவர்ந்து
சிந்தை செல்லாச் செழுங்கிரி ஒருபால்
வளங்கொளப் படர்ந்த வண்ணம் போல
அறவோன் அமர்ந்த பாகன் துறவோர்க்
கெல்லை யாகிய தொல்லோன் தனது
பாமாண் சேவடி பரவ
நாமாண் புளதா நலங்கொளச் சிறந்தே."

என்பது பாயிரத்தில் கடவுள் வாழ்த்துப் பாட்டு. இச் செய்யுள் இனிமையுஞ் செம்மையும் இயைந்து விளங்குதலைக் காண்க. இதனால் இவருடைய கல்விப் பரப்பின் சிறப்பை நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

## ௧௫௪௯. வாசுதேவக் கவிஞர்
## (1875)

இவர் கொங்கு நாட்டினர். குறிப்புநாடு விசயமங்கலம் குருத்தான மடாதிபதியாகிய கூனம்பட்டி இராசலிங்க மாணிக்க வாசக அடிகள் மீது இவர் "பழமொழி மாலை" என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூற் பாடல்கள் திருக்குறளின் அறவுரைகள் சிலவற்றை உள்வடக்கிக் கொண்டிருக்கின்றன.

"தேறிய மிக்கவ ரேனும் பயனின்றிச் செப்பினரேன்
தூறிய புன்மொழி யாகு மரிச்சந்த்ரன் சொல்லைப்பொய்யாய்க்
கூறிய கோசிகன் சோதித்துத் தோற்றனன் கோதகல்சீர்
ஏறிய மாணிக்க வாசக ராசலிங் கேசுரனே."

என்பது மாலையில் இருபதாவது பாட்டு.

## ௧௫௪௪. வாசுதேவ முதலியார்

இவர் ஏறக்குறைய ~~நூறு~~ ஆண்டுகளுக்குமுன் கோயமுத்தூருக்கடுத்து ஒராட்டுக்குப்பை செட்டிபாளையம் என்னும் ஊரிலே சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கி மகாவித்துவான் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றிருந்ததோடு வடமொழியிலும் மிக வல்லவராக இருந்தார். இவருடைய புலமைத் திறத்தையுணர்ந்த பலர் வடமொழியில் இருந்த பவானி கூடல் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடுதல் வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். இவரும் அவ்வாறே அப் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துத் தொளாயிரத்தொரு பாடல்களும் பதினெட்டுப் பகுதிகளும் அமைந்த புராணமாகப் பாடி முடித்தார். புராணத்தைப் பாராட்டிக் கோயமுத்தூர்ப் புலவர் கந்தசாமி முதலியார், குணிய முத்தூர்க் கருப்பண்ண பிள்ளை, பவானிப் புலவர் முத்துச்சாமி ஐயர், வேங்கடராமையங்கார் என்பவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"எண்டிசைசூழ் பெரும்புவனம் ஒருமூன்றுள்
இத்தலத்துக் கிணையாய் வேறு
கண்டறிந்தோம் இலைநெடுநாள் கௌரிநா
யகன்கமலைக் கழல்பூசித்துத்
தொண்டுபடு தவப்பலனோ கண்பெற்ற
பெரும்பேறோ தோன்றக் கண்டு
கொண்டதிந்த மாதலத்தை எனமயிர்க்கூச்
செறிந்துகரங் கூப்பி நின்றான்."

என்பது அப் புராணச் செய்யுளில் ஒன்று. திருமுருகன் பூண்டித் தலபுராணம் முதலிய பிற நூல்களும் இவராற் செய்யப் பெற்றுள்ளன.

இவர் அவிநாசிக் கருணாம்பிகை சதகம் என்னும் நூலும் இயற்றியுள்ளார். ~~இவர் ஏறக்குறைய ௧௫௰ யாண்டுகட்கு முன்பிருந்தவர் என்று தெரிகிறது~~. இவருடைய மரபு தொண்டை மண்டல வேளாள மரபு என்றும், திருவாவடுதுறையாதீனத்தில் இருந்த திருச்சிற்றம்பல தேசிகரிடத்தில் இலக்கண இலக்கியங்களைக் கற்றுணர்ந்தவர் என்றும், சமய விசேட தீக்கைகள் பெற்றுச் சிவஞான சித்தியார் முதலிய சைவ சித்தாந்த நூல்களை ஓதி

புணர்ந்தவர் என்றும் கூறுகின்றனர். கருணாம்பிகை சதகம் பிற சதகங்களைப்போல் அறநெறிகளை விரித்துரைக்கிறது.

## ௧௫௪௫. வாஞ்சைலிங்க வைத்தியநாத செட்டியார் (20 - நூ.)

சோழவள நாட்டில் திரிசிரபுரத்திற்கண்மையில் உள்ள உறையூரில் சிதம்பரஞ் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் அந்நாளில் புகழுடன் விளங்கியிருந்த புலவர் தியாகராசச் செட்டியாரிடம் கல்வி கற்றுப் புலவரானார். திருவுறந்தைப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றியுள்ளார்.

"நாளெலாம் அவமே கழித்தனன் நினது
நாண்மலர் அடியிணை மறந்தே
கோளெலாம் எனக்கே சொந்தமா வுடையேன்
கொடுஞ்சமன் வரினெவன் செய்வேன்
வேளெலாப் படையும் இழந்துவெந் தொழிய
வெந்தழற் கண்ணினைத் திறந்தோய்
தூளெலாம் பொழிபூங் கூவிள வனத்துச்
சோதியே ஆதிநா யகனே."

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௧௫௪௬. வாணியன் தாதன்

இவன் கம்பர்காலத்தில் இருந்த ஒரு புலவன். இராமாயணம் பாடியபடியால் கம்பருக்கேற்பட்ட பெரும் புகழைக் கண்டு இவன் மிகுந்த அழுக்காறு கொண்டிருந்தான். ஒரு சமயம் இவன் அரசனோடு உரையாடிக் கொண்டிருந்தபோது அரசன் கம்பருடைய இராமாயணத்தைப் பாராட்டிப் புகழ்ந்து பேசினான். இதனைக் கேட்கப் பொறாத இப் புலவன் உடனே,

"கைம்மணிச் சீரன்றிச் சீரறி யாக்கம்ப நாடன்சொன்ன
மும்மணிக் கோவை முதற்சீர் பிழைமுழு வாளெயிற்றுப்
பைம்மணித் துத்திக் கணமணிப் பாந்தட் படம்பிதுங்கச்
செம்மணிக் கண்பதம் போக்கிக்கொல் யானைச் செயதுங்கனே"

என்று பாடினான். கம்பர் இயற்றியதாகக் குறிப்பிடப் பெறும் மும்மணிக் கோவை இந்நாளில் இல்லை யாகையால் அக் கோவை

யைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியவில்லை. இவன் சாதியில் செக்கான். கம்பர் இறந்துவிட்டார் என்ற செய்தியைக் கேட்டவுடன் இவன்,

> "இன்றோதங் கம்பன் இறந்தநாள் இப்புவியில்
> இன்றோவப் புன்கவிகட் கேற்றநாள்—இன்றோதான்
> பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
> நாமடந்தை நூல்வாங்கு நாள்."

என்று பாடினான். இதனால் இவன் கம்பரிடத்தில் அழுக்காறு கொண்டிருந்த போதிலும் உள்ளத்துள் நன்மதிப்பு வைத்திருந்தான் என்று பெறப்படுகிறது. இவன் விருதுகாளம் பிடிக்குமாறு கம்பர்,

> "கூனம் பிடித்தென்னின் கோதுவைப் பானங் குலக்கவிக்குக்
> காளம் பிடித்திடிற் சின்னம் படுமென்பர் காதலிமார்
> வேனம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்கவெம் பேய்க்கிளம்பேய்
> தானம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே."

என்று பாடியுள்ளார்.

## ௧௫௪௭. வாதிகேசரி அழகிய மணவாளசீயர்

இவர் ஏறக்குறைய எழுநூறு யாண்டுகட்கு முன் பிருந்தவர். வைணவ சமயத்தினர். வடமொழியையுந் தென்மொழியையும் நிலை கண்டுணர்ந்தவர். பல நூல்களை வடமொழியிலுந் தமிழிலும் இயற்றிய இவர் பகவத் கீதையைத் தமிழில் வெண்பாவாகப், "பகவத்கீதை வெண்பா" என்னும் பெயரோடு பாடியுள்ளார். இந்நூல் ௧௯௧௭ ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது.

## ௧௫௪௮. வாமதேவ முருகபட்டாரகர்
## (19 - நூ.)

இவர் திருக்கயிலாய பரம்பரை சிதம்பரம் வாமதேவ மறைஞான சம்பந்த சைவாசாரிய மரபினராவர். இவருடைய தந்தையார் பெயர் பொன்னுபட்டாரகர். இவர் சிவப்பதி வழிபாட்டை மேற்கொண்டு தமிழ் நாட்டில் உள்ள சிவப்பதிகளுக்கெல்லாம் போய் இறைவழிபாடு செய்து கொண்டும், மக்கட்குச் சிவபத்தி

யுண்டாகுமாறு சைவ சமயச் சொற்பொழிவுகள் செய்து கொண்டும் இருந்தார். தம் பெயருக்கேற்ப முருகக் கடவுளிடத்துப் பேரன்புடையவராகவும் இருந்தார். கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாச்சாரியாரிடத்தும் இவர் பேரன்புடையவர் இதனை உணர்ந்த சிலர் கச்சியப்ப சிவாச்சாரியார் வரலாற்றைச் செய்யுளாகப் புராணமுறையில் அமைக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். இவரும் அதற்கு இணங்கிக் கச்சியப்ப சிவாச்சாரியார் வரலாற்றைப் புராண முறையில் ௯௭௧ பாடல்களாகப் பாடி முடித்தார். இதனைத் தவிர இவர் சந்தானசாரியார் புராணமும் இயற்றியுள்ளார். கச்சியப்ப சிவாச்சாரியாருடைய புராணம் முருகபட்டாரகரின் மகன் மாணிக்கபட்டாரகரால் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது.

“புலவர்மற் றொருவர் கையில் புத்தகம் ஒன்று கொண்டு
நலமொடங் கேக வங்கண் நணுகினோர் அவரை நோக்கிக்
குலமுனிர் யாவ ருங்கள் குலவுகைம் முறையா தென்று
வலமொடு வினவி னூர்கள் வந்தநா வலர்அ தற்கு.”

“நகருறு சோழ தேசம் நாமிருப் பதுநீர் கேட்ட
துகளில் முறைதான் வீர சோழியம் என்றுர் அக்கால்
தகவொடு முன்னை வைகல் தடுத்தநா வலர்வி ரைஇச்சென்
றகநிறை அவாவி னோடும் அம்முறை தன்னை வாங்கி.”

என்பன அப்புராணத்தில் இரண்டு செய்யுட்கள்.

## ௧௫௪௩. வாமன முனிவர்

இவர் ஏறக்குறைய அறுநூறு யாண்டுகட்கு முன்பு காஞ்சிபுரத்திற்கு அண்மையிற் உள்ள திருப்பருத்திக்குன்றம் என்னும் ஊரில் இருந்தவர்; சைன சமயத்தவர். இவர் மேருமந்தர புராணம் என்னும் நூலினைப் பாடியிருக்கிறார். இந் நூல் பதின்மூன்று சருக்கங்களையும் ௧௪௱௫ பாடல்களையுங் கொண்டது.

“திருமலி ஆர மாலை
திளைக்குந்திண் புயத்த ராகி
உருமலி களிற்றின் உச்சி
ஓங்கிய குடையின் நீழல்

வருமவர் முன்பு தாஞ்செய்
நல்வினை மாய்ந்த போழ்தில்
எகியுறு திருவின் ஒன்றூர்க்
'குழையராய் இயல்வர் கண்டாய்.''

என்பது சக்கராயுதன் முத்திச் சருக்கத்தில் ஒரு பாடல். இந் நூலுக்கு வீடூர் - கு. அப்பாச்சாமிச் சாத்திரியார் என்பவர் உரை எழுதியுள்ளார்.

## ௧௫௫௦. வாலகவிப் புலவர்

முகமதியராகிய இவர் மலையாள நாட்டைச் சேர்ந்தவர்' ஆயினும் தமிழை நன்றாக ஓதியுணர்ந்து சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கினார். இவர் இசைப் பாடல்கள் பல இயற்றினார். இவர் இயற்றிய தனி நூல்களைப்பற்றிய விவரந் தெரியவில்லை.

'' நானிலத்தோர் ஈடேறக் கதிகள் முற்ற
நவையான குபிர்ப்பவமே நடுங்கி யோட
மானிடராய் உருவெடுத்திவ் வையமீது
வருநபி முகமதுற்ற ஆலுல் லாதம்
காணுபய மலரடியென் உளத்தே நாட்டிக்
கவிதைசொல முதலவனே காப்பாய்க் கூறும்
பாவலவா ரணநபிமா ரவுலியாக்கள்
பாவலரைப் புகழ்ந்திடுவேன் பாதம் போற்றி.''

என்பது இசைப்பாட்டின் காப்புப் பாட்டு.

## ௧௫௫௧. வாலசுப்பிரமணிய ஐயர் - சி (19 - நூ.)

பாண்டிவள நாட்டில் மழவராயனேந்தல் என்னும் ஊரில் சிதம்பர தீட்சதர் என்பவர்க்கு மைந்தராகத் தோன்றினார். தந்தையார் சிறந்த புலவராதலின் இவருக்கு இளமையிலேயே நூல்களை நன்கு கற்பித்தார். விரைவிற் கல்வியை நன்கு கற்றுக் கொண்ட இவர் அவதானங்கள் செய்வதிலும் தேர்ச்சி பெற்றார். நூறு அவதானங்கள் வரை இவர் செய்தமையின் இவருக்குச் சதாவதானம் என்னும் பெயருண்டாயிற்று. செட்டிமார் நாட்டில் உள்ள காரைக்குடியை அடைந்து அங்கு நீண்டநாள்

வசித்திருந்த இவர், கற்பக விநாயகர் அகவல், கற்பக விநாயகர் பதிகம், கொப்புடைநாயகி பதிகம், கொப்புடைநாயகி மும்மணிக் கோவை, பொய்சொல்லா மெய்யர் பதிகம், பொய்சொல்லா மெய்யர் நான்மணிமாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். நூல்களைப் பாராட்டி, இராயபுரம் வே. கி. நாராயணசாமிப் பிள்ளை, புதுக்கோட்டை மதுரைநாயகம் பிள்ளை, நாராயண பிள்ளை, சிதம்பர பாரதியார், வேம்பத்தூர் வேங்கடசுப்பையர் செங்கெற்குடி சாமுக்குட்டி ஐயர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"கற்பகத் தருவினின் மூலைத்திரத முறுசெங்
கனியே கனிக்குண் மதுவே
கரையிலாப் பேரின்ப வெள்ளமே வெள்ளம்
கனிந்துதவு கருணைமுகிலே
விற்பகவ னைந்தமுகு யர்ந்தநுதல் வில்லியே
மினிர் மருங் கொடிவல்லியே
விஞ்சையர் துதிக்கும் கலாபமயி லேமறை
விளம்பவொண் ஞதருயிலே
தற்பரஞ் சுடரேயெ விடரொழித் தாண்டுநின
சரியுமன மொருமையாயுன்
தனையோது மதியெனக் கருளாய்ச மயமீது
தமியன் மேல் வருமமேது
மற்பொருது மகிடன்முடி யைப்பொடித் தனவரத
மணிமதிற் கரைரமேவும்
வளமிகற் புதநன்மை மிலகுகற்பி னின்மெய்ம்மை
மருவுகொப் புடையம்மையே."

என்பது கொப்புடைநாயகி பதிகத்தில் ஒரு பாட்டு.

## கருரு௨. வாலசுப்பிரமணிய முதலியார்
### (20 - நா.)

இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சிந்தாமணி என்னும் ஊரினர். செங்குந்த மரபில் தோன்றியவர். இலக்கண இலக்கியப் பயிற்சியோடு மருத்துவத்திலும் திறமையுடையவர். தேவகோட்டையில் முருகானந்த வைத்தியசாலை என்னும் பெய ரோடு மருத்துவசாலை ஒன்று அமைத்து மருத்துவத் தொழிலில் ஈடுபட்டிருந்ததன்றி நூல்கள் இயற்றும் பணியிலும் ஈடுபட்

டிருந்தார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் திருமலைச்சிங்கார மாலை, பக்திரசக் கீர்த்தனை, பகவனுமைக்கீர்த்தனை, திருமலைக் கீர்த்தனை, சேற்றூர்த்தெப்பையங்கிரிக் கீர்த்தனை, மேட்டுப் பட்டி மாரியம்மை கும்மி, புத்தூர் மலைக் கீர்த்தனை, சிந்தாமணி மீனாட்சிசுந்தரேசுவரர் கீர்த்தனை, திருமலைப் பதிகம், திருமலைப் பஞ்சரத்தினம், தேவகோட்டை அழகாபுரி தண்டபாணிப் பதிகம், மாரியம்மை பஞ்ரத்தினம், கோட்டையம்மை பதிகம், அர்ச்சகவரை மகத்துவம், முப்புராரியம்மை தோத்திரத்திரட்டு முதலியன.

"திங்களும் நதியுஞ் சூடுஞ் சிவபிரான் செல்வ னான
ஐங்கரன் துணைவா நாயேற் கருள்புரி துணைவா நாளும்
மங்கைதெய் வானை வள்ளி மனமகிழ் துணைவா வைவேல்
செங்கையில் இலங்கப் பண்பைத் திருமலை தனில்வாழ் தேவே."

என்பது திருமலைச் சிங்காரமாலையில் ஒரு பாட்டு. இந்நூலைப் புகழ்ந்து, சேற்றூர் அபிடேக சுந்தரக் கரையாளர், சிந்தாமணி குமாரசாமியா பிள்ளை, சேற்றூர் மாரியப்ப ஆசாரி, சங்கரலிங்க பாரதி, காளியப்ப பிள்ளை, தசாவதானம் ஆறுமுகம் பிள்ளை, சலையம்பட்டி அருணாசலம் பிள்ளை, அப்பாவுக் கவிராயர், சேற்றூர்ச் சிதம்பர தேசிக சுவாமிகள் ஆகிய பலர் சாற்றுக்கவி வழங்கியுள்ளார்கள்.

## கஎஅ. வாலாம்பிகை தாச சாமியார் (1909)

சோழவள நாட்டிலே தேவனூர்வளாகம் என்னும் ஊரில் வேலாயுதம் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் உலக வாழ்க்கையில் வெறுப்புற்று அறிவு நூல்களை ஓதியுணர்ந் தார். இவர் தமது அனுபவ மெய்ஞ்ஞான உணர்ச்சிகளை "ஞாய அட்டாங்க தீபம்" என்னும் பெயரோடு நூலாகச் செய்துள் ளார். அந்நூல் வெளிப் பார்வைக்கு வேடிக்கையாகவும் உட் பொருள் தத்துவார்த்தங்களைக் கொண்டதாகவும் ஞாய வழி வெண்பா நூறு, ஞாயக்குறச் சுருக்கம், ஞாயவழிக் கும்மி, எக் காலக் கண்ணி, ஞாயகற்பமுப்பூ முப்பது, உண்மை வெண்பா ஒன்பது, ஞாய ஆனந்தக் களிப்பு, ஞாயம் நாற்பது என எட்டுப் பிரிவுகளாகவுஞ் செய்யப்பட்டுள்ளது.

"எட்டிரண்டுங் கூட்டி இருத்திநீ இம்மெனவே
வட்டமிட்டு நிற்க வழிகாட்டு—முட்ட
எறும்பூரக் கற்றேயும் என்றபழஞ் சொற்போல்
பெரும்பாதை கண்டு பிடி."

என்பது ஞாயவழி வெண்பா நூறில் ஒன்று. இவர் தம் மற்றை நூல்களும் சொல்வளம் பொருள்வளம் மிக்கனவாகவுள்ளன.

## கருருச. வாலையானந்த சிவராச யோகீசுவரர் (1899)

இவர், கொங்கு நாட்டிலே "நீர்வளம் நிலவள நிகரில் செல்வமோ, டார்வள மெல்லாம் அமுகுற்று" விளங்கும் கருவூரிலே அந்தணர் குலத்திலே தோன்றினர். அறிவு நூற் பொருளை நன்குணர்ந்தார். இவரைக் குறித்து அன்பர் ஒருவர், "அந்தமிலருங்கலை யாவையு முணர்ந்தோன், வேதவேதாந்த விழுப் பொருட்கெல்லாம், ஓதிடும் பொக்கிஷம் உபநிடதப் பொருள், எல்லாம் வாய்மடுத்தேப்பமிட்டவன், வல்லாளன் கை வருத்தபம் பரம் போல், ஆட்டியழிக்கும் அருமாயை வலையை வாட்டி யறுத்த வைராக்கிய சீலன்" என்று பாராட்டியுள்ளார்.

இவர் 'புருடார்த்த சிந்தாமணி' என்னும் ஞான நூலை இயற்றியுள்ளார். அந்நூலைப் பாராட்டிச் சைதாப்பேட்டை நாராயண சாமி முதலியார், சி. கு. நடராச பண்டிதர், கோவளம் சிதம்பரப் பிள்ளை, திருமழிசை வடிவேலு முதலியார் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆதியிலே பராபரத்திற் பிறந்த சத்தம்
அருவுருவாய் நின்றபர சிவமு மாகிச்
சோதியென்ற சிவனிடமாய்ச் சத்தி யாகித்
தொல்லுலகில் எழுவகையாந் தோற்ற மாகி
நீதியென்ற அறிவதனால் தானாய் நின்று
நிறைந்தபரி பூரண நிட் களமு மாகிச்
சாதியென்ற சத்திசிவம் அருள்தன் னாலே
சண்முகமுங் கணபதியுந் தானுண்டாச்சே."

என்பது நூலின் பாயிரப் பாடல். நூல் உரைநடை வடிவாகவே அமைந்துள்ளது.

## கடுருரு. வாழவந்த பெருமாள்

இவர் ஏறக்குறைய ஐந்நூறு யாண்டுகட்கு முன்னர் இருந்திருக்கக்கூடும் என்று எண்ணுகின்றனர். தென் மொழியிலும் வடமொழியிலும் வல்லவராகிய இவர் வடமொழியில் எழுதப்பட்டிருந்த காதம்பரி என்னும் நூலை கஉகஅ பாடல்களாக இயற்றியிருக்கிறார்.

"காதம் பரியுங் கவேதையுந்தங்
  காதற் கடலைக் கரைகண்டே
ஏதந் தீர்த்துச் செய்தவத்தால்
  இன்ப நுகர எம்புவியோர்
ஓதும் பெரிய உச்சயினிப்
  படைவீ டெய்தி ஒருகுடைக்கீழ்
வேதந் தருபுண் டரிகனுடன்
  சந்த்ரா பீடன் வீற்றிருந்து."
"சோம முடியோன் பொருளகொண்டு
  சுராக்கா லயமுந் தொகுத்தெவர்க்கும்
சேம நிதியாம் அமரர்கோன்
  தேவன் அருளுந் திறனுமெனத்
தாம முடியோன் தனபாலன்
  சந்த்ரா பீடன் தடங்கடல்சூழ்
பூமி முழுதும் பொதுநீங்கப்
  புரந்தான் கருணை புனைந்தானே."

என்பது நூலின் இறுதிப் பாடல்கள்.

## கடுருகூ. விசயதுரைசாமி கிராமணி - த
### (20 - நூ.)

தொண்டைவள நாட்டில் சென்னைமா நகரில் தண்டையார் பேட்டையினர். கிராமணி என வழங்கும் நாடார் வகுப்பினர். இவருடைய தந்தையார் பெயர் ஏகாம்பர கிராமணி. இவர் வடமொழி, தென் மொழி, ஆங்கிலம் ஆகியவைகளை நன்கு கற்றவர். இவர் தம்முடைய குல முன்னேற்றத்தின் பொருட்டுச் சத்திரிய மித்திரன் என்னும் பத்திரிகையை நடத்தியதன்றி ஆரியசத்திரிய குல விளக்கம், நமது குலத்தொழில், சத்திரியன், நாடார் என்னுஞ் சொல்லாராய்ச்சி முதலிய நூல்களை எழுதியுள்ளார். நாடார் என்னுஞ் சொல்லாராய்ச்சி நூல் பல நூல்களின் மேற்கோள்க

னோடு சிறந்து விளங்குகிறது. இந்நூலைப் பாராட்டிக் கோ. வடிவேல்செட்டியார், வேலூர் பு. க. சீனிவாசாச்சாரியார், கும்ப கோணம் அ. பாலசுப்பிரமணிய பிள்ளை, சென்னை வீரராகவா சாரியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். வடிவேல் செட்டியார் தம்முடைய சிறப்புப்பாயிரத்தில்,

"ஆரிய மரபின் அருஞ்சத் திரியன்
வீரிய வினன்குல வேந்தராஞ் சோழர்
பரம்பரை வந்தோன் பளகறு காசிப
மரபுகோத் திரத்தன் வரமுறு தமிழைக்
கற்றவன் நன்றுக் கருதுமாங் கிலமும்
கற்றவன் நற்றவர் கைக்கொளா ரியமும்
கற்றவன் சத்திரிய மித்திர னென்று
சொற்றிடு பத்திரிகை துரிய மாக
நடாத்தும் புலவன் நற்றமிழ் வாணன்
அடாத மொழிசொலா அன்பனே காம்பர
கிராமணி செய்த கிளர்தவப் பயனும்
அராவணி சடையன் அருள்பெறப் பிறந்தவன்."

என்று பாடியுள்ளார்.

## கருரு௭. விசயாலயன்

பாண்டிவள நாட்டில் சூரைமா நகரில் முன்னளில் அரசு செலுத்திக் கொண்டிருந்தவன். தன் அவையிலே புலவர்கள் பலரை வைத்துக்கொண்டு தமிழாராய்ச்சி செய்து தானுஞ் சிறந்த அறிவாளியாக விளங்கினன். அந்நாளிற் பல புலவர்கள் ஒன்று சேர்ந்து சிவப்பதிதோறுஞ் சென்று சிவவழிபாடு செய்து கொண்டு திருப்புத்தூரில் தங்கியிருந்தனர். அவர்களைத் தன் னுடைய அவைக்கு அழைத்துப் போற்ற விரும்பிய இவன்,

"பிறந்த பிறப்பால் பெறும்பேறு பெற்றேம்
மறந்தும் இனிப்பிறக்க வாரேம்—சிறந்தமதி
சேர்த்தானைப் புத்தூர்த் திருத்தளியா னைப்புவனம்
காத்தானைக் கூத்தாடக் கண்டு."

என்னுஞ் செய்யுளை எழுதித் தன்னுடைய அவைப் புலவர் ஒருவரிடங் கொடுத்தனுப்பினன். இவ்வொரு பாட்டைத் தவிர வேறெதுவும் இவனுடையதாகப் பார்வைக்கு அகப்பட்டிலது.

## கருரு௪. விசாகப்பெருமாள் ஐயர்

தொண்டைவள நாட்டில் திருத்தணிகையில் கந்தப்ப ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். வீர சைவ குலத்தினர். சரவணப் பெருமாள் ஐயருக்கு மூத்தவர். இருவரும் ஒரு நாள் முன்பின்னாகத் தோன்றிய காரணத்தினாலேயே மூத்தவர் இளையவர் என்று வழங்கப் பெற்றனர்.

இவருடைய தந்தையாராகிய கந்தப்பையர் வள்ளியம்மை என்னும் பெண்ணைத் திருமணஞ் செய்தார். சில ஆண்டுகள் வரை மக்கட் பேறில்லை. ஆகவே மக்கட் பேற்றை நாடித் தம் மனைவியின் தங்கையாகிய தெய்வயானை என்னும் பெண்ணையுந் திருமணஞ் செய்தார். இருமனைவியரும் ஒரே சமயத்தில் கருப்பமாகி ஒரு நாள் முன் பின்னாக இருவரையும் பெற்றனர். வள்ளியம்மையின் வயிற்றிற் பிறந்த இவர் சாலிவாகன சகம் கஎஉ0 இல் பிங்கள ஆண்டு பங்குனித் திங்கள் முதல் நாள் பிறந்தார். இவர் தம் தந்தையாரிடமும் முகவை இராமானுச கவிராயரிடமுங் கல்வி கற்றார். துரைத்தனக் கல்லூரியில் ஆசிரியராக இருந்ததன்றி, யாப்பிலக் கணம், அணியிலக்கணம் முதலிய நூல்களையும் எழுதி வெளியிட்டார். இவரும் சரவணப் பெருமாளையரும் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். திருவிளையாடல் கீர்த்தனை என்னும் நூலுக்கு விசாகப் பெருமாள் ஐயர் பின் வரும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்:

"செழியர்பொருட் டெழின்மதுரைச் சிவன்செய்திரு
    விளையாடற் சிறப்பைச் செவ்வே
மொழிபெயர்ப்பாம் யாப்பினருட் பரஞ்சோதி
    முனிமொழிந்த முறையே இன்பு
பொழியுமிசைக் கீர்த்தனமாய்ப் புகன்றுபெரும்
    புகழ்படைத்தான் புவியோர் போற்றும்
கழிபெருஞ்சீர் மழவையிற்சுப் பிரமணிய
    மறையவனுங் கவிஞன் மாதோ."

இவரைப்பற்றிய பிற செய்திகளை இந் நூலிலுள்ள சரவணப் பெருமாளையர் வரலாறு கூறும் பகுதியிற் பரக்கக் காண்க.

## ௧௫௫௯. விசுவநாத சாத்திரியார்
(1836)

ஈழவள நாட்டிலே யாழ்ப்பாணத்தில் உள்ள அராலி என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். சைவ சமயத்தினர். இவர் இலக்கண இலக்கியங்களையும் காலக் கணிதத்தையும் நன்கு கற்றவர். அப்பொழுதைய அரசினரால், "அரசரின் கணிதர்" என்று சிறப்புப் பெயரும் பெற்றவர். இவர் பலவகையான தனிப்பாடல்களையும், வண்ணைக் குறவஞ்சி, நகுலமலைக் குறவஞ்சி முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார்.

*"சித்திர முளரிக் கண்ணர் சிறந்தவா மனத்த ராசை*
*வத்திர முடைய ரஞ்சக் கரத்தர்பொன் வனத்தா மத்தர்*
*இத்திற வயன்மா லீசன் இவர்களில் இறைவ ரான*
*அத்தர்தாள் வணங்கி வண்ணைக் குறவஞ்சி அறைகு வேனே."*

என்பது வண்ணைக் குறவஞ்சியில் ஒரு பாட்டு.

*"குலவுதிரு வளப்பரித்தேர் பொன்சா ரங்கர்*
*கோத்தரணி நன்குடைய தாகக் கொண்டோர்*
*நிலவுறுமெண் கோவுடைய ரத்தி தன்னை*
*நீடுவந்த பசுவரென நின்ற மூவர்*
*உலகுபுகழ் மலரயன்மால் சிவனெ னச்சொல்*
*உற்றவரிற் றலைவர்பதம் உவந்து போற்றிக்*
*கலைமயி னடனமிடு நகுல மலையக்*
*காமர்குற வஞ்சிதனைக் கழறு வேனே."*

என்பது நகுலமலைக் குறவஞ்சியில் ஒரு பாட்டு.

## ௧௫௬௦. விசுவநாத பிள்ளை – மாவை. வே

ஈழவள நாட்டிலே மல்லாகத்திலே தோன்றியவர். வட கோவை சபாபதி நாவலரிடம் கல்வி கற்றவர். திருமந்திரத்திற்கு உரையெழுதி வெளியிட்டார். அவ்வுரை சிவானந்தசாகர யோகீசுவரரால் பார்வையிடப்பட்டது.

## ௧௫௬௧. விசுவநாத முதலியார் - ம. சோ.
(20 - நூ.)

சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். ஆங்கிலத்தில் பி. ஏ. வரையிற் கல்வி கற்றவர். தமிழிலும் நல்ல பயிற்சியுடைய

இவர், 'சந்திரவதனே, அல்லது இரண்டு சகோதரர்கள்' என்னும் நாடகம் எழுதியுள்ளார். நடை நல்ல நடையாக அமைந்துள்ளது.

"கும்பமுனி குவலயத்தில் தான்றருதற்
றமிழ்மாது குறையு ருது
பம்பவுனிப் பாவலர்தங் குலதிலக
மெனவிளங்கிப் பண்பு வாய்ந்த
கம்பரெனுங் கவிஞரெமர் காவியமின்
னுடகங்கள் கழறி னுரென்
றெம்பரிவி னிக்கதையை உரைத்தனனுல்
அறிவுடையோர் இனிது கொள்வார்."

என்பது நூலின் அவையடக்கப் பாடல்.

## ௧௫௬௨. விசுவலிங்க பிள்ளை - ச
(1895)

இவர் தஞ்சைக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவர். தர்க்ககுடாரதாலுதாரி என்பவர் மொழி பெயர்த்தியற்றிய "அரிகரதாரதம்மியம்" என்னும் நூலுக்கு இவர் பத்துச் செய்யுட்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"திருஞான சம்பந்தன் எனுஞ்சிறத்த திருநாமன்
தருதருக்க குடாரதா லுதாரியெனுஞ் சால்புடைய
பெருநாமம் அறிவுடையார் பேசிடநிற் போன்சிவன்பால்
ஒருவாத அன்பினனந்தன் குருற்றினுன் விருத்தநடை."

என்பது அப்பாயிரத்துள் ஒரு பாட்டு.

## ௧௫௬௩. விட்டுணுபாத சேகரர்
(20 - நூ.)

இவர் சென்னைமா நகரினர். தந்தையார் பெயர் முனியப்ப நாயகர். தாயார் பெயர் உண்ணுமலையம்மாள். இவருக்கிடப் பெற்ற இயற்பெயர் பசுபதி என்று தெரிகிறது. வைணவ சமயத்தினராகிய இவர் 'இராமாயண சூடாமணி' முதலிய பல நூல்கள் இயற்றியுள்ளார். இராமாயண சூடாமணி ௧௯௪௧ ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றிருக்கிறது. அதற்குக் கா. ர. கோவிந்தராச முதலியார் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். வை. மு. கோபால கிருட்டிணமாச்சாரியார் முகவுரை எழுதியுள்ளார்.

"சிலை வளைத்தொரு வாளி விட்டனன்
சீறி யன்னவர் தங்களில்
தலைவ னுயசு வாகு தன்னொரு
தலைய றுத்துமா ரீசனை
அலைகொள் மாகடல் ஆழ்ந்திச் சென்றவ்
வமலன் விட்டதாம் வாளிதான்
கலைகொள் மாமுனி இவற்றைக் கண்டுடன்
களிப்பென் சாகரம் மூழ்கியே."

என்பது பாலகாண்டத்தில் ஒரு பாட்டு.

## ௩௫௪. விநாயக ஓதுவார் (1914)

இவர் திருச்செந்தூரில் இருந்தவர். யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதரிடம் இலக்கண இலக்கியங்கற்றுத் தேறினர். இசை பாடுவதினும் வல்லவர். புராணச் சொற்பொழிவுகள் செய்தல், முருகக் கடவுள் திருமுன்பு அருட்பாடல்கள் ஓதுதல் முதலியவைகளிலும் அரிய கலைகளை ஆராய்வதினும் தமது வாணாளைச் செலவிட்டார். நாராயணசாமி நாயுடு என்பவர் இயற்றிய நெட்டூர்ப் புராணம் என்னும் நூலுக்கு இவர் பன்னிரண்டு பாடல்களால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"கற்றவரை வளைத்தவர்முன் கழகமிரீஇ
யாய்ந்ததமிழ்க் காதன் மிக்குக்
கற்றவரை வளைத்தவர்முன் கற்றவெலாங்
கூட்டுண்டு களிங்கக் காவிக்
கற்றவரை வளைத்தவர்முன் காதனொடு
போற்றிசெயுங் கருத்தான் மிக்குக்
கற்றவரை வளைத்தவர்முன் சூழ்சிந்து
பூந்துறையிற் களித்து வாழ்வோன்."

என்பது அப் பாடல்களில் ஒன்று.

## ௩௫௫. விநாயகப் புலவர்

இவர் ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன்னர் ஈழவளநாட்டிலே மானிப்பாயைச் சேர்ந்த சுதுமலைக்குறிச்சியிலே வாழ்ந்திருந்தார். இவர் வேளாள குலத்தினர். இவருடைய

தந்தையார் பெயர் அழகர். செய்யுள்பாடுந்திறம் நன்கு அமையப் பெற்ற இவர் சிறந்தபுகழுடன் விளங்கினார். விவேகம் பொறுமை முதலிய நற்குணங்கள் அமையப் பெற்றவர். இவருடைய மனைவியோ இவருக்கு நேர் எதிரிடையான குணங்கள் அமையப் பெற்றவள். எப்பொழுதும் பக்கத்து வீட்டுப் பாவையர்களுடன் வம்பு வளர்த்துக்கொண்டே இருப்பாள்.

ஒருநாள் நண்பகலிற் புலவர் உணவருந்துதற்கு உட்கார்ந் தார். அன்று அவருடைய மனைவிக்கும் அயல்வீட்டு அணங்கிற் கும் சண்டை. ஆகவே புலவர் மனைவி புலவரைப் பார்த்து, "இன்று நீவிர் என்னுடைய எதிரியை நன்கு இகழ்ந்து தக்கவாறு வையாதொழியின் நுமக்கு உணவு படையேன்" என்று வெகுண்டு உரைத்தாள். மனைவியை மகிழ்விப்பான் எண்ணிய இவர் முன்றிலுக்குச் சென்று தம் மனைவிக்கும் அயல் வீட்டுக்காரிக்கும் பிறர் எவருக்குமே விளங்காதபடி சில மொழிகளைக் கூறிவிட்டுத் தம் மனைவியைப் பார்த்து, "நன்றாகப் பேசிவிட்டேன்" என்று கூறிவிட்டுச் சாப்பிடச் சென்றார். தன் கணவர் பேசியதன் பொருளைச் சிறிதும் உணராத அவளும் உண்மைதான் போலும் என்று மனநிறைவு கொண்டனள்.

இவர், "கதிரை மலைக்குறவஞ்சி" என்னும் நூல் ஒன்றை இயற்றி அதனைக் கதிர்காமத்திற்குக் கொண்டுபோய் அரங்கேற் றினார். "குருக்கள் கோடரி" என்னும் நூல் ஒன்றையும் பாடிப் போலிக் குருக்கள்மாரை எள்ளி நகையாடினார். மற்றும் இவரால் இயற்றப்பெற்ற தனிப் பாடல்கள் பல.

"வேதங்கள் குடியிருந்து பிறந்தவிடம் எவிடம்
விநாயகனும் இளையோனும் இருந்தவிடம் எவிடம்
பாதங்கள் பதினாறும் வந்தவிடம் எவிடம்
பரந்துபின் ஒடுங்குகிற பரப்பிரமம் எவிடம்
நாதங்கள் ஒலியெழுந்து பாடுவதும் எவிடம்
நடுவினில்நம் மகமேரு நாட்டினதும் எவிடம்
போதங்கள் அ ·· ந்துரைக்கும் குருக்கள்மா ரேநீர்
புகன்றிடுவீர் இந்தவிடம் புகன்றிடுமின் நீரே."

என்பது குருக்கள் கோடரியில் ஒரு பாட்டு. இத்தகு சீர்திருத் தக் கல்விவல்லார் இடித்துரைகளால் தமிழகத்துத் திருக்கோவில் களில் உள்ள குருக்கள்மார் திருந்துவார்களாயின் தமிழகக் கோவில்கள் சீர்பெறும்.

## ௧௫௬௬. விருத்தாசலத் தம்பிரான்

(19 - நூ.)

திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்த தம்பிரான்களுள் ஒருவர். இவர் இலக்கணத்தை நன்கு பயின்றிருந்தபடியால் "இலக்கணம் விருத்தாசலத் தம்பிரான்" என்றுங் கூறப் பெற்றூர். இவர் ஒரு நூலுக்குப் பாடிய சார்த்துக்கவி:

"திருவளர்தென் துறைசையிற்சுப் பிரமணிய
குருசாமி தெரிச னத்தின்
அருமையைச்செந் தமிழ்ப்பாவா லலங்கரித்துப்
பாடியன்பை அ வித் தானும்
மருமலர்ப்பூம் பொழிலுடுத்த வாவிகண்ட
மாநகரின் மருவி மாறுப்
பெருமையொடு பிறங்குமரு ணசலப்பேர்
அன்பனெனும் பெருமான் மாதோ."

## ௧௫௬௭. விருப்பாட்சிலிங்கையர்

சோழவள நாட்டில் மாயூரத்தில் இருந்தவர். வீர சைவர். சிறந்த புலவராக விளங்கிய இவர் தென் திருப்பதிப் புராணம் என்னும் நூலைப் பாடியுள்ளார். அந் நூல் பதினெட்டு படலங் களையும் எழுநூற்று முப்பத்தெட்டுச் செய்யுட்களையுங் கொண் டது. தென் திருப்பதியில் இருந்த அனந்தநாத சுவாமிகள் என்பவரிடத்தில் மிகுந்த அன்புடையவர். அவர் மீது பதிகம் முதலியனவும் இயற்றியுள்ளார்.

"குளத்தூற னெனவடியார்க் கருள்சுரக்குந்
திருமலையங் கோமான் றாளைக்
குளத்தேறப் பணிந்தேதென் திருப்பதியில்
வரவழைக்குங் குணமுள் ளானைக்
குளத்தானெய் பாற்கனியுற் றுனெனவன்
பருக்கின்பங் கொடுத்தாட் கொள்ளக்
குளத்தூரின் உதயஞ்செய் அனந்தநா
தனைப்புகழ்ந்து குறைகள் தீர்வாம்."

என்பது இவர் தென் திருப்பதிப் புராணத்தில் அநந்தநாதன் என்னும் பெரியார் மீது வணக்கமாகப் பாடிய பாடலாகும். இப் பாட்டால் இவர்தம் கல்வியறிவும் செய்யுள் இயற்றும் திறமும் விளங்கும்.

## ௧௫௬௫. விளாஞ்சோலைப் பிள்ளை

இவர் 'சப்தகாதை' என்னும் நூல் செய்திருக்கிறார். அந் நூல் பிள்ளை லோகம் சீயர் அருளிச் செய்த வியாக்கியானம் பதவுரை முதலியவைகளோடு விளங்குகிறது.

"அம்பொ னரங்கர்க்கு மாவிக்கும் அந்தரங்க
சம்பந்தங் காட்டித் தடைகாட்டி—உம்பர்த்
திவமென்னும் வாழ்வுக்குச் சேர்ந்தநெறி காட்டும்
அவனன்றோ ஆசாரியன்."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௫௬௬. வீமகவி

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளக்கமாக வில்லை. தம்முடைய பெயரால் காலக்கணித நூல் ஒன்றை இயற்றியிருக்கிறார். அந்நூல் "வீமகவி" என்னும் பெயருட னேயே வழங்குகின்றது.

"அஞ்சுடன் எட்டு மூன்று ஆறு ஈரேறு தன்னில்
கொஞ்சிய பதினொன் றற்சேய் கூடியே சனியும் நிற்கில்
தஞ்சமா மனைக்குத தெற்குத் தானவன் வம்சமும்போம்
வஞ்சியே ழிடத்தில் நிற்க மனைக்காரன் சாவான் பாரே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௫௬௭. வீமசேட கவிராயர்

இவர் பாண்டிவளநாட்டிற் குன்றக்குடிக் கண்மையில் உள்ள செங்கெற்குடி வீமகவிராயரின் புதல்வர். கல்விகேள்வி களிற் சிறந்து விளங்கிய இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய செய்தியொன்றுந் தெரிந்திலது. கோட்டையூர்ச் சுப்பிரமணிய ஐயர் இயற்றிய இராமாயண வெண்பாவிற்கு இவர் சாத்துக் கவியாக ஐந்து பாடல்கள் பாடியுள்ளார்.

"புகழேந்தி நின்ற புலவர் திலகன்
புகழேந்தி வெண்பாவைப் போல—மிகவழகாய்க்
கோட்டையூர் மேவும் குணநிதியாம் சுப்ரமண்யன்
நாட்டமுறச் செய்தான் நயந்து."

என்பது அப்பாடல்களில் ஒன்று.

## ௧௫௭௧. வீமணக் கவிராயர்

இவர் ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகட்குமுன் கொங்கு நாட்டிலே திருச்செங்கோட்டிலே இருந்த சிறந்த புலவர். அந்நாளில் அவ்வூரில் கார்மேகக் கவிஞர் என்பவரும் வாழ்ந்திருந்தார். கார்மேகக் கவிஞர் கொங்குமண்டல சதகம் முதலிய நூல்கள் இயற்றியவர். வீமணக் கவிராயர் ஒருநாள் கார்மேகக் கவிஞரைக் கண்டு அளவளாவுதற்குச் சென்றார். அப்போது,

"தளையவிழா மரையோனித்த பேட்டடியில்
சூட்டனந்தன் தலைகீழாக
வளையவணங் கப்புலவி நீங்குவள
வயல்விசய மங்கை யோங்கும்
இளையசந் திரப்பிரப நாயகரை
யேத்திமனத் திடரை யெல்லாம்
களையவரு கார்மேகக் கவியரசே!
வந்தனன்நிற் காண வென்றே"

என்று செய்யுள் ஒன்று பாடினார். இவர் ~~இயற்றிய நூல் முதலிய விவரங்கள் தெரியவில்லை.~~

## ௧௫௭௨. விமநாயககன்பாளையம் இருளாண்டி உபாத்தியாயர்

இவருடைய கால்கள் முடமாக இருந்தன. ஆகவே வேறு துறைகளிற் கருத்துச் செலுத்தாது கல்வியை நன்குகற்றுச் சிறந்த புலவரானார். மாணவர் பலருக்குப் பாடங்கற்பித்ததன்றிச் செல்வர்கள்பாற் சென்று செய்யுள்கள் பாடிப் பரிசிலும் பெற்றுத் தமது வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தார். ஊர்ந்து செல்வதற்கு எருது ஒன்றைப் பழக்கிவைத்திருந்தார். வெளியே செல்லும்போது மாணவன் ஒருவனையும் உடனழைத்துக் கொண்டு அவ்வெருதின்மேல் ஏறிச்செல்வது வழக்கம்.

## ௧௫௭௩. வீரக் கவிராசர்
### (19 - நூ.)

பாண்டிவளநாட்டில் திருநெல்வேலிப் பேட்டையில் சிறந்த புலவராக விளங்கியிருந்தவர். 'சின்னத் தங்கச்சிந்து, கட்டுத்

தங்கச்சிந்து, பெரிய தங்கச்சிந்து' என்னும் சிந்துநூல்களை இவர் பாடியுள்ளார்.

"இன்றரசு செய்வோர் இன்னுஞ் சிலநாளிலே
சென்றிறக்கக் கண்டிலையோ — தங்கம்
செல்வம் நிலையாதடி.
தேர்க்கால் சுழல்வதுபோல் செல்வம் பலவகையாம்
மூர்க்கங்கொள்ளாதேயடி — தங்கம்
மூன்றுநாள் வாழ்வேயடி."

என்பன மேற்படி சிந்தில் இரண்டு பாடல்கள்.

## ௧௫௭௪. வீரபத்திர ஐயர் - திரு
(19 - நூ.)

இவர் ஏறக்குறைய ௬0 ஆண்டுகட்கு முன்னர்த் திருவண்ணுமலையில் வாழ்ந்திருந்தவர். தேசிங்குராசன் கதையை இவர் "தேசிங்குராசன் நாடகம்" என்னும் பெயரோடு நாடகமாகப் பாடியுள்ளார்.

"எந்தம்மூர் செஞ்சிபட்டணம் எனதுபேர் தேசிங் கென்பார்
தந்தைபேர் தரணி சிங்கு தாயின்பேர் பட்டா ராணி
வந்தோர் அசுவம் தன்னை வகையுடன் காட்டும் இப்போ
சிந்தையும் மகிழ்வ தாகச் சீக்கிரம் சவாரி செய்வேன்."

இது தேசிங்குராசன் குதிரையைக் காட்டுமாறு கேட்டுக்கொண்டது.

## ௧௫௭௫. வீரபத்திரக் கவிஞர்
(1907)

இவர் மதுரைத் திருஞானசம்பந்த தேசிகராதீனத்து வேலாயுத தேசிகரிடம் இலக்கண இலக்கியங்கற்றுணர்ந்தவர். திருவண்ணுமலை ஆதீனத்துப் புலவராக இருந்தவர். இவர் தம்முடைய ஆசிரியர் பாடிய திருக்கோளக்குடிப் புராணத்திற்கு,

"திருமருவு சுகோளகிரிக் கடவுண்மான்
மியந்தமிழில் தெரியச் செய்தான்
உருமருவு தெய்வசிகா மணிமரபில்
சபாபதிப்பேர் உரவோன் வேண்டத்

தருமருவு தென்கூடல் திருஞான
சம்பந்த சாமி ஞானப்
பெருமரபில் வருவேலா யுததேசி
கோத்தமனும் பெரியோன் மன்றே.''

என்னும் பாடலாற் சிறப்புப்பாயிரஞ் செய்துள்ளார்.

## க௫எசு. வீரபத்திரக் கவுண்டர்
(20 - நூ.)

கொங்குவள நாட்டில் இருந்தவர். 'தொண்டனூர் அரக்கி நாடகம்' என்னும் நூலை இவர் பாடியிருக்கிறார். தொண்டனூர் என்பது கொள்ளேகாலத்தை ஒட்டிய ஊரென்று தெரிகிறது. தொண்டனூர் அரக்கி கதை பழையனூர் நீலி கதையைப் போன்றது.

## க௫எஎ. வீரபத்திர சுவாமிகள்
(19 - நூ.)

இவர் தஞ்சைமாநகரில் இருந்தவர்.

க. முல்லைவன நாதர் நான்மணிமாலை
உ. கரும்பனை நாயகி இரட்டைமணிமாலை
ங. வெள்ளை விநாயகர் பதிகம்
ச. இரட்டை விநாயகர் இரட்டைமணிமாலை
௫. கற்பகவிநாயகர் பதிகம்
சு. வேலாயுத வெண்பா
எ. சிதானந்தீசுரர் பதிகம்
அ. சிற்கனும்பிகை பதிகம்
கூ. சிவானந்த சுவாமிகள் தோத்திரப்பா
கo. சப்தஸ்தான தோத்திரம்
கக. மாரியம்மன் பஞ்சரத்தினக் கும்மி
கஉ. நெஞ்சறிவுறுத்தல்
கங. பகவத்கீதை வசனம்
கச. உற்சவப் பாட்டு
க௫. இசைப் பாடல்கள்
கசு. தனிப் பாடல்கள்

ஆகியன இவரால் இயற்றப் பெற்றுள்ளன. இவரைப் பற்றிய பிற விவரங்களேதும் புலப்பட்டில. நான்மணிமாலைப் பாட்டொன்றை அடியிற் காண்க:

"வரந்தருவாய் முல்லைவன நாதா நின்ருள்
மலர்த்துணையும் உழுவையுரி மருங்கு மோங்கும்
உரந்தருமால் விடையுமுமை ஓர்பால் துன்னும்
உருவமும் வெண்பொடி யழகும் மழுமான் ஏந்தும்
கரங்களு நூ லணிமணிதாங் குரமுங் கொன்றைக்
கணிப்புயமுங் கறைமிடறுங் கண்கள் மூன்றும்
சுரந்தவரு ளாம்முகமும் நதிவெண் திங்கட்
சுடர்முடியுந் தினமெணியான் சுகிக்கு மாறே."

## ௧௫எ௫. வீரபத்திர தேசிகர் (காஞ்சி)

இவர் காஞ்சிபுரத்தில் வாழ்ந்திருந்தவர். இவர் 'செங்குந்த சிலாக்கியர் மாலை' என்னும் நூலைப் பாடியுள்ளார். கட்டளைக் கலித்துறையாலாகிய இந்நூல் முப்பத்தேழு பாடல்களைக் கொண்டது. மண்டல சதகங்களைப்போல் சிலருடைய பெருமையைச் செங்குந்தர் மூலம் விரித்துரைப்பது.

"எட்டு மிரண்டுமெண் ணீரறு தத்துவத் தேதயங்கி
ஒட்டியு மொட்டா ஒருபொரு ளைச்சுட்டி யோர்வையெலாம்
வெட்டி விளக்குநல் வேதாந்த சாகை விரித்திடும்வா
சிட்ட முறைமுனுட் செய்தோர்செங் குந்த சிலாக்கியரே."

என்பது நூலின் இறுதிப்பாட்டு.

## ௧௫எ௬. வீரபத்திர செட்டியார்
(19 - நூ.)

இவர் நடுநாட்டில் வளவனூர் என்னும் ஊரில் சின்னுது செட்டியார் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். செங்காடு என்னும் ஊரில் இருந்த கிருட்டிணப்ப செட்டியார் என்பவருக்கு மாணவராகி இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலமைபெற்று விளங்கினார். பிறைசை அருணாசல சுவாமிகள், பாரிப்பாக்கம் முனியப்ப முதலியார், பொய்கைப் பாக்கம் அப்பாச்சாமி உபாத்தியாயர், கஞ்சம் சீனிவாச உபாத்தியாயர் முதலியோர் இவர்

காலத்தில் இருந்த புலவர்கள் ஆவர். பிறைசை அருணசல சுவாமிகள் இயற்றிய வேதாந்த சூடாமணி உரைக்கு இவர்,

"மன்புவியோர் எளிதுணர்ந்து பவநீங்கி
    மெய்யறிவின் மயமாம் வண்ணம்
இன்புறுவே தாந்தசூ ளாமணியின்
    உரைதெளிவாய் எடுத்து ரைத்தான்
நின்மலமாம் பரப்பிரம அருளொளியே
    படிவமென நேர்ந்து வந்த
சொன்மறையோர் மகம்வளர்க்கும் பிறைசைஅரு
    ணசலதே சிகத்து யோனே"

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கரு௲௦. வீரபத்திர நாயகர் - சி
(19 - நூ.)

இவர் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர் தந்தையார் பெயர் சின்னத்தம்பி நாயகர். வர் விநாயகர்மீது அகவல் முதலியன இயற்றியுள்ளார்.

"ஆசிரியப் பாமாலைக் கன்பாகக் காப்பாவன்
ஆசிரியப் பாவெனவே யான்பணிவேன்—பேசரிய
சுந்தரவிநாயகனுஞ் சேர்ந்துதுயில் மால்மருகன்
சுந்தர விநாயகனைச் சொல்."

என்பது காப்புப் பாடல்.

## கரு௲க. வீரபத்திர பிள்ளை - ந
(19 - நூ.)

இவர் சோழவளநாட்டிலே தஞ்சைமாநகரிலே தமிழ்ப் புலவராக விளங்கியிருந்தவர். சோமசுந்தர தேசிகர் என்பவர் இயற்றிய 'சிவாலய மான்மியக்கோவை' என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப் பாயிரப் பாடலை அடியிற் காண்க.

"பூமேவு தொண்டரறு பத்து மூன்று
    புண்ணியருள் அப்பர்முதல் மூவர் போற்றும்
தேமேவு தலங்களெலாம் விளங்கு மாறு
    சிவாலயமான் மியக்கோவை செய்தான் அன்பாக்

மாமேவும் எழில்வளஞ்சேர் அரித்து வார
 மங்கலம்வாழ் பழனியப்ப வள்ளல் ஈன்ற
தூமேவு முத்தமிழ்தேர் சுகுணன் சோம
 சுந்தரதே சிகன்தகைசால் தூயோன் மன்னே."

வேறு சில நூல்களிலும் இவருடைய சிறப்புப்பாயிரம் விளங்குகின்றது.

## ௧௫௮௨. வீரபத்திர பிள்ளை
(19 - நூ.)

பொள்ளாச்சி என வழங்கும் பொருளாட்சி தாலுகா திப்பம்பட்டி என்னும் ஊரில் ஏறக்குறைய மூந்நூறு யாண்டுகட்குமுன் இவர் தோன்றினர். இவருடைய தந்தையார் பெயர் குப்பா பிள்ளை. இவர் கல்விகற்றுப் புலமையடைந்து, இரங்கராய கவுண்டர் என்பவரை அணுகி அவருடைய விருப்பப்படி "தொட்டராய அம்மானை" என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நூலில் அநுப்ப வம்சத்தின் பழைய வரலாறு சொல்லப்பட்டிருக்கிறது.

## ௧௫௮௩. வேங்கடகிருட்டிணபாரதி
(1892)

இவர் பாண்டிவள நாட்டில் திருப்பூவணம் பிரிவைச்சேர்ந்த குந்திபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவர் திருமாலிருஞ்சோலை மலை அழகர் பேரில் 'கமலவிடுதூது' என்னும் நூல் பாடியுள்ளார். அந்நூல் மூந்நூற்றுப் பதினொரு கண்ணிகளையுடையது.

" நீர்பூத்த கொண்டல் நிறக்கடவுள் விண்ணோர்
ஏர்பூத்த வேதா இராக்கதர்கள்—சீர்பூத்த
வெண்பா லையில்வத்து வெண்கதி ரேதுனை
நண்பான வாகுசியே நாணுகப்—பண்பான."

என்பன கமலவிடுதூதில் இரண்டு கண்ணிகள். இவரின் முற்பட்டு அழகர் கிள்ளைவிடுதூது என்னும் நூல் இயற்றியவர் பலபட்டடைச் சொக்கநாதபிள்ளை. அந்நூலினைப் போலவே இந்நூலும் சொல்நயம் பொருள்நயந் தோன்றத் திகழ்கின்றது.

## கரு௲௪. வேங்கடசாமி நாயுடு – புதுவை
(20 - நூ.)

இவர் புதுச்சேரியில் தோன்றியவர். சென்னை மாநகரில் கிருட்டிணும் பேட்டையில் இருந்த சிங்காரவேலு முதலியார் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களை ஓதியுணர்ந்து சிறந்த புலமை பெற்ருர். தம் ஆசிரியராகிய சிங்காரவேலு முதலியார் பாடிய திருப்போரூர் இன்னிசைப்பா என்னும் நூலுக்கு இவர் பின்வரும் பாட்டால் சிறப்புப்பாயிரம் கூறியுள்ளார்.

"சீர்பெருகு சமரபுரி நகரதனில் அன்பர்கள்
தெரிசிக்க மயிலேறியே
சிங்கார வேல்கொண்டு திடமுடன் அமர்ந்தசிவ
சுப்ரமண் யக்கட வுண்மேல்
பார்புகழ் கிருட்டிணும் பேட்டையில் உதித்தவன்
பாவலர்கள் மெச்சுமகிபன்
பகரரிய சிங்காரவேலனெனு நாவலன்
பரிவா யளித்தபோரூர்ப்
பேர்பெரிய இன்னிசைப் பாவையிவ் வுலகுளோர்
பிரியமுடன் உணரவேண்டிப்
பெருமைமிகு வைசியக் குலதிலகன் அடியரைப்
பேணித் துதிக்கும்அன்பன்
கார்மேக மாதமும் மாரிதரு பாளையம்
கருணைசேர் சர்க்கரைக்கோர்
காதலன் எனப்புகழும் வேலனெனு நாமன்
கருதியச் சிட்டனன்அரோ."

## கரு௲௫. வேங்கடசாமிப் பிள்ளை - பு
(20 - நூ.)

இவர் புதுக்கோட்டைத் தேவராய பிள்ளை என்பவருக்கு மகனுகத் தோன்றியவர். திருப்பாதிரிப்புலியூருக்கு அண்மையில் உள்ள கரையேறவிட்ட நகர் என்னும் ஊரில் தங்கி க. ரா. சிவசிதம்பர முதலியார் என்பவரிடத்தில் இலக்கண இலக்கியங்களை ஆண்டுக் கணக்காகப் பயின்று சிறந்த புலமைபெற்ருர். நன்கு செய்யுள் பாடுந்திறம்பெற்ற இவர் மேற்படி கரையேற விட்ட நகரில் எழுந்தருளிய "கற்பகவிநாயகக் கடவுள் பதிகம்,

திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம், அனுபவவிண்ணப்ப மாலை''
என்னும் நூல்களைப் பாடியிருக்கிறார்.

'' சீர்கொண்ட வாரணம் போற்றுமத வாரணத்
திருமுகமும் அணிமார்பமும்
தேவர்கள் துதிக்கைநித மேபெறு துதிக்கையும்
திண்படைகொள் நான்குகரமும்
ஏர்கொண்ட அடியவர்க் கிடர்கடி நுதற்கணும்
இணையிலிணை நுதல்கண்களும்
எண்டிசையில் உள்ளவரும் எண்டிருத் தாண்மலரும்
எந்நாளும் ஏத்தவருள்வாய்
நார்கொண்ட நிலவணிதை திருமுகம் எனத்திகழும்
நடுநாட்டில் அன்னாள் நுதல்
நலமலி திருப்பா திரிப்புலி நகர்ப்பக்கம்
நன்னுதற் றிலகமன்ன
கார்கொண்ட முகில்சூலவு மணிமாடகோபுரக்
கரையேற விட்டநகர்வாழ்
கற்பனை அமைந்தகவி விற்பனர் புகழ்ந்திலகு
கற்பகத் தந்திமுகனே.''

என்பது கற்பகவிநாயகர் பதிகத்தில் ஒரு பாட்டு.

## கரு௩௬. வேங்கடசாமி ரெட்டியார் - தி. அ.
## (20 - நூ.)

பாண்டிவள நாட்டில் குட்டிலொட்டி என்னும் ஊரில் இருந்தவர். முத்துத்தேவர் என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்றுப் புலவராக விளங்கினார். செந்தமிழ்க் கலாசபை என்னும் பெயருடன் சபையொன்றையும் நிறுவினார். தம் ஆசிரியர் காலமானபோது இவர் மிக வருந்திக் கையறுநிலைச் செய்யுட்கள் பல பாடினார். அப்பாடல்களில் ஒன்று.

''சந்திரனை நிகர்வதன சுந்தரநன்
மாணவர்க்குத் தாயே போலச்
செந்தமிழ்அந் நிஞ்சுவைதயைத் தெவிட்டநனி
புகட்டுமுயர் திறமை வாய்ந்த
தந்திரமந் திரகுணவெண் பங்கயப்பூ
மகட்கடிமைத் தன்மை பூண்ட
இந்திரகு லாதிபமுத் தென்றதிரு
நாமவன்னால் எங்குற் றாயோ.''

## கரு௮எ. வேங்கடராய் பிள்ளைக் கவிராயர்
(1908)

இவர் சென்னை மாநகரில் இருந்தவர். மஸ்தான் சாகிபுமீது தோத்திரப்பா முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

"மாவே தனையில் அடியார்கள்
வருந்தப் பார்த்து மனமிரங்காக்
கோவே நினக்கு மெவர்கள் குணங்
குடியா னெனவும் பெயர்கொடுத்தார்
பூவே மணமே உன்னுமம்
பொருந்தும் வகைநீ புரியாயேல்
நீவே றெனவும் உலகமெலாம்
நிந்தை கூறும் இதுநிசமே.'

என்பது தோத்திரப்பாவில் ஒரு பாட்டு.

## கரு௮௮. வைத்தியநாத முதலியார் - ப

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். இவர் வாழ்ந்திருந்த இடம் சென்னை பெத்துநாய்க்கன் பேட்டையில் கோர்ட் அரங்கநாத முதலியார் தெருவில் கிழண்டைவாடையில் பதினெட்டாவது எண்ணுக அப்பொழுது விளங்கிய வீடாகும். (இப்பொழுது தெருப்பெயர் வீட்டெண் முதலியன மாறுபட்டிருக்கக் கூடும்) இவர் பள்ளிக்கூடம் ஒன்று வைத்திருந்ததாகத் தெரிகிறது. ஆசிரியராகச் சில ஆண்டுகள் பணிபுரிந்தனர் எனவுங் கூறுகின்றனர். பல பாடல்கள் பாடிப் புகழ்பெற்று வாழ்ந்தனர். இராமநாதபுரம் பொன்னுச்சாமித்தேவர்க்கு இவர் எழுதிய பாடல்களில் ஒன்று;

"காரோங்கு பொழில்புடைசூழ் புதுவையெனுங்
கடிநகர்க்குக் காவ லோனே
பேரோங்கு வரைப்புயத்துப் பொன்னுச்சா
மிப்பெயர்கொள் புனித சில
சீரோங்கு திருக்குறட்குச் சிறந்தபரி
மேலழகர் தெரிந்து கூறும்
பேரோங்கும் உரை நூனுஞ் சேதுபுரா
ணமுமெனக்குப் பெரிதீ வாயே."

ஏன்பதாகும்.

## கரு௮கூ. வைத்தியநாத முனிவர்
(1816)

ஈழவளநாட்டில் உள்ள அளவெட்டி என்னும் ஊரில் வேளாளர் குலத்திற் பிறந்தவர். வடமொழியிலும் தென்மொழியிலும் மிக வல்லவர். பிற்காலத்தில் திருத்தில்லையில் வாழ்ந்திருந்தவர். வியாக்கிரபாத மான்மியம் என்னும் வடமொழி நூலை இவர் தமிழில் மொழிபெயர்த்து, "வியாக்கிரபாத புராணம்" என்னும் பெயருடன் பாடியுள்ளார்.

"மாதங்க வரைவி லேந்தி மாலம்பாற் புரங்க ளெய்த
மாதங்க மொருபா லுற்ற வானவன் மைந்தன் வாழும்
மாநங்க மார்பி னானை மருகனை மைங்கை முக்கண்
மாதங்க முகத்தி னுன்றன் மலர்ப்பதம் வழுத்து வாமே,"

என்பது நூலின் காப்புப் பாடல்.

## கருகூ0. வைத்தியலிங்க ஆசாரி - முத்து
(19 - நூ.)

சத்திநி பாதத் துத்தமர் கண்ட
முத்தாந்த வீதி சித்தாந் தந்தெளி
முத்து வீரமால் நற்றவப் புத்திரன்
நன்னெறி யுடையன் மன்னிய தில்லை
மூவா யிரவர் ஓவா துவக்க
நடிக்கும் நடேசர் அடிக்கம லத்தைப்
போற்றுமெய் யன்பினன் மாற்றலர் கோளரி
குறைவிலா துள்ளத் துறவுடை யோன்சிவ
சமையந் தழைக்க அமையும் பசனை
செய்யுநற் பத்தியும் பொய்யிலா வாய்மையும்
எவ்வெவ் வுருவமும் அவ்வவ் வுருவாய்த்
தீட்டுந் திறமும் ஈட்டிய பொருளை
அறத்தின் வழிக்கே சிறக்கச் செய்யும்
கருத்தும் பண்பும் அருத்தியும் உடையோன்
பெருமையாந் தெய்வத் திருவுரு வங்களை
யாவருங் கண்டு சேவைசெய் யும்பொருட்
டெழுதிக் கொடுக்கும் பழுதிலாச் சிற்ப
சாத்திர நிபுணன் மாத்திரை யளவும்
வீண்பொழு தாக்கான் காண்பவர்க் கெளியன்
பெரிய புராணத் தரியநற் றொண்டர்

குங்கிலி யக்கல யங்கரத் தேந்திப்
பவசா கரம்போய்ச் சிவசா யுச்சியம்
பெற்றவர் சரிதமும் குற்றமற் றோங்கும்
அறிவித் தகர்சொல் எறிபத்த நாயனுர்
அன்பின் திறத்தையும் இன்புடன் கீர்த்தனை
இயற்றிய தொண்டன் வயித்திய லிங்கன்
என்னும் நாமன் துன்னிய
பகருஞ் சேடனை நிகர்புல வோரே.''

என்று அறிஞர்களால் பாராட்டப் பெற்ற இவர் திரிசிரபுரம் உறையூர் தமிழ்ப் புலவர் முத்துவீர உபாத்தியாயருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். தந்தையார் முத்துவீரியம் என்னும் இலக்கணநூல் செய்த சிறந்த புலவர். இவர் தம்முடைய தந்தையாரிடமே பல நூல்களையும் நன்கு கற்றுணர்ந்து சிறந்த புலவரானுர். தெய்வத்திருவுருவங்களைச் சிறந்த முறையில் காண்பவர் வியக்குமாறு செய்யத்தக்க திறமுடையவர். தமிழ் நூல்கள் இயற்றுவதினும் வல்லவராக இருந்தார் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், அமர்நீதி நாயனுர் சரித்திரக் கீர்த்தனை, குங்குலியக் கலய நாயனுர் சரித்திரக் கீர்த்தனை, எறிபத்த நாயனுர் சரித்திரக்கீர்த்தனை முதலியன. இவருடைய அமர்நீதி நாயனுர் சரித்திரக் கீர்த்தனையைப் பாராட்டிப் புங்கத்தூர் முனிசாமி முதலியார், புரசை முருகப்ப உபாத்தியாயர், சின்னசாமி பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். அமர்நீதி நாயனுர் வரலாற்றுப் பாடலை அடியிற் காண்க,

''பழையாறை வணிகரமர் நீதி யார்பால்
பரவுசிறு முனிவடிவாய்ப் பயினுநல்லூர்க்
குழைகாதர் வந்தொருகோ வணத்தை வைத்துக்
கொடுத்ததனை எடுத்தொளித்துக் குளித்து வந்து
தொழிலாரு மதுவேண்டி வெகுண்டு நீரித்
துலையிலிடுங் கோவணநேர் தூக்குமென்ன
எழிலாரும் பொன்மனைவி இளஞ்சே யேற்றி
ஏறினர்வான் உலகுதொழ ஏறி ஞரே ''

## கருகூக. வைத்தியலிங்க உபாத்தியாயர் - சி (19 - நூ)

திருப்பாதிரிப்புலியூரில் இயற்றமிழாசிரியராகச் சிறந்து விளங்கியவர். இவர் சின்னச்சாமி முதலியார் என்பவருடைய

வேண்டுகோளின்படி, திண்டிவனம் 'திந்திருணீஸ்வரர் மீது பதிற்றுப்பத்தந்தாதி' என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நூல் ௧௯௪௯ ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றுள்ளது.

"போற்றுவார் திண்டிவனத் தெம்பெருமான்
திருவடிகள் புனிதர் சூழ்ந்து
மாற்றுவார் வல்வினையை மகிழ்ந்திடுவார்
அடியேன்செய் வகையோ ராமல்
காற்றுவா ரியதுரும்பில் கலங்குகின்றேன்
என்செய்கேன் கடைய னேனைத்
தேற்றுவித்துன் சேவடியைத் தியானிக்க
நின்னருளால் தெரிவிப் பாயே."

என்பது அவ்வந்தாதியில் பதினேழாவது பாட்டு.

## ௧௫௯௨. வைத்தியலிங்க செட்டியார் (1865)

இவர் கூடலூரிலே தொப்பைய செட்டியார் என்பவருடைய மகனாகத் தோன்றினர். இலக்கண இலக்கிய நூல்கள் சிலவற்றைக் கற்ற அளவிலேயே இவருக்குச் செய்யுள்பாடுந் திறமையுண்டாகியது. தங்குதடையில்லாமல் செய்யுள் இயற்றலானார். அதனால் இவரைப் பலரும் வரகவி என்று அழைக்கலாயினர். இவர் இராமாயணம் ஆறு காண்டங்களையும் சிந்துப் பாடலாகப் பாடினர். அந்நூல் 'இராமாயணச்சிந்து' என்று பெயர் பெற்றது.

"திருவளரும் அயோத்திநகர் தனிலெந் நாளும்
திகழிரவி குலம்விளங்க அவதரித்த
மருவளருந் துளபமணி மார்பி ராமன்
வண்புகழைச் சிந்தாக வழுத்து தற்குத்
தருவளரும் ஐங்கரநால் வாய்முக் கண்ணும்
தகைமைபெறு செவியிரண்டுந் தனிக்கோ டொன்றும்
குருவளரும் முகத்தழகும் உடைய ஞானக்
குஞ்சரத்தின் செஞ்சரணஞ் சனிசெய் வோமே."

என்பது நூலின் காப்புச் செய்யுள்.

நூலைப்பாராட்டிப் பொன்னுப் பிள்ளை, புதுவை அருணசலக் குருக்கள், பாரதப் பிரசங்கம் கண்ணுவையர், சொர்க்கபுரம் இராமலிங்கத் தம்பிரான், முத்துவினைதீர்த்த முதலியார்,

புதுவை-க. சுப்பராய உபாத்தியாயர், சிற்றம்பல உபாத்தியா யர், முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். சிற்றம்பல உபாத்தியாயரின் பாடல். இது,

"உலகெலாம் போற்றும் இராமகா வியத்தின்
உரிப்பொருட் கிளவியை எடுத்தே
இலகுறச் சுருக்கிச் சரணா ராற் றறுபத்
தெட்டினால் இசைபெறச் செய்தான்
பலவளஞ் சூழுங் கூடல்நல் தலத்தான்
பண்புயர் வசியர்தன் குலத்தான்
கலைவலோர் புகழும் வயித்திய லிங்கக்
கவிஞனிப் புவியினில் தானே."

## கருகூ. வைத்தியலிங்கப் பத்தர் - அ.
## (20 - நூ.)

சோழவள நாட்டில் திருமலைராயன் பட்டினத்தில் அரங்க சாமிப்பத்தர் என்பவருக்கு மகனாகத் தோன்றிய இவர் சீனிவா சன் என்பவருக்கு மாணவராகி இலக்கியங்களையும் சோதிடம் என்னுங் காலக்கணித நூல்களையும் நன்கு கற்றுத் தேறினார். பிற மொழியில் இருந்த 'மங்களேஸ்வரியம்' என்னுங் காலக்கணித நூலைத் தமிழில் மொழிபெயர்த்து இருபத்தேழு படலங்களாகப் பாடியுள்ளார். நூலைப் பாராட்டித் தரங்கம்பாடி முத்துத் தாண்டவராய பிள்ளை, வீ. இருளப் பிள்ளை, தா. சபாபதிச் செட் டியார், நா. இராமசாமி உபாத்தியாயர், சோமசுந்தரப் புலவர் கும்பகோணம் அழகிரிசாமிச் செட்டியார், தஞ்சைமாநகர் கலிய பெருமாள் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"படுக்கையில் இருந்தும் ஆங்கதிற் படுத்தும்
பல்துலக் காமுனும் வழியில்
நடக்கையி லேனும் நிற்கையி லேனும்
நற்பசி யோடும்அன் னியர்கள்
தடுக்கையி லேனும் தயிலமிட் டிருந்தும்
சௌசமார் போதும்பூ அலரி
விடுக்கையி லேனும் இருளதில் இருந்தும்
வெகுளியின் காலமும் ஆகா."

என்பது காலக்கணிதம் கணித்துக் கூறக்கூடாத காலங்களைப் பற்றிக் கூறுகிறது.

## கருகூச. வைத்தியலிங்கம் பிள்ளை
(1910)

இவர் இராசேந்திரம் என்னும் ஊரில் சாரதா நிலைய வித்தியாசாலை ஒன்றை ஏற்படுத்தி அதற்குத் தலைவராக அமர்ந்து சிறந்த கல்விப் பணியாற்றினர். சிறந்த பாவாணராகவும் விளங்கிய இவர் வேளாள சூளாமணி என்னும் நூலுக்களித்த சிறப்புப் பாயிரப் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

' நீர்பூத்த புண்டரிகந் தவன்றெருடைபூத்
தெண்ணூற்ந நிலவக் கொங்கை
வார்பூத்த மனையவள்தன் மாண்பூத்த
சிறுவிளையின் மருவச் செங்கை
ஏர்பூத்த அடிமரபி னொளிர்பூத்த
சரிதமெலாம் எழுதப் பூத்த
பார்பூத்த நூவினைபா யிரம்பூத்த
நாவினாலும் படரற் பாற்றே.''

## கருகூரு. வைத்தியலிங்க பிள்ளை - அ. க.
(20 - நூ.)

ஈழவள நாட்டில் இருந்தவர். இவருடைய தந்தையாருஞ் சிறந்த புலவர். தணிகைப் புராணத்திற்கு உரை எழுதியவர். அவருடைய பெயர் அம்பிகைபாக உபாத்தியாயர். இவர் தம்முடைய தந்தையாரிடமும் பிற அறிஞர்களிடமும் தமிழ் கற்றுத்தேறி இணுவில் பாஸ்கரஞானோதய சைவ கலாசாலையில் தலைமையாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். இவர் இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடலின் தொடக்கம் இது.

'' திருவளர் உலகத் துருவளர் கமல
மாமக ளோடு நாமகள் வாசமும்
நஞ்சணி கண்டன் செஞ்சடை நாயகன்
ஐந்து முகத்தோன் சுந்தர விடையோன்
நந்தியெம் பெருமான் முந்துறு கோயிலும்
ஆனை மா முகவன் தானமர் கோயிலும்
சரவண சாதன் மருவிய கோயிலும்
. ............... ... ................ ........''

